|| श्रीः ||



ஸ்ரீரங்கம்
ஸ்ரீமதாண்டவன்
ஸ்ரீ நிவாஸமஹாதேசிகன்.

ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸமஹாதேசிகாய நம: ||

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ||

# விஜ்ஞாபனம்.

ஸ்ரீ ரங்கநாதன், தன்னுடைய திவ்யமணி பாதுகையினு டையவும், ஸ்ரீ பெருமாளுடையவும் ஆசார்யாளுடையவும் மிகவும் அந்தரங்கர்களான பக்தர்களை அவரவர்களின் பாது கையாகவே சொல்லுகிற அநாதி ஸம்ப்ரதாயப்படி அந்த பாதுகையினுடைய அபர ரூபங்களான ஸ்ரீ நம்மாழ்வார் முத லிய ஸதாசார்யோத்தமர்களினுடையவும் பெருமைகளை உல கத்துக்கு வெளிக்காட்டியருளி, உலகத்தை உஜ்ஜீவிப்பிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி ஒரு அல்ப வ்யாஜத்தை முன்னிட்டு ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனைக்கொண்டு "உள்ளத் தெழுதிய தொலையிலிட்டனம்" என்கிற ப்ரகாரமாக 1008- சுலோகங்களடங்கிய 'பாதுகாஸஹஸ்ரம்' என்று வெளிப்படை யாக பாதுகா விஷயமான ஸ்தோத்ரரூபமான ஒரு காவ்யரத் நத்தை உலகத்துக்கு வெளியிட்டருளினார். இந்த மஹா க்ரந்தத்தில் ப்ரதி சுலோகத்திலும் ஸ்ரீ பாதுகாவிஷயமான அர்த்தஙகள்போல், ஸ்ரீ நம்மாழ்வார் முதலிய ஸதாசார்யர்கள் பரமான அர்த்தங்களும் முக்யார்த்தங்கள் என்று ஸ்ரீஸ்வாமி தேசிகனே ஸ்தோத்ராரம்பத்தில் பலவிடங்களில் சப்தத்தா லும் அர்த்த ஸ்வபாவத்தாலும் ஸ்பஷ்டமாகவும் ஸூசனை யாகவும் காட்டி ஸர்வசாஸ்திரார்த்த ஸாரங்களையும், அப்யுக் தர்கள் "சீரொன்று தூப்பில்" என்கிற பாசுரத்தில் கொண் டாடியபடி, உள்ளடக்கி இருந்தும் பண்டிதர்கள் இந்த மஹா காவ்யத்தை பாதுகா விஷயமான ஒரு ஸாமான்ய ஸ்தோத்ர மாக மட்டும் அறிந்து அப்படியே வ்யாக்யானங்களும் செய்து வந்தார்கள். இதைப் பார்த்து நிர்வேதமடைந்து ஸ்ரீ தேர ழுந்தூர் ஆண்டவன் என்று உலகெங்கும் பிரஸித்திபெற்ற ஸ்ரீ நம்மாண்டவன் வேதாந்தராமாநுஜ மஹாதேசிகர் இது ஸாமான்ய காவ்யமில்லை ஸ்ரீமத்ராமாயணத்தைப்போல் மிகவும் வ்யங்க்ய ப்ரதானமானதும் வரப்ரஸாதியானதும், ஸர்வ சாஸ்

திரார்த்த ஸாரங்களையும் உள்ளடக்கிக்கொண்டதும் உபதேச க்ரந்தமானதும் ஸகல ஜநங்களுக்கு ஸகல க்ஷேமங்களுக்கும் ஸாதனமாய் நித்ய பாராயணத்துக்கேற்றதுமான ஒரு மஹா க்ரந்தம் என்று உலகத்தில் பிரஸித்தி செய்து அப்படியே அனுஷ்டிப்பித்து, இதில் ஸ்ரீரங்கநாதனுடையவும் ஸ்ரீஸ்வாமி தேசிகனுடையவும் அந்தரங்கமான அபிப்ராயங்களை உலகத்துக்கு வெளியிட்டு, அதனால் உலகத்தார் எல்லாரும் ஸதாசார்யர்களின் பெருமையை அறிந்து ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கவேணுமென்று ஸர்வபூத ஸௌஹார்ததத்தால் திருவுள்ளம்பற்றி அப்படியே இதின் பாவங்களை உலகத்தார் அறியும்படி எளிய தமிழ்நடையில் வ்யாக்யானம் செய்தருள ஆரம்பித்து 860-சுலோகங்கள் முடிய செய்தருளி, திருநாட்டை அலங்கரித்தாய் விட்டது.

இப்படிப்பட்ட வ்யாக்யானம் முடிவு அடையவில்லையே என்ற க்லேசத்தினால் இதைப்பூர்த்திசெய்தருளவேணுமென்று இப்பொழுது எழுந்தருளியிருக்கிற ஸ்ரீஉநு ஆண்டவன் ஸ்ரீநிவாஸமஹாதேசிகன் திருவடிவாரங்களில் அனேக ப்ரணாம பூர்வமாக பலதடவைகள் பிரார்த்தித்தேன், அந்த ப்ரார்த்தனையைத் தலைக்கட்டி அடியேனுடைய மனக்லேசத்தையும் தீர்த்து, மேல் வ்யாக்யானத்தை உபக்ரமித்து இப்பொழுது 861-முதல் 910-சுலோகம் முடிய வ்யாக்யானம் அருள்புரிந்தாகி இருக்கிறது. பாக்கி ச்லோகங்களின் வ்யாக்யானமும் சீக்கிரமாக முடிவுபெற்று எல்லாரும் க்ஷேமத்தை அடைய வேண்டுமென்று ஸ்ரீமத் ஆசாரியாள் பாதுகைகளைப் பிரார்த்திக்கிறேன்.

தாஸநு,

ஸாரநாதன்.

இப்புஸ்தகம் கிடைக்குமிடம்:—

1. ஸ்ரீமதாண்டவன் ஸன்னிதி.
2. ஸாரநாதன் C/o ஸ்ரீ கோமளாம்பா பிரஸ்,
3,பாட்டராசாரியார் தெரு, கும்பகோணம்.

ஶ்ரீ: ||

ஶ்ரீமதே வேதாந்தராமாநுஜ மஹாதேஶிகாய நம: ||

(அசுக) ஆநந்தஸூ: ப்ரணயிநாமநவத்யப்ரஸாதா
ரங்காதிராஜபதரக்ஷிணி ரத்நபாஸா |
ந்யஸ்தே முஹுர்நிஜபரே ஸ்திரதாம் பஜந்த்யா
வர்ணாம்ஶுகம் விதரஸீவ வஸுந்தராயா: ||

ஶ்ரீரங்கநாதபதத்வந்த்வதாஸ்ய ஶாஸ்த்ராவீக்ஷணாத் |
பாதுகா ஸஹஸ்ரஸ்ய வ்யாக்யாயா ஶ்லோகஸம்க்ஷேப: க்ரியதே
மயா ||

வேதாந்தராமாநுஜஸம்யமீந்த்ர வ்யாக்யாநதஸ்ஸம்க்ஷே
பதோ மயோக்த: | அநவத்யரத்நபத்திஸ்ஸேயம் ஶ்ரேயஸ்ஸா
தநாய ஏவம் ஸாதுஜநா விஹாயாத் ||

வேதாந்த லக்ஷ்மணமுநே: பாதபத்மைக ஜீவிநா |
ஸ்ரீநிவாஸேந யதிநா வ்யாக்யேயம் க்ரியதேऽதுநா ||

ஹே ரங்காதிராஜபதரக்ஷிணி - ஸ்ரீ ரங்கநாதனுடைய திருவடிகளைக் காப்பாற்றுகிற பாதுகையே! ப்ரணயிநாம்-தன்னிடத்தில் பக்தியுள்ளவர்களுக்கும், யாசகர்களுக்கும், ஆநந்தஸூ: - ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறவளாயும், அநவத்ய - குற்றமில்லாத, அழகான, ப்ரஸாதா - தெளிவையுடையவளாயும் ஸுகமாயிருப்பதையுடையவளாயுமிருக்கிற, த்வம் - நீ, நிஜ - தன்னுடையதான, பரே - பாரமானது, ந்யஸ்தே - வைக்கப்பட்டபோது, ஸ்திரதாம் - அசையாமலிருப்பதை, பஜந்த்யா: - அடையாநிற்கிற, வஸுந்தராயா: - பூமிக்கு, ரத்நபாஸா - ரத்னகாந்தியாலே, வர்ணாம்ஶுகம் - அநேகம் வர்ணமுள்ள வஸ்திரத்தை, விதரஸீவ - கொடுக்கிறாய்போல.

(கருத்து) ஓ பாதுகையே! உன்னுடைய ரத்னகாந்திகள் பூமியின் பேரில் பரவுகிறதைப் பார்த்தால், உன்னைப்பிரீதியோடு அடைந்தவர்களுக்கு விசேஷ ஆநந்தத்தைக் கொடுப்பவளாயும் ஒரு குற்றமுமில்லாத அழகான சந்தோஷக்குறியையுள்ளவளாயுமிருக்கிற நீ உன்னுடைய பாரத்தை அடிக்கடி தாங்கிக்கொண்டு

41

உறுதியாயிருக்கும்படியான பூதேவிக்குஸந்தோஷப்பட்டு அநேக வர்ணங்களுள்ள உயர்ந்ததான ஒரு வஸ்திரத்தை பகுமான மாய்க் கொடுத்தாப்போல இருக்கிறது.

நல்ல ஆசார்யர்கள் தன்னை ஆச்ரயித்தவர்களுக்கு ரொம்ப வும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுகிறவர்களாயும் கபடமில்லாத அனுக்ரஹமுள்ளவர்களாயும் இருந்துகொண்டு தங்களால் பலகால் பண்ணப்பட்ட சிக்ஷைகளிலும் பரீக்ஷைகளிலும் தேறி உறுதியான பக்தியுள்ள சிஷ்யர்கள் விஷயத்தில் ஸந்தோஷப்பட்டு தங்களு டைய தத்வஹிதப்ரகாசகமான உயர்ந்த வார்த்தைகளாலே தங்க ளுடைய சாயலை அவர்களுக்குக் கொடுக்கிறார்கள். அதாவது தங்களைப்போல் அவர்களையும் ஆக்குகிறார்கள். மஹாராஜாக்கள் ராஜகார்யத்தை நிர்வகிக்கும்படியான மந்திரி முதலானவர்களுக்கு வஸ்திரம் முதலிய பகுமானத்தைக் கொடுத்து ஸந்தோஷிக்கிறார் கள். அதுபோல. (31)

(௮௯௨) த்வம் சித்ரபாநுரஸி ரத்நவிசேஷயோகாத்
மஹ்நா நிஜேந பரிபுஷ்யஸி பாவகத்வம் ।
ஸ்வேநைவ சௌரிசரணாவநி சந்த்ரமாஶ்ச
தேஜஸ்த்ரயீவ மிலிதாஸி தமோபஹா ந: ॥

ஹே சௌரிசரணாவநி - வாராய் பெருமாளுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! ரத்நவிசேஷ - அநேகவிதமான ரத்னங்களுடைய, யோகாத் - ஸம்பந்தத்தாலே, சித்ரபாநு: - விசித்திரமான காந்தியையுடைத்தானவளாக, ஸூர்யனாக, அஸி - ஆகிறாய். நிஜேந - தன்னுடையதான, மஹ்நா - பெருமையாலே, பாவகத்வம் - பரிசுத்தம் பண்ணும் தன்மையை, நெருப்பாகவிருப்பதை, பரிபுஷ்யஸி - போஷிக்கிறாய், ஸ்வேநைவ - ஸொந்தமாகவே, சந்த்ரமா: - தங்கமயமாக, சந்திரனாக, அஸி - ஆகிறாய். மிலிதா - ஒன்றாகக் கலந்திருக்கிற, தேஜஸ்த்ரயீவ - ஸூர்யன் சந்திரன் நெருப்பு இந்த மூன்றுபேர்கள்போல, ந: - எங்களுடைய, தம: - வருத்தத்தை, இருட்டை, அபஹா - போக்கடிக்கிறவளாக, அஸி - ஆகிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! நீ அநேக ரத்னங்கள் இழைத்திருப்பதினால் பல பல வர்ணமுள்ள காந்தியையுடையவளாயும், அதாவது ஸூர்யனாகவும், உன் ஸ்வபாவத்திலேயே சுத்தியுள்ளவளாயும், அக்னியாயும் ஸ்வபாவமாகவே தங்கமாயும் சந்திரனாயும், இருந்துகொண்டு எங்களுடைய அஜ்ஞானமாகிற இருட்டைப் போக்கடிப்பதற்காக ஸூர்யன் சந்திரன் நெருப்பு மூன்றும் ஓரிடத்தில் கலந்திருப்பதுபோல் தோன்றுகிறாய்.

நல்ல ஆசார்யர்கள் பற்பல சாஸ்திரஜ்ஞானத்தாலே ஸூரியன்போல் விசேஷப் பிரகாசமுள்ளவர்களாயும் நல்ல ஸதாசாரத்தால் நெருப்புபோல் பிறந்ததுமுதல் சுத்தியுள்ளவர்களாயும், அநுக்ரஹவிசேஷத்தால் சந்திரனைப்போல வந்தவர்களை ஆநந்திப்பித்துக்கொண்டும் எல்லா ஜனங்களுக்குமுள்ள ஒருவராலும் நீக்கமுடியாத அஜ்ஞானமென்கிற இருட்டை ஸுலபமாய் போக்கடிக்கிறார்கள். (32)

(அகூ௩) ப்ரௌடப்ரவாலருசிரா புவநைகஸேவ்யா
ரங்காதிராஜசரணாவநி ருக்மசந்த்ரா ।
ஸம்மிச்ரமௌக்திகருசிஸ்ஸததம் ப்ரஜாநாம்
தாபாத்யயம் விதரஸி தாரகிதேவ ஸந்த்யா ॥

ஹே ரங்காதிராஜசரணாவநி - ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளைக் காப்பாற்றுகிற பாதுகையே! ப்ரௌட - இளசான, ப்ரவால - துளிர்போல, ருசிரா - அழகாயும், புவந - லோகங்களுக்கு, ஏகஸேவ்யா - ஸேவிக்கிறதற்காகவே ஏற்பட்டவளாயும், ருக்மசந்த்ரா - அழகான தங்கத்தை உடைத்தானவளாயும், சந்திரனை உடைத்தானவளாயும், ஸம்மிச்ர - கலந்திருக்கிற, மௌக்திகருசி: - முத்துகாந்தியை யுடைத்தானவளுமான, த்வம் - நீ, தாரகிதா - நக்ஷத்திரங்களை உடைத்தான, ஸந்த்யேவ - ஸந்தியாகாலம்போல, ப்ரஜாநாம் - ஜநங்களுக்கு, ஸததம் - எப்போதும், தாபாத்யயம் - தாபசாந்தியை, ஸம்ஸாரத்திலுள்ள ஆத்யாத்மிகாதி தாபங்கள் நீங்குவதை, விதரஸி - கொடுக்கிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! நீ பவழங்களால் சிவந்திருப்பதாலும் உன்னை எல்லா ஜனங்களும் ஸேவிப்பதாலும் தங்கமாகிற சந்திர

ளோடு சேர்ந்திருப்பதாலும் முத்துக்களோடு கலந்திருப்பதாலும் சந்திரகலையும் நக்ஷத்திரங்களும் கலந்திருக்கும் ஸந்தியாகாலம் போல் ஜநங்களுக்குத் தாபத்தைப் போக்கடிக்கிறாய்.

அநேகம் பேர்களால் ஸேவிக்கக்கூடியவர்களாய் அநேகம் பேர்களை ஆநந்தப்படுத்துகிறவர்களாய், ஸத்வகுணம் நிறைந்து இளம் துளிர்கள்போல் கொழுந்துவிட்டோடும் புத்தி கௌசலமு முள்ளவர்களான ஸதாசார்யர்கள் ஸம்ஸார தாபத்தால் வருத்தப் பட்டவர்களுக்கு ஸந்தியாகாலம்போல் க்ஷேமத்தைக் கொடுத்துக் கொண்டுஸம்ஸாரத்தாலுண்டான வருத்தத்தை நீக்கிவிடுவார்கள்.

(அகூச) 𑌰𑌙𑍍𑌗𑌸𑍍𑌯 𑌪𑍁𑌰𑌤𑍋 𑌮𑌣𑌿𑌪𑌾𑌦𑍁𑌕𑍇 𑌤𑍍𑌵𑌂
𑌰𑌤𑍍𑌨𑌾𑌂𑌶𑍁𑌭𑌿𑌰𑍍𑌵𑌿𑌕𑌿𑌰𑌸𑌿 𑌸𑍍𑌫𑍁𑌟𑌭𑌕𑍍𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑌾 ।
𑌪𑌾𑌦𑍌 𑌵𑌿𑌹𑌾𑌰𑌯𑌿𑌤𑍁𑌮𑌾𑌦𑍃𑌤𑌸𑍌𑌕𑍁𑌮𑌾𑌰𑍍𑌯𑍌
𑌪𑍍𑌰𑌾𑌯𑌸𑍍𑌸𑌰𑍋𑌜𑌕𑍁𑌮𑍁𑌦𑍋𑌤𑍍𑌪𑌲𑌪𑌤𑍍𑌰𑌪𑌙𑍍𑌕𑍍𑌤𑌿𑌂 ॥

𑌹𑍇 𑌮𑌣𑌿𑌪𑌾𑌦𑍁𑌕𑍇 - வாராய் கல்லிழைத்த பாதுகையே! 𑌤𑍍𑌵𑌂 - நீயானவள், 𑌸𑍍𑌫𑍁𑌟 - கெட்டியான, 𑌭𑌕𑍍𑌤𑌿 - பக்தியென்ன, ரத்னவரிசையென்ன இவைகளுடைய, 𑌬𑌨𑍍𑌧𑌾 - கட்டையுடைத்தானவளாய், 𑌰𑌙𑍍𑌗𑌸𑍍𑌯 - ரங்கநாதனுடைய, 𑌆𑌦𑍃𑌤 - ஆச்சர்யமான, 𑌸𑍌𑌕𑍁𑌮𑌾𑌰𑍍𑌯𑍌 - மெதுவாயிருப்பதையுடைத்தான, 𑌪𑌾𑌦𑍌 - திருவடிகளை, 𑌵𑌿𑌹𑌾𑌰𑌯𑌿𑌤𑍁𑌂 - நடத்துவதற்காக, 𑌪𑍁𑌰𑌤𑌃 - முன்பு, 𑌰𑌤𑍍𑌨𑌾𑌂𑌶𑍁𑌭𑌿𑌃 - ரத்னகாந்திகளாலே, 𑌸𑌰𑍋𑌜 - தாமரைப்பூவென்ன, 𑌕𑍁𑌮𑍁𑌦 - ஆம்பல்பூவென்ன, 𑌉𑌤𑍍𑌪𑌲 - கருநெய்தல்பூவென்ன இவைகளுடைய, 𑌪𑌤𑍍𑌰 - இதழ்களுடைய, 𑌪𑌙𑍍𑌕𑍍𑌤𑌿𑌂 - வரிசையை, 𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 𑌵𑌿𑌕𑌿𑌰𑌸𑌿 - பரப்புகிறாய் போல.

(கருத்து) ஓ பாதுகையே! ஸ்ரீரங்கநாதன் வீதிகளில் எழுந்தருளும்போது அந்த திருவடிகளின் மார்தவத்தைக் கண்டு நீ பயந்து பக்தியோடு உன்னுடைய காந்திகளைக்கொண்டு திரு வடிகளுக்கு உறுத்தாமல் இருப்பதற்காக தாமரை, ஆம்பல், கரு நெய்தல் முதலிய புஷ்பங்களை வரிசையாய் பரப்புகிறாய்போல.

பெருமாளிடத்தில திருடமான பக்தியுள்ள ஸ்ரீ நம்மாழ்வார் போலிருக்கிற ஆசார்யர்கள் கல்லைக்காட்டிலும் கடினமான ஜனங்

களுடைய ஹிருதயத்தில் பெருமாளை ஸஞ்சரிக்கும்படி செய்வதற்காக தங்களுடைய திவ்யஸூக்திகளாகிற அநேகவித புஷ்பங்களைப் பரப்பி அதில் நடத்துகிறார்கள். (அதாவது) அந்த ஸ்ரீஸூக்திகளின் கருத்தை ஹிருதயத்தில் வாங்கிக்கொண்டால் பெருமாள் அதில் ஸுலபமாய் எழுந்தருளுவர் என்று) (34)

(௪௩௫) ஆஸந்நவ்ருத்திரவரோதக்ருஹேஷு சௌரே
ராவாதயஸ்யநுபதம் ரங்கநாயிகாநாம் ।
ஆபத்தரத்நகிரணா மணிபாதுகே த்வம்
மஞ்ஜுஸ்வநா மதநபாணநிகஷஸங்காம் ॥

ஹே மணிபாதுகே-ரத்னமிழைத்த பாதுகையே! சௌரே: - பெருமாளுடைய, அவரோதக்ருஹேஷு - அந்தப்புரங்களில், ஆஸந்நவ்ருத்தி: - ஸமீபத்திலிருக்கிறவளாயும், ஆபத்த - ஸம்பந்தப்பட்ட, ரத்நகிரணா - ரத்னகாந்தியையுடைத்தானவளாயும், மஞ்ஜுஸ்வநா - அழகான சப்தத்தையுடைத்தானவளாயுமிருக்கிற, த்வம் - நீ, ரங்கநாயிகாநாம் - அந்த ரங்கநாதனுடைய ஸ்திரீகளுக்கு, அநுபதம்-அடிவைப்புதோறும் அடிக்கடி, மதநபாண - மன்மதபாணத்தினுடைய, நிகஷ - சாணைபிடிக்கிறதினுடைய, ஸங்காம் - ஸந்தேஹத்தை, ஆவாதயஸி - உண்டுபண்ணுகிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! அந்தப்புரங்களில் பெருமாள் உன்னைச்சாத்திக்கொண்டு எழும்போது நீ ரொம்ப அழகாய் சப்தித்துக்கொண்டு உன்ரத்னகாந்தியை பரப்பிக்கொண்டிருப்பதை பார்த்து, அந்தப் பெருமாளுடைய திவ்யமஹிஷிகள் மன்மதன் தன் பாணங்களைச் சாணை பிடிப்பதினால் இந்த சப்தமும் ஒளியும் உண்டாகிறதென்று சங்கிக்கிறார்கள். (அதாவது) ரொம்ப அழகாய் சப்தித்துக்கொண்டும் திவ்யமான ப்ரகாசமுள்ளவளுமான உன்னைச் சாற்றிக்கொண்டு பெருமாள் எழுந்தருளுகிறபோதெல்லாம் அந்ததிவ்யமஹிஷிகளுக்கு பெருமாளிடத்தில் விசேஷமான ஆசை உண்டாகிறது.

பெருமாளுடைய அந்தப்புர ஸ்திரீகளுக்கு பெருமாள் பாதுகைகளைச் சாத்திக்கொண்டு அங்கே எழும்போது பாதுகைகளின்

சப்தத்தினாலும் காந்தியினாலும் பெருமாளிடத்தில் விசேஷப்ரீதி உண்டாவதுபோல். "ஸ்த்ரீப்ராயமிதரத்ஸர்வம்" என்கிறபடி பெருமாளுக்கு பத்நீஸ்தானத்தில் இருப்பவர்களாயும் பெருமாளையே அடைய ஆவல்பட்டுக்கொண்டிருக்கும் முமுக்ஷுக்களுக்கு ஸ்ரீ நம்மாழ்வார் முதலிய ஸதாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளும் அனுபவங்களும் பெருமாளிடத்தில் விசேஷ ஆவலை உண்டுபண்ணுகின்றன. (35)

(௮௯௯) ஸம்பூர்ண மௌக்திக நகா ஸ்புட பத்மராக
ரேகாவிசேஷ ருசிரா லலித ப்ரசாரா ।
ரங்காதிராஜ பதயோ: மணிபாதுகே த்வம்
ஸாரூப்யமாச்ரிதவதீவ ஸமஸ்தவந்த்யா ॥

ஹே மணிபாதுகே - வாராய் கல்விழைத்த பாதுகையே! ஸம்பூர்ண - பரிபூர்ணமான, மௌக்திக - முத்துக்களாகிற, நகா - நகங்களையுடைத்தானவளாயும், ஸ்புட - பிரகாசமான, பத்மராக - சிகப்புக்கல்லாகிற தாமரைப்பூவினுடைய சோபையை உடைத்தானவளாயும், ரேகாவிசேஷ - த்வஜம் வஜ்ரம் முதலிய அநேக கோடுகளாலே, ருசிரா - அழகாயும், லலித - அழகான, ப்ரசாரா - நடையை உடைத்தானவளாயும், ஸமஸ்தவந்த்யா - எல்லாருக்கும் ஸேவிக்கத்தகுந்தவளுமான, த்வம் - நீ, ரங்காதிராஜபதயோ: - ஸ்ரீ ரங்கநாதன் திருவடிகளுக்கு, ஸாரூப்யம் - ரொம்ப ஒற்றுமையை, ஆச்ரிதவதீவ - அடைந்தவள்போல.

(கருத்து) ஓ பாதுகைகளே ! உங்களிடத்திலிருக்கும் முத்துக்கள் நகங்கள்போலவும், சிகப்புக்கல்லுகள் தாமரைப்பூவின் சிகப்புப் போலவுமிருப்பதாலும் கோடுகளாலே நிறைந்து அழகான நடையும் எல்லாரும் ஸேவிக்கும்படியான தன்மையும் பெருமாளுடைய திருவடிகளுக்கு இருக்குமாப்போலே உங்களுக்குமிருப்பதாலும் அவைகளோடு ரொம்பஒற்றுமைஉங்களுக்குஉண்டாகியிருக்கிறது.

நல்ல ஆசார்யர்கள் பெருமாளுடைய திருவடிகள்போலவே எல்லாராலும் ஸேவிக்கத்தகுந்தவர்களாய் மோக்ஷம் முதலியதைக் கொடுக்கிறார்கள். (36

(அ௬எ) ப்ராப்தாபிஷேகா மணிபாதரக்ஷே த்வம்
ப்ரதீப்தரத்நா ரகுராஜதாந்யா: ।
ப்ரதக்ஷிணப்ரக்ரமணாதகார்ஷீ:
ப்ராகாரமாக்நேயமிவ ப்ரபாபி: ॥

ஹே மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்த பாதுகையே! ப்ராப்த - அடையப்பட்ட, அபிஷேகா - பட்டாபிஷேகத்தை உடைத்தானவளாயும், ப்ரதீப்த - பிரகாசித்துக்கொண்டிருக்கிற, ரத்நா - ரத்னங்களை உடைத்தானவளாயுமிருக்கிற, த்வம் - நீ, ரகுராஜதாந்யா: - ரகுராஜாக்களுக்கு பிரதானநகரமாயிருக்கிற அயோத்திக்கு, ப்ரதக்ஷிணப்ரக்ரமணாத் - பிரதக்ஷிணமாகச் சுற்றிப்போகிறதினாலே, ப்ரபாபி: - காந்திகளாலே, ஆக்நேயம் - நெருப்பினால் செய்யப்பட்ட, ப்ராகாரம்-மதிலை, அகார்ஷீரிவ- செய்தாய்போலே.

ஓ பாதுகையே! உனக்குப் பட்டாபிஷேகம் பண்ணி ஊர்வலத்திற்காக உன்னை ஊரைச்சுற்றிப்பிரதக்ஷிணமாக எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவரும்போது உன் ரத்னகாந்திகளால் அந்தப் பட்டணத்திற்கு நெருப்பினால் ஒரு பெரியதான கோட்டை மதில் போட்டாப்போலிருந்தது.

ஒரு நல்ல ஸதாசார்யர்களை ஒரு இடத்தில் ஏற்படுத்தினால் அவர்களுடைய தேஜஸ்ஸினால் (யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்த:) என்கிறபடி, அவர்களைச் சுற்றி வெகுதூரம் ஒரு தீங்குகளும் வாராதபடி செய்வார்கள். (37)

[அ௬அ] ரத்நாஸநே ராகவபாதரக்ஷே
ஸதீப்யமாநாஸ்தவ பத்மராகா: ।
ப்ராயோ நரேந்த்ராஸ்யது ஸாந்த்ரஜக்நு:
ஸந்தாபஹேதும் ஸவந்து ஸோமா: ॥

ஹே ராகவபாதரக்ஷே - வாராய் ஸ்ரீராமனுடையதிருவடியைக்காப்பாற்றும் பாதுகையே! தவ - உன்னுடைய, ரத்நாஸநே - ஸிம்மாஸனத்தில், ஸதீப்யமாநா: - ரொம்ப பிரகாசித்துக்கொண்டிருக்கிற, பத்மராகா: - சிகப்புக்கல்லுகள், நரே

ந்ருபாணாம் - எதிரிராஜாக்களை, ஜேதா: - ஜயிக்கிறவராயிருக்கிற, பரதஸ்ய - பரதனுடைய, ப்ரதாபவஹ்நே:-பராக்கிரமமாகிற நெருப்புக்கு, அங்குராஇவ - முளைகள்போல அதாவது, நாத்துவிட்டிருப்பதுபோல, அபவந் - ஆயின.

(கருத்து) ஓ பாதுகையே! நீ ஸிம்மாஸனத்தில் எழுந்தருளியிருக்கும்போது உன் கீழே பரவின சிகப்புக்கல் காந்திகள் எதிரிகளை ஜயித்து விளங்கும்படியான பரதருடைய பராக்கிரமங்கள் நிறைய முளைத்திருக்காப்போலிருக்கின்றன.

ஜ்ஞானசக்தியாதிகளால் பிரகாசமுள்ள ஒரு நல்ல ஸதாசார்யர்களை பூர்வாசாரியருடைய ஸ்தானத்தில் ஏற்படுத்தினுல் அவர்களை ஆராதிக்கிறவனுக்கும் எதிர்வாதம் பண்ணி மதங்களை அழிக்கும் துர்வாதிகளை ஜயிக்கும்படியான ஒருவிதமான தேஜஸ்ஸுகள் உண்டாகின்றன.

(அகூக) மாங்கல்யஶப்தா ஸதீ ஶ்ருதீநாம்
கண்டேஷு வைகுண்டபதிம் வராணாம் ।
பத்நாஸி நூநம் மணிபாதரக்ஷே
ஸூத்ரைஸ்ஸூத்ரம் மணிரஶ்மி ஜாலை: ॥

ஹே மணிபாதரக்ஷே-ரத்னமாய் கல்லிழைத்த பாதுகையே! ஸதீ - நீயானவள், மாங்கல்ய ஶப்தா - மங்களமான சப்தத்தை உடைத்தானவளாய்க்கொண்டு, வைகுண்டபதிம் வராணாம் - பெருமாளையே பர்த்தாவாக வரிக்கிற, (அதாவது) ஆசைப்படுகிற ஸ்திரீகளுடைய, கண்டேஷு - கழுத்துக்களில், மணிரஶ்மி ஜாலை: - ரத்னகாந்திகளாகிற நூல்களாலே, ஸூத்ரைஸ்ஸூத்ரம் - தாலிக்கயிற்றை, பத்நாஸி - கட்டுகிருய்.

(கருத்து) ஓ பாதுகையே! பெருமாளையே பர்த்தாவாக ஆசைப்படுகிற வேதங்களாகிற பெண்கள் கழுத்தில் நீ வாத்தியார் மாதிரியாக சுபமான மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு உன் காந்திகளாகிற தாலிச்சரட்டைக் கட்டுகிருய்போலே.

ஸ்ரீ நம்மாழ்வார் போன்ற ஸதாசார்யர்கள் பெருமாள் ஒருவரையே தனக்கு யஜமானராகக் கோரும்படியான வேதங்களெல்

கிற பெண்களுக்கு தங்களுடைய திவ்யஸூக்திகளால் ஸகல வேதங்களும் பெருமாளையேதான் சொல்லுகிறது என்கிற அர்த்தத்தை நிலைநிறுத்தி அந்தப் பெருமாளை அவைகள் இழந்துபோகாமல்படிக்குப்பெருமாளுக்கும் அந்த வேதப்பெண்களுக்கும் ஸம்பந்தத்தை நிலைநிறுத்துகிறார்கள். (39)

(௪௰) விசித்ரவர்ணா ச்ருதிரம்யசப்தா
நிதீயஸே நாகஸதாம் சிரோபி: ।
மதுத்விஷஸ்த்வம் மணிபாதரக்ஷே
ச்ரேயஸ்கரீ சாஸநபத்ரிகேவ ॥

ஹே மணிபாதரக்ஷே-வாராய் கல்லிழைத்த பாதுகையே! விசித்ரவர்ணா - நாநாவிதமான வர்ணங்களையுடையவளாயும், எழுத்துக்களையுடையதாயும், ச்ருதி - வேதங்களுக்கு, காதுகளுக்கு, ரம்ய - அழகான, சப்தா - சப்தத்தையுடைத்தானவளாயும், ச்ரேயஸ்கரீ - மோக்ஷத்தைக் கொடுக்கிறவளாயும் இருக்கிற, நல்ல கார்யத்தைத் தெரிவிக்கிறதான, த்வம்-நீ, மதுத்விஷ:-மது என்கிற அஸுரனுக்கு சத்துருவான பெருமாளுடைய, சாஸநபத்ரிகேவ-உத்திரவு ரூபமான ஸமாசாரத்தைத்தெரிவிக்கிற கடிதம்போல, நாகஸதாம் - தேவதைகளுடைய, சிரோபி: - தலைகளாலே, நிதீயஸே - தூக்கப்படுகிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! அநேக வர்ணங்களும் அதாவது எழுத்துக்களும் அழகான சப்தங்களுமுள்ள உன்னை எம்பெருமான் கட்டளையிடும் உத்திரவுகளைத் தெரியப்படுத்தும் சீட்டைப்போல் தேவதைகள் சிரஸால் வஹிக்கிறார்கள். அதாவது தலையால் தூக்குகிறார்கள்.

ஸூகமான அக்ஷரங்களைக் கலந்து அழகான சப்தங்களைக் கூட்டி திவ்யமான பாசுரங்களை ஸாதிக்கும்படியான ஸ்ரீநம்மாழ்வார் போன்ற ஆசார்யர்கள் சொல்லும் வார்த்தைகளை பெருமாள் கட்டளையிடும் திருவாக்குகள்போல பாகவதர்கள் சிரஸால் சிலாகிக்கிறார்கள். 'நாகஸதாம்' என்பதினால் ரொம்ப உயர்ந்த லோகத்திலிருப்பவர்கள் அதாவது பகவதனுபவரூபமான மஹாலோகத்திலேயே ஈடுபட்டவர்கள் என்று ஓர் அர்த்தம். (40)

(௮௭௧) ஸ்திரா ஸ்வபாவா மணிபாதுகே த்வம்
ஸர்வம்ஸஹா ஸ்வாதுபலப்ரஸூதி: ।
பூமிரிவ பாதௌ பரமஸ்ய பும்ஸ:
ஸம்ஸ்ருஜ்யஸே தேவி விஸ்ருஜ்யஸே ச ॥

ஹே தேவி! மணிபாதுகே - ரத்னங்களால் விளங்காநிற்கும் கல்லிழைத்த பாதுகையே! ஸ்வபாவாத் - ஸ்வபாவத்தினாலேயே, ஸ்திரா - கெட்டியாயும், அசையாமலும், ஸர்வம்ஸஹா - ஆச்ரிதர்களுடைய எல்லாக் குற்றங்களையும் பொறுக்கிறவளாயும், எல்லாரையும் சுமக்கிறதால் பாரத்தைத் தாங்குகிறவளாயும், ஸ்வாது - போக்யமான (ருசியுள்ள) பல - பிரயோஜனங்களை, (பயிர் முதலிய பலங்களை,) ப்ரஸூதி: - உண்டுபண்ணுகிறவளாயுமிருக்கிற, த்வம் - நீ, பூமிரிவ - பூதேவிபோல, பரமஸ்ய பும்ஸ: - பெருமாளுடைய, பாதௌ - திருவடிகளோடு, ஸம்ஸ்ருஜ்யஸே - சேர்க்கப்படுகிறாய், விஸ்ருஜ்யஸே ச - பிரிக்கவும்படுகிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! நீ ஸ்வபாவத்தினாலேயே உறுதியாயும் ஆச்ரிதர்கள் செய்யும் குற்றங்களை ஸஹித்துக்கொண்டும் நல்ல நல்ல பலன்களைக்கொடுத்துக் கொண்டுமிருந்து பூதேவியைப் போல பெருமாள் திருவடிகளோடு சிலகாலம் சேர்ந்தும் சிலகாலம் பிரிந்தும் இருக்கிறாய்; பூமிக்குள்ள குணம் உனக்கு இருக்கிறது என்று அர்த்தம்.

ஸ்ரீ நம்மாழ்வார் போன்ற ஆசார்யர்கள் பெருமாளை நேரில் ஸேவித்துக்கொண்டு அவரோடு கலந்திருக்கிற காலத்திலும் அவரைவிட்டுப்பிரிந்திருக்கிற காலத்திலும்ஸ்வபாவத்திலேயேரொம்ப உறுதியுள்ளவர்களாயும், தங்களை ஆச்ரயித்தவர்கள் பண்ணும் குற்றங்களைப் பொறுத்துக்கொண்டும், அவர்களுக்கு வேண்டிய பிரயோஜனங்களை கல்பித்துக்கொண்டும், தங்களுடைய ஸ்வபாவத்தில் மாறுதலில்லாமலே இருக்கிறார்கள். பெருமாளோடு சேர்ந்திருப்பதால் ஸந்தோஷமும், பிரிந்திருப்பதால் வருத்தமும், தங்களுக்கு உண்டேயாகிலும், தாங்கள் ஜனங்களுக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணுகிற விஷயத்தில் தவறுகிறதில்லை. இது விஷ

யத்தில் அவர்கள் ஸ்ரீ பெருமாளுடைய பூதேவி முதலான தேவி மார்களையும் பாதுகைகளையும் ஒற்றிருக்கிறார்கள். (41)

(௪௭௨) பஶ்யந்தி ரங்கேஶ்வரபாதரக்ஷே
ஸபர்யாஸு தே ஸம்ஹிதபுஷ்பஜாலாம்।
ம்ருகீத்ருஶோ நீலமணீந்த்ரபங்க்திம்
ஸஜ்யபாணாமிவ மந்மதஜ்யாம்॥

ஹே ரங்கேஶ்வரபாதரக்ஷே - ஸ்ரீ ரங்கநாதனுடைய திருவடிகளைக் காப்பாற்றுகிற பாதுகையே! ம்ருகீத்ருஶ:-மான் விழி போல் விழியுள்ள தேவிமார்கள், ஸபர்யாஸு - அர்ச்சனம் செய்யுங்காலங்களில், ஸம்ஹித - சேர்க்கப்பட்டிருக்கிற (தொடுக்கப்பட்டிருக்கிற) புஷ்பஜாலாம் - புஷ்பஸமூஹத்தை உடைத்தாயிருக்கிற, நீலமணீந்த்ரபங்க்திம் - இந்திரநீல ரத்னங்களுடைய வரிசையை, ஸஜ்யபாணாம்-பாணத்தோடு கூடியிருக்கிற, மந்மத - மன்மதனுடைய, ஜ்யாம் இவ-நாண்கயிற்றைப்போல, பஶ்யந்தி - பார்க்கிறார்கள்.

(கருத்து) ஓ பாதுகையே! பெருமாள் திருவடிகளில் புஷ்பங்களால் அர்ச்சனம் பண்ணுகிற காலங்களில் உன்பேரில் அந்த புஷ்பங்கள் உதிர்ந்திருக்கிறதையும் உன்பேரில் இந்திரநீலக்கல்லுகள் வரிசையாக இழைத்திருக்கிறதையும் பார்த்து தேவிமார்கள் பாணத்தைத்தொடுத்திருக்கிற மன்மதனுடைய வில் நாண்போல நினைக்கிறார்கள். அதாவது உன்பேரில் உதிர்ந்திருக்கிற புஷ்பத்தோடும், உன்பேரில் இழைத்திருக்கிற இந்திரநீலக்கல் வரிசையின் காந்தியோடும் சேர்ந்து பெருமாள் திருவடிகளை ஸேவிக்கும் போது அந்தச் சேர்த்தி அழகைக் கண்டு அவர்களுக்குப் பெருமாளிடத்தில் ஆசை விருத்தியாகிறது (கவிகள் புஷ்பங்களை மன்மதனுக்கு பாணமாக வர்ணிப்பது வழக்கம். இந்திர நீலக்கல் வரிசையின் கருப்புக் காந்தியை மன்மதனுடைய வில்லுக்கு நாண்கயிறாக வர்ணித்திருக்கிறது.)

ஸ்ரீ நம்மாழ்வார் போன்ற ஸதாசாரியர்கள் ஸ்ரீ பெருமாள் திருவடிகளில் அத்யந்தம் ஈடுபட்டு தங்களுடைய விசித்ரமான மனோபாவங்களோடு கலந்த ஆச்சர்யமான பாசுரங்களைச் சொல்லிக்கொண்டு அந்தப் பெருமாளை அனுபவிக்கும் ரஸத்தைப்பார்

த்து பெருமாளுடைய தேவிமார்களும் கூட இதுமாதிரியன்றோ? அனுபவிக்க வேண்டுமென்று மிகவும் ஆசைப்படுகிறார்கள். (42)

(அஎக) கரைருதக்ரை: ஸ்புரதாம் மணீநாம்
மஞ்ஜுஸ்வநா மாதவ பாதுகே த்வம் |
ஸந்நிக்ருஷ்டே கவேரகந்யாயா:
கலே: ப்ரவேசம் ப்ரதிஷேதஸீவ ||

ஹே மாதவபாதுகே - வாராய் பெருமாளுடைய பாதுகையே! மஞ்ஜுஸ்வநா - அழகான சப்தத்தை உடைத்தான, த்வம் - நீ, ஸ்புரதாம் - பிரகாசித்துக் கொண்டிருக்கிற, மணீநாம் - ரத்னங்களுடைய, உதக்ரை: - மேலே கிளம்பியிருக்கிற, கரை: - காந்திகளாகிற கைகளாலே, கவேரகந்யாயா: - காவேரியினுடைய, ஸந்நிக்ருஷ்டே - கிட்டின பிரதேசமான ஸ்ரீ ரங்கத்தில், கலே: - கலியினுடைய, ப்ரவேசம் - உள் புகுகிறதை, ப்ரதிஷேதஸீவ - தடுக்கிறாய் போல.

(கருத்து) ஓ பாதுகையே! உன் ரத்ன கிரணங்கள் மேல் கிளம்பி பரவிக்கொண்டும் நீ அழகாய் சப்தித்துக் கொண்டுமிருப்பதைப் பார்த்தால், உலகமெல்லாம் வியாபரித்துக்கொண்டுவரும் கலியை இந்த ஸ்ரீரங்கத்தில் வரவொட்டாதபடி தடுக்கிறாய் போலிருக்கிறது.

ஸ்ரீ நம்மாழ்வார் போன்ற ஆசாரியர்கள் ரொம்ப அழகாகவும் உயர்ந்த உண்மைகளைத் தெரிவிக்கிறதுமான ஸ்ரீஸூக்திகளால் அர்ச்சாவதாரத்தினுடைய பெருமையை ஸ்தாபித்திருப்பதால், அந்த அர்ச்சாவதாரத்தைக் கொண்டாடும்படியான ஸ்ரீரங்கம் முதலிய திவ்ய தேசங்களில் கலியை பிரவேசிக்கவொட்டாமல் தடுக்கிறார்கள். (43)

(அஎச) க்லுப்தவேதிர்பவதீ ததாநீம்
உதேதி உத்தாநிதசோணரத்நா |
யாத்ரா ஸமாயாம் ஸரேதந ஸக்ரா
ஹோமாக்நிரேவஸ்ஸதிவேவ வீணா ||

க்லுப்தவேதி: - ஏற்பட்ட ஸிம்மாஸன ரூபமான ஸ்தானத்தை உடையவளாயும் (மேடையை உடையவளாயும்) உத்தா

யுதா - முத்துக்களோடே சேர்ந்த, சோணாச்மா - சிகப்புக் கல்லுகளை உடைத்தானவளாயிருக்கிற, ஸதீ - நீயானவள், பரதேந - பரதனாலே, அதிராஜ்யம் - ராஜ்யாதிகாரத்தை ஒப்புக் கொள்ளுங்காலத்தில், வஸுந்தராயா: - பூமியினுடைய, கரக்ரஹ ணாய-கல்யாணத்திற்காக (கப்பம் வாங்கிக் கொள்வதர்காக) லாஜ- பொரிகளுடைய உத்கரை: - கூட்டங்களோடு, கீர்ணா - கலந் திருக்கிற, வஹ்நிசிகேவ - நெருப்பு ஜ்வாலைபோல, அத்ருச்யா: - காணப்பட்டாய்.

(கருத்து) ஓ பாதுகையே ! பரதன் அதிகாரத்தை ஒப்புக் கொள்ளும்போது உன்னை ஸிம்மாஸனத்தில் எழுந்தருளப்பண் ணியிருப்பதையும் உன்னிடத்தில் முத்துக்களும் சிகப்புக்கல்லுகளு மிழைத்திருப்பதையும் பார்த்தால், பரதன் பூமியாகிறபெண்ணை கைபிடிப்பதற்காக (கப்பம் வாங்குவதற்காக) ஒரு மேடையின்மே ரில் அக்னியைஸ்தாபித்து அதில் பொரியினால் ஹோமம்பண்ணியி ருப்பது போலிருந்தது

கோஸல ராஜதானியானது ராஜாவில்லாமல் அராஜகமாகப் போனபோது ஸ்ரீ பரதாழ்வான் ரொம்பப் பாடுபட்டு ஸ்ரீபெரு மாள் பாதுகைகளை ஸம்பாதித்து அவைகளை ஸிம்மாஸனத்தில் ஸ்தாபித்து அவைகளின் பிரபாவத்தால் உலகத்தையெல்லாம் ஆண்டு உலகத்துக்கெல்லாம் எப்படி மங்களத்தை உண்டுபண் ணினாரோ, அதுபோல் நாதமுனிகள் ரொம்பப் பாடுபட்டு தன் னுடைய தபோபலத்தால் உலகத்தில் லுப்தமாகப்போன ஸ்ரீ நம்மாழ்வாரையும் அவருடைய திவ்ய ஸூக்திகளையும் ஸாக்ஷாத் கரித்து ஸ்ரீ ஆழ்வாரையும் பிரபன்ன ஜன ஸந்தான கூடஸ்தராக ஸிம்மாஸனததில் ஸ்தாபித்து, அவருடைய பிரபாவத்தால் ஸம் ப்ரதாயத்தை ஜீர்ணோத்தாரணம் பண்ணி, உலகத்தைக் காப் பாற்றி உலகத்துக்கே மங்களத்தை உண்டு பண்ணினார் என்பது ஸூசிப்பிக்கப்படுகிறது. (இதில் முதல் பத்ததி 2-வது ஸ்லோ கத்தில்போல பரத என்கிற சப்தம் நாதமுனிகளைக்காட்டுகிறது.)

(அஎரு) வத்ரூஜா உணிமணிவிசேஷிசரணயீ
ஸாஷி ரஜவதி ரத்நவாதபே ।
கேஸிஜணவமதாமலேதாவிதா
ஸம்விகேவ மராலேகந கஷிதா ॥

ஹே ரங்கபதிரத்னபாதுகே - வாராய் ஸ்ரீ ரங்கநாதனுடைய கல்லிழைத்த பாதுகையே! மணிமயூகை: - ரத்னக்கூட்டங்களாலே, பக்ஷௌ - சிறகுகைகளை உடைத்தானவளாயும், ஹிரண்மயீ - தங்கமயமாயுமிருக்கிற, த்வம் - நீ, முரபித: - பெருமாளுடைய, கேலிமண்டபே - விளையாட்டு மண்டபத்தில், கதாகதே - போய் வருவதற்கு, உசிதா - தகுந்ததாயிருக்கிற, பரவைநதே - கருடனுலே, க்ல்ருப்தா - ஏற்படுத்தப்பட்டிருக்கிற, ஸாக்ஷிகேவ - வேஷம்போலே, பாஸி - பிரகாசிக்கிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! உன்னுடைய ரத்னகாந்திகள் பரவுகிறதானது சிறகுகளை விரித்தாப்போலிருப்பதாலும், நீ தங்கமயமாய் இருப்பதினாலும், நீ பெருமாளை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு மண்டபத்தில் உலாவுகிறதினாலும், ஸ்வர்ணச்சாயையாய் சிறகுகளை விரித்துக்கொண்டு பெருமாளைத் தன்பேரில் ஏற்றிக்கொண்டு ஸஞ்சரிக்கிற கருடனுடைய வேறொரு வேஷம் போல் காணப்படுகிறாய்.

கருடனை ஸகல வேதமூர்த்தியாகப் பிரமாணங்கள் சொல்லுகின்றன. கருடன்பேரில் பெருமாள் ஏறி இருக்கிறார் என்பதின் அபிப்பிராயம் ஸகல வேதங்களும் பெருமாளையே தான் சொல்லுகிறது என்பது. "வேதம் தமிழ் செய்தமாறன் சடகோபன்" என்கிறபடியே வேதத்தின் தமிழ்மொழிப்பெயர்ப்பான ஸ்ரீ நம்மாழ்வாருடைய திவ்யஸூக்திகளும் மூல வேதங்கள் போலவே, பெருமாளேதான் பரதத்வமென்றும், அவரை ஆராதிப்பதே தான் உபாயமென்றும், அவரை அடைவதே தான் உயர்ந்த புருஷார்த்தமென்றும், எல்லா உலகமும் அவராலேதான் உண்டுபண்ணப்படுகிறது, காப்பாற்றப்படுகிறது, அழிக்கப்படுகிறது, தூக்கப்படுகிறது, ஏவப்படுகிறது என்றும், எல்லா உலகமும் அவருடைய உருவமென்றும், வேதத்தில் சொல்லிய எல்லாக் கருமங்களும் அவருடைய ஆராதனம் என்றும், எல்லா பலன்களையும் அந்தந்த தேவதாரூபமாக இருந்துகொண்டு அவரேதான் கொடுக்கிறாரென்றும் இவை முதலிய அவருடைய ஸங்கதிகளையும் கல்யாணகுணங்களையும்சொல்லுகிறபடியால், தமிழ்வேதமூர்த்தி என்று சொல்லக்கூடியவரான ஸ்ரீ நம்மாழ்வார் கருடனுடைய வேறொரு வேஷம்போல் காணப்படுகிறார் என்று சுலோகத்தில் த்வனிக்

கிறது. ஸ்ரீ ஆழ்வாருடைய ஸூக்திகளை ஸேவிப்பதினால் கருடாரூடனான பெருமாளை ஸேவிப்பதால் உண்டாகும் ஆனந்தம் உண்டாகும். கருடன் ஆச்ரிதர்களிடத்தில் பெருமாளைக்கொண்டு வந்து விடுவதுபோல் ஆழ்வார் முதலிய ஆசாரியர்களும் ஆச்ரிதர்களுக்குப் பெருமாளைக் கிட்டுவைக்கிறார்கள். (45)

(௪௬) உந்நதம் பலிவிரோதிந: ஸ்ரிதா
பாதுகே பதஸரோஜமாச்ரிதா ।
மௌக்திகஸ்தபகமத்யஸம்வ்ருதம்
வ்யோம ஷட்பதஸமூஹமீயுஷீ ॥

ஹே பாதுகே-பாதுகையே! உந்நதம்-உயரே தூக்கப்பட்டிருக்கிற, பலிவிரோதிந:-பலிசக்ரவர்த்திக்கு விரோதியாய் திருவிக்கிரமாவதாரம் பண்ணியபெருமானுடைய, பதஸரோஜம்-தாமரைப்பூபோலிருக்கிற திருவடியை, ஆச்ரிதா-அடைந்திருக்கிற, த்வம்-நீ, ததா-உயரே இருந்த காலத்தில், மௌக்திகஸ்தபக-முத்துக்கூட்டமாகிற பூங்கொத்தினுடைய, மத்ய-நடுபாகத்தால், ஸம்வ்ருதம்-அளக்கப்பட்டிருக்கிற, வ்யோம-ஆகாசத்தை, ஷட்பதஸமூஹம்-வண்டுகளின் ஒத்துமையை, ஈயுஷீ-அடைவிப்பித்தாய்.

(கருத்து) ஓ பாதுகையே! த்ரிவிக்ரமாவதாரகாலத்தில் மேலே தூக்கப்பட்ட பெருமானுடைய திருவடியிலே இருக்கும் உன்னுடைய முத்துக்களின் நடுவில் அகப்பட்ட ஆகாசம் பூங்கொத்தினுடைய மத்தியில் அகப்பட்ட வண்டுகள் போலிருந்தது.

சில்லரையான அல்ப புருஷார்த்தங்களில் மனதைச்செலுத்தாமல் பரம புருஷார்த்தமான மோக்ஷத்தையே விரும்பும் பெரியோர்களுடைய ஆகாசம்போல் உன்னதமாய் பெரியதாய் நிர்மலமான மனதானது புஷ்பங்களின் ரஸ பரிமளங்களில் ஈடுபட்டு அவைகளிலே மொய்த்துக்கொண்டிருக்கும் வண்டுகள்போல ஸர்வதா பகவதவதாரங்களின் ரஹஸ்யங்களிலும் பெருமைகளிலும் ஈடுபட்டு அந்த பகவானுடைய திருவடிகளிலேயே லக்னமான மனதுடைய ஸ்ரீ நம்மாழ்வார் முதலிய ஆசார்யர்களுடைய அனுபவ பரீவாஹமான பாசுரங்களின் ரஸத்தில் ஈடுபட்டு அவைகளிலே லக்னமாக இருக்கும். (46)

(௱௭௭) காந்தாங்குலி நிவேஶயந்த்ரிதா
ந்யஸ்தமௌக்திகமயூகதந்துரா |
க்ஷேமாணி வபஸீவ தேஹிநாம்
ரங்கராஜசரணாவநி ஸ்வயம் ||

ஹே ரங்கராஜசரணாவநே - பாராய் ஸ்ரீ ரங்கநாதனுடைய கல்லிழைத்த பாதுகையே! காந்த - அழகாயிருக்கிற, அங்குலி - விரல்களுடைய, நிவேஶ - பிடிப்புக்காக ஏற்பட்ட, யந்த்ரிகா - குமிழிலே, ந்யஸ்த - இழைக்கப்பட்ட, மௌக்திக - முத்தினுடைய, மயூக - காந்தியினாலே, தந்துரா - அதிகமாய்க்கொண்டு, ஸ்வயம் - தானே, தேஹிநாம் - பிராணிகளுக்கு, க்ஷேமாணி - க்ஷேமங்களை, வபஸீவ - சுக்குகிறாய் போல.

(கருத்து) ஓ பாதுகையே! ஸ்ரீ பெருமாளுடைய அதி ஸுகுமாரமாய் அழகான விரல்களினால் பிடிக்கப்பட்டிருக்கிற உன் குமிழிலே கட்டப்பட்ட முத்துக்களின் காந்தி விசேஷமாகப்பரவியிருப்பதைப் பார்த்தால், உன்னை ஸேவிப்பதற்கு வந்த பிராணிகளுக்கு நீயே ஸத்வகுணத்தை ஏராளமாக சுக்கிக்கொண்டு க்ஷேமங்களைக்கொடுக்கிறாய் போலிருக்கிறது. க்ஷேமம் ஸத்வகுண மூலமாக வருகிறபடியாலும், ஸத்வகுணத்தை வெளுப்பாக வர்ணிக்கிற வழக்கத்தாலும், முத்து காந்தியைப்பரப்பி இருப்பதை பார்த்தால் க்ஷேமத்தையே பரப்பியிருக்கிறாப்போல் இருக்கிறது. என்று சொல்லியிருக்கிறது:

பெருமாள் திருவடிகளின்மேலேயே வைத்த மனதுள்ளவராய் அந்த அநுபவமுள்ளடங்காமல் புலம்பிக்கொண்டிருக்கிற ஸ்ரீ நம்மாழ்வார் முதலிய ஆசார்யர்களின் திவ்யஸூக்திகளின் விசேஷார்த்தங்கள் மனதில் பட்டால் ஸத்வகுணமும், அதன் மூலமாக ஆத்மக்ஷேமமும் விசேஷமாக விருத்தியடைகிறபடியால், பிராணிகளுக்குப் பெருமாளை நேரில் த்யாநாராதனங்களைப்பண்ணி அடையவேண்டிய எல்லா க்ஷேமங்களையும் அந்த ஆசாரியர்கள் தாங்களே தங்கள் பாசுரங்கள் மூலமாக ஸத்வத்தைமுன்னடி குவித்து வைத்துக்கொண்டு கொடுக்கக்காத்திருப்பது போலிருக்கிறது.

(௱௭௮) வஜ்ரஜாலஸமவாயஸ்ய ரஞ்ஜிண:
பாதுகே நிஜபதார்தநர்தகஸ் |

ரங்கிணஸ்ஸவிஹ்ருதி: ॥ ௫௪௫

ந்யஸ்தவத்யபி ஜகந்தி ஜாயதே
நாகபோகசயநம் நிராகுலம் ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே, லக்ஷ்மீஸஹசர: - பிராட்டியோடு கூட ஸஞ்சரியா நிற்கிறவராயும், அநந்தரம் - பிற்பாடு, த்வயி - உன்னிடத்தில், நிஜபதாத் - தன்னுடைய திருவடியிலிருந்து, ஜகந்தி - லோகங்களை, ந்யஸ்தவத: - ஒப்பிவைக்காநிற்கிறவராயுமிருக்கிற, ரங்கிண:- ஸ்ரீரங்கநாதனுக்கு, நாகபோகசயநம் - நாகபோக- ஆதிசேஷனுடைய உடம்பில், சயநம் - தூங்குகிறதானது, நிராகுலம் - தடங்கலில்லாதிருக்கும்படி, ஜாயதே - உண்டாகிறது.

(கருத்து) ஓ பாதுகையே! ரங்கநாதன் லோகரக்ஷணார்த்தமாக முதலில்உன்பேரில் ஏறிக்கொண்டு பிராட்டியோடுகூட ஸஞ்சாரம் செய்து,பிற்பாடுஇந்த ஜகத்தைக்காப்பாற்றவேண்டியபொறுப்பை உன்னிடத்திலேயே ஒப்புவித்துவிட்டு, ஒரு ச்ரமும்கவலையுமில்லாமல்ஆதிசேஷன்பேரில்படுத்துக்கொண்டு ஸுகமாகத்தூங்குகிருர். பெருமாள் உலகத்தில் ஸஞ்சரிக்கும்போதும், க்ஷீரஸமுத்ரத்தில் ஆதிசேஷன்பேரில் சயனித்துக்கொண்டிருக்கும் போதும் உன் உதவிதான் வேண்டியிருக்கிறது.

“யதாயதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத । அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥ பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் । தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே ” என்கிற சுலோகங்களின் படியே துஷ்டநிக்ரஹசிஷ்டபரிபாலன தர்மஸ்தாபனங்களாகிற பெரிய காரியங்களைப் பெருமாள் தானே நேரில் வந்து நடத்த வேண்டியதற்காக பிராட்டியோடுகூட உலகத்தில் வந்து அவதரித்து,தன்னை உண்மையில்அறிந்த தன்னடியார்களான ஆசாரியர்களையும் ஸஹாயமாகக் கொண்டு லோககாரியங்களை நடத்துகிருர். அப்பெரிய காரியங்கள் முடிந்ததும் லோகத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பை ஜ்ஞானிகளான ஆசார்யர்களிடத்தில் ஒப்புவித்துவிட்டு க்ஷீராப்தியில்போய், விடாயும் கவலையும் தீர ஆதிசேஷனுகிற படுக்கையில் உறங்குகிருர். ஆகையால் பெருமாளுக்கு அவதாரகாலத்திலும் க்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளுகிற

காலத்திலும் ஆசாரியர்களான ஞானிகளுடையஉதவி அவசியமாக இருக்கிறது. பெருமாள் கிருஷ்ணனாக நேரில்வந்து பூமியில் ஜனங்களோடு ஸாலப்யமாகப் பழகுங்காலத்திலும், மஹர்ஷிகளும் பீஷ்மாசார்யர் முதலிய பெரியோர்களும் லோகத்துக்கு இந்த கிருஷ்ணன் தான் ஸாக்ஷாத்பரப்ரம்மம் என்று காட்டி அவர் உபதேசிக்கும் அர்த்தங்களைசாஸ்திரார்த்தமென்று முதலிக்கவேண்டியிருந்தது. தூக்கத்துக்கு உதவி இரண்டு. அதாவது நடமாடி வேலை செய்தல், கவலையற்றிருக்கை. இந்த இரண்டுவிஷயத்திலும் பாதுகைகள் அதாவது ஆசாரியர்கள்- அவசியமாய் நடமாடவேண்டும் போது தங்கள் உதவியால் சிரமத்தைக் குறைத்தும் பொறுப்பை ஒப்புக்கொள்வதால் கவலையை நீக்கியும்- பெருமாளுக்கு உதவி செய்கிறார்கள். (48)

(அஎகூ) ஸாதயந்தி மதுவைரிபாதுகே
ஸாதவ: ஸ்திரமுபாயமந்திமம் ।
த்வத்ஸ்வவ்ருத்திவிநிவர்த்தநோசித
ஸ்வஸ்வவ்ருத்திவிநிவர்த்தநாந்விதம் ॥

மதுவைரிபாதுகே - மது என்னும் அஸுரனுக்கு சத்ருவான பெருமாளுடைய பாதுகையே, ஸாதவ: - பெரியோர்கள், த்வத் - உன்னுடைய, ஸ்வவ்ருத்தி - காப்பாற்றுவதில் பிரவிருத்தியினுடைய, விநிவர்த்தந - தடுப்பதில், உசித - யோக்யமாகவிருக்கிற, ஸ்வஸ்வவ்ருத்தி - தானே தன்னை ரக்ஷித்துக் கொள்ளப் பிரயத்நப்படுகிறதினுடைய, விநிவர்த்தந - விடுகிறதோடு, அந்விதம் - சேர்ந்திருக்கிற, ஸ்திரம் - அழிவில்லாத பலத்தைக் கொடுக்கும்படியான, அந்திமம் - கடைசியான, உபாயம் - சரணாகதிரூபமான மோக்ஷோபாயத்தை, ஸாதயந்தி - அநுஷ்டிக்கிறார்கள்.

(கருத்து) ஓ பாதுகையே! பெரியோர்கள் தன்னை ரக்ஷித்துக்கொள்ள தாங்களேசெய்யவேண்டிய பக்திமுதலான வேலைகளை விட்டு, அந்த பக்தி முதலியவைகளைச் செய்யாமலே உன்னையே கேட்டுக்கொண்டால், அந்த பளுவை வாங்கிக்கொண்டு அவர்களை காப்பாற்றக்கூடிய உன்னிடத்திலேயே அந்த பரத்தை ஒப்பித்து மோக்ஷத்துக்காக அந்தக் கடைசி உபாயமான சரணாகதியை உன்னிடத்திலேயே அநுஷ்டிக்கிறார்கள்.

பெருமாள் இந்த உலகத்தார் தன் ஸ்தானத்திற்கு வந்து சேருவதற்காக ஏற்படுத்திய உபாயம் பக்தி. அதாவது வேறு ஒரு ஸங்கதியையும் நினைக்காமல் எல்லையில்லாத ப்ரீதியோடு நேரில் கண்ணால் பார்ப்பதுபோல் இடைவிடாமல் அஹோராத்ரம் மரணகாலத்திலும் அந்த நினைவு மாறாதபடி சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட வர்ணாச்ரமதர்மங்களையெல்லாம் அனுஷ்டித்துக் கொண்டு உயிருள்ளவரையில் பெருமாளை மனதில் த்யானிப்பது- இதுமாதிரி த்யானம் வெகுகாலத்துக்குப் பிறகு, அதாவது பல ஜன்மங்களுக்குப்பிறகு, பூர்த்தியடையக்கூடியது. இது ச்லோகத்தில் ஸர்வதர்மான் என்கிற பதத்தால் காட்டப்படுகிறது. ஸம்ஸாரத்தில் வெறுப்பும் பெருமாளையே அடையவேணுமென்கிற ஆவலும் பிறந்து இந்த உபாயத்தைச் செய்யத்தகுந்த ஜ்ஞான சக்திகள் இல்லாதவர்களுக்கும், காலதாமதத்தைப் பொறுக்காதவர்களுக்கும், பெருமாள் காட்டிக்கொடுத்திருக்கும் உபாயம் சரணாகதி. அதாவது— மோக்ஷோபாயமாக ஏற்படுத்திய பக்தியை அனுஷ்டிப்பதற்கு வேண்டிய ஜ்ஞானமோ, சக்தியோ, காலதாமதத்தைப் பொறுக்கிறதோ என்னிடத்தில் கிடையாது. நான் கையாலாகாதவன், எனக்கு உம்மைத் தவிர வேறு கதியில்லை; நீரே என்பேரில் தயை பண்ணி அந்தக் கடினமான உபாயத்தைநான்செய்யாமலே நீரே அந்தஉபாயஸ்தானத்தில் இருந்து உபாயத்தை அனுஷ்டித்தால் வரும் பலனை, அதாவது மோக்ஷத்தை, எனக்குக் கொடுக்கவேணுமென்று பெருமாளைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறது. இந்த வழியை ஸதாசார்யரிடம் தெரிந்துகொண்டு இப்படித்தானாகவும் கேட்டுக்கொள்ளலாம். அதற்குத் தகுந்த ஞானமில்லாவிட்டால் ஆசார்யர்கள் மூலமாகவும் கேட்டுக்கொள்ளலாம். இது சுலோகத்தில ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ என்கிற பதங்களால் விசேஷிக்கப்பட்டிருக்கிறது. ஒருவன் பெருமாளிடத்தில் நேரில் சரணாகதி பண்ணி மோக்ஷத்தையடைவதுபோல் அவன் ஆசார்யர்களைக்கொண்டு சரணாகதிசெய்வித்தும் அடையலாம். அதாவது நாம் ஆசார்யர்களைக் கேட்டுக்கொண்டால் அவர்கள் நமக்காகப் பெருமாளைக் கேட்டு பலனைஸாதித்துக்கொடுப்பார்கள். இதை ஆசார்யநிஷ்டை என்கிறது. இதைத்தான் இந்தசுலோகத்தில்சொல்லியிருக்கிறது.

இப்படி சரணாகதியை அனுஷ்டிக்காமல் பக்திமார்க்கத்தில் இறங்குகிறவர்கள் விஷயத்தில் ஆசாரியர்களுடைய பிரயத்தினமில்லை. அவர்கள் பக்தியோகம் பண்ணும் விதத்தைமட்டும் சொல்லிக் கொடுத்துவிட்டு ஒதுங்கி இருக்கிறார்கள். (49)

(௫0) நந்த³ஸூநோ: பத³பத்³மமிந்தி³ராபாணிபல்லவநிபீ
ட³நாஸஹம் । பாது³கே தவ ப³லேந பரு
ஷயத்யூஷ்மளமுரக³மௌளிஶர்கரம் ॥

பாது³கே - வாராய் பாதுகையே! இந்தி³ரா - மஹாலக்ஷ்மியினுடைய, பாணிபல்லவ - தளிர்போலிருக்கிற கையினுடைய, நிபீட³நம் - பிடிப்பதையும், அஸஹம் - பொறுக்காமலிருக்கிற, நந்த³ஸூநோ: - நந்தகோபருக்குப் பிள்ளையான கிருஷ்ணனுடைய, பத³பத்³மம் - தாமரைப்பூப் போலிருக்கிற திருவடியானது, ஊஷ்மளம் - உஷ்ணமுள்ளதான, உரக³ - காளியஸர்ப்பத்தினுடைய, மௌளி - தலைகளாகிற, ஶர்கரம் - உறப்பான ப்ரதேசத்தை, தவ - உன்னுடைய, ப³லேந - சக்தியினால், பருஷயதி - அவமானப்படுத்திற்று.

(கருத்து) ஓ பாதுகையே! பெரிய பிராட்டியாருடைய தளிர் போல் மெதுவான கையினால் பிடிப்பதையும் பொறுக்கமுடியாத பெருமாளுடைய தாமரைப்பூப்போன்ற பாதம் காளியஸர்ப்பத்தினுடைய விஷஜ்வாலையால் ரொம்ப வேக்காடுள்ள உறப்பான தலைகளில் உன் பலத்தைக்கொண்டு சுகமாய் கூத்தாடி, அதற்கு அவமானத்தை உண்டுபண்ணிற்று.

நல்ல ஆசார்யர்கள் தாங்கள் நடுவிலிருந்து தங்களுடைய எல்லையில்லாத தயை பொறுமை முதலிய நற்குணங்களாலும் உபதேசாநுஷ்டானங்களாலும் சிக்ஷைகளாலும் ஸம்ஸாரத்தில் மூழ்கி காமக்ரோதம் முதலிய துர்குணங்களால் ஸர்ப்பம்போல் கொடியதான மனதையுடைய ஜனங்களை ஸ்வாதீனப்படுத்தி அவர்களுடைய மனதில் பெருமாளை ஸஞ்சரிக்கும்படி செய்கிறார்கள். அதாவது அப்படிப்பட்ட ஜனங்களுடைய மனதைச் சீர்திருத்தி பெருமாளை நினைக்கும்படி செய்கிறார்கள். இவர்களுடைய பிரயாஸையும் புருஷகாரமும் இல்லாவிட்டால் அப்படிப்

பட்ட கெட்ட ஜனங்களை பெருமாள் உபேக்ஷிக்கும்படியே நேரும். (50)

(௫௧) மணிநிகரஸமுத்தைஸ் ஸர்வவர்ணா மயூகை:
ப்ரகடிதமதுநாதா பாதுகே ரங்கபர்த்து: ।
நிகிலநிகமஸூதேர் ப்ரணவஸ்ய தத்ஸநாதா
ஸமுபநயஸி ஹ்ருத்யாமர்த்தமாத்ராம் சதுர்த்தீம் ॥

நிகிலநிகமஸூதே: - எல்லா வேதங்களுக்கும் உத்பத்தி ஸ்தானமாயிருக்கிற, ப்ருஹத: - ஸ்வரூபம், குணங்கள், ஸொத்துக்கள் இவைகளால் ரொம்ப பெரியவராயிருக்கிற, ரங்கபர்த்து: - ஸ்ரீ ரங்கநாதனுடைய, பாதுகே - வாராய் பாதுகையே ! மணிநிகர - ரத்நக்கூட்டங்களாலே, ஸமுத்தை: - உண்டாயிருக்கிற, மயூகை: - காந்திகளாலே, ஸர்வவர்ணா - எல்லா வர்ணங்களை உடைத்தானவளாயும், ப்ரகடித - ப்ரகாசப்படுத்தப்பட்ட, மதுநாதா - மங்களமான சப்தத்தை யுடைத்தானவளாயுமிருக்கிற, த்வம் - நீ, தத்ஸநாதாம் - அந்தப் பெருமாளையே தைவமாக உள்ளதான, ஹ்ருத்யாம் - அழகான, ஹ்ருதயத்திலிருந்து உண்டான, நிகிலநிகமஸூதே: - எல்லா வேதங்களுக்கும் காரணமான, ப்ரணவஸ்ய - வேதமாயிருக்கிற பிரணவத்தினுடைய, சதுர்த்தீம் அர்த்தமாத்ராம் - நாலாவதான அரைமாத்திரையை, ஸமுபநயஸி - ஞாபகப்படுத்துகிறாய்.

(கருத்து) ஸ்ரீரங்கநாதனோடு சேர்ந்த பாதுகையே ! உன்னுடைய ரத்னகாந்திகளால் நீ பலவர்ணமுள்ளவளாக இருப்பதாலும்,பெருமாளுடைய ஸஞ்சாரகாலத்தில் நீ அழகாக சப்தித்துக் கொண்டிருப்பதாலும், நீ பெருமாளையே தெய்வமாக உடையவளாக இருப்பதாலும் வெளுப்பு முதலிய வர்ணங்கள் (எழுத்துக்கள்) உள்ளதும் (ஹ்ரஸ்வம், தீர்க்கம், ப்லுதம்) என்கிற மாத்ரா ஸ்வரங்களோடு கூடியதும், பெருமாளையே அதிஷ்டானதேவதையாக உள்ளதுமான ப்ரணவம்போல் காணப்பட்டு அந்த ப்ரணவத்தினுடைய வர்ணங்களாகிய (நாதங்களாகிய) முதல் 1, 2, 3 மாத்ரைகளால் கார்ய ப்ரம்மஸ்வரூபமான பிரும்ம விஷ்ணு ருத்ர

தேவதைகளை அடைவே பிரபாதித்து அதற்கு மேற்பட்டதான நான்காவது ஸ்வரமான காரணபிரம்மஸ்வரூபமான வாஸுதேவ மூர்த்தியை பிரபாதிக்கிற அரை மாத்திரையை ஞாபகப்படுத்து கிறாய். பாதுகை எப்பொழுதும் பரப்ரம்ம வாஸுதேவனை வஹித்துக்கொண்டிருப்பதினாலும் அதன் சப்தத்தால் எப்பொ ழுதும் பெருமாள் வரவைக் காண்பிப்பதாலும் அந்த பகவானை ஞாபகப்படுத்துகிறது.

ப்ரதமா ரக்தபீதா மஹத் ப்ரஹ்மதைவத்யா | த்விதீயா வித்யுமதீ க்ருஷ்ணா விஷ்ணுதைவத்யா | த்ருதீயா ஶுபாஶுபா ருத்ரதைவத்யா | யாஸாவவஸானேஸ்ய சதுர்த்யர்த்தமாத்ரா ஸா வித்யுமதீ ஸர்வவர்ணா புருஷதைவத்யா என்ற அதர்வசிகை யின் அர்த்தம் இந்த சுலோகத்தால் காட்டப்படுகிறது.

மந்திரங்களுக்கெல்லாம் ஸ்வரம், வர்ணம், அதிஷ்டான தே வதை இவைகளுண்டு. ப்ரணவத்திற்கு வெளுப்பு முதலிய வர்ண ங்கள் உள்ளதாக சாஸ்திரத்தால் அறியப்படுகிறது, ப்ரணவத் தை உயர்ந்தஸ்வரத்தில் உச்சரிக்கும்போது அதற்கு மூன்றரை மாத்திரையுள்ளது. ஒரு மாத்திரை, இரண்டு மாத்திரை, மூன்று மாத்திரை, மூன்றரை மாத்திரையென்று நான்கு விதமாக உச் சரிப்பது உண்டு. ஒவ்வொரு விதமான உச்சரிப்போடு ப்ரணவ ரூபியான பெருமாளை உபாஸிப்பதற்கும் பலன்கள் வெவ்வேறு. சுலோகத்தில் நான்காவதான உயர்ந்த உச்சரிப்பைச் சொல்லி யிருக்கிறது. இந்த உச்சரிப்போடு உபாஸிப்பதனால் வரும் பலம் மோக்ஷம்.

"ப்ரஹ்ம" என்கிற பதத்திற்கு அநேக அர்த்தங்களுண்டு, பெருமாள் என்றும், 'வேதம்' என்றும் இரண்டு பொருள்களை சுலோகத்தில் எடுத்திருக்கிறது. பெருமாளிடத்திலிருந்து எல்லா வேதங்களும் வெளிக்கிளம்பின படியாலும், ப்ரணவம் எல்லா வேதங்களுடைய சுருக்கமான படியாலும், வேதத்திற்கு இரண்டும் காரணமாகச் சொல்லுகிறது.

நம்மாழ்வார் போன்ற ஸதாசார்யர்கள் பாதுகையைப்போல் பகவானையே எப்பொழுதும் ஆச்ரயித்தவர்களாகவும் அவரையே பரமபுருஷார்த்தமாகக் கொண்டவர்களாகவும் அதற்காக அந்த பரவாஸுதேவமூர்த்தியையே எப்பொழுதும் உபாஸிக்கிறவர்

க்ளாகவும் அவரைப்பற்றின ஸ்ரீஸூக்திகளை உள்ளவர்களாகவும் இருப்பதால் ப்ரணவத்தில் நான்காவது ஸ்வரமான அர்த்தமாத்ரையைப்போல் பரப்ரம்மத்தையே உலகத்துக்கு ஞாபகப்படுத்துகிறார்கள். அதாவது உபதேசானுஷ்டானங்களால் முமுக்ஷுக்கு பரவாஸுதேவஸ்வரூபமே உபாஸ்யமென்று உலகத்திற்கு கல்பித்துக்கொடுக்கிறார்கள் (51)

௫௨) ச்ருதிவிஷயகுணா த்வம் பாதுகே தைத்யஹந்து:
ஸததகதிமநோஜ்ஞா ஸாந்த்ரபாஸா ஜ்வலந்தீ ।
ஜநிதபுவநவ்ருத்திர் த்ருச்யஸே ஸ்தைர்யயுக்தா
வித்ருதநிகிலபூதா வைஜயந்தீவ மாலா ॥

தைத்யஹந்து: - அஸுரர்களைக் கொன்ற பெருமாளுடைய, பாதுகே - வாராய் பாதுகையே! ச்ருதிவிஷய - வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிற, குணா - குணங்களைஉடைத்தானவளாயும், காதுக்குவிஷயமான சப்தரூபகுணத்தை உடைத்தானவளாயும், ஸதத - எப்பொழுதும், கதி - நடக்கிறதாலே, மநோஜ்ஞா - அழகாயும், ஸாந்த்ர - ஸாந்த்ரமான, பாஸா - காந்தியினாலே, ஜ்வலந்தீ - ப்ரகாசித்துக்கொண்டும், எரிந்துகொண்டும், ஜநித - உண்டுபண்ணப்பட்ட, புவந - லோகங்களுடைய, ஜலங்களுடைய, வ்ருத்தி: - விருத்தியை உடைத்தானவளாயும், ஸ்தைர்யயுக்தா - உறுதியான நினைவுள்ளவளாயும், அசையாமலிருப்பதை உள்ளவளாயுமிருக்கிற, த்வம் - நீ, வித்ருத - தாக்கப்பட்டிருக்கிற, நிகிலபூதா - ஸமஸ்தமான ப்ருதிவீ முதலான பூதங்களை யுடைத்தாயிருக்கிற, வைஜயந்தீமாலாஇவ - வைஜயந்தீ என்று பெயருள்ள மாலைபோலே, த்ருச்யஸே - காணப்படுகிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! வேதங்களில் சொல்லப்பட்ட எல்லா குணங்களும் உன்னிடத்தில் நிறைந்திருக்கிறது. 'ச்ருதி' என்கிற பதம் காதையும் சொல்லும். காதுக்கு விஷயமான குணம் சப்தம். உன்னிடத்தில் அழகான சப்தமுமிருப்பதால் அந்த குணமுள்ள ஆகாசத்தன்மையுள்ளவளாயிருக்கிறாய் என்

றும் ஒரு அர்த்தம். எப்போதும் நடமாடிக்கொண்டே இருக்கிற குணம் காற்றுக்கும் உனக்கும் இருக்கிறது. ஸொந்த காந்தியினால் பிரகாசிப்பது என்ற குணம் நெருப்புக்கும் உனக்கும் இருக்கிறது. "ஶம்வர" என்கிற பதம் உலகத்தையும் ஜலத்தையும் சொல்லும். உலகத்தின் விருத்தி ஜலத்தாலும் உன்னாலும் ஏற்படுகிறபடியினால் ஜலத்தன்மையும் உனக்கிருக்கிறது. நிலையான நினைவு என்கிற உறுதி உனக்கிருக்கிறது. அசையாமலிருக்கிற குணம் பூமிக்கிருக்கிறது. இப்படி பஞ்சபூதங்களுடைய தன்மையும் உன்னிடமிருப்பதால் இந்த ஐந்து பூதங்களுடைய உருவமாயும் அவைகளுக்கு ஆதாரமாயுமுள்ள பெருமாளுடைய வைஜயந்தி என்கிற மாலைபோலிருக்கிறாய்.

ஸ்ரீநம்மாழ்வார் போன்ற ஸதாசார்யர்கள் வேதத்தில் ஆசார்யலக்ஷணமாகச் சொல்லப்பட்ட நற்குணங்களுள்ளவர்களாயும் காதுக்கு விஷயமான பகவத்குணங்களை ப்ரதிபாதிக்கிற இன்பமான சப்தங்களை(பாசுரங்களை) உள்ளவர்களாயும் லோகக்ஷேமார்த்தமாக எப்போதும் உலகத்தில் காற்றுப்போல் ஸஞ்சரித்துக் கொண்டு இருப்பவர்களாயும் தங்களுடைய ப்ரும்மதேஜஸ்ஸினால் நெருப்புப்போல் ஒரே தேஜோராசியாயும் ஜலம்போல் உலகங்களுக்கு ஆத்மக்ஷேமமாகிற ஸம்ருத்தியை உண்டுபண்ணிக்கொண்டும் ஜீவராசிகளை ஸம்ஸாரத்திலிருந்து மீட்டு பெருமாளிடத்தில் சேர்ப்பதில் உறுதியான நினைவினால் பூமிபோல் சலிக்காத ஸ்வபாவமுள்ளவர்களாயும் இருப்பதால் ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்கிற பஞ்சபூதங்களின் குணங்களுள்ளவர்களாயும் இந்த பஞ்சபூதங்களின் ஸூக்ஷ்மஉருவமாய் பெருமாள் தன் மார்பில் ஸதா தரித்துக்கொண்டிருக்கிற வைஜயந்தீ என்கிற மாலைபோல் பெருமாளுக்கு மிகவும் பிரியமுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். (52)

(அ௩). ரகுபதிபதஸங்காத்ராஜ்யபதம் த்வஜஸ்ரம்
பரதஶிரஸி பதி ஸ்வாது ஸம்பூய ஸ்ரீஷ்ஸாரா[illegible]
அபிஸமயித வ்ருத்திம் ஸங்கொரு[illegible]
ஜநபதஜநிதாநாம் ஜ்யாயஸா [illegible]॥

ரகுபதி-ஸ்ரீராமனுடைய, பத-திருவடிகளில், ஸங்காத்-மறுபடியும் சேர்ந்ததால், ராஜ்யபதம் - ராஜ்யபாரத்தால் உண்

டான கஷ்டத்தை, த்யஜந்தீ - விட்டவளாயும், புநரபி - மறுபடியும், ஸ்வாநி - தன்னுடையவைகளான, விஹாராணி - விளையாட்டுகளை, தர்சயந்தீ - காண்பிக்கிறவளாயுமிருக்கிற, ஸதீ - நீயானவள், ஜ்யாயஸா - பெரியதான, ஸிஞ்ஜிதேந - சப்தத்தால், ஜநபதேஷு - தேசங்களில், ஜநிதாநாம் - உண்டுபண்ணபட்டிருக்கிற, ஹர்ஷ - ஸந்தோஷ ஸூசகமான, கோலாஹலாநாம் - கூச்சல்களுக்கு, வ்ருத்திம் - அபிவிருத்தியை, வ்யதநிஷ்டா - உண்டு பண்ணினாய்.

(கருத்து) ஓ பாதுகையே! ஸ்ரீராமன் வனவாஸத்தி லிருந்து திரும்பி எழுந்தருளினதும் அவருடைய திருவடியிலே சேர்ந்து இத்தனை நாள் ராஜ்யபாரத்தாலுண்டான கஷ்டங்களை எல்லாம் விட்டு, மறுபடியும் எப்போதும் உனக்குச் சொந்தமா யுள்ள பெருமாள் திருவடிகளோடு சேர்ந்து விளையாடுவதாகிற விளையாட்டுக்களையெல்லாம் உலகத்தாருக்குக் காட்டிக்கொண்டு, உன்னுடைய கம்பீரமான சப்தத்தாலே அந்த தேசங்களிலிருக் கப்பட்ட ஜனங்களுக்கு பெருமாள் திரும்பி வந்துவிட்டதாலுண் டான ஸந்தோஷக்கூச்சல்களை விருத்திபண்ணினாய்.

ஸ்ரீ பெருமாள் கிருஷ்ணனாய் உலகத்தில் வந்தவதரித்து, துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலன தர்மஸம்ஸ்தாபநங்களைப் பண்ணி அதிலும் பெரிதான உபகாரமாக கீதா சாஸ்திரமுகத்தாலே உலகத்துக்கு பக்தி பிரபத்திகள் என்கிற மோக்ஷோபாயங்களை வெளியிட்டு, ராமாவதாரம் போலன்றிக்கே அதிசீக்கிரத்தில் தன்னடிச் சோதிக்கு எழுந்தருள, கலியும் உடனே பிரவேசிக்க வே, உலகமானது நல்வழி காட்டுவாரில்லாமல் கெட்டுப் போய் விடுமே என்று ஆலோசித்து லோகரக்ஷணார்த்தமாக தன் திரு வடி நிலையாழ்வாரை (பாதுகையை) தனித்து உலகத்தில் ஸ்ரீ நம்மாழ்வாராக அவதரிப்பிக்க, ஆழ்வாரும் பெருமாளுடைய பிரி வைப் பொறுத்துக்கொண்டு இந்தக் கலியில் உலகம் உண்மை தெரியாமல் கெட்டுப்போய் பெருமாளை இழந்திருப்பதையும் உல கத்தாருக்கு பக்திமார்க்கம் அனுஷ்டிப்பது அரிது என்பதையும் கருதி, கடைசியானதும், ஸுலபமானதும், சீக்கிரத்தில் பலனைக் கொடுக்கக் கூடியதும், எல்லோராலும் அனுஷ்டிக்கக் கூடியதும், எல்லா உபாயங்களைக் காட்டிலும் உயர்ந்ததுமான சரணாகதியே

தான் மேக்ஷோபாயமென்றும், அந்த உபாயத்தால் பெருமாளை அடைவதே தான் உயர்ந்ததும் அழிவில்லாததுமான புருஷார்த்தமென்றும், அந்த ஸ்ரீய:பதியான நாராயணனே தான் பரதத்வம், உலகமெல்லாம் அவருக்கு உடம்பு. அவரேதான் எல்லா உலகங்களையும் விளையாட்டாக உண்டுபண்ணிக் காப்பாற்றி அழிக்கிறார். உலகத்தில் எல்லா பலன்களையும் அவரேதான் அந்தந்த தேவதா ரூபியாக இருந்துகொண்டு கொடுக்கிறார். மோக்ஷமும் அவரொருவராலேதான் கொடுக்கமுடியும். ஆகையால் மற்ற தெய்வங்களையும் மற்ற பலன்களையும் விட்டு பெருமாளையே ஆச்ரயித்து எல்லோரும் உஜ்ஜீவியுங்கள் என்று உபதேசித்து, அவ்வுபதேச முகத்தாலே எல்லா ஜனங்களையும் ஸ்ரீ வைஷ்ணவர்களாக ஆக்கிக்கொண்டு, தன்னுடைய அனுபவத்தோடும் பகவத்குணங்களோடும் கலந்ததும், வேதத்தில் உபநிஷத்பாகத்திற்கு மொழிபெயர்ப்பானதுமான தன் அழகான பாசுரங்களால் உலகத்துக்கு உண்மைகளைக் காட்டி வல்வினையர்களைத் திருத்தி நல்வழியில் நடத்தி உலகத்தைக் காப்பாற்றி வந்தார். பெருமாள் திருவுள்ளப்படி இப்படி உலகத்தைக் காப்பாற்றி வந்தும் பெருமாளுடைய பிரிவாற்றுமையால் அர்ச்சாரூபமாகவாவது இந்த உலகத்தில் தனக்கு ஸேவை ஸாதித்து பூர்ணானுபவத்தைக் கொடுக்க வேணுமென்று பெருமாளை வேண்டி, அர்ச்சாவதாரத்தின் உண்மைகளையும் பெருமைகளையும் உலகத்துக்கு வெளிப்படுத்திக்கொண்டு ஆர்த்தியதிசயத்தோடு கூப்பிடவே எல்லா திவ்யதேசத்து எம்பெருமான்களும் ஆழ்வார் இருக்குமிடத்திற்கு நேரில் எழுந்தருளி ஸேவை ஸாதித்தார்கள். ஸ்ரீ ஆழ்வாரும் பிரிவினாலுண்டான கஷ்டங்களெல்லாம் தீர, பெருமாளோடு கலந்து ஸந்தோஷித்து அந்த அனுபவம் உள்ளடங்காமல் கரைபுரண்டு பிரவஹிக்கிற பாசுரங்களால் ஸந்தோஷக்கூச்சலிட்டார். பெருமாளை இழந்திருந்த ஜனங்களும் ஆழ்வாருடைய உபதேசானுஷ்டானங்களால் தாங்களும் ஸ்ரீவைஷ்ணவர்களாக ஆகி, தத்வஹித புருஷார்த்தங்களையும் அர்ச்சாவதாரத்தின் உண்மைகளையும் பெருமைகளையும் அறிந்து, அர்ச்சாரூபமான எம்பெருமான் திருவடிகளை ஆச்ரயித்து ப்ரத்யக்ஷதுல்யமாய் அவரோடு கலந்து கைங்கர்ய ஸ்தோத்திரங்களைப் பண்ணி 'ஜயவிஜயீபவ, பல்லாண்டு பல்லாண்டு' என்று சொல்லி பாடியாடிக் கூச்சலிட்டார்கள். இப்

படி ஆழ்வாரும் ஜனங்களுமாக பெருமாளைத் திரும்ப அடைந்து ஸந்தோஷக் கூச்சலிட "பொலிக பொலிக" என்கிற பாசுரப்காரமாக உலகமெல்லாம் ஒரே வைஷ்ணவக்கூச்சலால் நிறைந்தது. அல்லது இன்னொருவிதமாகவும் கருத்துக்கொள்ளலாம். அதாவது லோகாசாரியர்களான மஹான்கள் தாங்கள் வெளியே தூரதேச ஸஞ்சாரம் போகும்போது ஆசார்யபதத்திற்குத்தகுதியான ஒரு சிஷ்யரை அவ்விடத்தில் தாங்களில்லாத காலத்தில் ஆசார்ய க்ருத்யத்தைப் பண்ணி அவ்விடத்து ஜனங்களை ரக்ஷிக்கும்படி நியமித்துப்போனால் அந்த காலத்தில் அந்த ஸத்சிஷ்யர் நியமிக்கப்பட்டபடி ஆசார்யகம் பண்ணி வந்தாலும் இந்த பளுவு எப்போது நீங்கப்போகிறது என்கிற கவலையோடிருந்து தன் ஆசார்யன் திரும்பிவந்ததும் அந்த பாரத்தை அவர் திருவடிகளில் திரும்ப ஸமர்ப்பித்து அவருடைய திருவடி கைங்கர்யத்திலேயே முன்போல் ஈடுபட்டு அநுபவித்து பளுவு நீங்கி ஸந்தோஷிக்கிறார். இதர ஜனங்களும் அந்த மஹான்களுடைய க்ஷேமமான வரவினாலும் நடுவில் ஆசார்யகம் பண்ணிவந்த சிஷ்யருடைய விநயம், பெரிய பதத்தில் ஆசையில்லாமை, ஆசார்ய கைங்கர்யத்தில் ஈடுபாடு முதலிய குணங்களைக் கண்டும் ஸந்தோஷிக்கிறார்கள். இப்படி எல்லோரும் சேர்ந்து ஸந்தோஷப்படுகிறார்கள். (53)

(௫௪) ஹரிசரணமுபக்னம் பாதுகே ஸம்ஶ்ரிதாயா
அதிகதபஹுஶாகாவைபவம் தர்ஶயந்த்யா: ।
அஜனத விதிஹஸ்தந்யஸ்தபுண்யாம்புவாஹாம்
த்வயி பரிணதஸந்த்யம் லக்ஷிகஶ்ரீஸ்தநீம் ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! தநீம் - பெருமாள் த்ரிவிக்ரமாவதாரம் பண்ணின காலத்தில், ஹரிசரணம் - பெருமாளுடைய திருவடியை, உபக்னம் - கொழுகொம்பாக, ஸம்ஶ்ரிதாயாம் - அடைந்தவளாயும், அதிகத - அடையப்பட்ட (அறியப்பட்ட,) பஹு - அனேகமாக, ஶாகா - வேதபாகங்களினுடைய, (கிளைகளினுடைய) வைபவம்-பெருமையை, (விஸ்தாரத்தை,) தர்ஶயந்த்யாம்-காண்பிக்கிறவளாயும், விதிஹஸ்த - பிரம்மாவினுடைய கையினால், ந்யஸ்த - வைக்கப்பட்டிருக்கிற, புண்யாம்புவாஹாம் - புண்ணியமாகிற ஜலப்பெருக்கை

உடையவளாயுமிருக்கிற, த்வயி - உன்னிடத்தில், மௌக்திகஶ்ரீ: - முத்துக் காந்தியானது, கோரகஸம்ருத்திம் - மொக்குக்களுடைய ஸம்பத்தை, ஜக்ராஹ - அடைந்தது.

(கருத்து) ஓ பாதுகையே! பெருமாள் த்ரிவிக்ரமாவதாரம் பண்ணி உலகத்தை அளக்கும்காலத்தில் நீ ஒரு கற்பகக்கொடி போல்பெருமாளுடைய திருவடியை ஒரு கொழு கொம்பாகவைத் துக்கொண்டு ஏறி, நீ விஸ்தாரமாகபரவுகிறதற்கு உன்னுடையபெ ருமையைச் சொல்லுகிற வேதபாகங்களாகிற அனேகம் கிளைகளை உலகத்தாருக்கு காண்பித்துக் கொண்டிருக்கிற உன்னிடத்தில் பிரம்மாவானவர் உலகத்தின் புண்ணியங்களையெல்லாம் ஜலமாக உருக்கி அந்த ஜலத்தை சேர்த்தபோது உன்னிடத்திலிருக்கும் முத்துக்களெல்லாம் அந்தக் குளிர்ச்சியினுல் உண்டான மொக்கு கள் போலிருந்தன.

நல்ல ஆசாரியர்கள் உலகத்தார் புருஷார்த்தமாகக் கருதும் அல்பப்பிரயோஜனங்களையெல்லாம்அடியோடுவிட்டு ஸ்ரீபெருமா ளுடைய தயாப்ரவாஹமான அவதாரங்களிலே ஈடுபட்டு ஸம்ஸா ரஸாகரத்தில் அழுந்தியிருக்கும் ஜனங்களைக்கரையேத்துவதற்காக நீட்டப்பட்ட த்ரிவிக்ரமனுடைய திருவடிகளையே பரம ப்ரயோ ஜனமாக ஒரே உறுதியாக ஒரு கொடியானது கொழுகொம்பை கெட்டியாக ச் சுற்றிக்கொள்வதுபோல் ப்ரபத்தி என்கிற உபாய த்தால் ஆச்ரயிக்கிருர்கள். அப்படிப்பட்ட அநந்யப்ரயோஜனர் களும் அநந்யோபாயர்களும் ப்ரபன்னர்களுமான மஹான்களு டைய பெருமையையே வேதங்களெல்லாம் கோஷிக்கின்றன. நித்யஸூரிகளுக்கு ஸமர்களான அந்த மஹான்களை ப்ரம்மாதி தேவர்களும் தாங்கள் கிருதார்த்தர்களாவதற்கு தங்கள் பாக்யவ சத்தால் கிடைத்ததென்று நினைத்து ஆராதிக்கிருர்கள். அப்ப டிப்பட்ட ஸத்காரங்களையடைந்தும் அந்த மஹான்கள் நிஸ்ப்ருஹர் களாய் இந்தப் பெருமையெல்லாம் பகவத்ஸம்பந்தத்தாலல்லவோ வருகிறதென்று பகவத் ப்ரபாவத்தை நினைத்து தங்களுடைய அழகியதாய் ஸத்வோத்தரமாய் ஆச்சர்யமான பாசுரங்களால் பெருமாளையே ஸ்தோத்திரம் பண்ணுகிருர்கள்.

ஸதாசார்யர்கள் கிடைப்பதும் அவர்களை ஆராதிப்பதும் உலகத்தினுடைய மஹாபாக்யவசத்தால் தான் ஏற்படவேணும்.

அவர்கள் எப்போதும் அநந்யப்ரயோஜனர்களாய் ஸத்காராதிகளால் கலங்காமல் எல்லாம் பகவானுடைய செயலென்று ஒவ்வொரு ஸந்தர்ப்பத்திலும் அதிவிநயத்தோடு பெருமாளையும் ஆசாரியர்களையும் நினைத்து அவர்களின் பெருமையையும் உபகாரத்தையுமே கொண்டாடிப் பேசுவார்கள். (54)

(௮௫) கநகருசிரகாந்தி: க்லுப்தஶோகாபஹாரா
க்ருதபதகமலஶ்ரீ: க்ரீடதா ரங்கநேத்ரா ।
திஶி திஶி ஸுமநோபி: ப்ரேக்ஷணீயாநுபாவா
ஸுரபிஸமயலக்ஷ்மீம் பாதுகே வர்த்தயஸி ॥

ஹே பாதுகே - பாதுகையே! கநக - தங்கத்தாலே சண்பகமரத்தாலே, ருசிரா - அழகான, காந்தி:- காந்தியையுடையதாயும், க்லுப்த-உண்டுபண்ணப்பட்ட, அஶோக ஹாரா - அசோகபுஷ்பத்தினுடைய ஸம்பத்தைஉடையதாயும், வருத்தமில்லாமையை உடையதாயும், க்ரீடதா - விளையாடா நிற்கிற, ரங்கநேத்ரா - பெருமாளாலே, வஸந்தருதுவினாலே, க்ருத - பண்ணப்பட்டிருக்கிற, பதகமல-தாமரைப்பூப்போலிருக்கிற திருவடியினுடைய, ஶ்ரீ: - ஸம்பத்தை உடையதாயும், க்ருதபத-செய்யப்பட்ட இருப்பை உடைத்தான, கமலஶ்ரீ: - தாமரைப்புஷ்பத்தினுடைய ஸம்பத்தை உடையதாயும், திஶி திஶி-ஒவ்வொருதிக்கிலேயும், ஸுமநோபி:-தேவதைகளாலே, புஷ்பங்களாலே, ப்ரேக்ஷணீய-பார்க்கத்தகுந்ததான, அநுபாவா-பெருமையை உடையதாயுமிருக்கிற, த்வம்-நீ, ஸுரபிஸமயலக்ஷ்மீம் - வஸந்தகாலத்தினுடைய சோபையை, வர்த்தயஸி - வளர்க்கிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! தங்கத்தால் அழகாயும் லோகத்தாருடைய துக்கங்களைநீக்குகிறவளாயும்,எம்பெருமான் வேடிக்கையாக ஸஞ்சரிக்கும்போது அவருடைய திருவடித்தாமரைகளாலே விசேஷமாக அலங்கரிக்கப்படுகிறவளாயும், நாலுதிக்குகளிலும் உன் பெருமையைப் பார்த்து ஸந்தோஷிக்கும்படியான தேவதைகளால் சூழப்பட்டிருக்கும் அழகை உடைத்தானவளாயுமிருக்கிற நீ, செண்பக மரங்களால், அழகாயும் அசோகபுஷ்பங்

களுடைய ஸம்பத்தை உடையதாயும் வைகாசி மாஸத்தில் உண்டான தாமரை புஷ்பங்களுடைய சோபையை உடையதாயும் நாலாபக்கங்களிலும் பற்பலபுஷ்பங்களால் ரொம்ப அழகாயுமிருக்கிற வஸந்தகாலம்போல விளங்குகிறாய். 'கநக' என்றால் சண்பக மரத்துக்கும் 'அசோக' என்றால் அசோக மரத்துக்கும் 'மாதவ' என்றால் வைகாசி மாஸத்துக்கும், 'கமல' என்றால் தாமரைப் புஷ்பங்களுக்கும், ஸுமந: என்றால் புஷ்பங்களுக்கும் பெயரானதால், வஸந்தகாலத்தில் சண்பகமரம் அசோகமரம் தாமரைப்பூ இன்னும் மல்லிகை முதலிய அநேக புஷ்பங்கள் இதுகளெல்லாம் விசேஷமாக உண்டாகிறபடியால், அந்தப் பதங்களைவைத்துக்கொண்டு பாதுகைகளுக்கும், வஸந்த காலத்துக்குண்டான பெருமை உண்டென்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

நல்ல தங்கம் ப்ரகாசிப்பதுபோல் ஸதாசாரியர்கள் பிரம்ம தேஜஸ் உள்ளவர்களாயிருப்பதாலும், அவர்கள் ஆச்ரிதர்களுடைய துக்கங்களையெல்லாம் போக்குகிறபடியாலும், இந்த உலகத்தையெல்லாம் விளையாட்டாக நடத்திக்கொண்டிருக்கிற பெருமாள் அவர்களிடத்தில் நித்யவாஸம்பண்ணுகிறபடியாலும், ஒவ்வொரு திக்குகளிலிருந்தும் வரும்படியான வித்வான்களால் கொண்டாடப்படும்படியான பெருமையை உடையவர்களாக இருப்பதாலும் தாபம் தீர்ந்து ஜனங்களுக்கு வஸந்தகாலத்தில் ஸௌக்யமும் ஸந்தோஷமும் உண்டாகிறதுபோல், ஸம்ஸாரதாபம் தீர்ந்து ஆத்மகுண பூர்த்தியாலும் பகவதனுபவத்தாலும் ஸௌக்யமும் ஸந்தோஷமும் இவர்களோடு இருப்பதால் உண்டாகிறது. ஸுமந: என்கிற பதம் வித்வான்களைச் சொல்லும். 'ஸுரபி' என்கிற பதத்துக்கு காமதேனுவென்றும், ஸமய என்கிற பதத்துக்கு ஸித்தாந்தம் (அதாவது கொள்கை) என்றும் அர்த்தமுண்டானபடியால் 'ஸுரபிஸமயலக்ஷ்மீம் புஷ்யஸி' என்பதால் இவர்கள் (ஆசார்யர்கள்) காமதேனுவின் ஸித்தாந்தத்தை (அதாவது அபேக்ஷித்த எல்லா பலன்களையும் கொடுப்பது என்பதை) போஷிக்கிறார்கள் என்பதால் காமதேனுவைப்போல் ஸதாசார்யர்கள் ஆச்ரிதர்களுக்கு எல்லா புருஷார்த்தங்களையும் கொடுப்பார்கள் என்று தெரிவித்ததாக ஆகிறது. (55)

(௫௬) ப்ரணிஹிதபதபத்³மா பாது³கே ரங்க³ப⁴ர்து:
[illegible]

**ஸ்திரபணிதராகம் ஶுத்ததீஸநாபஜாம்**
**ஸ்வஜநயஸி யோகிநாம் த்வந்மயீம் சித்தவ்ருத்திம்॥**

ஹே ரங்கபர்த்து: பாதுகே - வாராய் ஸ்ரீ ரங்கநாதனுடைய பாதுகையே, ஸுநிஹித - நன்றாக (அதாவது நிஶ்சலமாக) வைக்கப்பட்ட, பதபத்மா-பெருமாளுடைய தாமரைப் பூப்போலிருக்கும் திருவடியையுடையவளாயும், ஸாதுதர - ரொம்ப க்ஷேமகரமான, கதி - பெருமாள் லோக ரக்ஷணார்த்தமாக உல்லாஸமாய் நடந்து ஸஞ்சரிப்பதற்கு, அல்லது ஜீவர்களுடைய பரலோக கமனத்திற்கு (அதாவது மோக்ஷத்தை அடைவதற்கு) ஹேது: - காரணமாயிருப்பவளாயும், சாரு - அழகான, முக்தா - முத்துக்களென்ன, ப்ரவாள - பவழங்களென்ன, இவைகளையுடையவளாயும், அல்லது சாரு - அழகாக இருக்கும்படி, முக்த - மோக்ஷத்தை அடையப்பட்ட ஆபாலா - பாலர்கள் முதல் எல்லாரையும் உடைத்தானவளாயுமிருக்கிற, த்வம் - நீ, ஸ்திரபணித - ஸ்திரமாக இருக்கும்படி பக்வத்தை அடைந்திருக்கிற, ராகம் - ஆசையை உடையதாயும், (சிகப்பு நிறத்தையுடையதாயும்,) ஸம்ஶ-ஸம்சயம் முதலியது இல்லாத்தாலே சுத்தமாயிருக்கிற, தீ - ஞானத்தாலே, அல்லது ஶுத்ததீ - அழுக்கில்லாத நல்ல புத்தியுள்ள பரதர் முதலியவர்களாலே, ஸநாபஜாம் - சேர்க்கப்பட்டதாயும், ஸம்பந்தத்தை உடையதாயுமிருக்கிற, த்வந்மயீம் - உன்னை ஒருத்தியையே விஷயமாக உள்ள, யோகிநாம் - யோகிகளுடைய, சித்தவ்ருத்திம் - மனோவியாபாரத்தை (அதாவது பக்தி ப்ரபத்திரூபமான ஞானத்தை) ஸ்வஜநயஸி - உன்னுடைய சொந்த ஜனமாக ஆக்கிக்கொள்ளுகிறாய். (அதாவது உனக்கு அதீனமாகச் செய்துக்கொள்கிறாய்.

(கருத்து) ஏ பாதுகையே! உன்னிடத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய தாமரைப்பூப்போன்ற திருவடிகள் நன்றாக எப்போதும் வைக்கப்பட்டிருப்பதாலும், அந்தப் பெருமாளையும் உன்னை ஆச்ரயித்த ஜனங்களையும் நீ நல்ல வழியில் நடத்துவதாலும், உன்னுடைய முத்துப்பவழங்கள் முதலிய அலங்காரத்தால் உன்னை

ஸேவிப்பவர்களுடைய மனதை இழுக்கும்படியான அழகு உன்னிடமிருப்பதாலும்,பாலர்கள் முதற்கொண்டு உன்னையாச்ரயித்த ஸர்வஜனங்களுக்கும் மோக்ஷபுருஷார்த்தத்தைக் கொடுக்கும்படியான அழகான குணம் உன்னிடமிருப்பதாலும் பலகால் விஷயங்களில் அகப்பட்டு அழுந்திப்போகாமல் தப்பி தேறி உறுதியான பக்தியுள்ளவர்களும் ஸம்சயாத்மாக்களாக இல்லாமல் தெளிவான ஜ்ஞானமுடையவர்களுமான முனிவர்கள் உன்னையே அநந்யகதிகளாய் பக்திப்ரபத்தி பண்ணுகிறார்கள். அதுவும் உன் கடாக்ஷத்தால்தான் ஏற்படுகிறது.

முனிகள் என்றால் மனனசீலர்கள், அதாவது தங்களுடைய புத்தியின் ஆராய்ச்சியினால் இது நல்லது இது கெட்டது, இதை எடுத்துக்கொள்ளவேணும்இதை விடவேணும் என்பதைத்தீர்மானமாய் அறிந்து, நல்லதும் எடுத்துக்கொள்ளவேண்டியதுமான ஸங்கதியையே நினைத்து அப்யாஸம் செய்பவர்கள் என்று அர்த்தம். பதங்களுக்கு வெவ்வேறாய் பல அர்த்தமுண்டானாலும் சப்தத்தின் ஒத்துமையைக்கொண்டு ச்லோகத்தில் இரண்டாவது பாதியில் பாதுகை முனிவர்களுடைய எண்ணம்போலிருக்கிறது என்று வர்ணித்திருக்கிறது. இதை சப்தச்லேஷை என்று சொல்லுகிறது. இப்படி "ஸ்திரப்ரணிதாநாம்" "ப்ரஸந்நாசயாநாம்" என்கிற பதங்களுக்கு பாதுகைபக்ஷத்திலும் முனிவர்களின் எண்ணத்தின் பக்ஷத்திலும் சப்த ஒத்துமையையும் அர்த்தபேதத்தையும் மேல் ப்ரதிபத அர்த்தத்தில் கவனித்துக் கொள்கிறது.

பலப்ரயோஜனங்களில் அலைவதால் மேடும் பள்ளமும் முள்ளும் கல்லும் போலிருக்கும் ஸம்ஸாரிகளுடைய ஹ்ருதயம் போலன்றிக்கே பெருமாளாகிற ஒரே பிரயோஜனத்தை அபேக்ஷிப்பதின் ஒரே சமமாயும் ஒத்ததாயும் இருப்பதினால் பெருமாள் நிச்சங்கமாயும் ஆசையோடும் வைக்கப்பட ஸுகுமாரமான திருவடிகளை உடையதான மனதை உடையவர்களாயிருப்பதாலும், தயை, பொருமை, உறுதி, தெளிவு, ஒழிவு, பக்தி முதலிய ஆசார்ய குணங்களாலும் நல்ல உபதேசானுஷ்டானங்களாலும், ஸம்ஸாரிகளுடைய அழுக்கடைந்த மனதை சுத்தப்படுத்தி, அதில் பெருமாளை ப்ரவேசிக்கும்படி செய்து, ஆச்ரிதர்களை

மோக்ஷத்தை அடைவிப்பதற்கு முக்கிய காரணமாக இருப்பதாலும், முத்து பவழம் முதலியவைகால் கட்டப்பட்ட அழகானமாலை போல் ஸர்வ சாஸ்திரார்த்தங்கள் அடங்கியதும் மனதைப் பரிசுத்தம் பண்ணக்கூடியதும் பெருமாளுக்கும் பாகவதர்களுக்கும் ரொம்ப இன்பமானதுமான சொல்மாலைகளை உடையவர்களாயிருப்பதாலும், பண்டித பாமர ஸாமான்யமாயும் பாலர்கள் முதற்கொண்டு கிழவர்கள் வரையிலும் தங்களை ஆச்ரயித்த ஸர்வ ஜனங்களுக்கும் மோக்ஷபுருஷார்த்தத்தை ஸாதித்துக் கொடுக்கவல்ல குணத்தின் பெருமையையும் பகவானுடைய ஸ்வாதீனத்தையும் உடையவர்களாயிருப்பதாலும், ஸ்ரீ நம்மாழ்வார்போன்ற ஸதாசார்யர்களையே விவேகிகளாய் முமுக்ஷுவானவர்கள் அநந்ய கதிகளாய் உறுதியான பக்தியோடு ஆச்ரயிக்கிறார்கள். அப்படி அவர்கள் ஆச்ரயித்து உஜ்ஜீவிப்பதும் அப்படிப்பட்ட ஸதாசார்யர்களுடைய அதீனமே. அதாவது அது அவர்களுடைய கடாக்ஷத்தால் தான் ஏற்படவேணும் என்று அர்த்தம். பெருமாளுடைய ஜாயமாந கடாக்ஷம் போல் ஆசார்யகடாக்ஷமும்.

இந்த சுலோகத்தால் வயது சென்றவர்களும் அந்திமதசையில் இருப்பவர்களும் ரொம்ப படிப்புள்ளவர்களும் அனுஷ்டானமுள்ளவர்களும்தான் சரணாகதிக்கு அதிகாரிகள் என்று சிலர் எண்ணுவது, பண்டித பாமர ஸாமான்யமாய் பிரபத்தி ஸர்வாதிகாரம் என்கிற சாஸ்திரத்தை மறந்து, தெளிவில்லாத்தால் ஏற்படும் பிரமம் என்றும், சிசுக்கள் பசுபக்ஷிகள் முதற்கொண்டு ஸர்வருக்கும் ஸதாசாரியர்கள் பிரபத்தியினால் மோக்ஷத்தை ஸாதித்துக் கொடுக்கக் கூடும் என்றும் பிரபத்தி சாஸ்திரத்தின் ஸூக்ஷ்மமான தத்துவம் அறிவிக்கப்படுகிறது என்பதைக் கண்டுகொள்க. இது ஸதாசார்யகடாக்ஷத்தால் தத்துவத்தை உணர்ந்த மஹான்களுடைய அநுஷ்டாநத்தாலும் ஸித்தம். (56)

(௫௰௭) **விரசிதநவஹாரா ரத்நபேதைர்விசித்ரை:**
**விவிதவிததரோவாவ்யக்தஸீமாவிஹாரா ।**
**ஹரிசரணஸரோஜம் ஶ்லிஷ்டதாமப்யநீயம்**
**ஶ்ரயஸி நவநாகம் ஸம்ஸ்ருதம் பாதுகே த்வம் ॥**

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! விசித்ரை: - நாநாரூபமான, ரத்நபேதை: - வெவ்வேறு ரத்னங்களாலே

விரசித - பண்ணப்பட்ட, நவஸாமா - ஒன்பது அம்சங்களை உடைத்தானவளாயும், விவித-பலவிதமான, விதத - விஸ்தாரமான, ரேகா - கோடுகளாலே, வ்யக்த - பிரகாசமான, ஸீமா - எல்லைகளுடைய, விபாகா - தனித்தனியாக இருப்பதை உடைத்தானவளாயுமிருக்கிற, த்வம் - நீ, ஹரி - பெருமாளுடைய, சரணஸரோஜம் - தாமரைப்பூப்போன்ற திருவடியை, ப்ரேப்ஸதாம் - அடையவேண்டுமென்று ஆசையுள்ளவர்களுக்கு, உபாஸநீயம் - பூஜிக்கத் தகுந்ததான, நவநாபம் - ஒன்பதுபாகங்களை உடையதாயும், நாபி என்னும் சக்ரவர்த்தினுடைய ஸந்ததிகளை உடையதாயுமிருக்கிற, வர்ஷம்-பாரதவர்ஷத்தை வ்யபதிசஸி-ப்ரஸித்தப்படுத்துகிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! ஒன்பது விதமான ரத்னங்களாலும் இழைக்கப்பட்டு, நடுவே தீர்க்கமான பல கோடுகளால் வெவ்வேறு பிரிவுகள் உள்ளவளாயும், பெருமாள் திருவடிகளையே அடையவிரும்பும் முமுக்ஷுக்களால் ஸேவிக்கப்படவேண்டியவளாயுமிருக்கிற நீ, நாபி என்கிற சக்ரவர்த்தியினுடைய ஸந்ததிகளால் ஒன்பது பிரிவினைகளாக்கித் தனித்தனியாக ஏற்படுத்தப்பட்ட பூபாகங்களையுடையதும், சாஸ்திரங்களால் இது ஒன்றேதான் கர்மபூமியென்று சொல்லப்பட்டு தபஸ் முதலிய கர்மங்களால் பெருமாளை ஆராதிப்பதற்கு வேண்டிய ஸௌகரியங்களை உடையதுமாக இருப்பதால், ஸத்கர்மங்களைச் செய்து நல்ல கதியை அடைய விரும்புகிறவர்களால் அடையப்படத் தகுந்ததாயுமிருக்கிற பாரதவர்ஷத்தைப்போலிருக்கிறாய்.

குறிப்பு:— (1) லக்ஷம் யோஜனை விஸ்தாரமுள்ளதும் நாலாபுறமும் உப்பு ஸமுத்திரத்தினால் சூழப்பட்டதுமான ஜம்பூத்வீபத்தில் ஒன்பது பாகங்களில் ஒரு பாகமாய் ஹிமயமலைக்கும் தெற்கு ஸமுத்திரத்திற்கும் நடுவே ஒன்பதினாயிரம் யோஜனை தூரமுள்ள பிரதேசத்துக்கு பாரதவர்ஷம் என்று பெயர். இது தான் கர்மபூமி என்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. கர்மபூமி என்றால் நல்ல பலன்களை அடைவதற்குத் தகுந்த நல்ல வேலைகளைச் செய்வதற்கு யோக்யமான இடம் என்று அர்த்தம். இந்த ஜம்பூத்வீபத்திலேயே மற்ற எட்டு பாகங்களுக்கும் இன்னும் மற்ற ஆறு த்வீபங்களுக்கும் இந்த யோக்யதை இல்லையானதால்

அந்த இடங்களில் நல்ல கர்மங்களைச் செய்து எல்லா உயர்ந்த பலன்களையும் அடையமுடியாது. அவைகளுக்கு போகபூமி என்று பெயர். அதாவது கர்மங்களின் பலன்களை அனுபவிப்ப தற்கு ஏற்பட்ட இடம். ஒன்பதினாயிரம் யோஜனை தூரமுள்ள பாரதவர்ஷத்திலும் ஒன்பதில் ஒரு பாகமான பரதகண்டத்தில டங்கிய இந்த இந்தியா தான் இப்போது நமக்குத் தெரிகிறது. இப்பரத கண்டத்தின் சொச்சபாகமும் இதற்கு தெற்கேயுள்ள மற்ற எட்டு பாகங்களும் நம்மால் காணப்படவில்லை. இதின் விஸ் தீர்ணம் ஹிமயமலையிலிருந்து தெற்கே ஆயிரம் யோஜனையுள்ளதா கச் சொல்லியிருக்கிறது.

(2) பூபாகங்களின் பிரிவு காடுகளின் வரிசைகளாலும், மலைத் தொடர்ச்சிகளாலும், நதிகளாலும், ஸமுத்ரங்களாலும் ஏற்படு கிறது. இப்படிப்பட்ட இடங்களையுடைய பூமிதான் ஏகாந்த வாஸத்திற்கு ஸௌகரியமாய் விஷயங்களை ஜயித்து தபஸ் முத லானவைகளைப்பண்ணி நல்ல கதியை அடைவதற்கு ஸாதனமான இடம். இந்த ஸௌகரியங்களெல்லாம் இந்தியாவில் நிறைந்தி ருக்கின்றன. இவ்விடத்தில்தான் சாதுர்வர்ண்யம் (பிராம்மண, க்ஷத்திரிய, வைச்ய, சூத்ர என்று) ப்ரதிஷ்டிதமாயிருக்கிறது.

ஸ்ரீ நம்மாழ்வார் போன்ற ஸதாசார்யர்கள் தங்களுடைய பலவிதமாயும் விசித்ரமாயுமுள்ள திவ்யஸூக்திகளால் தங்களை ஆச்ரயித்தவர்களுக்கு பகவத்விஷயத்தில் “ரம்யே ஸதாம் ஹ்ருதயம் நவரஸம் ஸூக்தே” என்று சொல்லுகிறபடி சாந்தி பிரதானமாக ஒன்பது ரஸங்களையும் உண்டுபண்ணுவதாலும், தங்களுடைய பஹுமுகமான சாஸ்த்ரீய கர்மானுஷ்டானங்களால் ஸம்ஸாரத்தில் சுற்றியடிக்கும் வழியை விலக்கி முமுக்ஷுக்கள் நடக்கவேண்டிய வழியைக் காட்டிக்கொடுப்பதாலும், இந்த கர்ம பூமியிலிருந்து வைத்தே நன்றாய் பிழைக்கும் பிரகாரத்தைக் கல் பித்துக் கொடுக்கிறபடியால், “வைகுண்டவாஸேऽபி நமேऽபிலாஷ:” என்று சொல்லுகிறபடி, இந்த பூமிக்கு ஸ்ரீவைகுண் டத்திற்கு ஸமமான பிரஸித்தியைக் கொடுக்கிறார்கள். (57)

(௮௰௮) வர்ணாச்ரமாசார வதீ ஸஹிஷ்ணுஸ்ரீகாநநம்
ஸஹ்யாத்ரிமணிரஸ்ஸுந்தரி ஸ்வாமினீ ரஸா । ஸஹ

**பதிபதரக்ஷே ராஜவாஹஸ்ய கும்பே கலித**
**ருசிரஸி த்வம் காபி நக்ஷத்ரமாலா ॥**

ஹே ரகுபதிபதரக்ஷே-வாராய் ஸ்ரீராமனுடைய திருவடிகளைக்காப்பாற்றுகிற பாதுகையே! ஸதி-உண்டாயிருக்கிற, குண-நல்ல குணங்களுடைய (நூல்களுடைய) ஜாலா-கூட்டத்தையுடையவளாயும், பஹுவித - பலவிதமான, மணி-ரத்னங்களுடைய, ரஸ்மி - கிரணங்களுடைய,(கயிறுகளுடைய) ஸம்பந்தாத் - பிணைக்கொண்டிருப்பதினாலே, (முடிச்சுகளினாலே) ருசிராபா - அழகாய் இருக்கிறவளுமான, த்வம் - நீ, மௌக்திகாநாம் - முத்துக்களுடைய, பங்க்திபி: - வரிசைகளாலே, ராஜவாஹஸ்ய - ரகுவம்சராஜாக்களுக்கு வாஹனமான 'சத்ருஞ்ஜயம்' என்கிற பட்டத்து யானையின், கும்பே - தலையிலே, கலிதருசி: - செய்யப்பட்ட, அதாவது பிரஸரிக்கப்பட்ட காந்தியை உடைத்தாயிருக்கிற, காபி - ஒரு விலக்ஷணமான, நக்ஷத்ரமாலா - இருபத்தேழு முத்துக்கள் கோர்க்கப்பட்டு நக்ஷத்ரமாலையென்று பெயர் பெற்ற ஒரு ஹாரவிசேஷமாக, அஸி - ஆகிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! ஸ்ரீராமன் தனக்குப் பதிலாக ராஜ்யத்தை ஆளுவதற்கு உன்னை பரதனுக்குக் கொடுத்துவிட்டு காட்டுக்குப் போனதும், அந்த பரதன் அநேகம் குணங்களுள்ள உன்னை ராஜாவின் ஸ்தானத்திலேயே வைத்து, ரகுராஜாக்கள் ஏறுகிற பட்டத்து யானையின் தலையில் உன்னை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு ஊர்கோலம் வந்தபோது, உன்னைப் பார்த்தால், உன்பேரில் இழைக்கப்பட்ட அநேகம் முத்துக்களின் வரிசைகளினாலும் அவைகளின் நடுவே நடுவே முடிச்சுப்போல்காண்கிற பல வர்ணங்களுள்ள ரத்னக்கூட்டங்களாலும் அந்த யானையின் மஸ்தகத்தில் பிரகாசிக்கிற ஒரு விலக்ஷணமான நக்ஷத்திர மாலைபோலிருந்தது.

முத்துமாலையைக் கெட்டியாயிருப்பதற்காக அநேகம் நூல் இழைகளால் திரிக்கப்பட்ட வெளுப்புக்கயிற்றில் முத்துக்களைக் கோர்த்து ஒவ்வொரு முத்தின் பக்கத்திலும் அழகுக்காக பல வர்ணமுள்ள பட்டுக்களால் முடிச்சுகள் போட்டு கட்டுவது வழக்

கம். இவ்விடத்தில் பாதுகைகளுக்குள்ள பல உயர்ந்த நற்குணங்களைக் கயிறுகவும், அதில் இழைக்கப்பட்ட முத்துவரிசைகளைக் கோர்க்கப்பட்ட முத்துக்களாகவும், அந்த முத்துக்களின் நடுவில் பிரகாசிக்கிற பல வர்ணங்களுள்ள ரத்னங்களின் காந்திகள் பிஸிரிக்கொண்டிருப்பதை முடிச்சுக்களாகவும் வர்ணித்திருக்கிறது.

ஸ்ரீ கிருஷ்ணன் கீதோபதேசம் முதலியவைகளாலே உண்மையான வைதிகமதத்தை பூமியில் ஸ்தாபித்துவைத்தாலும் பிறகு வேதாந்தஸித்தாந்தம் குமதிகளால் கெட்டுப்போகப் போகிறதே, யார் காப்பாற்றுவார்கள் என்று பயந்த ஸ்ரீமதுரகவிகள் முதலான பக்தஜனங்களுக்கு ஸாதுஸம்ரக்ஷணார்த்தமாகவும், ஸித்தாந்தரக்ஷணார்த்தமாகவும் தன் திருவடிநிலை ஆழ்வாரை ஸ்ரீ நம்மாழ்வாராக அவதரிப்பிக்க, அப்படியே ஸ்ரீ மதுரகவிகள் முதலான பாகவதோத்தமர்கள் ஸ்ரீ ஆழ்வாரை தங்களுக்கும் ஸித்தாந்தத்துக்கும் தலைவராக ஒப்புக்கொண்டு, உண்மையான வேதாந்த ஸித்தாந்தமாகிற யானையின் மஸ்தகத்தில் ஏற்றி வைத்து பிரபந்நஜனஸந்தாந கூடஸ்தராகக் கொண்டாடினார்கள். ஸ்ரீ ஆழ்வாரும் உத்தமமான ஆசார்யபதத்துக்கு வேண்டிய எல்லா நற்குணங்களோடும்கூடினவராய், தத்துவஹிதபுருஷார்த்த பிரகாசகங்களான பலவித ரமணீயங்களான திவ்யஸூக்திகளால் ஸித்தாந்தத்தை நிலைநிறுத்திக்கொண்டு அதற்கே ஓர் அத்விதீயமான ஆபரணமாக விளங்கினார். (58)

(அஅக) ச்ரிதநிகிலவ்ருத்திஶ்சாருபத்மாஸநஸ்தா
குணநிபிடிதரத்நாவல்யலங்காரரம்யா |
ஶ்ரியமயிவஹஸீ பாதுகே ரங்கபர்த்து:
ஶரணகமலயுக்மஸ்பர்ஶதந்யா த்வமேவ ||

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! ச்ரித - செய்யப்பட்டிருக்கிற, நிகில - ஸமஸ்தமான (எல்லா ஜனங்களுடைய) வ்ருத்தி: - விஹிதகர்மங்களையும் மனோவிருத்திகளையும் உடையவளாயும், ஜீவனத்தையுடையவளாயும், சாரு - அழகான, பத்மாஸநஸ்தா - பத்மபீடத்தில் இருக்கிறவளாயும், குண - உயர்ந்த குணங்களாலே (நூல்களாலே), நிபிடித - நெருக்க

मायैः கோர்க்கப்பட்டிருக்கிற, मुक्तावलीभिः - முத்துக்களுடைய வரிசைகளாலே, बद्धा - கட்டப்பட்டிருக்கிற, अक्षमाला - இந்திரியங்களுடைய கூட்டமாகிற ஜபமாலையையுடையவளாயும், (अक्ष என்ற இந்திரியத்துக்கும் ஜபமணிக்கும் பெயர்.) रङ्गभर्तुः - ரங்கநாதனுடைய, सविधं - ஸமீபத்தில், अधिवसन्ती - வஸித்துக்கொண்டிருக்கிறவளுமான, त्वं - நீ, अन्तः - உள்ளே बिम्बितं - பிரதிபலியாநிற்கிற, चरणकमलं - தாமரைப்பூப் போலிருக்கிற திருவடியை, ध्यायसीव - தியாநம் பண்ணுகிறாய்போல.

(கருத்து) ஓ பாதுகையே! நீ பெருமாளுக்கு அருகில் பத்மபீடத்தில் உட்கார்ந்துகொண்டு அசையாமலிருப்பதைப் பார்த்தால் நல்ல ஸத்கர்மங்களை எல்லாம் செய்துவிட்டு உன்னிடத்தில் இழைத்திருக்கிற முத்துவரிசையாகிற ஜபமாலையை தரித்துக்கொண்டு ஸ்வச்சமாய் உன்னிடத்தில் பிரதிபலிக்கிற பெருமாளுடைய திருவடியை த்யானம் பண்ணுகிறாய்போலிருக்கிறது.

இந்த சுலோகத்தில் ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யர்களுடைய பாஞ்சகாலிகமான வியாபாரம் வர்ணிக்கப்படுகிறது. அதாவது—ஸதாசார்யர்கள் அபிகமநம் முதற்கொண்டு ஸ்வாத்யாயம் வரையிலுள்ள முதல் நாலு காலங்களில் செய்யவேண்டிய காரியங்களை, அதாவது, தங்களுடைய கர்மானுஷ்டானங்கள், பகவதாராதநம், ஜபம், அத்யயநம், ப்ரவசநம் முதலியவைகளையும் தங்களை ஆச்ரயித்தவர்களுடைய ஆத்மயோகக்ஷேமங்களையும் சரீரயோகக்ஷேமங்களையும் தங்களுடைய ஸதுபதேசம் முதலியவைகளால் நடத்திவிட்டு ஐந்தாவதான யோககாலத்தில் பகவத்ஸமீபத்தில் பத்மாஸநம்போட்டுஉட்கார்ந்துகொண்டு, தங்களுடையசுத்தமான ஹிருதயத்தில் பிரதிபிம்பம்போல் தோன்றுகிறபெருமாளுடைய திருவடிகளை தியானஞ்செய்கிறார்கள்என்றும் ‘चरितनिवेशवृत्तिः’ என்பதால் ஆச்ரயித்தவர்களுடைய யோகக்ஷேமங்களை எல்லாம் கவனிக்கிறார்கள் என்பதும், தங்களுக்கேற்பட்ட கர்மங்களை எல்லாம் சாஸ்திரப்படி அனுஷ்டிக்கிறார்கள் என்பதும், ஸர்வபூதஸ்நேஹம், உண்மையுரைத்தல் முதலிய மானஸ குணங்களை அப்யஸிக்கிறார்கள் என்பதும், ‘बद्धासनस्था’ என்பதால் கர்மகாலங்

களில் அதஅதற்குத் தகுந்தபடி பத்மாஸனம், ஸ்வஸ்திகாஸனம் என்றிவை முதலான உட்காரும் மாதிரிகளை அனுஷ்டிக்கிறார்கள் என்பதும், "ஜபமாலா" என்பதால் ஜபகாலத்தில் ஜபமாலைகள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்றும், மற்றொருவிதமான அர்த்தத்தால் தங்களுடைய ஆத்மகுணங்களாலும் உபதேசங்களாலும் ஆச்ரிதர்களுக்கு ஸத்வகுணத்தை உண்டுபண்ணி அவர்களுடைய துஷ்டேந்திரியங்களைத் தங்கள் வசமாக்கி நல்வழியில் நடத்துகிறார்கள் என்பதும், ஸவிதஸவிதஸஞ்ஜீ என்பதால் எப்போதும் பெருமாளை நினைத்துக்கொண்டு தங்கள் நினைவால் பெருமாளுக்கு ஸமீபத்திலேயே இருக்கிறார்கள் என்றும் காட்டப்படுகிறது.

இந்த சுலோகத்தின் முன்பாதியால் ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச்செய்த உத்தரக்ருத்யங்களில் ஐந்தாவதான "நம்முடையவன் என்று அபிமானிப்பான் ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய அபிமானத்திலே ஒதுங்கி வர்த்தித்தல் செய்கை" என்பதும் அப்படி மஹான்களை ஆச்ரயித்திருப்பவர்களுக்கு எல்லா யோகக்ஷேமங்களும் தானாய் நடக்கும் என்பதும் ஸூசிக்கப்படுகிறது. (59)

(௬௰) அமாயயா பரிரக்ஷந் ஏகபுத்ராபிஜாதஸ்
புவநமிதமசேஷம் பாதுகே ரங்கநாத: |
நிஜபத நிஹிதாயாம் நிஷ்க்ரியோ வ்ரஜந்தா
த்வயி நிஹிதபரோ(அ)பூத் கிம் புந: ஸ்வாபவ்ருத்தௌ ||

பாதுகே - வாராய் பாதுகையே! அசேஷம் - ஸமஸ்தமான, இதம் - இந்த, புவநம் - லோகத்தை, ஏகபுத்ராபிஜாதஸ் - ஒரே பிள்ளையைப் பெற்றவனுக்கு அந்தப் பிள்ளையினிடத்தில் எந்த விதமான பிரீதியோ அப்படிப்பட்ட பிரீதியினால், அமாயயா - கபடமில்லாமல், பரிரக்ஷந் - காப்பாற்றிக்கொண்டிருக்கிற, ரங்கநாத: - ரங்கநாதனானவர், நிஷ்க்ரிய - ஸஞ்சாரமில்லாமல் இருந்துகொண்டும், வ்ரஜந் - ஸஞ்சரித்துக் கொண்டும், நிஜ - தன்னுடைய, பத - திருவடியிலே, ஸ்தானத்திலே, நிஹிதாயாம் - வைக்கப்பட்டிருக்கிற, த்வயி - உன்னிடத்தில், நிஹித - வைக்கப்பட்ட, பர: - தன்னுடைய பாரத்தை, ராஜ்யபாரத்தை உடைத்தானவராக, அபூத் - ஆனார்.

ஹாவம் - தூக்கத்தை, ஜுஹு - அடைந்தவராய்க்கொண்டு, கிம் வாஹந: - கேட்பானேன் ?

(கருத்து) ஓ பாதுகையே! ஒரே பிள்ளையைப் பெற்றவன் அந்தப் பிள்ளையினிடத்தில் எவ்வளவு அபிமானம் வைப்பனோ அவ்வளவு அபிமானத்தாலே எல்லா உலகங்களையும் பிரதிபிரயோஜனமில்லாமல் உண்மையாகக் காப்பாற்றிக்கொண்டு வருகிற ரங்கநாதன் தான் எங்கேயாவது வெளியில் எழுந்தருளினாலும், ஆஸ்தானத்திலேயே எழுந்தருளியிருந்தாலும் தன்னுடைய பாரத்தை, அதாவது லோகரக்ஷணத்தை நடத்தவேண்டிய பொறுப்பை, அந்தப் பதத்துக்குத் தகுதியாக இருக்கிற உன்னிடத்திலேயே வைக்கிறார். விழித்துக்கொண்டிருக்கும்போதே இப்படிச் செய்கிறவர், தூங்கிக்கொண்டிருக்கும்போது அப்படிச் செய்வதற்குக் கேட்பானேன். எக்காலத்திலும் நீதான் தாங்கிக் கொண்டிருக்கிறாய்.

"நிஜபதநிஹிதாயாம் ந்யஸ்தநிஹிதபார:" அதாவது 'தன் திருவடியில் வைக்கப்பட்ட உன்னிடத்தில் வைக்கப்பட்ட பாரத்தை உடையவர்' என்பதின் விசேஷார்த்தம் என்னவென்றால், முதலில் பாதுகைகளின் பேரில் ஏறிநின்று தன்னுடைய பாரத்தை (பளுவை) தாங்கும் உறுதி பாதுகைகளுக்கு இருக்கிறதா என்பதைப் பரீக்ஷித்துப்பார்த்து, அப்படி இருக்கிறதென்று தெரிந்துகொண்டு பின்பு லோகரக்ஷணபாரத்தை பாதுகைகளிடத்தில் வைத்தார் என்பது. இதனால் ஸூசிப்பிக்கப்படுகிறது என்னவென்றால்-ஸ்ரீபெருமாள் ஒரு ஜீவனை உலகத்திற்கு ஆசார்யகம் பண்ணக்கூடிய பதத்தில் வைக்கவேணுமானால் 'யஸ்யாநுக்ரஹமிச்சாமி' என்கிற சுலோகத்தில் தான் அருளிச்செய்தபடி ஸம்ஸாரத்தில் ஸொத்துக்கள் முதலியதின் பெரிய நஷ்டம் பிள்ளை பெண்டாட்டி முதலிய நெருங்கிய ரொம்ப பிரீதிபாத்ரமான பந்துக்களின் சாவு முதலிய பெரிய துக்கங்களுக்கு காரணங்களைக் கொடுத்து, அந்த துக்கங்களால் அவன் மனம் கலங்காமல் அவைகளை ஸஹித்துக்கொண்டு எந்த ஆபத்திலும் பெருமாளை விடாமலிருக்கும்படியான தெளிவான ஜ்ஞானமும் ஆத்மகுணங்களும் அவனுக்கு நிலைத்திருக்கிறதா என்பதை பரீக்ஷை பண்ணிப்பார்த்து அப்படித்தேறினவர்களுக்கு ஐஹிகத்

திலும் ஆமுஷ்மிகத்திலும் விசேஷ அனுக்ரஹத்தைப் பண்ணு கிறார். அப்படித் தேறினவர்கள்தான் ஆசார்யபதத்திற்குத் தகுந்தவர்கள். பிரபாவத்தில் தமக்கு ஸமான ஆழ்வாரைக் கொண்டு பெருமாள் உலகத்தைக் காப்பாற்றினார்.

ஆழ்வார் ஏற்கனவே நித்யஸூரியாயிருந்து அவதரித்தவ ரானதால் அவர் விஷயத்தில் அதிக பரீக்ஷை வேண்டியதாயில்லை. அவர் விஷயத்தில் பெருமாள் பண்ணின பரீக்ஷை அவர் கேட்ட போது உடனே மோக்ஷம் கொடுக்காமலும் கூப்பிட்டபோதெல் லாம் உடனே வந்து ஸேவை ஸாதிக்காததுமட்டும்தான். அந்த பரீக்ஷைகளால் அவருக்கு ஆர்த்தியும் நம்பிக்கையும் அதிகமான தே தவிர நாஸ்திக்யம் பிறந்து ஸம்ஸாரவழியில் திரும்பவில்லை.

இவ்விடத்தில் கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்றுண்டு. அதாவது ஸாமான்யமாய் ஜனங்களுக்கு ஸம்ஸாரத்தில் கஷ்டங் கள் நேர்ந்தால் நாஸ்திக்யம் பிறந்து பெருமாளை மறந்து பெருமா ளிடத்தில் த்வேஷபுத்தியும் கூட உண்டாகி பரலோகம் என்று ஒன்று உண்டு என்பதையே மறந்து ஸம்ஸாரத்தில் கீழேகீழே அழுந்துவார்கள். ஜநநகாலத்தில் பெருமாளுடைய கடாக்ஷம் பெற்று ஸாத்விகபிரகிருதியாயிருப்பவர்களுக்கு அப்படிப்பட்ட தெய்வத்தினுடைய பரிசோதனைகளால் ஒரு உறுதியாய் வேர் ஊன்றின மரம் பெருங்காற்றில் அகப்பட்டு அலைந்தாலும் கீழே விழாமல் ஸமாளித்துக்கொள்வதுடன் பிந்தி இன்னும் பலமாக வேரூடுவதுபோல் ஸம்ஸாரத்தில் இளப்பபுத்தியும் தோன்றி பெருமாளை முன்னிலும் அதிகமாக ஒரே பிரயோஜனமாய்ப் பற்றுவார்கள். மஹான்களுக்கு ஸம்ஸாரத்தில் நேரிடும் கஷ்டங் களும் சாஸ்திரவிரோதமான தவறுதல்களும் நிர்வேதப்ராசுர் யத்தை உண்டாக்கி மேல்அபிவிருத்திக்குக் காரணமாகும். அவர் களுக்கு பாபமும் புண்ணியமேயாகும். பெருமாளுடைய நிக்ர ஹத்துக்கு பாத்ரமானவர்களுக்கு நேரிடும் தொந்திரவுகள் அதோகதிக்குக் கொண்டுவிடும். அவர்களுக்கு நேரும் புண்யங் களும் ஐச்வர்யங்களும்கூட பாபத்திலேயே முடியும்.

ஸ்ரீ பெருமாள் ஸர்வஜ்ஞராயும் ஸர்வசக்தராயுமிருந்தாலும் மஹாராஜாக்கள் தங்களுக்கடுத்த பதவியில் இருக்கும் ஸமர்த்தர் களான மந்திரிபிரதானர்களைக்கொண்டு ராஜ்யகாரியங்களை நடத்

துவதுபோல், பாதுகையைக் கொண்டு எல்லாக் காலத்திலும் லோகரக்ஷணத்தை நடத்துகிறார். எல்லா ஸேவார்த்திகளும் ஸ்ரீசடாரி (பாதுகை) மூலமாய் பெருமாள் திருவடி ஸம்பந்தம் பெற்று உஜ்ஜீவிக்கிறார்கள். அதற்காகவே அர்ச்சாவதாரமான பெருமாள் உத்ஸவத்தில் வெளியே எழுந்தருளும்போதும், ஆஸ்தானத்தில் இருக்கும்போதும், ஸர்வகாலத்திலும் பாதுகையை கூடவே எழுந்தருளப்பண்ணியிருக்கிறது. பெருமாள் இந்த லோகத்தில் அவதரிக்கும்போதும், சாஸ்திரார்த்தங்களை நேரில் உலகத்துக்கு வெளியிட்டாலும், தனக்கு ஆத்மாவென்று கொண்டாடும்படியான ஞானிகளை உலகத்துக்கு ஆசார்யர்களாக ஆக்கி அவர்கள்மூலமாய் ஆச்ரிதர்களைக்காப்பாற்றுகிறார். அவதாரம்முடிந்து திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளும் காலத்தில் முழுவதும் ஞானிகளைக்கொண்டேதான் உலகத்தை இரக்ஷிக்கிறார். இதுமாதிரியே ஆசார்யர்களும் தங்களால் பலகால் பலபிரகாரமாய்சிக்ஷிக்கப்பட்டுபரீக்ஷைகளில் தேறி தத்வஞானத்திலும் ஆத்மகுணங்களில் ஸமர்த்தர்களான சிஷ்யர்கள் கிடைத்தால் அவர்களைக் கொண்டு பிரத்யக்ஷத்திலும் பரோக்ஷத்திலும் ஆசார்யகிருத்யத்தை நடத்துவதும் ஸம்பிரதாயஸித்தம். ஆனால் ஸர்வவிதத்திலும் ஸமர்த்தமாய்த் தேறி ஆசாரியபதத்தை வஹிக்கக்கூடிய சிஷ்யன் கிடைப்பது பரமதுர்லபம். கோடியுகஸஹஸ்ரங்கள் பெருமாளை ஆராதித்து பிரும்மா தன் பதவியை அடைந்தார் என்று சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது. ஸதாசார்யபதத்திற்கு வருவதற்கு அதிலும் மேலான ஸுகிருதம் வேணும். அது எப்படி தெரிகிறது என்றால் ஒரு ஜீவன் பிரம்மாவாக அவ்வளவு ஸுகிருதம் வேணுமானால் பெருமாளாகவே ஆவதற்கு எவ்வளவு ஸுகிருதம் வேணும். ஆசார்யாள் பெருமாளுடைய அவதாரமே என்றும், அப்படிப்பட்ட ஆசாரியாளை மனுஷ்யனாக நினைத்தால்நரகம்வரும் என்றும் சாஸ்திரம் சொல்லுகிறது. ஆனால் இது ஸதாசார்யாள் விஷயம். அப்படிப்பட்ட ஸதாசார்யாள் பரமதுர்லபம். அவர்கள் கிடைத்துவிட்டால் நாம் பெருமாளையே தேடவேண்டாம்.

(அக்கை) ப்ரதிதகுருபதாநாம் ஸ்ரீமதா ரங்கபர்த்து:
ப்ரபதவிஹிதபத்மா ஸம்ஸ்ரயாத் ப்ராப்தவே
ஷே | பவதி யதிஸ்ரேஷ்டா பாஹ்யதாம் ப்ரப
ஞ்ஜ ஸம்ஸ்தா விஹிதபாஸாஹ்ய ஷீவ்ருத்தி வரோ
ஷீ ஸாரணாத் ||

ஹே பாதுகே - ஓ பாதுகையே ! த்வயி - உன்னிடத்தில், உபஹித - வைக்கப்பட்ட (ஒப்புவிக்கப்பட்ட), பதந்யாஸ- திருவடிகளை (அதிகாரத்தை) உடைத்தாயிருக்கிற, ஸ்ரீஸகஃ - பிராட்டியோடு கூடின, ரங்கநாதஸ்ய - ஸ்ரீரங்கநாதனுடைய, யதேஷ்ட - தன்னிஷ்டப்பிரகாரம் ஏற்படுகிற அதாவது ஒருவித தடங்கலில்லாமலும் ஸம்சயமில்லாமலும் கவலையில்லாமலும் ஏற்படுகிற, யாத்ரோத்ஸவேஷு - உத்ஸவகால யாத்திரைகளில், உபகதாநாம்-வந்துகொண்டும், த்வத்- த்வரிதம் - சீக்கிரமாக, உன்னுடைய, ஸ்தவ - ஸ்தோத்திரத்திலே, ஸோத்ஸாஹாநாம்- ரொம்ப ஆவலுள்ளவர்களுமான, ஸுராணாம் - தேவதைகளுடைய (தெய்வப்பிரகிருதிகளுடைய),விஹித - செய்யப்பட்ட அதாவது இரைக்கப்பட்ட, ப்ரஸூந - புஷ்பங்களுடைய, வ்ருஷ்டிஃ - வர்ஷத்தை உடைத்தாயிருக்கிற, வ்யாமர்த்தகோஷஃ - ஒருவருக்கொருவர் போடுகிற கூச்சலானது, திகந்தாந் - திக்கு பிரதேசங்களையெல்லாம், ப்ரதிநாதயதி - பிரதித்வநி உண்டாகும்படி செய்கிறது.

(கருத்து) உத்ஸவகாலங்களில் ஸ்ரீ ரங்கநாதன் உன்னைத் திருவடிகளில் சாற்றிக்கொண்டு வெளியில் எழுந்தருளுவதினால் கல் முள் மேடு பள்ளங்களைப் பற்றிக் கவலையில்லாமல் இஷ்டப்படி எவ்விடத்திலும் விநோதமாக ஸஞ்சரித்துக்கொண்டு யாத்திரை பண்ணும்போது அவரை ஸேவிப்பதற்காக ஆவலோடு ஓடிவருகிற தேவதைகளும் தெய்வபிரகிருதிகளான ஜனங்களும் உன்னுடைய சேர்க்கையினால் ஸஞ்சாரத்தில் அவருக்குண்டான உத்ஸாஹம் முதலானவைகளைக் கண்டு உன்னையே ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டும், உன்பேரில் புஷ்பங்களை வாரி இரைத்தும் ஒருவருக்கொருவர் போடுகிற கூச்சலானது எல்லா திக்குகளிலும் எதிரொலி கொள்ளும்படி செய்கிறது. 'ஸோத்ஸாஹாநாம்' என்பதால் ஒவ்வொருவரும் சிலசில குணங்களைக் கண்டு அவைகளிலேயே விசேஷமாக ஈடுபட்டு அவைகளையே பிரதானமாகப் பேசி ஒருவருக்கொருவர் விவாதம் செய்து ஸ்தோத்திரம் பண்ணினார்கள் என்றும் ஏற்படுகிறது. இது கூச்சல் விசேஷமாவதற்கும் காரணமாகும்.

'உபஹித' என்கிற பதம் 'ஒப்புவிக்கப்பட்ட' என்கிற அர்த்தத்தையும் 'பத' என்கிற பதம் 'அதிகாரம்' என்கிற அர்த்தத்தையும் கொடுக்கிறபடியால் பெருமாள் பாதுகைகளிடத்தில் அதிகாரத்தை ஒப்புவித்து லோகரக்ஷணத்தைப்பற்றி கவலையற்று தான் யதேச்சமாக ஸஞ்சரிக்கிறார் என்கிற அர்த்தத்தைக் கொடுத்து ஸ்ரீராமன் பரதாழ்வானுக்கு ராஜ்யத்தை ஆளுவதற்காகத் தனக்குப் பிரதிநிதியாக ஸ்ரீ பாதுகைகளைக் கொடுத்து அயோத்திக்குத் திருப்பி அனுப்பிவிட்டு ராஜ்யத்தைப் பற்றிக் கவலையில்லாமல் தண்டகாரண்யத்தில் யதேச்சமாய் ஸஞ்சரித்த விஷயம் ஸூசிப்பிக்கப்படுகிறது. இப்படிப் பொருளானபோது பாதுகைகள் ராஜ்யம் ஆளும் பிரகாரத்தைப் பார்ப்பதற்கு ஆவலோடு ஓடிவந்த தேவதைகள் முதலானவர்கள் அசேதநம்போலிருந்துகொண்டு அளவில்லாத பிரபாவத்துடன் பாதுகை ராஜ்யம் ஆளுகிற அந்த ஆச்சர்யத்தைக் கண்டு பாதுகைகளையே ஸ்தோத்திரம் முதலானவைகளைப் பண்ணினார்கள் என்று சுலோகத்துக்குப் பொருளாகும்.

ஸ்ரீ நம்மாழ்வார் முதலானவர்கள் போன்ற பெருமாள் திருவுள்ளத்திற்கு மிகவும் உகந்தவர்களான ஸதாசாரியர்கள் ஏற்பட்டால் அவர்கள் மூலமாய் அதாவது அவர்களுடைய ஸஹாயத்தைக் கொண்டு பாபிகள் புண்யசாலிகள் இளகிய நெஞ்சுடையவர்கள் கடினப்பிரகிருதிகள், நல்ல தேசம் கெட்ட தேசம் நல்ல காலம் கெட்டகாலம் என்றிவை முதலான தாரதம்யங்களில்லாமல் பெருமாளுக்கு எங்கும் எக்காலத்திலும் லோகரக்ஷணார்த்தமான ஸஞ்சாரம் இஷ்டப்படிக்கெல்லாம் ஸுகமாகவும் உத்ஸாஹத்துடனும் ஏற்படுகிறது. அதாவது அப்படிப்பட்ட ஸதாசாரியர்கள் தங்களுடைய கவலை, தயை, பொறுமை ஞானம் அனுஷ்டானம், பகவதனுபவம், ஒழிவு, ஸதுபதேசம் முதலானதுகளால் எப்படிப்பட்டவர்களுடைய மனதையும் வசீகரித்து அவர்களை பெருமாளை ஆசையோடு நினைக்கும்படிக்கும் ஆச்ரயிக்கும்படிக்கும் செய்து காப்பாற்றுகிறார்கள். அப்படிப்பட்ட மஹான்களுடைய குணங்களையும் பெருமைகளையும் பார்த்து தெய்வப்பிரக்ருதிகளான ஸாதுஜனங்கள் 'ராமாத் ஸேஷாபிகாமயேத்' என்கிற நியாயப்படி பெருமாளைக் காட்டிலும் அவர்களையே முக்கியமாக ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். அவர்களுடைய

கீர்த்தியானது அவர்களிருக்குமிடத்தில் மட்டும் நில்லாமல் எல்லா தேசங்களிலும் பரவுகிறது. அவர்களிடத்தில் உலகத்தைக் காப்பாற்றும் பொறுப்பை ஒப்புவித்து பெருமாள் அது விஷயத்தில் கவலையில்லாமல் இருக்கிறார் என்பதும் ஏற்படுகிறது.

**(௱௨) மநஸி நியமவதி ஸந்நிதாநா யமீநாம்**
**ப்ரதிபதமுபயாந்தீ பாவநீயக்ரமத்வம் ।**
**ஶ்ருதிரிவ நிஜஶப்தை: பாதுகே ரங்கபர்த்து:**
**பதமநிதரகம்யம் வ்யக்தும் க்ஷமா த்வமேவ ॥**

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! நியமவதி - ரொம்ப அவதானத்தோடு கூடிய அதாவது தெளிவாய் நிலையான கவனிப்போடுகூடிய, யமீநாம் - யோகிகளுடைய, மநஸி - மனதில், ஸந்நிதாநா - இருக்கிறவளாயும் அதாவது அவர்களால் தியானிக்கப்பட்டவளாயும், ப்ரதிபதம் - அடிவைப்புதோறும், ஒவ்வொரு பதத்திலும், பாவநீய - பார்க்கத் தகுந்ததான அதாவது அழகான, க்ரமத்வம்-முன்பின்னான அடிவைப்பின் கோர்வையை அதாவது வரிசையை அல்லது பாவநீய - கவனித்துச் சொல்லக்கூடியதான, க்ரமத்வம்-'க்ரமம்' என்று பெயருடையதாய் ஒருவிதமான வேதாத்யயனம் பண்ணுகிற மாதிரியை, உபயாந்தீ - அடைகிறவளாயுமிருக்கிற, த்வமேவ - நீயே, ஶ்ருதிரிவ - வேதம்போலே, அநிதரகம்யம்-மற்றொருவராலும் அடையக்கூடாததான, வேதம் தவிர மற்ற பிரமாணங்களால் அறியக்கூடாததான, ரங்கபர்த்து:-ஸ்ரீரங்கநாதனுடைய, பதம்-திருவடியை ஸ்வரூபத்தை, நிஜஶப்தை:-தன்னுடையதான நாதங்களினாலே தன்னுடையதான நாராயணாதி பதங்களினாலே, வ்யக்தும் - தெரியப்படுத்துவதற்கு, க்ஷமா - தகுந்தவள்.

(கருத்து) ஓ பாதுகையே! பெருமாளுடைய வரவை ஆவலோடு எதிர்பார்த்திருக்கும் பக்தர்கள் அவருடைய வரவுக்குக் காரணமான உன்னை ரொம்ப அவதானமுள்ள மனதோடு கவனிக்கிறார்கள். (அதற்காக உன்னைத் தியானிக்கிறார்கள் என்னவுமாம்). அப்போது உன்னைத் தவிர மற்றொருவராலும்

உன்னைப்போல் அடையமுடியாததான அந்தப் பெருமாளுடைய திருவடியின் அடிவைப்பை ஒத்து ரொம்ப அழகாக அடிவைப்பின் வரிசையைச் செய்துகொண்டுவரும் உன்னுடைய சப்தங்களைக்கொண்டே பெருமாள் இன்ன இடத்தில் எவ்வளவு தூரத்தில் எழுந்தருளுகிறார், வேகமாக எழுந்தருளுகிறாரா மெதுவாக எழுந்தருளுகிறாரா, என்றிவை முதலிய பெருமாளுடைய ஸங்கதிகளை அவர்களுக்கு நீ தெரிவிப்பதுபோல் மற்றொருவராலும் உண்மையாகத் தெரிவிக்கமுடியாது. இப்படி நீ பெருமாளுடைய ஸங்கதிகளை உள்ளபடி தெரிவிப்பது எப்படி இருக்கிறதென்றால், தெளிவானதும் நிலையானதுமான புத்தியோடு கூடிய யோகிகளால் எப்போதும் மனனம் செய்யப்படுமதானதும், ‘க்ரமம்’ என்று சொல்லப்படும் மாதிரியினால் தொடர்ந்து தொடர்ந்தும், முறையாகவும் அழகாக ஓதப்படுமதானதும், தன்னைத்தவிர வேறொரு பிரமாணங்களால், அதாவது ப்ரத்யக்ஷ அனுமானங்களால், அறியக்கூடாததான பெருமாளுடைய ஸ்வரூபம் முதலியதுகளை உடைத்தானதுமான வேதமானது தன்னுடைய நாராயணானுவாகம் முதலானதிலுள்ள பதங்களால் பெருமாளுடைய ஸ்வரூபாதிகளை உள்ளபடி காட்டுவதுபோலிருக்கிறது. ஆகையால் இது விஷயத்தில் நீ வேதம் போலிருக்கிறாய்.

பஞ்சகால பராயணர்களாக இருந்துகொண்டு சாஸ்திரவிஹிதங்களான தங்களுடைய கர்மானுஷ்டானங்களை ஒன்றின்பின் ஒன்றாய் வரிசையாக அழகாகச் செய்பவர்களும், பிறர்களையும் அப்படியே செய்விப்பவர்களும், வேதத்தில் சொல்லியபடி பராவர தத்வங்களையும் ஹிதங்களையும் புருஷார்த்தங்களையும் உள்ளபடியே அறிந்தவர்களும், பிறர்களையும் அப்படியே அறிவிப்பவர்களுமான ஸ்ரீ ஆழ்வார் துடக்கமாகவுள்ள ஸதாசார்ய பரம்பரையின் உபதேசானுஷ்டான பரம்பரையால்தான் நாம் தத்வ ஹித புருஷார்த்தங்களை அறிந்து நல்வழியில் நடந்து பெருமாளை அடையவேணும். அப்படிப்பட்ட ஸதாசாரியர்கள் நமக்கு தத்வ ஹித புருஷார்த்தங்களை உள்ளபடி காட்டிக்கொடுக்கும் விஷயத்தில் வேதம்போலிருக்கிறார்கள். இது பின்மூன்று பாதங்களின் கருத்து. “[illegible]......[illegible]” என்கிற முதல் பாதத்தின் கருத்தாவது— அப்படிப்பட்ட ஸதாசார்யர்களையும் ஸதா

சார்ய பரம்பரையையும் நாம் பரமசிரேயஸ்ஸை அடையும் பொருட்டு பயபக்தி விசுவாஸங்களுடனும் மனதின் அவதானத்துடனும் ஸதா தியானிக்கவேணுமென்பதும் த்ரிகரணங்களாலும் பூஜிக்கவேணுமென்பதும் அப்படியே அவர்களுடைய உபதேசானுஷ்டானங்களையும் கொள்ளவேணுமென்பதும், அப்படிச் செய்தால்தான் அவர்களுடைய ஸம்பந்தம் நமக்கு கார்யகரமாகும் என்பதும். வேதத்தையும் அப்படியே கௌரவித்து முறைப்படிக் கிட்டினால்தான் அதுவும் நமக்குத் தத்வார்த்தங்களை உள்ளபடி காட்டிக்கொடுக்கும். (62)

**(அ௬௩) அகலங்க நிஜ ஸ்வர்ண ப்ரகாஶ தர்ஶநீயா ப்ரதி**
**க்ஷணமுபபோக்யா பாதுகே ரங்கபர்த்து: |**
**ஸம்ஹாரயிதும் அஶேஷம் மௌக்திகஜ்யோத்ஸ்நயா ந:**
**ப்ரபவஸி திமிரௌகம் பௌர்ணமாஸீ நிஶேவ ||**

ஹே ரங்கபர்த்து: பாதுகே - வாராய் ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையே! அகலங்க - களங்கமற்ற (அதாவது சுத்தமான), பூர்ணமான, நிஜ - தன்னுடையதான, ஸ்வர்ண - தங்கத்தினுடைய, சந்திரனுடைய, ப்ரகாஶ-பிரகாசத்தினாலே, தர்ஶநீயா - பார்க்கத்தகுந்த (அதாவது அழகான) வளாயும், ப்ரதிக்ஷணம் - க்ஷணந்தோறும் ஒவ்வொரு பிறையிலும், உபபோக்யா - அனுபவத்தினால் ஸுகத்தைக் கொடுக்கத்தக்கவளாயிருக்கிற நீ, பௌர்ணமாஸீ - பௌர்ணமாஸி ஸம்பந்தமான நிஶேவ - ராத்திரிபோல, மௌக்திக - முத்துக்களுடைய, ஜ்யோத்ஸ்நயா - காந்தியினாலே அல்லது, மௌக்திக - முத்துப்போல் தெளிவான, ஜ்யோத்ஸ்நயா - நிலவினாலே, ந: - எங்களுடைய அஶேஷம் - ஸமஸ்தமான, திமிரௌகம்-அக்ஞான ஸமூஹத்தை இருட்டினுடைய கூட்டத்தை, ஸம்ஹாரயிதும் - போக்கடிப்பதற்கு, ப்ரபவஸி - சக்தியுள்ளவளாக இருக்கிறாய்.

(கருத்து) ஓ ரங்கநாதனுடைய பாதுகையே! நீ உன்னுடைய சுத்தமான தங்கத்தினுடைய காந்தியினால் பார்ப்பதற்கு ரொம்ப அழகாகவும், க்ஷணம்தோறும் புதிதுபுதிதுபோல் காணப்பட்டு ஆசையோடு அனுபவிக்கத்தக்கவளாகவும் இருந்து,

உன்னை ஆச்ரயித்த ஸர்வ ஜநங்களுக்கும் ஸந்தோஷத்தையும் ஞானத்தையும் கொடுத்து ஸம்ஸாரமாகிற ராத்திரியில் ஒருவராலும் போக்கமுடியாத அக்ஞானக்கூட்டங்களையெல்லாம் போக்கிவிடுகிறாய். அது எப்படியிருக்கிறதென்றால் ராத்திரி காலத்தில் இருட்டிலகப்பட்டு கஷ்டப்படும் ஜநங்களுக்கு பூர்ண சந்திரன் தான் பார்ப்பதற்கு அழகாகவும், அனுபவிப்பதற்கு ஸுகமாகவும் இருந்து ஸந்தோஷத்தைக் கொடுத்துக்கொண்டு தன்னுடைய ஸ்வச்சமாக பிரகாசிக்கிற கிரணங்களால் இருட்டை இருந்தவிடம் தெரியாமல் போக்கிவிடுவதுபோலிருக்கிறது. நீ க்ஷணம்தோறும் புதிது புதிதுபோல் காணப்பட்டு இன்பமாக இருப்பதுபோல்; சந்திரனும் அப்படியே ஒவ்வொரு பிறையிலும் புதிதாகவும் இன்பமாகவும் இருந்து ஸுகத்தையும் வெளிச்சத்தையும் கொடுத்து ஜனங்களுக்கு ஸந்தோஷத்தை உண்டு பண்ணுகிறான்.

அநாதிகாலம் தொடங்கின வல்வினைகளால் ஸம்ஸாரமாகிற காளராத்திரியில் அகப்பட்டு திருடமான அக்ஞானங்களாகிற அந்தகாரத்தினால் வழி தெரியாமல் திகைத்துத் தடமாடி அநேக கஷ்டங்களை முடிவில்லாதபடி அனுபவித்துக்கொண்டிருக்கும் நமக்கு திருமேனியிலுள்ள பிரும்மதேஜஸ்ஸினாலும் ஆத்மாவிலுள்ள ஞானப்பிரகாசத்தினாலும் பூர்ணசந்திரன்போல் விளங்காநிற்கிற ஸ்ரீ நம்மாழ்வார் துடக்கமாகவுள்ள ஸதாசாரியர்கள் தங்களுடைய தெளிவான திவ்யஸூக்திகளால் தத்வஹித புருஷார்த்தங்களை ஸம்சயமறப் பிரகாசிப்பித்து இந்த ஸம்ஸாரத்திலிருந்து வைத்தே அக்ஞானமாகிற இருட்டை அடியோடு போக்கி ஜ்ஞானமாகிற முழுவெளிச்சத்தைக்கொடுத்து ஸௌக்யத்தையும் ஸந்தோஷத்தையும் உண்டுபண்ணுகிறார்கள். "ப்ரதிக்ஷணஸுபகஸ்ய" என்பதால் (1) ஸதாசார்யர்களை எவ்வளவு காலம் அனுபவித்தாலும் அவர்கள் ஒருபொழுதும் மாறுதபடி ஸ்வாபாவிகமான நற்குணங்கள் முதலானவைகளுள்ளவர்களாக எப்போதுமிருப்பதாலும்,பிரதிக்ஷணமும் அவர்களிடத்தில் புதிதுபுதிதாக குணபாகமும் ஞானபாகமும் அனுஷ்டானபாகமும் ஆஸ்திகர்களும் ரஸிகர்களுமானபக்திமான்களுக்கு அகப்படுவதாலும், ஸர்வதா பழகி அனுபவிப்பதற்கு போக்யமாக இருப்பார்கள் என்பதும் (2) அவர்களுடைய பால்ய

தசைமுதல் சரமதசாவதியாக படிப்படியாக அவர்களுடைய அபிவிருத்தியானது லோகவிலக்ஷணமாய் எல்லோராலும் கொண்டாடி அநுபவிக்கத்தக்கதாக இருக்குமென்பதும், (3) அவர்களிடத்தில் பூர்ணத்வம் எப்போதுமிருந்தாலும்,உலகத்தாருடைய ஸுகிருதபரிபாகத்துக்கும் ஸுகிருததாரதம்யத்துக்கும் தக்கபடி அவரவர்களுக்கு உண்டாகிற ஞானபக்திகள் அளவாக அவர்களுடைய பிரபாவம் பிரகாசிதமாகி அவரவர்களுடைய ஆத்மோஜ்ஜீவநத்துக்குக் காரணமாக இருப்பார்கள் என்பதும், (4) நல்ல ஸுகிருதிகளுக்கு பரிபூர்ணபக்தியினால் அவர்களுடைய பிரபாவம் முற்றிலும் காணப்பட்டு பூர்ணசந்திரன்போல்அவர்களுக்கு பூர்ணமான ஜ்ஞாநாநந்தங்களையும் பரமஶ்ரேயஸ்ஸையும் இந்தப் பிரகிருதியிலேயே கொடுப்பார்கள் என்பதும் ஸூசிப்பிக்கப்படுகிறது.

(அகூச) ஹம்ஸஶ்ரேணீஸேவிதமதிர்ஹாரிணீ கல்மஷாணாம் மௌளௌ ஶம்போ: ஸ்திதிமுபகதா ஶோபநம் ஸஞ்ஜுகாநா ।
ராஜ்ஞாமேகா ரகுகுலபுவாம் ஸத்ருஶோத்தாரிகா த்வம் காஷ்ட்ரே ந ஸம்ஶ்ரிதா ந ஸ்திதிமுபகதா பாதுகே ஜாஹ்நவீவ ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! ஹம்ஸ - யோகிகளுடைய, ஹம்ஸபக்ஷிகளுடைய, ஶ்ரேணீ - கூட்டங்களினால், வரிசைகளினால், ஸேவித - ஸேவிக்கப்பட்ட, அடையப்பட்ட, கதி: - ஸஞ்சாரத்தை, பிரவாஹத்தையுடையவளாயும், கல்மஷாணாம் - பாபங்களை, அழுக்குகளை, ஹாரிணீ - போக்கடிக்கிறவளாயும், ஶம்போ: - சிவனுடைய, மௌளௌ - தலையிலே, ஸ்திதிம் - இருப்பை, உபகதா - அடைந்தவளாயும், ஶோபந - அழகான, ஸம்ஜு - தங்கத்தோடு, ஸங்காநா - கூடினவளாயும், அல்லது ஶோபநஸம்ஜு - பாலசந்திரகலையோடு, ஸங்காநா - சேர்ந்தவளாயும், ரகுகுலபுவாம் - ரகுகுலத்தில் உண்டான, ராஜ்ஞாம் - ராஜாக்களுக்கு, அல்லது ஸகரபுத்திரர்களுக்கு, ஏகா - ஒரு விலக்ஷணமான, ஸத்ருக் - உள்ளபடியான, உத்தாரிகா - நல்ல கதியை அதாவது உத்தமலோக பிராப்தியைக் கொடுக்கிறவளாயுமிருக்கிற, த்வம் - நீ, ஜாஹ்நவீவ-

கங்கையைப்போல, தவஹிநு காலெ - ஸத்யலோகத்திலிருந்து திருவயோத்திக்கு எழுந்தருளின காலத்தில், பகீரதமஹாராஜாவின் தபஸ்ஸு பூர்த்தியடைந்த காலத்தில், க்ஷிதிம் - பூமியை, உயிநதா - அடைந்தாய்.

(கருத்து) ஓ பாதுகையே! நீ ஸ்ரீ ரங்கநாதனோடு கூட ஸத்யலோகத்தில் பிரம்மாவினால் ஆராதிக்கப்பட்டு, பிறகு திருவயோத்தியில் இக்ஷ்வாகுமகாராஜாவினால் ஆராதிக்கப்படுவதற்காக பூமிக்கு எழுந்தருளும்போது, உன்னுடைய மார்க்கத்தில் யோகிகள் எல்லாரும் உன்னைத் தொடர்ந்து பூஜித்தார்கள். எல்லோருக்கும் உன் ஸேவை முதலானவைகளைக்கொடுத்து அவர்களுடைய பாபங்களையெல்லாம் போக்கினாய். சிவன் உன்னை தன் தலையில் வைத்துக்கொண்டு புனிதனானான். அப்போது அவன் தலையிலிருக்கும் சந்திரகலை உனக்கு அலங்காரமாயிற்று. உன்னுடைய சுத்தமான தங்கத்தால் பிரகாசமுள்ளவளாய் நீ ரொம்ப அழகாக விளங்கினாய். இவ்வளவு வைபவத்தோடு நீ பூமிக்கு எழுந்தருளி திருவயோத்தியில் ரகுவம்சத்து ராஜாக்களால் ஆராதிக்கப்பட்டு அவர்களுக்கெல்லாம் உத்தமமான கதியைக் கொடுத்ததைக் கவனித்தால் பகீரதன் என்கிற ராஜர்ஷியினால் உத்தமமான தபஸ்ஸைச் செய்து தேவலோகத்திலிருந்து பூமிக்கு அழைத்துவரப்படும் காலத்தில், தான் பிரவஹிக்கிற மார்க்கமெல்லாம் ஹம்ஸபக்ஷிகளின் வரிசைகளால் தொடரப்பட்டு தன்னிடத்தில் ஸ்நாநம் பண்ணின ஜநங்களுடைய பாபங்களையும் அழுக்குக்களையும் எல்லாம் போக்கிக்கொண்டு சிவனுடைய பிரம்மஹத்யாதி பாபங்களைப் போக்குவதற்காக நியதமாக அவன் தலையில் தங்கி, அவ்விடத்தில் பிறைச்சந்திரனோடு சேர்ந்திருந்து, பூமியில் இறங்கி பாதாளலோகத்தில் பிரவேசித்து, அங்கே கபிலமகர்ஷியினுடைய கோபத்தால் எரிக்கப்பட்டு சாம்பல் முட்டுகளாய் கிடந்த 60,000 ஸகரபுத்ரர்களை நினைத்து, அவர்களுக்கு உத்தமமான ஸ்வர்க்கலோகப் பிராப்தியைக் கொடுத்த கங்கையின் வியாபாரம்போல் காணப்படுகிறது.

ஸ்ரீ நம்மாழ்வார் போன்ற உத்தமாசாரியர்கள் பெருமாளுடைய பாதுகையைப் போலவும், அவர் திருவடியிலிருந்து

பிரவஹித்த ஸர்வலோக பாவினியான கங்கையைப் போலவும் பிரபாவமுள்ளவர்கள். அவர்களுடைய கதியை (அதாவது அநுஷ்டானம்முதலியவைகளை) மஹான்களெல்லாரும் அப்யஸிக்கிறார்கள். அவர்களை ஆச்ரயித்தமாத்திரத்தில் ஜனங்களுடைய ஸர்வ பாபங்களும் போய்விடும். த்ருணீக்ருத ஐச்வரியர்களாய் பகவதேக போகர்களான அந்த மஹான்களை சிவன் முதலிய ஆதிகாரிக புருஷர்கள் (அதாவது ஒவ்வொரு தேவப்பட்டத்திலிருந்து பகவானால் நியமிக்கப்பட்ட அதிகாரத்தை நடத்துபவர்கள்) தலையால் வணங்குகிறார்கள். அப்போது அவர்களுடைய சிரஸ்ஸில் இருக்கும் ஆபரணங்கள் அந்த மஹான்களுடைய திருவடிகளுக்கு ஆபரணங்கள் போலாகின்றன. "ராஜவித்யா ராஜகுஹ்யம்" என்று ஸ்ரீ பகவத்கீதையில் அருளிச்செய்யப்பட்டபடி வித்யைகளுக்கெல்லாம் ராஜாவாயும் ரஹஸ்யங்களுக்கெல்லாம் ராஜாவாயும் இருக்கும் அத்யாத்மவித்யையையும் அத்யாத்ம ரஹஸ்யத்தையும் அறிந்து அநுஷ்டிக்கவல்ல ராஜர்ஷிகளுடைய மனது போல் விசாலமாய் ஆழ்ந்ததாய் உறுதியுள்ளதான மனதையுடைய மஹான்களுக்கு (அதாவது ஸதாசார்யபதத்திற்கு வரத்தகுந்த ஸத்சிஷ்யர்களான அதிகாரிகளுக்கு) தத்வஹித புருஷார்த்தங்களை உண்மையில் கற்பித்துக்கொடுத்து அவர்களுக்கு பரம ச்ரேயஸ்ஸை உண்டுபண்ணும் விஷயத்தில் அவர்களுக்கு ஸமானமானவர்கள் கிடையாது.

இந்த ச்லோகத்தால் ஆழ்வார் முதலிய ஸதாசார்யர்கள் அவதார புருஷர்கள் என்பதும், பெருமாளுடைய அவதார காலத்தில் போல் அவர்கள் அவதரிக்கும்போதும் அவர்களுடைய ஸஹாயார்த்தமாக மற்ற ஸூரிகள் அவதரிக்கிறார்கள் என்பதும் ஸம்பிரதாயஸித்தமானபடி ஸூசிப்பிக்கப்படுகிறது. இவர்கள் பெருமாளுடைய தயாப்ரவாஹரூபமானதால் இவர்களுக்கு நதியை உபமானமாகச் சொல்வது மிகவும் உசிதம்.

(அ௬௫) ஸ்வச்சாகாராம் ஶ்ருதிஸமஹிதாம் ஸ்வாதுபாதோ
ஸோபாநாநாம் ஸாதுஸாது ஸமிதவிபவாம்
வாதூலகே ஸ்வயதுவேதை: । ஸீதஸ்பர்ஶாம் ஶ்ருத
விநயினீம் மாதரீத உதன்னதம் க்ரீடாநோத: கலய
நிர்யா உத்தமவேஷா யாவா ஸ்வாந் ॥

𑌹𑍇 𑌪𑌾𑌦𑍁𑌕𑍇 - வாராய் பாதுகையே! 𑌕𑌮𑌲𑌾𑌲𑌯𑌾 - தாமரைப்பூவை வாஸஸ்தானமாகவுடைய மஹாலக்ஷ்மியினாலே, 𑌅𑌰𑍍𑌪𑌿𑌤 - கொடுக்கப்பட்ட அதாவது பிடிக்கப்பட்ட, 𑌹𑌸𑍍𑌤𑌃 - திருக்கைகளையுடையவராயிருக்கிறவரும், 𑌯𑍁𑌵𑌾 - யுவாவுமான ஸ்ரீ ரங்கநாதனானவர், 𑌸𑍍𑌵𑌚𑍍𑌛 - தெளிவான, 𑌆𑌕𑌾𑌰𑌾𑌂 - ஸ்வரூபத்தையுடையவளாயும், 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿 - வேதத்தினாலே, 𑌸𑍁𑌵𑌾𑌸𑌿𑌤𑌾𑌂 - வாஸனை உண்டுபண்ணப்பட்டவளாயும் அதாவது வேதத்தில் சொல்லப்பட்டவளாயும்; பாதுகையும் சில புண்ய நதிகளோடுகூட காவேரியும் வேதத்தினால் கொண்டாடப்பட்ட பெருமையுள்ளவைகள், 𑌸𑍍𑌵𑌾𑌦𑍁𑌰𑌸 - போக்யதையோடு, மாதுர்யத்தோடு, 𑌉𑌪𑌪𑌨𑍍𑌨𑌾𑌂 - கூடினவளாயும், 𑌤𑍀𑌰𑍍𑌥𑍇 𑌤𑍀𑌰𑍍𑌥𑍇 - ஸஞ்சரிக்கும் வழிகள் தோறும், பிரவஹிக்கும் வழிகள் தோறும், 𑌤𑍀𑌰𑍍𑌥𑍈𑌰𑌨𑍇𑌕𑍈𑌃-அநேகம் புண்யபுருஷர்களாலே, அநேகம் ஸ்நாநகட்டங்களை உடைத்தாயிருப்பதினாலே, (தீர்த்த என்கிற பதம் பொதுவாக பாவனமான வஸ்துவைச் சொல்கிறதாகையால் பாதுகாபக்ஷத்தில்புண்யபுருஷர்கள் என்றும்காவேரி பக்ஷத்தில் புண்யமான விசேஷஸ்நாநகட்டங்களென்றும் பொருளைக் கொடுக்கிறது. காவேரி முழுவதிலும் ஸ்நாநம் புண்யமானதாகிலும் ஸ்ரீரங்கம், திருக்குடந்தை, திருவிந்தளூர் முதலிய இடங்களில் ஸ்நாநகட்டங்கள் விசேஷ புண்யமாகக் கொண்டாடப்படுகின்றன.) 𑌈𑌡𑌿𑌤 - கொண்டாடப்பட்ட, 𑌵𑌿𑌭𑌵𑌾𑌂 - பெருமையையுடையவளாயும், 𑌶𑍀𑌤-குளுமையான, 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌂- ஸ்பர்சகுணத்தை உடையவளாயும், ஸம்ஸார தாபங்களையும் பாபங்களையும் உஷ்ணத்தையும் போக்கடிக்கும்படியான குளுமையை உடையது, 𑌶𑍍𑌰𑌮𑌂 - ஸம்ஸார தாபத்ரயங்களால் உண்டாகும் சிரமத்தை, உஷ்ணம் புழுக்கம் முதலியதால் உண்டாகும் சிரமத்தை, 𑌵𑌿𑌨𑌯𑌨𑍍𑌤𑍀𑌂 - போக்கடிக்கிறவளாயுமிருக்கிற, 𑌤𑍍𑌵𑌾𑌂 - உன்னை, காவேரியை, 𑌕𑍍𑌰𑍀𑌡𑌯𑌾 - விளையாட்டாக ஸஞ்சரிப்பதில், ஜலக்ரீடை பண்ணுவதில், 𑌸𑍋𑌤𑍍𑌸𑍁𑌕𑌃 - ஆசையுடையவராய் கொண்டு, 𑌶𑌨𑍈𑌶𑍍𑌶𑌨𑍈𑌃 - ரொம்ப மெதுவாக (அதாவது கௌரவ புத்தியினால் ஏற்படும் கூச்சத்தினாலும் போக்யத்வபுத்தியினால்

ஏற்படும் அபிலாஷையாலும் உண்டாகும் மந்தமான பிரவிருத்தியோடு), மாஹதே - (திருவடியில்) சாற்றிக்கொள்கிறார், பிரவேசிக்கிறார். இந்த சுலோகத்தில் காவேரியை பதத்தினால் நேரில் சொல்லாவிட்டாலும் ச்லேஷையினால் (அதாவது பதங்களுக்கு இரண்டு விதமான அர்த்தங்களால்) பெருமாள் ஸஞ்சாரத்துக்காக பாதுகையைச் சாற்றிக்கொள்வதற்கு காவேரியில் ஜலக்ரீடைக்கு இறங்குவதோடு உபமானம் அர்த்தாத் ஸித்திக்கிறது. காவேரி விஷயமான அர்த்தங்களை பதங்களுக்கு இரண்டாவது அர்த்தங்களால் காட்டப்பட்டிருக்கிறது. முதல் அர்த்தங்கள் பாதுகா விஷயம்.

(கருத்து) ஓ பாதுகையே! நித்யயுவாவான ஸ்ரீரங்கநாதனவர் கமலவாஸினியான மஹாலக்ஷ்மியினால் கைலாக்குக் கொடுத்து எழுந்தருளப்பண்ணப்பட்டு அவளாலே ப்ரேரிதனாய் அவளோடு கூட ஒரு அழுக்குமில்லாமல் ரொம்ப தெளிவாக பிரகாசிக்கிறவளும், வேதத்தினால் கொண்டாடப்படும் பெருமையுடையவளும், அநுபவிப்பதற்கு ரொம்ப இன்பமானவளும் ஸஞ்சரிக்கும் மார்க்கம்தோறும் பெரியோர்களால் ஸேவித்துக் கொண்டாடப்படுகிறவளும், ஸேவித்து தலையில் வைத்துக்கொள்ளும் ஸர்வ ஜனங்களுக்கும் பாபங்களையும் ஸம்ஸார தாபத்ரயங்களையும் போக்கி குளிர்ச்சியை அதாவது ஸுகத்தைக் கொடுக்கிறவளும், திருவடியில் சாற்றிக்கொள்கிற தனக்கும் குளிர்ச்சியான ஸ்பர்சஸுகத்தையும் கொடுத்து ஸஞ்சாரத்தில் சிரமம் தட்டாதபடி பண்ணுகிறவளுமான உன்னை லோகரக்ஷணார்த்தமான லீலா ஸஞ்சாரத்தின் பொருட்டு உன்னுடைய கௌரவத்தைப் பார்த்து கூச்சத்தோடும், அனுபவிக்கத்தக்க உன்னுடைய குணங்களைக் கண்டு ஆவலோடும், மெல்ல மெல்ல தன் திருவடிகளில் சாற்றிக்கொள்கிறார். அதைப் பார்த்தால் உன்னுடைய குணங்கள் போன்ற எல்லா குணங்களையுமுடைய காவேரி நதியில் ஜலக்ரீடை பண்ணுவதற்காக பெருமாளும் தாயாருமாக ஒருவருக்கொருவர் கையைப் பிடித்துக்கொண்டு ஜலத்தில் மெதுவாக இறங்குவதுபோலிருக்கிறது.

இந்த சுலோகத்தில் பதஸ்வாரஸ்யத்தினால் (1) க்ரீடா ஸரோஜ: கமலநிலயா உத்தமஸ்யாதவா என்கிற ஸமபிவ்யா

ஹாரத்தால் (அதாவது பதங்களின் சேர்க்கையினால்) விளையாட்டில் ஆசைக்கும் பிரவர்த்திக்கும் காரணம் பெருமாள் நித்ய யுவாவாக இருப்பதினாலும் யுவதிசிரேஷ்டையான மஹாலக்ஷ்மியோடு சேர்ந்திருப்பதினாலும் உண்டான உத்ஸாஹம் என்பதும்;

(2) கமலநிலயா உத்தஹஸ்தாயஸ்வா என்கிற ஸமபிவ்யாஹாரத்தால் ஸ்ரீரங்கநாதன் மிகவும் புராணபுருஷர் விருத்தர் என்கிற ஸாமான்ய ஐதிஹ்யம் உண்டானாலும் கமலவாஸினியான யுவதிசிரேஷ்டையின் சேர்க்கையினால் யுவாவாக ஆகிவிட்டார் என்பதும் ;

(3) கமலநிலயா உத்தஹஸ்த: என்கிற பதத்துக்கு கமலநிலயாயை உத்த: (ஸ்வ) ஹஸ்த: யேந ஸ: என்கிற விக்ரஹத்தால் ஸ்திரீஸ்வபாவம் பயமுள்ளதானதாலும் புருஷஸஹாயமில்லாமல் கார்யஸமர்த்தமல்லாததாலும் பயசமநார்த்தமாகவும் ஸஹாயார்த்தமாகவும் மார்க்கத்தில் ஸஞ்சரிப்பது காவேரியில் இரங்குவது முதலிய வியாபாரங்களில் மஹாலக்ஷ்மிக்கு பெருமாள் தன் கராவலம்பனத்தைக் கொடுக்கிறார் என்பதும்;

மஜ்ஜந்தீ வீக்ஷ்யஸிந்தௌ வ்யாஹ்ருதவதீ வாரநாரீ நாதஹஸ்தம் ஸம்க்ருஹ்ய பாதஸ்வநரஸம்ஸ்ருதா॥ கஷ்டநாதாய தேவதேவஹிம் ஜஜ்ஞாநாம் யஸ்வினீம் । லக்ஷ்மண ஸஹஹ்ருதாக்ருதிக்ருதே நயநாபூதா॥ என்றிவை முதலிய ஸ்ரீராமாயண ஸந்தர்ப்பங்கள் இவ்விடம் அனுஸந்தேயம்.

(4) கமலநிலயயா உத்த: (ஸ்வ) ஹஸ்த: யஸ்ய ஸ: என்கிற விக்ரஹத்தால் ஸ்ரீ மகாலெக்ஷ்மியானவள் நித்யம் கமலவாஸினியானதால், அகாதமான நதிகள் ஸரஸ்ஸுக்கள் க்ஷீராப்தி முதலான ஜலபாகங்கள் இவளுக்குப் பிறந்தவிடமாய் அவைகளில் நிச்சங்கமாகவும் ஸ்வாதீனத்தோடும் ஸர்வகாலத்திலும் பிரவேசிக்கக்கூடியவளானதால், ஒருக்கால் ப்ரளயார்ணவத்தில் அறியமாட்டாத இளமைப்பர்வத்தில் ஓர் ஆலிலையின் மீது படுத்து உறங்கினவனானாலும் கூச்சப்படும் தன் நாயகனை மெதுவாகத் தான் கையைப்பிடித்து அவனுக்கு மாமியார் வீடான காவேரிக்குள் அழைத்துப்போனாள் என்பதும், ராஜோபசாரமாக கைலாக்குக் கொடுத்து இப்படி எழுந்தருளவேணும்

இப்படி எழுந்தருளவேணுமென்று மெல்ல மெல்ல அழைத்துப் போனுள் என்பதும், பாதுகாபக்ஷத்தில் அவன் பிரளயார்ண வத்தில் பயமின்றி படுத்துறங்கும் ஸ்வபாவனுனாலும் அதிலும் கொடியதாய் துஷ்கர்மங்களால் நிறைந்து பயங்கரமாயுள்ள இந்த ஸம்ஸாரார்ணவத்தில் பிரவேசிப்பதற்கு கூசும் பகவானை அதில் மக்நமான தன் பிரஜைகளைக் காப்பாற்றுவதின் பொருட்டு அஜ்ஞாதநிக்ரஹையான ஸ்ரீமஹாலக்ஷ்மியானவள் மாத்ருத்வ ப்ரயுக்த வாத்ஸல்யாதிசயத்தாலே அதில் பிரவேசிக்கும்படி தன் கையையும் உத்தமமான தெப்பம் போன்ற பாதுகையையும் ஸஹாயமாகக் கொடுத்துத் தூண்டுகிறுள், அதாவது லோக ரக்ஷணார்த்தமான வியாபாரத்தில் ஏவுகிறுள் என்பதும்;

(5) கமலநிலயா உத்தஹஸ்த: ஜநஞ்ஜநம் காஹதே என்கிற ஸமபிவ்யாஹாரத்தால், இப்படி மஹாலக்ஷ்மியினுல் தூண்டப் பட்ட பிரயத்நமுடையவனுனாலும், "என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்னும்படி தானும் தன்னேற்றமான தயை வாத்ஸல்யம் முதலான குணங்களுடைய வனுனாலும் அவரவர்கள் கர்மங்களை அனுஸரித்தே பலன்களைக் கொடுப்பது என்கிற வ்யவஸ்தையோடு ஸம்ஸாரதந்திரத்தை நடத்துவது என்கிற ஸத்யஸங்கல்பமுடையவனுனதால் அவஸர ப்ரதீக்ஷனுய்க்கொண்டு (அதாவது காப்பாற்றுவதற்கு ஒரு அல்ப வியாஜத்துக்காக சேதநர்கள் பக்கல் அஜ்ஞாத, யாத்ருச்சிக ப்ராஸங்கிக ஸுக்ருதங்களையாவது எதிர்பார்த்துக்கொண்டு) தான் த்வரிதஹ்ருதயனுயிருந்தும் தாமதிக்கிறுன் என்பதும்;

(6) கமலநிலயா உத்தஹஸ்த: காஹதே என்கிற ஸமபி வ்யாஹாரத்தால் [illegible] ||
என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திப்படிக்கு ஸ்ரீமஹாலக்ஷ்மியின் பிரீத்யர்த்தமாக சேதநர்களைக் காப்பாற்றுவதற்கு ஸிருஷ்டி முதலானதுகளாகிற லோகரக்ஷண வியாபாரங்களைச் செய்கிறுன் என்பதும்;

(7) கமலநிலயா உத்தஹஸ்த: அபாரம் காஹதே என்பதால் இப்படித் தனக்கு த்வரையிருந்தும், மஹாலக்ஷ்மியின் உதவி

யும் இருந்தும்கூட பாதுகையின் (அதாவது ஸதாசார்யர்களின்) உதவி லோகரக்ஷணத்துக்கு அவசியமாயிருக்கிறது என்பதும்;

(8) 'ஸ்வாம' என்பதற்கு சுலோகத்திலுள்ள விசேஷணங்களை ஹேதுகர்ப்பமாக (அதாவது மாஹதே என்கிற கிரியைக்குக் காரணமாக) அர்த்தம் கொண்டால் சொல்லப்பட்ட குணங்களுடையதாயிருப்பதால் 'சாத்திக்கொள்கிறான்' அல்லது 'இரங்குகிறான்' என்று பலிப்பதால் அப்படிப்பட்ட குணமில்லாததை பரிக்ரஹிக்கமாட்டான் என்றும், ஸத்ஸம்ப்ரதாயமாய் வராத பரம்பரையையும் ஆசாரியர்களையும் பரிக்ரஹிக்கமாட்டான் என்பதும்;

(9) க்ஷமாயோர: உதுதும் மாஹதே— ஸ்வாபஸமதத காமனுகையால் த்வரையில்லாததாலும், க்ஷமாஹரேரிதம் ஸவம் என்கிறபடி ஜகத்வ்யாபாராதிகளெல்லாம் லீலார்த்தமானதாலும், ஒரே காலத்தில் ஸமஸ்த ஜீவர்களையும் விடுவித்து லீலாவிபூதியை அழிக்கும்படியான ஸங்கல்பமில்லாமல் கொஞ்சங்கொஞ்சமாக உலகரக்ஷணத்தை நடத்துகிறான் என்பதும், இன்னும் பல அர்த்தஸ்வாரஸ்யங்களும் ஏற்படுகின்றன. அவைகளில் சிலவைகள் சாஸ்திரார்த்தங்களாகவும் சிலவைகள் விநோதார்த்தங்களாகவுமிருக்கும்.

ஸ்ரீ பெருமாள் தாயார் இருவர்களுடைய தயாபிரவாஹ ரூபமான ஸதாசார்யஸந்ததியானது பெருமாள் முதற்கொண்டு ஸிருஷ்டிகாலம் தொடங்கி பிரளயகாலம் வரையில் பல முகமாக நதீபிரவாஹம்போல் இந்தப் பிரகிருதிமண்டலத்தில் பிரவஹிக்கிறது. இந்த ஸந்ததியானது ஸ்வச்சமான ஸ்வரூபத்தை (அதாவது பராவர தத்வவிஷயத்திலும் தத்வஹித புருஷார்த்தங்களிலும் நிர்மலமான ஜ்ஞானத்தை உடைத்தானதாகவும்) சுருதி ஸ்மிருதி இதிஹாஸ புராணாதிகளில் பிரஸித்தமான பெருமையை உடையதாகவும், சுருதியுக்தலக்ஷணமுடையதாகவும், பகவத்குணாநுபவம் முதலான போக்யதையை உடையதாயும், அந்தந்த காலங்களிலுள்ள பெரியோர்களால் அப்போதைக்கப்போதும் ஸர்வகாலத்திலும் ஸர்வராலும் ஸத்ஸம்பிரதாயம் என்றும் ஸதாசாரியர்கள் என்றும் கொண்டாடி ஆச்ரயிக்கப்படும் பெருமையை உடையதாயும், நதி மார்க்கங்களில் விசேஷ ஸ்நாநகட்டங்கள்போல்

ஸ்ரீ நம்மாழ்வார், ஸ்ரீ மந்நாதமுநிகள், ஸ்ரீ ஆளவந்தார், ஸ்ரீ பாஷ்ய காரர் பிரபிருதிகளான ஸதாசார்ய ஸ்ரேஷ்டர்களை உடைத்தான பெருமையை உடையதாயும், ஸர்வதா அனுக்ரஹசீலமாகிற குளிர்ச்சியை உடையதாயும், ஸம்ஸாரதாபத்ரயரூபமான சிரமத்தை அநந்யப்ரயோஜனமாய் போக்கக்கூடியதாயும் இருக்கிறது. பகவான் இந்த பிரவாஹத்தில் இறங்கி (அதாவது ஸதாசார்யர்களிடத்தில் அனுப்ரவேசம் பண்ணி) தாபத்ரயங்களால் கொதிப்புண்ட பிரகிருதியாகிற பாழில் விரைக்கப்பட்டு ஜநந, மரண, அவித்யா, கர்ம, வாஸனு, ருசிகளாகிற விஷாக்னி ஜ்வாலா ஸதிருசங்களான சுழற்காற்றுகளால் பரிப்ரமித்துக் கொண்டு நிலைகொள்ளாமல் உஷ்பமானமாய் ஸபலமாகாமலிருக்கும் பீஜங்கள்போன்ற கர்மபத்த சேதநர்களை மேற்சொன்னபடி சைத்யாதிகுணங்களுள்ள பிரவாஹத்தால் நனைத்து (அதாவது ஸதாசார்யமுகமாக தத்வஜ்ஞாநாதிகளைக் கல்பித்துக்கொடுத்து) கர்மபரிபாகமாகிற கிருஷியைப் பண்ணி சுத்த (கர்மநிர்முக்த) ஜீவனுகிற பலனை அடையவேணும். (அதாவது சேதநர்களை புநராவ்ருத்தியில்லாதபடி தன்னுடைய உத்தமஸ்தானமான பரமபதத்திற்குக் கொண்டுபோய் ஸ்வரூபப்பிராப்தமான ஸுக ஹிதவாக்ஸுகுமாரஷ்டகுணாவிஷ்டாவத்தையும் கைங்கர்யஸாம்ராஜ்யத்தையும் தந்து, அதாவது அவர்களிடமிருந்து ஸர்வசேஷவிருத்தியையும் அங்கீகரித்து, தானும் உகந்து அவர்களுக்கு பரிபூர்ணப்ரம்மானுபவத்தைக் கொடுத்தருளவேணும்). இப்படி ஸம்ஸாரத்தில் பரிதபித்துக்கொண்டு ஸ்வரூபம் அழிந்துகிடக்கும் ஜீவராசிகளுக்கு ஸம்ஸாரநிவர்த்திபூர்வக பரிபூர்ணபகவதனுபவரூபமான பரமக்ஷேமத்தை உண்டுபண்ணுவதின் பொருட்டு ஸர்வேச்வரியாய், ஸர்வஜகத் மாதாவாய், அக்ஞாதநிக்ரஹையாய், (கோபமே அறியாதவளாய்) க்ஷமாகுணவஶீக்ருதஜகத்பதியை உடையவளாய், பரமகிருபாமூர்த்தியான மஹாலக்ஷ்மியானவள் பரம காருணிகனுய், ஸம்ஸாரதந்திர நிர்வாஹகனுய், அவஸர ப்ரதீக்ஷனுய், ஸர்வஜகத்பிதாவான ஸர்வேச்வரனை மாத்ருத்வ ப்ரயுக்த வாத்ஸல்யத்தாலே தூண்டுகிறுள். அவனும் அப்படியே சேதநர்களுக்கு காணகளேபரங்களைக் கொடுப்பது முதலாக ஸதாசார்யஸம்பந்தம் வரையிலுள்ள அனுக்ரஹபரம்பரைகளைப்

பண்ணி ஸதாசார்யாள் மூலமாகவும் பிராட்டியின் புருஷகாரத்தை முன்னிட்டும் அவர்களைக் காப்பாற்றுகிறான். இப்படி பகவானுடைய ஜகத்ரக்ஷண வியாபாரத்துக்கு பிராட்டியினுடைய மறுக்கவொண்ணாத ப்ரேரணையும் புருஷகாரமும் ஸதாசார்ய பரம்பரா ஸம்பந்தமும் முக்ய ஸஹகாரிகள் என்பது இதனால் ஸூசிப்பிக்கப்படுகிறது.

(அ௬௬) அப்⁴யஸ்யதோ: க்ரமமநர்க⁴ம் ரங்க³பதே-
விஹாரே ஸ்தா²நே ஸ்தா²நே ஸ்வரவர்ணதிம்
ஸம்ஹிதபத³தத³நுரூபம் | பர்யாயேண ப்ரஹித
பத³யோ: பாது³கே ஶ்ருத்யர்தா²: ஶிக்ஷாந்தா
ஷ: ஸ்வர க்ரியா யுவயோ ஶ்ருத்வாவஸாநஶ்யே: ||

ஹே பாதுகே - வாரீர் பாதுகைகளே! ரங்கபதே: - ஸ்ரீரங்கநாதனுடைய, விஹாரே - ஸஞ்சாரத்திலே, அநர்கம் - ஒப்பில்லாமலிருக்கிற, க்ரமம் - நடையின் வரிசையை, * க்ரமம் என்கிற வேதபாராயண மாதிரியை அப்யஸ்யதோ: - மறுபடியும் மறுபடியும் செய்து அப்யாஸம் பண்ணிக்கொள்கிறவர்களாகவும், பர்யாயேண - ஒன்றின்மேல் ஒன்றாக வரிசையாக, ப்ரஹித - ஏவப்பட்ட, சொல்லப்பட்ட, பதயோ: - திருவடிகளை உடையவர்களாகவும், பதங்களை(சொற்களை)உடையவர்களாகவும் இருக்கிற, யுவயோ: - உங்களிருவர்களுடைய, ஸ்தாநே ஸ்தாநே - அந்தந்த பிரதேசத்திலே, ஸம்ஹிதாகாலத்திலும் (அதாவது பதங்களைச் சேர்த்துச் சொல்லும் காலத்திலும்) பதகாலத்திலும்(பதங்களைப் பிரித்துச் சொல்லும் காலத்திலும்), தததநுரூபம் - அந்தந்த இடத்துக்குத் தகுந்ததான, அந்தந்த பதகாலம் ஸம்ஹிதாகாலங்களுக்குத் தகுந்ததான,

* க்ரமமாவது— இருவராகவோ இரண்டு கோஷ்டியாகவோ பிரிந்து இருந்துகொண்டு ஒருவர் சொல்லி முடித்ததில் கடைசி பதத்திலிருந்து மறுபடி ஆரம்பித்து மற்றொருவர் மேல் தொடர்ந்து சொல்லுகிறது. அவர் முடித்த கடைசி பதத்திலிருந்து ஆரம்பித்து முதலில் சொன்னவர் மேல்தொடர்ந்து சொல்லுகிறது.

ஸ்வரபரிணதிம் - நாதத்தினுடைய மாறுதலை, பதங்களுடைய உதாத்தம் அநுதாத்தம் முதலிய ஸ்வரங்களின் மாறுதலை, ஸம்ஹித: - அடைவிக்கப்பட்டதாகவும், ஶ்ருதிஸுகாஸ: - காதுக்கு இன்பமானதாகவும், வேதத்தில் (அதாவது வேதபாராயணத்தில்) இன்பமானதாகவும் இருக்கிற, ஶிஞ்ஜாநாத: - சலங்கைகளின் உள்ளுக்குள்ளிருக்கும் ரத்னங்களால் உண்டாகும் சப்தமானது, ஶ்ருங்கலாபந்தம் - சங்கிலித்துவக்குப்போல், ரம்ய: - அழகாக, ஸ்புரதி - விளங்காநிற்கிறது.

(கருத்து) ஓ பாதுகைகளே! ஸ்ரீரங்கநாதன் தன்னுடைய லோகரக்ஷணார்த்தமான லீலாஸஞ்சாரங்களில் உங்களிருவர்களையும் தன் திருவடிகளில் சாற்றிக்கொண்டு எழுந்தருளும்போது அவருடைய ஒப்பில்லாத அடிவைப்புக்குத் தப்பாமல் ஒத்தபடி நீங்களும் ஒருவர்பின் ஒருவராக வரிசை தவறாமல் மேலும் மேலும் உங்கள் அடிவைப்பை நல்ல பழக்கத்துடன் செய்துகொண்டு அந்தத் திருவடிகளையும் ஸரியான க்ரமத்தில் ஏவுகிறீர்கள். அப்படிச் செய்யும்போது உங்கள் சலங்கைகளினால் உண்டாகும் சப்தங்கள் மார்க்கத்திலுள்ள அந்தந்த பிரதேசங்களுக்குத் தக்கபடி (அதாவது மேடு, பள்ளம், கல்லுப்போல் கெட்டியானது, மிருதுவானது, மணலானது முதலிய பூபாகங்களுக்குத் தக்கபடி) கதியின் ஸ்வபாவத்தையும் பூமியின் ஸ்வபாவத்தையும் அனுஸரித்து மாறிக்கொண்டும் காதால் கேட்பதற்கு ரொம்ப இனிமையாக இருந்துகொண்டும் ஒன்றோடு ஒன்றாக இணைக்கப்பட்ட பல வளயங்களால் செய்யப்பட்ட ஒரு சங்கிலித்துவக்குப்போல் விடாமல் ஒரே கோர்வையாக ரொம்ப அழகாக லோகவிலக்ஷணமாய் விளங்குகிறதுகள். அது எப்படி இருக்கிறதென்றால் ஸ்ரீரங்கநாதனுடைய அழகான ஸஞ்சாரங்களில் (வெளிப்புறப்பாடுகளில்) அவரைப் பின்தொடர்ந்து வேதபாராயணம் செய்கிறவர்கள் இரண்டு கோஷ்டியாகப்பிரிந்திருந்துகொண்டு முறையாகவும் ஸம்ஹிதையிலுள்ள பதங்களின் உதாத்தம் முதலியஸ்வரங்களை க்ரமபாராயணத்தில்பதங்களைப்பிரிக்கும்காலத்தில் தக்கபடி வேறு ஸ்வரங்களாக மாற்றிக்கொண்டும் ஒரு சங்கிலித்துவக்குப்போல் க்ரமம் என்கிற ரொம்ப அழகான மாதிரியினால் பாராயணம் செய்வதுபோலிருக்கிறது.

குறிப்பு — "கஜஸிம்ஹகதீ வீராள ஶார்தூல-வ்ருஷபோபமௌ" என்றும், 'உதாரகம் மாதங்கம்' என்றும், ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீராமனுடைய நடை அழகுகளை வர்ணித்திருப்பதுபோல் ஸ்ரீரங்கநாதனுக்கும் பல நடை அழகுகள் உண்டு என்பது அந்த திவ்யதேசத்துக்கே ஒரு உத்தமான விஷயம். ஸ்ரீரங்கநாதனுக்கு ஸ்ரீபாதகைங்கர்யம் பண்ணுகிறவர்கள் கஜகதி, ஸிம்ஹகதி, ஶார்தூலகதி, வ்ருஷபகதி, ஸர்ப்பகதி முதலிய நடைகளை நன்ருய் முந்தி அப்யாஸம் செய்துகொண்டுதான் கைங்கர்யத்தில் சேரவேணும். (நடை, குடை, வடை என்று க்ரமேண விசேஷமாக ஸ்ரீரங்கம் பெருமாள்கோவில் திருமலை இந்த மூன்று திவ்யதேசத்துக்கும் சொல்லுகிறது ஒரு ஸாமான்யவார்த்தையுண்டு) வெளிப்புறப் பாடுகளில் ஸாமான்யமானது கஜகதி, அதாவது ஸ்ரீரங்கநாதனுடைய உய்யாரநடை. அக்காலத்துக்கு ரொம்ப ஒத்தது க்ரமபாராயணம். அக்காலத்தில் ஸேவிக்கும் உடலின் சப்தமும் ஒத்த தாளம்போலிருக்கும். இதுகளைப்போலவே பாதுகைகளின் ஶிஞ்ஜாநாதமும் ஸ்ரீரங்கநாதனுடைய நடைக்கு ஒத்து அழகாக இருக்கிறது என்று ஸ்ரீரங்கநாதனுடைய நடை விசேஷத்தை மனதில் வைத்துக்கொண்டு இப்படி வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ பெருமாளுக்கு உலகரக்ஷணார்த்தமான வெளிஸஞ்சாரத்துக்குப் பாதுகைகள்போல பாதுகைகளின் வேருெரு ரூபமான ஸதாசாரியர்கள் உலகரக்ஷணவியாபாரத்துக்கு அவசியமானவர்கள். பரமபதத்திலும் எங்கும் கோயில்களிலும் எழுந்தருளியிருக்கும் பகவானை பாதுகைகளும் ஆசார்யர்களும்தான் நமக்கு கிட்டிவைக்கிருர்கள். பெருமாளோடு ஸம்பந்தம் பெற்ற அவர்களோடு ஸம்பந்தத்தை அடைந்துதான் நாம் பெருமாள் ஸம்பந்தம் பெற்று க்ருதார்த்தர்களும் க்ருதக்ருத்யர்களுமாக வேணும். பெருமாளுடைய விஹாரமாவது உலகரக்ஷண வியாபாரம். அதுவிஷயத்தில் அவருடைய கதி (நடை) யாவது வேதங்களில் சொல்லிய அவர் விஷயமான கர்மஞானங்கள். அதாவது அவருடைய ஆராதனரூபமான வெளிவேலைகளும் உள்நினைவுகளும். இந்த கதியை அறிந்து அனுஸரித்துத்தான் பெருமானை அடையவேணும்; இதற்கு அப்யாஸம் வேணும்.

இந்த அப்யாஸத்தைச் செய்துவைப்பவர்கள் ஸதாசாரியர்கள். அப்யாஸம் செய்துகொள்கிறவர்கள் சிஷ்யர்கள். அனுஷ்டானத்துக்குத் தக்கபடி ஜ்ஞானமும் ஜ்ஞானத்துக்குத் தக்கபடி அனுஷ்டானமும் உடையவராய் நல்ல ஞானனுஷ்டானங்களில் பூர்ணமாய் தேறின ஸத்சிஷ்யர் பிறகு ஆசார்யராகி மறுபடியும் அந்த பதவிக்கு ஒரு சிஷ்யரை ஏற்படுத்துகிருர். இப்படிச் சங்கிலித்துவக்குப்போல் அவிச்சின்னமாய் பெருமாள் முதற்கொண்டு நம் ஆசார்யர்கள் வரையில் ஸதாசார்யபரம்பரையும் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தமான உபதேசானுஷ்டானங்களும் வருகிறதுகள். இதுவிஷயத்தில் வேதமும் ஸ்ரீ பாஞ்சராத்ரசாஸ்திரமும் பிரமாணங்கள். இப்படி வராதது ஸதாசார்யபரம்பரையுமல்ல, ஸதுபதேசானுஷ்டானங்களுமல்ல. அவைகளால் ஜனங்களுக்கு நன்மையும் உண்டாகா. முதலில் அடிவைப்பைச் செய்யும் வலது பாதுகை ஸதாசாரியரைக் காட்டுகிறது. அதை அனுஸரித்து பிந்தி அடிவைப்பைச் செய்யும் இடது பாதுகை ஸத்சிஷ்யரைக் காட்டுகிறது. எப்பொழுதும் வலது பாதத்தை முதலில் எடுத்து வைக்கவேணும். அதுதான் சுபத்தைக் கொடுக்கும். இடது பாதத்தை முதலில் வைப்பது அசுபஸூசகம். அப்படியே சிஷ்யனும் தானுக ஒரு புதுவழியை ஏற்படுத்திக்கொள்ளாமல் முன்னுடி ஸதாசார்யர்கள் சென்ற நல்வழியே செல்வதுதான் க்ஷேமகரம். பாதுகைகளிலுள்ள சலங்கைகள் ஆசார்யபதத்திற்குத் தக்கபடி பூர்ணுதிகாரியாகாத அநேகம் சிஷ்யர்களைக் காட்டுகிறதாகக் கொள்ளலாம். ஒவ்வொரு பலன்களை உத்தேசித்து இன்னொரு தேவதையை இடையிட்டோ இடையிடாமல் நேரிலோ செய்யும் பகவதாராதனங்களுக்கு தர்மங்கள் என்று பெயர். அவைகளில் மோக்ஷத்தின் பொருட்டுச் செய்யும் உத்தமபலமான தர்மம் சரணுகதி. இந்த சரணுகதியைப் பற்றிய சாஸ்திரத்தையும் சரணுகதர்களுடைய அனுஷ்டானங்களையும் ஸத்ஸம்ப்ரதாயஸித்தமானபடி ஸத்ஸம்ப்ரதாயஸ்தர்களான ஸதாசாரியர்களிடமிருந்து குருகுலவாஸத்தால் ஸரியானபடி சிஷ்யவிருத்தி பண்ணி கார்யகரமாம்படி அறியவேணும். இப்படி அறியுமிடத்தில் பல்வகையான சிஷ்யர்களுடைய புத்தியின் பேதங்களுக்கும் ஸ்வபாவபேதங்களுக்கும் தக்கபடி உபதேசானுஷ்டானங்களில் ஸதா

சார்யர்களுடைய சிக்ஷாப்பிரகாரங்கள் ப்ரதிவ்யக்தி பின்னமாய் அழகாக இருக்கும். இவைகளையும் ஸதாசார்யர்களிடமிருந்து ஸத்சிஷ்யர்கள் அப்யஸித்துக்கொள்ளவேணும். இப்படி ஸதாசார்யபரம்பரையும் ஸத்ஸம்ப்ரதாயஸித்தஜ்ஞானானுஷ்டானங்களும், ஸதாசார்யர்களுடைய சிஷ்யசிக்ஷாக்ரமங்களும் ஒப்பில்லாதவைகளாகவும், அவிச்சின்னங்களாகவும் லோகவிலக்ஷணங்களாகவும் பெருமாள் முதற்கொண்டு நாளதுவரையில் ஒரு சங்கிலித்துவக்குப்போல அழகாக விளங்குகிறதுகள். இப்படி இந்த சுலோகத்தால் ஸத்ஸம்ப்ரதாயஸித்தி ஸூசனையாகப் பிரதிபாதிக்கப்படுகிறது.

(6)

(அகூள) ஸுஸந்நாநாம் திவஸமபுநர்நக்தமாபாதயந்தீ
பூர்ணாலோகா மணிபிரபித: ப்ராணிநாமஸ்த
தோஷா। ப்ரஹ்வைர்ஜுஷ்டா விபுதநிவஹை:
பாதுகே ரங்கபர்த்து: பாதாம்போஜே திசதி
பவதி ப்ரத்யுஷஸ்ஸந்த்யேவ காசித் ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! ஸுஸந்நாநாம் - நன்றாய் ஆச்ரயித்தவர்களான, நன்றாய்க் கிட்டினவர்களான, ப்ராணிநாம் - ஜீவர்களுக்கு, அபுநர்நக்தம் - மறுபடி அஜ்ஞானமாகிற ராத்திரி வராததான, மறுபடி ராத்திரி வராததான, திவஸம் - பகல்போன்ற ஜ்ஞானப்ரகாசத்தை, பகலை, ஆபாதயந்தீ - ஸம்பாதித்துக் கொடுக்கிறவளும், உண்டுபண்ணுகிறதும், மணிபி: - ரத்நகிரணங்களாலே, கிரணங்களாலே, அபித: - நாலாபுறமும், பூர்ண - பூர்ணமான, ஆலோகா - பிரகாசத்தை உடையவளாயும், உடையதாயும், அஸ்ததோஷா - தோஷத்துக்கு விரோதியாயும், போக்கடிக்கப்பட்ட ராத்திரியை உடையதாயும், ப்ரஹ்வை: - வணங்கியிருக்கிற, விபுத - வித்வான்களுடைய தேவதைகளுடைய, நிவஹை: - கூட்டங்களாலே, ஜுஷ்டா - அடையப்பட்ட(தாயும்)வளாயும் இருக்கிற, (பவதீ - நீ) ப்ரத்யுஷஸந்த்யேவ - ஒரு லோகவிலக்ஷணமான உதயகாலஸந்த்யயைப்போல, ரங்கபர்த்து: - ஸ்ரீரங்க

நாதனுடைய, பாதாம்போஜே - திருவடியாகிற தாமரைப்பூவி லே, காந்திம் - சோபையை, திஶதி - கொடுக்கிறாய்.

(இவிடத்தில் ஸாமான்யமாய் பூர்வஸந்த்யேவ என்று பதமிருந்தாலும் கீழ்ச்சொன்ன குணவிசேஷங்களால் லோக விலக்ஷணமான ஸந்த்யை என்று அபூர்வோபமையாக அர்த்தம் கொள்ளவேணும்.)

(கருத்து) ஓ பாதுகையே! உன்னிடத்தில் அநந்யப்ர யோஜநர்களாக மோக்ஷார்த்தமாக சரணாகதி பண்ணுகிற ஸமஸ்த ஜீவராசிகளுக்கும் மறுபடியும் இரவு வராமல்படிக்கு ஒரே பகலை உண்டுபண்ணுகிறாய். அதாவது பகல் இரவுபோல் ஜனன மர ணங்களையும், புண்யபாபங்களையும் ஜ்ஞானாஜ்ஞானங்களையும் ஸுக துக்கங்களையும் உடைய ஸம்ஸாரசக்ரத்தில் அகப்பட்டு வருந்தி இந்த கஷ்டம் அடியோடு நீங்குவதற்காக உன்னை அடைந்து சரணாகதி பண்ணுகிற ஜனங்களுக்கு தயையினால் ஸர்வகஷ்டங் களுக்கும் மூலமான தேஹஸம்பந்தத்தை அடியோடு போக்கி ராத்திரி போன்ற அஜ்ஞானாதிகளை மறுபடி உண்டாகாதபடி பண்ணி ஒரேபகல் போன்ற ஒருபடியாலும் ஒருக்காலும் குறை வில்லாத ஜ்ஞானத்தையும் ஆநந்தாதிகளையும் கொடுக்கிறாய். உன் னுடைய ரத்னகாந்திகளால் உதயகாலஸந்த்யையில்போல எங்கும் பூர்ணமானபிரகாசத்தை உண்டுபண்ணுகிறாய். நீ தோஷங்களுக்கு விரோதியாக (அதாவது எதிர்தட்டாக) இருந்துகொண்டு ஜனங் களுக்கு ராத்திரிபோன்ற தோஷங்களை (அதாவது பாப அஜ் ஞானங்களை) போக்கிவிடுகிறாய். உன்னை வித்வான்களும் தேவ தைகளும் அடைந்து வணங்குகிறார்கள். உன்னுடைய சேர்க் கையினால் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடியாகிற தாமரைப்பூவுக்கு விகாஸத்தையும் சோபையையும் உண்டுபண்ணுகிறாய். இப் படிப்பட்ட குணங்களையுடைய உனக்கு எதை உபமானமாகச் சொல்லலாமென்றால் ஸாமான்யஸந்த்யை போலன்றிக்கே தன் னைக் கிட்டின ஜனங்களுக்கு இரவை அடியோடு போக்கி மறு படி இரவு வராதபடி ஒரே பகலைக் கொடுக்கக்கூடியதாகவும் அக்காலத்திலேயே ஸர்வதிக்குகளிலும் பூர்ணமான வெளிச் சத்தைக் கொடுக்கக்கூடியதாகவும், போக்கடிக்கப்பட்ட ராத்தி ரியை உடையதாகவும் வித்வான்கள் தேவதைகள் முதலானவர்

களாலே வணங்கி உபாஸிக்கப்பட்டதாகவும் இரவில் மூடியிருந்த தாமரஸபுஷ்பத்துக்கு விகாஸத்தையும் சோபையையும் கொடுக்கக்கூடியதாகவும் இப்படி உதயஸந்த்யைக்குள்ள ஸாமான்ய குணங்களோடு கூடி விசேஷ குணங்களுள்ளதுமான ஒரு லோக விலக்ஷணமான ஸந்த்யை இருந்தால் அதை உபமானமாகச் சொல்லலாம்.

ஸம்ஸாரமாகிற ராத்திரியில் அகப்பட்டு தத்வஹிதபுருஷார்த்தங்களில் தெளிவை அடையாமல் அஜ்ஞான அந்யதா ஜ்ஞான விபரீதஜ்ஞானங்களாலே ஸ்வல்ப வெளிச்சமும் அதிக இருட்டும் உடையவர்களாய் ஸ்வரூபானுரூப புருஷார்த்தமில்லாதவற்றில் புருஷார்த்தபுத்தி பண்ணியும், அல்பத்தில் மஹத்வ புத்தி பண்ணியும், அதற்குத் தகுந்தபடி வியாபாரங்களைச் செய்தும், ஸுகதுக்காதிகளையனுபவித்தும், மறுபடியும் மறுபடியும் ஜனனமரணங்களை அடைந்து, இந்த அந்தகாரசக்ரத்தில் மயங்கி உழன்றுகொண்டு வெளிக்கிளம்பும் மார்க்கம் அறியாமல் அநாதிகாலமாக வருந்தும் ஜீவராசிகளுக்கு பரமஸுஹ்ருத்தாய் அவஸரப்ரதீக்ஷனான ஸர்வேச்வரனுடைய பரமக்ருபையடியாக ஓர் ஸுக்ருதவிசேஷ வ்யாஜமூலத்தாலே அவனாலே ஜாயமான தசையில் (பிறக்கும் காலத்தில்) கடாக்ஷிக்கப்பட்டு அதடியாக முமுக்ஷுத்வம், அதாவது இந்த ஸம்ஸாரபந்தத்திலிருந்து தப்பவேணுமென்கிற ஆவல் பிறந்து, "ஈஶ்வரஸ்ய ச ஸௌஹார்தம் யத்ருச்சாஸுக்ருதம் ததா | விஷ்ணோ: கடாக்ஷமத்வேஷமாபிமுக்யஞ்ச ஸாத்விகை: || ஸம்பாஷணம் ஷடேதானி ஹ்யாசார்யப்ராப்திஹேதவ: |" என்கிறபடி க்ரமேண நேரும் ஆசார்யப்ராப்தியானது ஒரு விலக்ஷணமான பூர்வஸந்த்யை. இப்படி ஜீவராசிகளுக்கு ஸம்ஸாரமாகிற ஓரே ராத்திரிக்கும் மோக்ஷமாகிற ஓரே பகலுக்கும் மத்தியில் பூர்வஸந்த்யாஸ்தானத்தில் நிற்பவர்களும் ஹேயப்ரத்யநீகர்களுமான ஆழ்வார் முதலிய ஸதாசாரியர்கள் தங்களையாச்ரயித்த முமுக்ஷுக்களுக்கு தங்களுடைய திவ்யஸூக்திகளாலே முமுக்ஷுதசையில் இந்த ஸம்ஸாரத்திலேயே அறியவேண்டிய தத்வஹித புருஷார்த்தம் முதலிய ஸமஸ்த விஷயங்களிலும் பரிபூர்ணப்ரகாசத்தை உண்டுபண்ணி அவர்களுடைய அனுக்ர

ஹஸ்வபாவத்தாலே ஸர்வ பாபங்களையும் அஜ்ஞானங்களையும் போக்கக்கூடிய ஒரு உபாய விசேஷத்தைப் பண்ணி (அதாவது இவர்களுக்காக பகவானிடத்தில் சரணாகதி பண்ணி) இவர்களை பகவானிடத்தில் ஸமர்ப்பித்து, இந்த தேஹாவஸானத்தில் ஸம்ஸாரபந்தத்தைப் போக்கி, இந்த ப்ரகிருதிமண்டலத்துக்கு புநராவ்ருத்தியில்லாமல் பண்ணி, அப்ராகிருதமாய், சுத்தஸத்வமயமாய், ஸ்வயம்ப்ரகாசமாய் ஜ்ஞானாநந்தமயமான பரமபதத்தை அடைவித்து, "பின்பு காலதத்வமுள்ளதனையும் ஒரு பகலாயுணர்த்தியே யாம" என்கிறபடி ஸ்வஸ்வரூபாவிர்பாவத்தோடு ஒருக்காலும் ஒருபடியாலும் குறைவில்லாத ஸவிசேஷ பரிபூர்ண பரப்ரும்ம ஜ்ஞானாநந்தானுபவங்களைக் கொடுக்கிறார்கள். இப்படி ஜீவராசிகளுக்கு ஒரு விலக்ஷணஸந்த்யை போன்ற ஸதாசாரியர்களை இந்த லோகத்திலுள்ள வித்வான்கள் முதற்கொண்டு தேவர்களும் ஸூரிகளும் கொண்டாடி உபசரிக்கிறார்கள். ஸம்ஸாரமாகிற ராத்திரியில் (அதாவது அஜ்ஞானத்தினாலே) முகுளிதமாய் சோபை இல்லாமல் போன (அதாவது அறியப்படாமல் பிரபாவம் இழந்திருந்த) பெருமான் திருவடிகளாகிற தாமரைப்பூவை இவ்வாசார்யர்கள் பூர்வஸந்த்யையைப்போல உலகத்துக்கு பிரகாசிப்பித்து விகஸிக்கும்படி செய்து (அதாவது அறியும்படி செய்து) அதற்குசோபையைக் கொடுக்கிறார்கள். (பிரபாவத்தை வெளிப்படுத்துகிறார்கள்). அதாவது ஸதாசார்யர்கள் தெய்வத்தையும் தெய்வத்தின் குணங்கள் முதலிய பிரபாவங்களையும் உலகத்துக்கு வெளியிட்டு உலகத்தார் கொண்டாடி ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கும்படி செய்கிறார்கள். இவ்விஷயம் ஆழ்வார் முதலியவர்களுடைய திவ்ய ஸூக்திகளால் தத்வவிஷயங்களோடு அர்ச்சாவதாரத்தின் உண்மைகளும் பெருமைகளும் உலகத்துக்கு வெளிப்படுத்தப்பட்டு அவர்கள் உகந்தருளின திவ்யதேசங்களின் ஏற்றத்தினால் நன்றாய் ஏற்படும். இவர்கள் ஸம்ஸாரிகளையும் கரையேற்றி பகவானுக்கும் பெருமையை உண்டுபண்ணுகிறார்கள்.

இப்படி இந்த சுலோகத்தால் ஆழ்வார் முதலிய ஸதாசாரியர்கள் உலகத்துக்குச் செய்யும் நன்மை காட்டப்படுகிறது.

குறிப்பு— இப்படி ஒரு லோகவிலக்ஷணமான பூர்வஸந்தியையை வேதாந்திகளான ஸதாசார்யர்களுக்கு உபமானமாகக்

காட்டுவதால் மேல் அபரஸந்த்யையும் ராத்திரியுமுள்ள ஸாமான்ய ஸந்த்யை நிவிருத்தி சாஸ்திரத்தை விட்டு ப்ரவிருத்தி சாஸ்திரத்தைக் கைப்பற்றி வேதத்தின் கர்மகாண்டத்தை ப்ரவசனம் செய்து நடத்தும் மற்ற வைதிகர்களுக்கு உபமானம் என்பதும் த்வனிக்கிறது. இவர்களுக்கு இரவும் பகலும்போல் ஜ்ஞானாஜ்ஞானங்களும் ஐஹிகாமுஷ்மிக ஸுகதுக்கங்களும் ஜனன மரணங்களுமுள்ள ஸம்ஸாரம் நிவர்த்தியாது சுழன்றுகொண்டே இருக்கும். வேதபாஹ்யர்களும் நாஸ்திகர்களுமானவர்கள் ராத்திரியிலேயே இருந்து பகவானுடைய 'க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு' என்கிற ஸங்கல்பத்துக்கு இலக்காய் நஷ்டமாகும் நித்யஸம்ஸாரிகள். இம்மூவர்களும் ஸ்ரீகீதையில் ஊர்த்⁴வம் க³ச்ச²ந்தி ஸத்த்வஸ்தா²:, மத்⁴யே திஷ்ட²ந்தி ராஜஸா:, அதோ⁴ க³ச்ச²ந்தி தாமஸா: என்று சொல்லப்பட்டவர்கள். (67)

(௬௮) ரம்யாலோகா லலிதக³மநா பத்³மராகா³த⁴ரோஷ்டீ²
மத்⁴யக்ஷாமா மணிவலயிநீ மௌக்திகவ்யக்தஹாஸா ।
ஶய்யா நித்யம் ஸரிதமணிபி⁴: ஶார்ங்கி³ண:
பாது³கே த்வம் யாதா ஸாஹாய்யம் ஸரிதௌ
ஶ்ருதௌ ஸாத்⁴யகா ஸதீ ॥

ஹே ஶார்ங்கி³ண: பாது³கே - வில்லாய் சார்ங்கமென்கிற வில்லையுடைய பெருமாளுடைய பாதுகையே! ரம்ய-அழகான, ஆலோகா-பிரகாசத்தை உடையவளாயும், பார்வையை உடையவளாயும், லலித - மெதுவாய் அழகான, க³மநா - நடையை உடைத்தானவளாயும், பத்³மராக³ - பத்மராகமென்கிற சிவப்பு ரத்னங்களாகிற, பத்மராகம் போன்ற, அத⁴ரோஷ்டீ² - கீழ்மேல் உதடுகளை உடையவளாயும், மத்⁴யக்ஷாமா - மத்யபாகத்தில் (அதாவது நடுவில்)சிறுத்தவளாயும்,சிறுத்த இடையை உடைத்தானவளாயும், மணிவலயிநீ - ரத்நக்கூட்டங்களை உடையவளாயும், ரத்நகங்கணங்களை (வளையல்களை) உடைத்தானவளாயும், மௌக்திக - முத்துக்களாலே, முத்துப்போல, வ்யக்த - தெளிவான, ஹாஸா - விகாஸத்தை அதாவது மலர்ச்சியை, புன்சிறிப்பை உடையவளாயும், நித்யம் - எப்பொழுதும், ஸரித

மணிபி: - பச்சைக்கற்களாலே, பச்சைக்கல் போன்ற பசுமை யான சோபையாலே, ஶ்யாமா - பச்சைநிறமுள்ளவளாயும், யௌவனபர்வமுள்ளவளாயும் இருக்கிற, த்வம் - நீ, தாது: - ப்ரம்மாவுக்கு, ஸுத்ருஶாம் நிர்மிதௌ - உத்தமஸ்திரீஸ்ருஷ்டி பண்ணுகிற விஷயத்தில், த்ருஶ்யா - பார்த்துக்கொண்டு அதேமாதிரி பண்ணுவதற்காக ஏற்படுத்தப்பட்ட உருவமாக, பவஸி - ஆகிறாய், இதி - என்று, மந்யே - நினைக்கிறேன்.

(கருத்து) ஓ சார்ங்கதரனை பெருமாளுடைய பாதுகையே! பார்ப்பதற்கு அழகியதான உன்னுடைய சோபையானது யுவதி சிரேஷ்டைகளுடைய அழகிய கண்பார்வையின் சோபை போல் இருப்பதாலும், உன் நடையானது அவர்களுடைய அழகியதான (லலிதமான) மெதுவான ஸஞ்சாரம்போலிருப் பதாலும், உன்னுடைய பத்மராகக்கல்லுக்கள் அவர்களுடைய சிவந்த கீழ் மேல் உதடுகள் போலிருந்து சோபிக்கிறபடி யாலும், உன்னுடைய சிறுத்த மத்யபாகம் அவர்களுடைய குறுகிய இடைபோல் அழகாக இருப்பதாலும், உன்னிடத் தில் வரிசை வரிசையாக இழைக்கப்பட்ட ரத்நக்கூட்டங்கள் வளையல்கள் போலிருப்பதாலும், உன்னுடைய தெளிவான முத்துக்களின் காந்தி அவர்களுடைய அழகியதான புன்சிரிப் பின் சோபையை அடைந்திருப்பதாலும், உன்னுடைய பச்சைக் கற்களின் (மரகதங்களின்) காந்தியினால் நீ எப்பொழுதும் பசுமை நிறத்தை அடைந்திருப்பதைப் பார்த்தால் பசுமை நிறம் நீரோட்டம் ஸௌகுமார்யம் முதலிய குணங்களால் சோபிக்கும் ஒரு நித்யயுவதிபோலிருப்பதாலும் உன்னைப் பார்த் தால் ப்ரம்மாவுக்கு உயர்ந்த ஸ்திரீகளை ஸ்ருஷ்டிப்பதற்காக நித்யமாக ஏற்படுத்தப்பட்ட ஒரு அடையாளமான பெண் பிரதிமையென்று நினைக்கிறேன்.

குறிப்பு — சுலோகத்தில் 'நித்யம்' என்கிற பதத்தை மற்ற எல்லா பதங்களோடும் சேர்த்து அந்வயித்து அர்த்த ஸ்வாரஸ்யங்கள் கண்டுகொள்ளலாம். அப்படி பூர்வார்த்தத்தில் பதங்களோடு சேர்க்கும்போது மாறாத யௌவனமுடைய திவ்ய ஸ்திரீயின் லக்ஷணங்களைக் காட்டும். உத்தரார்த்தத்தில் பதங்க ளோடு அந்வயிப்பதால் ஏற்படும் விசேஷார்த்தங்களை உட்கருத் தில் கண்டுகொள்க.

சாஸ்திரங்கள் நாராயணன் ஒருவன்தான் புருஷன் என்றும், 'ஸ்த்ரீப்ராயமிதரத்ஸர்வம்' என்கிறபடி மற்ற சேதநர்கள் எல்லாரும் ஸ்திரீப்ராயம் என்றும் சொல்லுகின்றன. அப்படி பெருமாளையபேக்ஷித்து ஸர்வஜீவராசிகளுக்கும் ஸ்திரீத்வமும் பத்நீத்வமும் பொதுவானாலும் ஸ்ரீ நம்மாழ்வார் போன்ற ஸதாசார்யர்களிடத்தில்தான் உத்தமஸ்திரீலக்ஷணங்களும் உத்தம பதிவ்ரதா லக்ஷணங்களும் காணப்படுகின்றன. இப்படிப்பட்ட லக்ஷணங்கள் எல்லா ஜீவர்களுக்கும் ஸ்வபாவஸித்தங்களாய் நித்யங்களானாலும் ஸம்ஸாரதசையில் கர்மானுகுணமாக ஸங்குசிதங்களாயிருக்கின்றன. இவைகள் நித்யங்களானதைப் பற்றி சுலோகத்தில் நித்யசப்தத்தாலும் நித்ய யுவதிலக்ஷணங்களாகவும் காட்டப்பட்டிருக்கின்றன. அவைகளாவன—

(1) நித்யம் ஸம்ஜ்ஞாநஸோபா-எப்பொழுதும் ஆத்மாவினுள்ள தெளிவினாலும் ஆநந்தத்தாலும் உண்டான வெளிப்படையான சோபையை (தேஜஸ்ஸை) எப்பொழுதும் உடைத்தாயிருக்கை.

(2) நித்யம் உசிதகமநா— ஜனங்களுக்கு நடையில் பல கோணல்களும் விகாரங்களும் விபரீதங்களும் இருப்பதுபோல் அனுஷ்டானம் முதலியவைகளிலும் இவைகள் உண்டு. அப்படிப்பட்ட தோஷங்கள் இல்லாமல் சாஸ்திரீயமாய் ஸத்ஸம்ப்ரதாயாகதமான ஆசாரானுஷ்டானங்களை விதிப்படிக்கும் பெரியவர்களின் உபதேசக்ரமப்படிக்கும் அநவதாநம், அசிரத்தை, அதிசிரத்தை (தனக்கும் பிறருக்கும் உபத்ரவகரமாய் சிரத்தா ஜாட்யம் என்று பெயர் பெற்றது) முதலியவைகளில்லாமல் சிரத்தாபக்திவிசுவாஸங்களுடனும் அவதானத்துடனும் (கவனிப்புடனும்) டம்பாஹங்கார பலாபேக்ஷாதிகளில்லாமல் உண்மையாய் பகவத்ப்ரீதியை மட்டும் உத்தேசித்து ஸாதுக்கள் கொண்டாடும்படி எப்பொழுதும் ஒரே மாதிரியாய் அனுஷ்டிப்பது.

(3) நித்யம் ஸக்தராகாதரோஷ்டீ—சிவந்த அதரமுள்ள ஸ்திரீகள் ப்ரியதமர்களுக்குபோக்யம்ஆமாப்போலே வாங்மாதுர்யத்தாலும் குணமாதுர்யத்தாலும் ஸாதுக்களான ரஸிகர்கள் இவர்கள் வாக்கை பானம் பண்ணும்படி போக்யமாக இருக்கை.

(4) நித்யம் மத்யக்ஷாமா—இவ்வளவு யோக்யதைகளுக்கும் குணங்களுக்கும்நடுவே எப்பொழுதும் வணக்கத்தால் கிருசமாக அதாவது பவ்யமாக இருக்கை.

(5) நித்யம் பணிபவயிநீ — ஸ்திரீகளுக்கு ஆபரணங்கள் போல அத்யாத்ம சாஸ்திரங்களையும் அதுவிஷயமான பூர்வர்களுடைய ஸ்ரீஸூக்திகளையும் ஸ்வஸூக்திகளையும் எப்பொழுதும் ஆபரணமாக உடைத்தாயிருக்கை.

(6) நித்யம் ப்ரஸந்நவக்த்ரா — புன்னகையுள்ள ஸ்திரீகள் ஆபிமுக்யமுள்ளவர்களாக இருப்பதுபோல், எப்பொழுதும் ஸௌஹார்த்தத்தாலும் ப்ரஸன்னவதனத்தாலும் எப்பொழுதும் ஆபிமுக்யம் தோற்றும்படி இருக்கை.

(7) நித்யம் ஸுந்தரா ஸஹிதவேணிஷி: — பகவத்குண விக்ரஹாதி ப்ரதிபாதகங்களான ஸ்ரீஸூக்திகளின் அனுபவத்தாலே காமக்ரோதாதிகள் அடங்கி, அந்தக்கரணம் தெளிவடைந்து, அதனால் எப்பொழுதும் சரீரத்திலும் நித்யயௌவனமடைந்தாப்போல் ரோகமில்லாமை, இளமை, மேனி, ஸௌகுமார்யம் முதலானவைகளை உடைத்தாயிருக்கை.

(8) நித்யம் ரங்கிண: பாதுகே — ஆயுதங்கள் ஏந்தினவர்களுக்குள் சிரேஷ்டரான பகவானுக்கும் கூட குமதிகளால் அபஹாரம் வாராமல்படிக்கு நித்யரக்ஷகர்களாக இருக்கை. அதாவது அவர்களை ப்ரமாணயுக்திகளால் ஜெயித்து தெய்வம் உண்டு என்பதை ஸ்தாபிக்க சக்தமாயிருக்கை.

இவைகள் ஸதாசார்யலக்ஷணங்களும் அவர்களால் சிக்ஷையடைந்து தேறின ஸத்சிஷ்யர்கள் லக்ஷணங்களும். (68)

(௬௯) த்ருஷ்டா புரா கவிநா பவதீ ஸஹஸ்ரம்ஸம்
ஸத்யே ரத்நோத்கதகிரணநிகரா ரங்கிண: பாது
கே | வ்யாகீர்ணாநாம் நவதிவிரஹா
தீப்தவர்ணாத்மநாம் நவநம் வீதாவிஹஜத
ஸஹஸ்ரம் ந்யஷேதி ஸத்யவாத ॥

ரங்கிண: - ஸ்ரீரங்கநாதனுடைய, தீப்த-விளங்காநிற்கிற, பாதுகே - வாராய் பாதுகையே! ரத்ந-பல ரத்நங்களாலே, உத்கத - மேலே கிளம்பி பிரஸரிக்கிற, கிரண - கிரணங்களுடைய, நிகரா - கூட்டங்களை உடையவளாக இருக்கிற, (த்வம் - நீ) புரா கவேர் ஸமயே - முன்னொரு காலத்தில் அதாவது

நீ கோஸலராஜ்யத்தை ஆள ஒப்புக்கொண்ட காலத்தில், ஸத்ர வீடஸ்ய - ஸிம்மாஸனத்தினுடைய, சுத்தமான தர்ப்பாஸனத் தினுடைய, ஸ்திரமாய் உயர்ந்த ப்ரதேசத்திலுள்ள ஆஸனத்தி னுடைய, மத்யே - நடுப்ரதேசத்தில், ஏகாந்தமான தேசத்தில், அழகான தேசத்தில், அதிஷ்டா - உட்கார்ந்துகொண்டு, ந்ருபதி விரஹாத்-ராஜா இல்லாமல் போனதிலுலே, அதாவது தசரத சக்ரவர்த்தியும் ஸ்வர்க்கத்தையடைந்து ஸ்ரீராமனும் காட்டுக்கு எழுந்தருளி, பரதனும் தனக்குக் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளாததினுல் ராஜ்யத்தைக் காப்பாற்ற ராஜா இல்லா மல் போனதாலே, வ்யாகீர்ணாநாம்-ஸங்கீர்ணங்களாய் போன, அதாவது அததின் எல்லைகளை மீறி வ்யவஸ்தையில்லாமல் ஒன் ருேடொன்று கலந்துபோன, வர்ண - பிராமணுதி வர்ணங்க ளென்ன, வெளுப்பு முதலான வர்ணங்களென்ன, ஆச்ரம - பிர்ம்மசர்யம் முதலான ஆசிரமங்களென்ன, பிராமணர்கள் முத லியவர்களின் வீடுமுதலானதுகளென்ன இவைகளுடைய,ஸீமா- எல்லைகளை, விபஜந - பிரிப்பதற்கு, ஸஹம் - யோக்யமான, ஸம்வித்வாதம் - ஆஜ்ஞாரூபமான வ்யவஸ்தையை, அர்த்தங் களைச் சுருங்கக்காட்டுகிற சாஸ்திரவாக்யங்களை, நூல்கோடு போடுவதை, நிர்மமே - உண்டுபண்ணிுய், நூநம்-நிச்சயம்.

(கருத்து) ஓ பாதுகையே ! முன்னொரு காலத்தில் தசரத சக்ரவர்த்தியும் ஸ்வர்க்கத்தையடைந்து, அவருக்கடுத்தபடி ராஜ் யத்துக்கு ப்ராப்தமான ஸ்ரீராமனும் ராஜ்யத்தை விட்டு காட் டுக்குச் சென்று, மாதாபிதாக்களால் கொடுக்கப்பட்ட ராஜ் யத்தை தர்மஜ்ஞுன பரதனும் ஒப்புக்கொள்ளாமல் போன போது, கோஸலை ராஜ்யம் அராஜகமானவளவில் தர்மாதிக்ர மணங்களையும் ந்யாயாதிக்ரமணங்களையும் கண்டித்து, தர்மநியா யங்களை நிலைநிறுத்தும் தண்டதரனுன பாலகன் (ரக்ஷகன்) இல் லாததால், காமக்ரோதங்களடியாக ஜனங்கள் தம்தாமிஷ்டப் படிக்கும் பலப்படிக்கும் லோகவேதமரியாதைகளை மீறி, ஆக்ர மணங்களையும் ஸங்கரங்களையும் உண்டுபண்ணிவிட்டார்கள். இந்த துர்தசையில் நீ ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு ஸிம்மாஸனத்தின் மத்தியில் ஏறி உட்கார்ந்தாய். அப்போது உன்னுடைய ரத்நங்

களின் கிரணங்கள் மேல் கிளம்பி கூட்டங்கூட்டமாக நாலாதிக்குக்களிலும் பரவினதைப் பார்த்தால், மேல்சொல்லியபடி ஹத்து அழிந்த சாஸ்திரமரியாதைகளையும் லோகமரியாதைகளையும் உன் கிரணங்களாகிற ஆஜ்ஞைகளால் பிரித்து மறுபடி கலக்கமுடியாதபடிக்கும் அழிக்கமுடியாதபடிக்கும் வ்யவஸ்தைகளை ஏற்படுத்துவதுபோலிருந்தது. சுலோகத்தில் ஸஹஸ்ரம், வர்ண, ஆக்ருதி, ஸூத்ர என்கிற பதங்கள் ப்ரகரணாநுகுணமான முக்யார்த்தம் தவிர ருஷிகள் சில்பிகள் விஷயமான அர்த்தங்களையும் மேல் ப்ரதிபதஅர்த்தத்தில் காட்டியபடி கொடுப்பதால் பாதுகை தன் கிரணங்களால் (ஆஜ்ஞைகளால்) வ்யவஸ்தையை ஏற்படுத்தியது ருஷிகள் ஸூத்திரங்களால் சாஸ்திரவ்யவஸ்தை ஏற்படுத்துவதுபோலும் சில்பிகள் சித்ரமானபடங்களில் பல வர்ணங்களுள்ள நூல்கோடுகளால் பூபாகங்களின் வ்யவஸ்தையை அதாவது எல்லைகளை ஸ்தாபிப்பதுபோலும் இருந்தது என்பதும் ஏற்படுகிறது.

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத । அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥ என்கிறபடி பிரபல ஸந்தர்ப்பங்களில் ராமகிருஷ்ணாத்யவதாரங்களாலே பகவானே நேரிலவதரித்து தர்மஸ்தாபனங்களைச் செய்து தன்னடிச்சோதிக்கு எழுந்தருளின பிறகு காலக்ரமத்தில் சாஸ்திரம் குலையும்போது, "கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா: । க்வசித் க்வசிந்மஹாபாகா: த்ரமிடேஷு ச பூரிஶ: ॥" என்கிறபடி பகவதம்ஶபூதர்களும் பகவத்விஷயத்தில் உத்தம பதிவ்ரதையின் விருத்திபோன்ற பாரமைகாந்த்யம் உள்ளவர்களுமான ஆழ்வார் முதலிய மஹான்கள் பகவத்ப்ரதிநிதிகளாக உலகத்தில் அவதரித்து பெரியோர்களால் லோகாசார்யபதத்தில் ஸ்தாபிக்கப்பட்டு அந்த ஆசாரியபதவியை ஒப்புக்கொண்டு உலகம் முழுவதும் பரவுகிற தங்களுடைய நாநாவிதமான திவ்ய ஸூக்திகணங்களாலே "ஸகாலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப" என்கிறபடி காலத்தினால் நஷ்டமானதும் வேதவிரோதிகளாலும் வேதத்தையும் ஸத்ஸம்ப்ரதாயத்தையும் ஒப்புக்கொண்டு குயுக்தியினால் வேத ஸம்ப்ரதாயங்களின் தத்வார்த்

தங்களை அபஹரிக்கும் குமதிகளாலும் கெடுக்கப்பட்ட சரீர தர்மங்களையும் ஆத்ம தர்மங்களையும் நிலை நிறுத்தி, விரோதிகளை நிரஸித்து பகவானுடைய சொத்தான ஸாத்விக ஜனங்களையெல்லாம் காப்பாற்றுகிறார்கள் என்று இந்த சுலோகத்தால் ஸத் ஸம்பிரதாயஸித்த சாஸ்திரீய நியமனமும் சாஸ்திரஸ்தாபனமும் ஸதாசாரியர்களால் ஏற்படுகிறது என்பது ஸூசிப்பிக்கப்படுகிறது. (69)

(௯௦) மாத: ம்ருதுஸ்வநவிபாவிதப்ரார்த்தநா வாக்யபூர்வம் நிக்ஷிப்தாயாம் த்வயி சரணயோ: பாதுகே ரங்கபர்த்து: | ஸ்வாயத்தம் கிமபி கர்மஹீநம் ஜாநதீநாம் ப்ரஜாநாம் பராயத்தம் தஸ்ய பூர்ணம் ஸமஸ்தாத்மநிக்ஷேபகார்யம் ||

ஹே மாத: பாதுகே - தாயாய் லோகமாதாவான பாதுகையே! ரங்கபர்த்து: - ஸ்ரீரங்கநாதனுடைய, சரணயோ: - திருவடிகளில், ம்ருது - மிருதுவாய் அழகான, ஸ்வந - சப்தத்தோடு, விபாவித - பிரயோகிக்கப்பட்ட, ப்ரார்த்தநா வாக்ய - பிரார்த்தனையைத் தெரிவிக்கிற வாக்யத்தை, அதாவது ஸ்வாமிந் பரம அகிஞ்சனனை அடியேன் விஷயத்தில் பரம தயாநிதியான தேவரீர் கிருபைபண்ணி அடியேன் தலையில் ஒரு பொறுப்பையும் சுமத்தாமல் ரக்ஷிப்பதற்காகச் செய்யவேண்டிய உபாய (பக்தி) ஸ்தானத்தில் தேவரீரே இருந்து அடியேனையும் அடியேனுடைய ஸமஸ்த அநுபந்திகளையும் ரக்ஷிக்கும் பொறுப்பை தேவரீரே ஏற்றுக்கொள்ளவேணும்; அல்லது ஸ்வாமிந் ஸஞ்சாரத்தின்பொருட்டு இந்த திவ்ய பாதுகைகளை தேவரீர் திருவடிகளில் சாற்றியருளவேணும் என்கிற வாக்யத்தை, பூர்வம் - முன்னிட்டுக்கொண்டு, த்வயி - நீ, நிக்ஷிப்தாயாம் - ஸமர்ப்பிக்கப்பட்டபோது அதாவது உன்னாலேயோ பிறராலேயோ உன்னுடைய ஆத்மாத்மீய ஸ்வரூப, பர, ஃபலங்கள் ஸமர்ப்பிக்கப்பட்டபோது, அல்லது அர்ச்சகர்களாலே நீ ஸமர்ப்பிக்கப்பட்டபோது, தஸ்ய - அந்த, ஆத்மநிக்ஷேபகார்யம் - ஆத்மாத்மீயங்களுடைய ஸ்வரூப, ரக்ஷணபர, ரக்ஷண

பலங்களை பெருமாளுக்கே, தனக்கு இல்லையென்று பெருமாளிடத்தில் ஸமர்ப்பிக்கிற வேலையானது, கிலைவ கூ‍ஷமம் - எல்லா நன்மைகளும் அதாவது இந்த ஸம்ஸாரபந்தம் விட்டு பெருமாளையடைவது, அல்லது ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிஸேவையும் அதினால் கிடைக்கும் அபீஷ்டங்களும், க்ஷயிகூயதூ - உன் அதீநமென்று, ஜாநதீநாம - அறிந்துகொள்கிற அதாவது அப்படி அறிந்து உன்னையே ஆச்ரயிக்கிற, ஷுஜாநாம - எல்லா ஜநங்களுக்கும், வயயூாவூ - போதுமானதாக, ந ஸவதி ந - ஆகிறதில்லையென்பதில்லை, அதாவது அப்படியே அது அவர்களுடைய ஆத்ம நிக்ஷேபத்துக்கும் போதுமானதாக ஆகிறது, வஶ - இது லோகவேதங்களில் பிரஸித்தமான விஷயம் அன்றோ.

(கருத்து) உலகத்துக்கெல்லாம் தாயாயிருக்கிற ஓ பாதுகையே! மிருதுவாய் இனிமையாய் விநய நைச்யங்களையும் விசுவாஸத்தையும் காட்டுகிற ஸ்வரங்களோடும் சப்தங்களோடும் ஒரு பிரார்த்தனையைத் தெரிவிக்கிற வாக்யத்தை முன்னிட்டுக் கொண்டு ஸ்ரீரங்கநாதன் திருவடிகளில் நீ ஸமர்ப்பிக்கப்பட்டபோது, (அதாவது உன்னுடைய ஆத்மாத்மீயங்களுடைய ஸ்வரூபமென்ன, ரக்ஷணபரமென்ன, ரக்ஷணபலமென்ன இவைகள் ஆநுகூல்ய ஸங்கல்பம், ப்ராதிகூல்ய வர்ஜநம், கார்ப்பண்யம், மஹாவிச்வாஸம், கோப்த்ருத்வவரணம் என்கிற பிரபத்தியின் ஐந்து அங்கங்களையும் உள்ளடக்கிக்கொண்டிருக்கிற மஹாவிச்வாஸபூர்வக ப்ரார்த்தநாவாக்கியத்தை முன்னிட்டுக் கொண்டு ஸ்ரீரங்கநாதன் திருவடிகளில் உன்னாலோ பிறராலோ ஸமர்ப்பிக்கப்பட்டபோது) ஜநங்களுக்கு ஸம்ஸாரபந்தம் விடுபட்டு பகவத்பிராப்தி கிடைப்பது (அதாவது மோக்ஷபுருஷார்த்தம் கிடைப்பது) உன்னதீனம் (அதாவது உன்னோடுள்ள உறவாலும் உன்னுடைய அனுக்ரஹத்தாலும் ஏற்படவேணும்) என்பதை அறிந்து உன்னையே ஆச்ரயித்த ஸர்வ ஜனங்களுக்கும் பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷம் கிடைப்பதற்கு உன்னுடைய அந்த ஆத்மநிக்ஷேபகிருத்யமே (அதாவது பிரபத்தியே) போதுமானது. அதற்காக அவர்கள் தங்களுக்கென்று ஒரு தனி பிரபத்தி பெருமாள் திருவடிகளில் பண்ண

வேண்டியதில்லை. ஏனென்றால் அவர்கள் உன்னையே சரணமாக அடைந்துவிட்டபடியால் அவர்கள் உன்னுடைய வஸ்துக்களாகி உன்னுடைய ஆத்மாத்மீய (தானும் தன்னைச் சேர்ந்ததும்) ஸமர்ப்பணத்தில் ஏற்கனவே உள்ளடங்கிவிட்டார்கள். அல்லது அர்ச்சகர்கள் மிருதுவாய் இனிமையாய் விநயநைச்யங்களையும் பக்திவிசுவாஸங்களையும் காட்டுகிற ஸ்வரசப்தங்களினால் (அதாவது ஸ்வாமிந்! பிர்ம்மாதிகளுக்கும் எட்டாத ஸ்வரூபஸ்வபாவாதிகளையுடையவரும் பரமதயாமூர்த்தியுமான தேவரீர் ஸர்வப்ராகாரத்தாலும் நிகிருஷ்டனாய் தேவரீரைக் கிட்டுவதற்கும் பரம அநர்ஹனான அடியேன்மீது கிருபை பண்ணி அநந்தாபராதங்களையும் க்ஷமித்தருளி அடியேனால் ஸமர்ப்பிக்கப்படும் இந்த திவ்ய பாதுகைகளையும் அந்த திருவடித்தாமரைகளில் தேவரீருடைய ஸஞ்சாரார்த்தமாகவும் லோகக்ஷேமார்த்தமாகவும் சாற்றியருளவேணும். இது விஷயத்தில் திருவுள்ளம்பற்றி உஹக்கவேணும் என்று இப்புடைகளில்) பிரார்த்தித்து உன்னை ஸ்ரீரங்கநாதன் திருவடிகளில் ஸமர்ப்பித்த மாத்திரத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடி ஸேவையும் ஸம்பந்தமும் அதின் மூலமாய் வரும் ஸகல நன்மைகளும் தங்களுக்கு உன்மூலமாய்த் தான் கிடைக்கவேணுமென்று அறிந்து உன்னையே சரணமாக ஆச்ரயிக்கும் ஸர்வ ஜனங்களுக்கும் ஸகலக்ஷேமங்களையும் கொடுப்பதற்கு உன்னுடைய அந்த ஸமர்ப்பணமே போதுமானதாக ஆகிறது என்பதில் ஸந்தேஹமில்லை. அதற்காக அவர்கள் வேறொரு பிரயத்தனமும் தனியாகச் செய்யவேண்டியதில்லை. ஏனென்றால் அர்ச்சகர்கள் பெருமாள் புறப்பாட்டுக்காக பெருமாள் திருவடிகளில் பாதுகையை ஸமர்ப்பித்ததும் பெருமாள் அதின்மீது ஏறியருளி வெளியில் எங்கும் ஸஞ்சரித்து ஸர்வ ஜநங்களுக்கும் தன் திருவடி ஸேவையும் பாதுகாமூலமாய் திருவடி ஸம்பந்தத்தையும் பிரஸாதித்தருளி அவர்களைக் கிருதார்த்தர்களாக்கி விடுகிறார் என்பது.

ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யர்கள் (பாதுகை)

(1) (2) (3)
அஹம் ஶ்ருதிக்ஷணஸரோ ஶ்ருதிக்ஷணஸமம் தயா ।
(12)
ந ஶைஶ் ஶ்ரீவத்ஸரேவத்யாத்தானம் நிக்ஷிப்ய வேத்யம் ॥

(4) { மாம் மதீயம் ச நிகிலம் சேதநாசேதநாத்மகம் |
{ ஸ்வகைங்கர்யோபகரணம் வரத ஸ்வீகுரு ஸ்வயம் ||

(10) (5) (6) (7)
ந்யஸ்யாம்யகிஞ்சந: ஶ்ரீமந் அநுகூலோऽந்யவர்ஜித: |
(8) (9) (10)
விஶ்வாஸப்ரார்த்தநாபூர்வம் ஆத்மரக்ஷாபரம் த்வயி ||

11 { ஸ்வாமீ ஸ்வஶேஷம் ஸ்வவஶம் ஸ்வபரத்வேந நிர்பரம் |
{ ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம் ||

என்கிற சுலோகங்களால் காட்டப்பட்ட ஆகிஞ்சந்யம் (5) ஆநுகூல்யஸங்கல்பம் (6) ப்ராதிகூல்யவர்ஜநம் (7) மஹாவிஶ்வாஸம் (8) கோப்த்ருத்வவரணம் (9) ஸாத்விகத்யாகம் (11) என்கிற ஆறு அங்கங்களையும் உள்ளடக்கிக்கொண்டிருக்கிற ஆத்மஸமர்ப்பணத்தை (5, 6, 7, 8, 11) ப்ரார்த்தநாவாக்ய (9)த்தோடுகூட மேல் சுலோகங்களின் ப்ரகாரமாக தங்களுடையவும் தங்களைச் சேர்ந்தவைகளுடையவும் (4) ஸ்வரூபம் (1) ரக்ஷணபரம் (2) ரக்ஷணபலம் (3) இவைகள் தங்களுக்கில்லை ஶ்ரிய:பதிக்கே (12) என்று அத்யவஸித்து பெருமாள் திருவடிகளில் ([illegible] ஶரணயோ:) ஸ்வாசார்யோபதேஶநியமனங்களின்படி அவர்களை முன்னிட்டுக்கொண்டு தாங்கள் நேரிலோ ஸ்வாசார்யமுகமாகவேயோ தங்களுடைய ஆத்மாத்மீய நிக்ஷேபத்தைச் செய்தபோது (10) (நிக்ஷிப்தாயாம் த்வயி), 'ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்' என்கிற பகவத்வாக்யத்தின்படி பகவானுக்கு மிகவும் பிரியதமர்களான அந்த ஸதாசார்யர்கள்தான் நமக்கு [illegible] | [illegible] || என்கிற பிரமாணத்தின்படி ஐஹிகாமுஷ்மிக ஸகல நன்மைகளுக்கு காரணம் என்று அறிந்து நம்பி அவர்களையே சரணமாக அடைகிற ஸர்வ ஜநங்களுக்கும் ([illegible] ஜாநதீநாம் ப்ரஜாநாம்) அந்த ஸதாசாரியர்களுடைய அந்த ஆத்மநிக்ஷேபக்ருத்யமே ஸகலஶ்ரேயஸ்ஸாதக்கும்போதுமானதாகவேயாகிறது. ([illegible] நிக்ஷேபக்ருத்யம்) அதற்காக அந்த ஜனங்கள் தங்களுக்கென்று தாங்க

ளாக தனியாக வேறொரு (அதாவது ஆசார்யர்களை ஆச்ரயிப்பது தவிரவேறொரு) உபாயத்தைச் செய்யவேண்டியதில்லை; ஏனென்றால் அவர்கள் தங்களுடைய ஆசாரியர்களின் ஆத்மீய ஸமர்ப்பணத்தில் உள்ளடங்கிவிட்டார்கள் — என்பது

ஸாக்ஷாந்நாதே ஸகீ வா யே ஸ வைஷ்ணவஸம்ச்ரயா: ।
தேநைவ தே ப்ராயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம் பதம் ॥

என்கிற ஸ்ம்ருதிப்ரமாணத்தின்படி லோகவேதங்களில் பிரஸித்தமான விஷயம். (ஸாரா)

இப்படி ஆத்மாத்மீயங்களுடைய ஸ்வரூப, ரக்ஷணபர ரக்ஷணபலங்களில் தன் துவக்கறுத்துக்கொண்டு (அதாவது தனக்கு யாதொரு ஸம்பந்தமுமில்லை; எல்லாம் பகவானுடையதே என்று அத்யவஸித்து) பகவானிடத்தில் ஆத்மரக்ஷாபர ஸமர்ப்பணத்தை (அதாவது என் தலையில் அதற்காக வேலை செய்யவேண்டிய ஒரு பொறுப்பையும் சுமத்தாமல் நீயே அந்த உபாயஸ்தானத்தில் நின்று அந்த உபாயத்தைச் செய்துவரக் கூடிய ரக்ஷணத்தைச் செய்யவேணுமென்று பகவானிடத்தில் பொறுப்பைக் கட்டுகிறதை) பிரதாநமாகவுடைய ப்ரபத்தி (ஆத்மநிக்ஷேபம்) யும், அதின் ஆறு அங்கங்களும், அதின் முக பேதங்களான ஸ்வநிஷ்டையும் (தானே பூர்ணமாக அறிந்து செய்கிறது) அதில் ஒரு மாத்துக்குறைவான உக்திநிஷ்டையும் (அங்க விஷயங்களில் ஸ்வல்ப ஜ்ஞானக் குறைவு இருந்தாலும் அதிகாரத்திலும்அங்கிமுதலான தின்ஜ்ஞாநத்திலும்பூர்த்தியோடு ஆசார்யசிக்ஷிதமானபடி தானே அநுஷ்டிப்பது), ஆசார்யநிஷ்டையும் (ஆசாரியருடைய பிரபத்தியிலடங்கியிருப்பது), 'ஜாநதீநாம்' என்கிறபதத்தால்ஸூசிப்பிக்கப்பட்ட 'உபாயமாவது ஒரு ஜ்ஞானவிகாஸ விசேஷம்' என்கிற பிரபத்தியின் ஜ்ஞாநாகாரத்வமும், 'ப்ரபந்நாநாமேஷாம் நஹிபாதி தேஹாந்தரா நிஜபதம்' என்கிறபடி ப்ரபத்தி ஒன்றேதான் மோக்ஷஸாதனம் என்பதும் இன்னும் மற்றபிரபத்தியின் விஷயங்களெல்லாம் லோகவேதங்களில் பிரஸித்தமானபடி சப்தத்தாலும் அர்த்த ஸ்வபாவத்தாலும் இச்சுலோகத்தால் ஸபரிகரமாக பிரதிபாதிக்கப்படுகிறது. (70)

(௬௦௩) நித்யம் ரங்கக்ஷிதிபதிபதந்யாஸயோக்யார்த்ததேஹா:
ஶிஞ்ஜாநாதம் ஶ்ரவணஸுபகம் பாதுகே தீர்கயந்த: | காலே தஸ்மிந் கரணவிகமே க்லேஶஜாதம் விஹந்யுஸ்ஸாவதாநம் தருணதுளஸீ ஸௌரபிணோ கந்தவாஹா: ||

பாதுகே - வாராய் பாதுகையே ! நித்யம் - எப்பொழுதும், ரங்கக்ஷிதிபதி - ஸ்ரீரங்கபூமிக்கு எஜமானனுன அல்லது லீலாவிபூதிக்கெல்லாம் எஜமானனுன பெருமாளுடைய 1 பத - திருவடிகளுடைய, ந்யாஸ - வைப்பதினுலே, யோக்ய - கிருதார்த்தமான அதாவது அடையவேண்டியதை எல்லாம் அடைந்ததான, தேஹா: - தன்னுடைய சரீரத்தை உடைத்தாயிருக்கிற, 2 தே - உன்னுடைய, ஶ்ரவணஸுபகம் - காதுக்கு மிகவும் இனிமையான, ஶிஞ்ஜாநாதம் - சலங்கைகளுக்குள் இருக்கும் ரத்நங்களால் உண்டாகும் சப்தத்தை, தீர்கயந்த: - வெகுதூரம் பரவச்செய்கிறதுகளும், தருண - இளமையான, துளஸீ - துளஸியினுடைய, ஸௌரபிண: - வாஸனையை உடைத்தாயிருக்கிறவைகளுமான, கந்தவாஹா: - காற்றுகள், 3 தஸ்மிந் - அந்த, காலே - காலத்தில் அதாவது மரணகாலத்தில், ந: - எங்களுக்கு, கரண - கண் முதலிய இந்திரியங்களுடைய விகம-

---

1 இந்த பிரகிருதிமண்டலம் முற்றும் பெருமாளுக்கு பிரம்மருத்ரர்கள் முதல்கொண்டு எல்லா ஜீவர்களையும் அவரவர்கள் கர்மானுகுணமாக சரீரங்களில் புகுரவிட்டு பொம்மலாட்டம்போல் ஆட்டிவைத்து ஒரு கூத்துப்போடுகிற இடமான தால் இந்தபிரகிருதிமண்டலத்தை ரங்கம் (கூத்துப்போடும் இடம்) என்று சொல்லுகிறது.

2 தேஹ என்கிற பதம் ஜீவாத்மாவையும் சரீரத்தையும் மனதையும் சொல்லும். இவிடம் சரீரம் என்கிற அர்த்தம்,

3 காற்று வாஸனையை வஹிக்கிற ஸ்வபாவமுள்ளதான தால் காற்றுக்கு இது காரணப்பெயராக ஏற்பட்டது.

நாசத்தினால் உண்டான, க்லேஶ - கஷ்டத்தினாலே, ஜாதம் - உண்டாயிருக்கிற, ஸஞ்ஜ்வரம் - வேதனையை அதாவது மரண வேதனையை, விஹந்த்ரீ: - முழுவதும் போக்கடிக்க வேணும்.

(கருத்து) ஓ பாதுகையே! மரணகாலத்தில் ஐந்து இந்திரியங்களும் ஒவ்வொன்றாக அழிந்துகொண்டுவரும் காலத்தில் எங்களுக்கு மிகவும் பொறுக்க முடியாத வேதனையுண்டாகும். அக்காலத்தில் உன்னோடு ஸம்பந்தப்பட்டு உன்னுடைய குளுமையையும், உன்னிடத்திலிருக்கும் துளஸியின் பரிமளத்தையும், மதுரமான உன் சலங்கைகளின் சப்தத்தையும் வெகுதூரம் பரவச் செய்யும் காற்றுக்கள் எங்கள் அளவும் பரவி உன்னுடைய மதுரமான சப்தம் காதில்படும்படிக்கும் உன்னுடைய துளஸிபரிமளம் மூக்கில் பட்டு கிராணஇந்திரியத்துக்கு திருப்தியைக் கொடுக்கும்படிக்கும், உன்னுடைய சைத்யம் உடம்பில்பட்டு த்வக் இந்திரியத்துக்கு சாந்தியை உண்டுபண்ணும்படிக்கும் செய்து விசேஷ ஆறுதலை உண்டுபண்ணி மரணவேதனையைப்போக்கடிக்கவேணும். இப்படி எங்கள் விஷயத்தில் நீ பரமகிருபையைப் பண்ணவேணும் என்கிற பிரார்த்தனை சப்தத்தால் கிடைக்கிறது.

த்வனியால் கிடைக்கும் அர்த்தமாவது— நீ ஏன் இப்படி எங்கள் பிரார்த்தனையை நிறைவேற்றவேணுமென்றால், நாங்களும் உன்னைப்போல் ஸர்வலோகத்துக்கும் யஜமானனான பகவானுடைய திருவடியை அடைந்து கிருதார்த்தர்களாவதற்கு ஸ்வரூபத்தால் இட்டுப் பிறந்துவைத்தார்களானதாலும், நீயும் பரம தயாளுவாய் எங்களுக்குப் பரம ஸுஹ்ருத்தாய் இருந்து நீ அடைந்த புருஷார்த்தத்தை ஆச்ரிதர்களான எங்களையும் அடைவிக்கும் ஸ்வபாவமுள்ளவளானதாலும், அதற்காக அக்காலத்தில் ஸ்ரீபக்ஷிராஜனைப்போல் ஸ்ரீபெருமாளையும் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு நீ எங்களிடம் வரும்போது நீ வந்து சேருவதற்கு முன்னமேயே உன்னுடைய மதுரமான ஶிஞ்ஜாநாதத்தால் நீ பெருமாளுடன் ஸமீபித்துவிட்டாய் என்கிற சிரவண ஸுகமான ஸமாசாரத்தையும், தேஹ சிரமத்தையும், எல்லாம் போக்கும்படியான உன்னுடைய குளிர்ச்சியையும், துளஸி பரிமளத்தையும் உன்னோடு ஸம்பந்தப்பட்ட காத்தின் மூலமாய் தூதன்முகமாக அனுப்புவதுபோல் முன்னாடியே அனுப்பி மரண

வேதனையை மறக்கும்படி செய்து சீக்கிரத்தில் எங்களைக் கிட்டி சரீர விச்லேஷத்தையும் சிரமம் தெரியாமல் நடத்தி பெருமாள் திருவடிகளில் எங்களையும் உன்னோடு கூட சேர்த்தருளவேணும் என்பது.

உட்கருத்து— பெருமாளிடத்திலும் ஆசார்யர்களிடத்திலும் மிகுந்த பிரீதியோடு அவர்கள் திருவடிகளை அடைவதையே பரம புருஷார்த்தமாகக் கருதி இந்த தேஹ ஸம்மந்தம் கழிந்து அவர்கள் திருவடிகளை அடைவதற்கு ஸ்ரீ ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் "கதா-கதா—" என்கிற சுலோகங்களின்படி த்வரித்துக் கொண்டிருக்கும் பரமைகாந்திகளுக்கு அந்திம தசையில் இந்திரியங்கள் ஒவ்வொன்றாய் அழிந்துகொண்டு வந்து அதிதுஸ்ஸஹமான மரண வேதனையை உண்டுபண்ணும்போது ஸ்ரீ ஆழ்வார் ஆசார்யர்களுடைய ஸூக்திகள் காதில் பட்டாலும் ஸ்ரீ ஆசார்யர்களுடையவும் பகவானுடையவும் திருமாலை, திருப்பரியட்டம், திருவடிச்சோடு, திரு அபயஹஸ்தம் முதலான பிரஸாதங்களும் சின்னங்களும் கிடைத்தாலும் அவர்களைச் சேர்ந்தவர்கள் வந்தாலும் அவர்களுக்கு அவைகள் ரொம்பவும் பிரியமான விஷயங்களானதால் அந்தப்பரமலாபத்தால் ஏற்பட்ட ஸந்தோஷ ஸுகங்களால் ஸர்வ ஸாதாரணமான மரணவேதனையும் கூட தெரியாமல் மறந்துபோய் விடும். அப்படிப்பட்ட வார்த்தைகளையும், சின்னங்களையும் மனுஷ்யர்களையும் அந்த ஸமயத்தில் தங்களுக்கு ஆசுவாஸத்தை உண்டுபண்ணுவதற்கும் தங்களை அழைத்துப்போவதற்கும் ஸ்ரீ ஆசார்யாள் பெருமாளால் அனுப்பப்பட்ட தூதர்கள் போல் பாவித்துக்கொண்டாடுவார்கள். அந்த ஸமயத்தில் அவைகள் ஸ்வாபிமத புருஷார்த்தத்தின் சீக்கிர பிராப்தியையும் ஞாபகப்படுத்தி த்வரையை உண்டாக்கி மனதை அன்யபரமாக்கியும் (அதாவது வேறு விஷயத்தை நினைக்கும்படிச் செய்து) வேதனையை அறியாமல்படிக்குச் செய்யும்.

வ்யதிரேகத்தால், பரமைகாந்திகள் அல்லாதார்க்கு இவ்விஷயங்களே பயத்தையும், துக்கத்தையும் விளைவித்து, வேதனையையும் அதிகம் பண்ணிவிடும் என்பது த்வனிக்கிறது.

இந்த சுலோகத்தால் ஸ்ரீகூரத்தாழ்வானுடைய சரமதசையில் அவருடைய காதில் ஸ்ரீபாஷ்யகாரர் த்வய மந்திரத்தைச் சொன்னதும், அதைக்கண்டு கலங்கின முதலிகளுக்கு (சிஷ்யர்

களுக்கு) அவர் அருளிச்செய்த உத்தரமும் ஸ்ரீ ஸஹஸ்ரநாம பாஷ்ய ஸாரம் நிர்வாணாதிகாரத்தில் உதாஹரித்தபடி ஞாபகப் படுத்தப்படுகிறது.

இப்படி இந்த சுலோகத்தால் பரமை காந்திக்கு சரம தசையில் தனக்கு எப்பொழுதும் மிகவும் அபிமதமான பகவத் பாகவதாசார்ய விஷய ஸங்கீர்த்தனாதிகளால் நிர்யா ணம் ஸுகரமாக நடக்கும் பிரகாரம் சொல்லப்பட்டது. (71)

**(௭௨) ஸம்ஸாராக்நிபரிணதா ஸம்ச்ரிதாநாம் ஜநாநாம் தாபம் ஸத்ய: சமயிதுமலம் சார்ங்கிண: பாதுகே த்வம் | சந்த்ராபீடே ப்ரணமதி நவாம் சந்த்ரிகாம் ஆபிபந்தீ தாராநிர்யத்ஸலிலகணிகா சீகரைச் சந்த்ரகாந்தை: ||**

ஹே சார்ங்கிண: பாதுகே - வாராய் சார்ங்கமென்னும் வில்லைத் தரித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீபெருமாளுடைய பாது கையே! த்வம் - நீ, சந்த்ராபீடே - பிறைச் சந்திரனை சிரோ பூஷணமாக உடைய சிவன், ப்ரணமதி - உன்னை நன்முக வணங் கும்போது, நவாம் - புதிதான, அதாவது பிறைச்சந்திரனுடை தால் நிலவுக்கு ஆரம்பமாய் ஸ்வல்பமாயுள்ள, சந்த்ரிகாம் - நிலவை, ஆபிபந்தீ - முழுவதும் குடித்துவிடுகிறவைகளும், (அத ஏவ - அதினாலேயே—என்று ஒரு பதம் சேர்த்துக் கொள்கிறது.) தாரா - தாரையாக அதாவது ஒரே பெருக் காக, நிர்யத் - வெளிக்கிளம்புகிற, ஸலில - ஜலத்தினுடைய, கணிகா - துளிகளாலே, * சீகரை: - நிறைந்திருக்கிற, சந்த்ர காந்தை: - உன்னுடைய சந்திரகாந்தமணிகளாலே, § ஸம்ச்ரி

---

* இவ்விடத்தில் துளிகளை எடுத்துச்சொன்னதின் அபிப் பிராயம் ஓரோர் துளியே தாபத்தைப் போக்கடிக்கத் தகுந் தது என்பது.

§ சந்திரகாந்தம் என்று ஒரு ரத்ன விசேஷம். அதன் பேரில் நிலவு பட்டதும் ஜலத்தை தன்னிடத்திலிருந்து பெருக்கும் ஸ்வபாவமுள்ளது.

தாநாம் - உன்னை நன்ருகஆச்ரயித்திருக்கிற, ஜநாநாம் - ஸர்வ ஜனங்களுக்கும், ஸம்ஸார - ஸம்ஸாரமாகிற மருகாந்தாரத்தி னுடைய, * கூ - மார்க்கத்திலுண்டான, ச்ரம-சிரமத்தினுலே, வரிணதம் - பக்வத்தை அடைந்திருக்கிற அதாவது உண்டா யிருக்கிற, தாபம் - கொதிப்பை அதாவது ஆத்யாத்மிகம் தாபம் (தன்னுடைய சரீரம் முதலானதுகளால் உண்டாகிற கஷ்டம்) ஆதிபௌதிகதாபம் (மற்ற ஜீவர்களால் நேரிடும் கஷ் டம்) ஆதிதைவிகதாபம் (தைவவசத்தால் காற்று, மழை, வெய்யில்,பனி, நெருப்பு, இடி, பூகம்பம் முதலியவைகளால் ஏற் படும் கஷ்டம்) என்கிற தாபத்ரயத்தை, ஸத்யः - உடனே, ஶமயிதும் - போக்கடிப்பதற்கு, க்ஷமம் - போதுமானவளாக அதாவது சக்தியுள்ளவளாக இருக்கிருய். இப்பதங்களெல்லாம் மிகவும் அர்த்தகர்ப்பங்கள். அவைகளை தாத்பர்யார்த்தங்களில் கண்டுகொள்வது.

(கருத்து) ஸ்ரீசார்ங்கம் என்கிற வில்லையுடைய பெருமா ளுடைய பாதுகையே! உன்னை சிவன் தலைகுனிந்து நன்ருய் வணங்குகிருன். அப்போது அவன் தன் தலைக்கு அலங்கார மாக தரித்துக்கொண்டிருக்கும் பிறைச்சந்திரனுடைய காந்தி உன்பேரில் விழுகிறது. உன்னிடத்திலிழைத்திருக்கும் சந்திர காந்தமணிகள் அப்போது அந்த நிலவை பூராவும் குடித்து விட்டு, ஒரே ஜலப்பெருக்கு உண்டாகும்படி ஜலத்துளிகளை விசேஷமாக தங்களிடத்திலிருந்து உண்டாக்குகிறதுகள். அப் படி ஜலத்துளிகளால் நிறைந்திருக்கிற உன்னுடைய சந்திர

---

மேல் கூச்ரமத்தைச் சொல்லுவதால் ஒரு பச்சை, நிழல், ஜலம் ஒன்றும் இல்லாமல் ஒரே நெடும் பொட்டவெளி யாய் மணலாய் வெய்யிலில் ஒரே தாபத்தையும் களைப்பையும் மட்டும் கொடுக்கக்கூடிய ஸம்ஸ்கிருதத்தில் மருகாந்தாரம்என்று சொல்லுகிற பாலைவனம் இவ்விடம் உதாஹரணமாக எடுக் கப்பட்டிருக்கிறது. இதில் ஒரு மனிதன் நல்ல வெய்யிலில் வழிநடக்கவேண்டுமானுல் அந்த சிரமத்தைச் சொல்லவேண்டி யதில்லை, ஸம்ஸாரகதி அப்படிப்பட்டது என்று அபிப்பிராயம்.

காந்தமணிகளால் ஸம்ஸாரமாகிற மருகாந்தாரத்தில் வெய்யலில் வழிநடந்து, கொதிப்புண்டு, களைத்துப்போய், அந்த தாபம் தாங்காமல், தபித்து ஓடிவந்து உன்னையே சரணமாக ஆச்ர யிக்கிற ஸர்வஜனங்களுக்கும் குளிர்ச்சியைக் கொடுத்து தாபத் தையும் களைப்பையும் நீக்கி கஷ்டத்திலிருந்து விடுவிப்பதற்கு சக்தியுள்ளவளாக இருக்கிறாய்.

ஸம்ஸாராத்வபரிணதம் தாவம் என்பதின் கருத்தாவது— உலகத்தில் ஜீவன்கள் பாபவசத்தால் (அதாவது பகவானுடைய அநாதியான கோபத்தால்)உடம்பாகிற பிரகிருதியில் கட்டுண்டு அதனால் தத்வஜ்ஞானமிழந்து இன்னது தான்தங்களுடைய ஜ்ஞாநாநந்தாதி ஸ்வரூபமாய், பகவானுக்கே அநந்யார்ஹசேஷபூதமாய்,அவனைத்தவிர அநந்யோபாயமாய்அநந் யப்ரயோஜனமாய், உடம்பைக் காட்டிலும் விலக்ஷணமான ஸ்வரூ பத்துக்குத் தகுந்ததும் நல்லதும் நிலையானதும் அடையவேண் டியதுமான புருஷார்த்தமென்று உள்ளபடி அறியமாட்டாதவர் களாய், காமக்ரோதாதிகளால் ஏவப்பட்டு அவரவர்கள் ஐஹிகா முஷ்மிகங்களில் ஒரொன்றை அடையவேண்டியதை ஸுகமாகப் பிரமித்தும், அந்தந்த அபிலஷிதங்களை அடையும்பொருட்டு நியாயமான வழியாலோ, அநியாயமான வழியாலோ, உயர்ந்த தெய்வங்களையோ, க்ஷுத்ரதெய்வங்களையோ, அல்பமனுஷ்யர்களை யோ, அததற்கேற்பட்ட வழிகளால் ஆராதிக்க முயன்றும், பல ஸுகிருத துஷ்கிருதங்களைச் செய்தும், தன்னாலும் பிறராலும் தெய்வத்தாலும் நேரிடும் கஷ்டங்களை ஸஹித்துக்கொண்டும், துக்கமூலம் (ஆரம்பத்தில் துக்கமுள்ளது) துக்கமிச்ரம் (துக்கத் தோடு கலந்தது) துக்கோதர்க்கம் (முடிவில் துக்கத்தை விளை விக்கத்தக்கது) என்று ப்ராயேண துக்கமயமாய் அத்யல்ப காலம் இருந்து அழியக்கூடியதான விஷயங்களை ஸ்வல்பம் அடைந்து அனுபவித்தும், அல்லது அவைகளை உத்தேசித்துச் செய்த காரியங்கள் நிறைவேறாததால் ஐஹிக ஆமுஷ்மிகங்களில் அவைகளை இழந்தும் ப்ரத்யவாயங்களையும் அடைந்தும், அபிலஷி தமான எண்ணங்களும் ஆரம்பித்த வியாபாரங்களும் தலைக்கட்டி யோ,தலைக்கட்டாமல் நடுவிலோ மரணத்தை அடைந்துலோகாந்த ரங்களில் புண்யபலனான நச்வரபோகங்களை அடைந்தோ பாபபல

ஞான நரகயாதனைகளை அநுபவித்தோ, மறுபடி மறுபடி பலபல யோனிகளில் பிறந்து முன்முன் கர்மவாஸனையால் முன்முன் போல் எண்ணி வேலைகளைச் செய்து மறுபடி மறுபடி இறந்து இப்படி ஏத்தச்சால்போல் பூமியில் கொஞ்சகாலம் அல்லாடி ஸுக்ருதங்களால் ஸ்வர்க்காதி லோகங்களுக்கு ஏறி ஸுகித்து அவை முடிந்ததும் அவ்விடமிருந்து பூமிக்குஇறங்கி மறுபடிஏறி இறங்கியும் அல்லது துஷ்க்ருதங்களால் நரகத்தில்இறங்கிகஷ்டங்களை அநுபவித்து பூமிக்கு ஏறி மறுபடி நரகத்துக்குப் போயும் பூமியில்கர்மானுகுணமாகஉயர்ந்ததாயும்சிறப்பாயுமுள்ள மனுஷ்ய திர்யக் ஸ்தாவரஜங்மங்களை அடைந்து அலைந்தும் நிலைகொள்ளாமல் அதிவேகமுள்ள கர்மசக்ரமாகிற சுழலில் அகப்பட்டு இதிலிருந்து தப்பி வெளிக்கிளம்பமுடியாமல் அநாதிகாலமாக ஓய்வில்லாமல் பல துக்கங்களையும் அல்பமான ஸுகலேசங்களையும் அனுபவித்துக்கொண்டு கர்மத்தால் கட்டுப்பட்டு வருந்துகிறார்கள்என்பது. ஸம்ஶ்ரிதாநாம் ஜநாநாம் என்பதின் கருத்தாவது-இப்படி ஒருவராலும் தடுக்கமுடியாத கர்மசக்ரத்தில் அகப்பட்டு அவசமாய் அதிவேகமாகச் சுழன்றுகொண்டிருக்கும் போதே சிலர் பரமசேஷியாய் பரமகாருணிகனுைப் அவஸரப்ரதீக்ஷனை ஸ்ரீமந் நாராயணனாலே ஓர் அஜ்ஞாத(தனக்குத் தெரியாமல் நேரிடுகிற) யாத்ருச்சிக (தான் ஒன்றை முக்கியமாக உத்தேசித்து பிரவிருத்திக்கும்போது நடுவில் எதிர்பாராமல் நேரிடுகிற) ப்ராஸங்கிக (தான் ஒன்றை முக்கியமாக உத்தேசிக்கச் செய்தேயும் இடையில் ஆனுஷங்கிகமாக எதிர்பார்த்து நேரிடுகிற) ஸுக்ருதங்களை வ்யாஜமாகக் கொண்டு கடாக்ஷிக்கப்பட்டு முன்ஸுக்ருதங்களின் பரிபாகத்தை அடைந்து ஸத்துவகுணம் மேலிட்டு விவேகம் உதித்து ப்ரத்தியக்ஷத்தாலும் அனுமானத்தாலும் சாஸ்திரத்தாலும் ஸம்ஸாரதோஷங்களைக்கண்டு, அதில் வெறுப்படைந்து பழைய மாதிரியான ஓட்டங்களாலும் மற்ற தெய்வங்களாலும் ஜீவர்களாலும் பலன் இல்லாமையை உணர்ந்து வேறு கதியில்லாமல் கடைசியாக பகவானை ஆச்ரயித்து இந்த கஷ்டத்தை நீக்கவேணும் என்னும் ஆசையால் திருவடிகள் கீழ் வந்து விழுந்து பாதுகாஸம்பந்தம் பெறுகிறார்கள். ஸ்ரீசடாரியை சிரஸில் ஸாதித்துக்கொள்கிறார்கள்) என்பது. தாவம் ஸத்ய: ஸமுத்தாரணே என்பதின் கருத்தாவது—உடனே தாபங்களு

டைய வேர் அறுபட்டு பாதுகைகளின் பிரபாவத்தைக் கண்டு இந்த பாதுகைகளை சிரஸால் வணங்கி தரிக்கும் ஸம்ஸாரிகளாய் லோகேசுவரர்களாக வழங்கும் ருத்ராதிகள் பாதத்வமும் அல்ல; அவர்களை ஆச்ரயித்து ஸம்ஸாரநிவ்ருத்திபூர்வகமான பரமபுருஷார்த்தத்தை அடையவும் முடியாது. இந்த பாதுகைகளைத் திருவடிகளால் தரிக்கும் பரமபுருஷனே உத்தமதெய்வம். அவனை அடைவதே பரமபுருஷார்த்தம். அப்படியே அவனை அடைவிக்கும் இந்த பாதுகைகளே நமக்கு பரமப்ராப்யமும் பரமப்ராபகமும் என்று ஜ்ஞானம் பிறந்து அவைகளையே ஆச்ரயித்து பகவானுடைய பரிபூர்ண அநுக்ரஹம் பெற்று அவித்யா (தேஹஸம்பந்தத்தால் ஏற்படும் அஜ்ஞானம்) கர்ம (அஜ்ஞானத்தால் ஏற்படும் பந்தகங்களான உடம்பைப் பற்றின வேலை) வாஸநா (அந்த வேலைகளில் நீடித்த பழக்கம்) ருசி (அந்தப் பழக்கத்தால் திருடமாக ஏற்படும் உடம்பினுடையவும் உடம்பைச் சேர்ந்த வஸ்துக்களுடையவும் அனுபவத்தில் ஆசை) ப்ரக்ருதிஸம்பந்தம் (அந்த ஆசையை அனுபவிக்க மறுபடி ஏற்படும் தேஹஸம்பந்தம்) என்று சுழலுகிற ஸம்ஸாரத்தைக் கழித்து ஸ்வஸ்வரூபம் பெற்று பகவானையடைந்து உஜ்ஜீவிக்கிறார்கள் என்பது.

ப்ரஹ்மருத்ராதி தேவதைகள் தம் தாம் அபீஷ்டங்களை அடைவதற்கும் அநிஷ்டங்களைப் போக்கிக்கொள்ளுவதற்கும் 'ஸப்ரஹ்மகாஸ்ஸருத்ராஸ்ச ஸேந்த்ரா தேவா மஹர்ஷய:' 'யுககோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ:' முதலான புராணஸஹஸ்ரங்கள் காட்டுகிறபடி ஸாமான்யமாய் பகவானை ஆச்ரயிப்பதை இவ்விடம் விவக்ஷிக்கவில்லை. ப்ரணதி என்கிற பதத்தில் நமனத்தில் ப்ரகர்ஷத்தை (விசேஷத்தை)க் காட்டுகிற 'ப்ர' என்கிற உபஸர்க்கம் முன்னொரு காலத்தில் ப்ரக்ருதிஸம்பந்தத்தால் ஏற்படும் மோஹத்தால் ருத்ரன் தான் த்ரிமூர்த்திகளில் ஒருவனாக இருப்பதைப்பற்றி பகவானான விஷ்ணுவுக்கு தான் ஸமனென்று எண்ணி அகங்காரப்பட, மற்ற தேவதைகளால் பகவானோடு வில் சண்டையில் மூட்டப்பட்டு, பகவானுடைய ஒரு ஹுங்காரமாத்திரத்திலேயே தானும் ஜ்ரும்பிதனாய் கையில் பிடித்த

வில்லும் கலகலத்துப்போய் பராஜயத்தைஅடைய, அப்போது பிரும்மாவால் புத்தி தெளிவிக்கப்பட்டு 'ப்ரஹ்மாத்யாஸ்ஸஹேந்த்ரா தேவம் நாராயணம் ப்ரபும் । ஶரணஞ்ச ஜகாமாத்யம் வரேண்யம் வரதம் ஹரிம் ॥' என்கிற பிரகாரமாக பகவானுடைய திருவடிகளில் விழுந்து அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டு சரணமடைந்த விருத்தாந்தத்தைக் காட்டுகிறது. தன்னுடைய பிரபுத்வமும் பிரபாவமும் தோற்றும்படி சந்திரகலையை சிரோபூஷணமாக தரிக்கும் அந்த ருத்ரன் பகவான் திருவடிகளில் விழுந்தகாலத்தில் பகவானுடைய திருவடியிலிருக்கும் பாதுகை தன்னுடைய மிகுந்த ப்ரபாவத்தால் அந்த ருத்ரனுடைய அகங்காரத்தையும் தேஜஸ்ஸையும் விழுங்கி அவனிடத்தில் தயையினால் தயாரூபமான அமிருதப்ரவாஹத்தையும் தன்னிடத்திலிருந்து பெருக்கி அவனுடைய சரணாகதியை அங்கீகாரம் பண்ணி அவனை ரக்ஷித்து உலகத்தில் பரதத்வம் (உத்தம தெய்வம்) இன்னதென்பதையும் ஸர்வகாலத்துக்கும் சாசுவதமாய் ஸ்தாபித்தது என்பதும் ஸூசிப்பிக்கப்படுகிறது.

ஸர்வசேஷியான ஸ்ரீ பகவானுடைய பாதுகைகள்போல் ஜீவனின் பரசேஷதைக ஸ்வரூப ஸ்திதி பிரவிர்த்தியாதிகளுக்கு நிரூபகர்களாகவும், வேதவிரோதி,குமதிகள் அழிக்கமுடியாதபடி ஈசுவரதத்வம் என்று ஒன்று உண்டென்று ஸ்தாபிப்பதற்கும், ஸம்ஸாரத்திலிருந்து சேஷர்களான மற்ற ஜீவர்களுடைய ரக்ஷணத்துக்கும் ஏற்பட்டவர்களான ஸ்ரீ ஆழ்வார் முதலானவர்கள் போன்ற ஆசார்யசிரேஷ்டர்களை இன்னும் ஸம்ஸாரிகளான தேவர்கள் முதலியவர்களும் வணங்கிக் கொண்டாடி அவர்களுடைய ஸூக்திகளால் தத்வஹிதபுருஷார்த்தங்களில் தெளிவையும் அடைகிறார்கள். அப்படிப்பட்ட ஸதாசார்யர்களின் பிரபாவம் பிரும்ம ருத்ராதிதேவர்களின் பிரபாவத்தை காட்டிலும் மிகவும் அதிகமானது. அப்படிப்பட்ட ஸதாசார்யர்களின் ஓரோர் பாசுரமே (அதாவது அவவற்றின் கருத்து மனதுக்குப் படிவதே) இந்த ஸம்ஸாரத்தைத் தாண்டி பரம புருஷார்த்தத்தை அடைவதற்கு போதுமானது. எனென்றால் அப்படிப்பட்ட பாசுரங்கள் பரதத்வநிர்ணயாதிகளையும் பரமோபாயத்தையும் பரமபுருஷார்த்தத்தையும் ஸர்வகாலத்துக்கும் பிரகாசிக்கின்றன.

இந்த ச்லோகத்தால் ஆசார்ய ப்ராப்திதான் மோக்ஷத்துக்கு காரணம் என்பதும், அவர்களுடைய ஸூக்திகளின் ப்ரபாவம், பிரும்மாதிகளைக் காட்டிலும் அதிகமான ப்ரபாவம் என்றும் காட்டப்படுகின்றன. (72)

(௭௰௩) **வஜ்ரோபேதாம் மஹிதமணிபி: ச்யாமலாம் மஞ்ஜு**
**கோஷாம் முக்தாஸாராம் ருசிரஸஞ்சாராம் வீக்ஷ்ய**
**விஷ்ணோ: பதே த்வாம்! ஹர்ஷோத்கர்ஷாதுபரி**
**ஸமயம் பாதுகே சந்த்ரகாக்ரம் தத்தே நித்யம்**
**த்ருதகனராகி தாண்டவம் நீலகண்டா: ||**

பாதுகே - ஸ்ரீபாதுகையே! த்ருத - தரிக்கப்பட்ட, கன - நெருக்கமான அதாவது மிகுதியான (ஸகன-மேகத்தினிடத்தில்), ராகி: - ஆசையை உடைய, நீலகண்டா:- சிவனவர்(மயிலானது), வஜ்ர -வைரக்கல்களோடு (இடியோடு), உபேதாம் - சேர்ந்தவளாயும் (சேர்ந்ததாயும்), மஹிதமணி- இந்திரநீலக்கற்களாலே (இந்திரநீலக்கற்கள்போல்), ச்யாமலாம்- நீலவர்ணத்தை அடைந்தவளாயும் (நீலவர்ணமுள்ளதாயும்), மஞ்ஜு - அழகான, கோஷாம் - நாதத்தை(கர்ஜனையை) உடையவளாயும் (உடையதாயும்), முக்தா - முத்துக்களாலே (முக்த - விடப்பட்ட), ஸாராம் - உயர்ந்தவளாயும் (ஆஸாராம் - ஜலப்பெருக்கை உடையதாயும்), ருசிர - அழகான, ஸஞ்சாராம் - ஸஞ்சாரத்தை உடையவளாயுமிருக்கிற (மின்னலை உடையதாயுமிருக்கிற), த்வாம் - உன்னை (மேற்சொன்ன லக்ஷணங்களாலே ஏற்படுகிற, காதம்பினீம் - மேகவரிசையை), விஷ்ணோ: பதே- பெருமாளுடைய திருவடியில்(§ஆகாசத்தில்),வீக்ஷ்ய-ஸேவித்து (கண்டு), ஹர்ஷோத்கர்ஷாத் - ஆநந்தத்தின் மிகுதியினாலே, உபரி - மேலே, சந்த்ரக - பிரைச்சந்திரனுடைய (மயில் தோகையினுடைய), அக்ரம் - நுனியை, ஸமயம் - மெதுவாக ஆட்டிக்கொண்டு, நித்யம் - எப்பொழுதும், தாண்டவம் - கூத்தாடுதலை, தத்தே - செய்கிறார் (செய்கிறது). இப்படி பாதுகை

§ ஆகாசத்திற்கு விஷ்ணுபதம் என்று ஒரு பெயர் உண்டு.

யைக்கண்டு சிவனுடைய ஸந்தோஷக்கூத்துக்கும், மேகவரிசையைக் கண்டு மயிலின் ஸந்தோஷக்கூத்துக்கும், உபமானம் ச்லேஷையால் (அதாவது பதங்களுக்குள்ள இரண்டு விதமான அர்த்தங்களால்) ஏற்படுகிறது.

ஓ பாதுகையே! உன்னிடத்தில் மிகவும் பக்தியுள்ள சிவன் வைரக்கல்களால் இழைக்கப்பட்டவளும், இந்திரநீலக் கல்லுகளின் சோபையினால் நீலவர்ணத்தை அடைந்தவளும், அழகான சப்தத்தை உடையவளும் உயர்ந்த நல்முத்துக்களை உடையவளும் அழகாக பெருமாள் திருவடியோடு இங்குமங்கும் ஸஞ்சரிக்கிறவளுமான உன்னை பெருமாள் திருவடியில் ஸேவித்து அத்யாநந்தபரிதனாய் தன் ஜடையிலிருக்கும் பிறைச்சந்திரனுடைய நுனியானது மேலே மெதுவாக அசையும்படி கூத்தாடுகிறார். அது எப்படியிருக்கிறதென்றால் மேகத்தில் மிகவும் ஆசையுள்ள மயிலானது இடியோடுகூடினதும் இந்திரநீலக்கல்போல் நீலவர்ணமுள்ளதும் அழகான கர்ஜனையோடு கூடினதும் மழையை வர்ஷிக்கிறதும், அழகான மின்னலோடு கூடியதுமான மேக வரிசையை ஆகாசத்தில் கண்டு அதிக ஸந்தோஷத்தினாலே தன் தோகையின் துணியை மெதுவாக மேலே அசைக்கிக்கொண்டு கூத்தாடுவதுபோலிருக்கிறது.

வஜ்ராயுதாம் என்பதால் ஸதாசார்யர்கள் பரமதேஜஸ்விகளாய்ஸேவிப்பதற்கழகாகவும்,முதல்முதல்பழகுகிறவர்கள்விஷயத்தில் குற்றங்களைக்கவனியாமல் இன்பமாய் தெளிவான வார்த்தைகளைஉடையவர்களாகவும்இருந்து மனதை ஆகர்ஷித்து நெருங்கிப் பழகப்பழக சிஷ்யர்கள் லௌகிகவைதிகமரியாதைகளை அதிக்ரமிக்கிற விஷயத்தில் வஜ்ரம்போலும் வஜ்ராயுதம்போலும் கடுமையான சாஸநத்தையும் உறுதியையும் உடையவர்களென்றும், வபுஷி இந்த்ரநீலாம் என்பதால் இந்திரநீலம்போன்ற திருமேனியை உடைய பெருமாளுடைய நிரந்தர த்யான கீர்த்தனாதிகளாலேஅவர் தன்மையை அடைந்திருப்பார்களென்றும், அல்லது அப்படிப்பட்ட பெருமாளுடைய அலாபத்தாலேஉண்டானவிரஹவ்யஸநத்தால் தன் நிறம் இழந்து கருத்திருப்பார்கள் என்றும், ஊர்ஜிதகோஷாம் என்பதால் தத்வஹிதப்ரகாசகங்களான அழ

கான(அதாவது ஸபாரஞ்சகமான) உபந்யாஸங்களை உடையவர்களென்பதும் தவருதல்கள் விஷயத்தில் அழகானகர்ஜனையை அதட்டலை) யும் உடையவர்கள் என்பதும், ஸுதாஸாரம் என்பதால் ஸத்வ குணத்தால் உத்க்ருஷ்டர்களாகவும் ஸர்வபூத விஷயத்திலும் தாரதம்யமாராமல்வர்ஷிக்கப்பட்ட தயையைஉடையவர்களென்பதும், ஸுப்ரவசாரம் என்பதால் அழகான லோகரக்ஷணார்த்தமான ஸஞ்சாரத்தை உடையவர்களென்பதும், அல்லது பகவத்ப்ரீணங்களான வியாபாரங்களை உடையவர்களென்பதும் அல்லது அழகான பகவத்பக்தியை உடையவர்களென்பதும் அல்லது மின்னல்போல் தத்தத்காலத்தில் புதிதுபுதிதாக மேல்மேல் தோன்றக்கூடிய பிரதிபையை (புத்திபிரகாசத்தை) உடையவர்கள் என்பதும், மேலே சொன்னபடியிருந்துகொண்டு அவர்கள் த்ரிகரணங்களாலும்(மனோவாக்காயங்களால்) எப்போதும் பகவானை அடைந்திருக்கும் அழகைஸேவிக்கும்போது ஸத்வஸ்தர்களான தேவர்களும் தெய்வப்ரக்ருதிகளான மனுஷ்யர்களும், ஆகாயத்தில் வார்ஷிகமேகத்தைக் கண்ட மயில்கள்போல் அவர்களிடத்தில் ஈடுபட்டு மெய்மறந்து கூத்தாடி ஸந்தோஷித்து க்ருதார்த்தர்களாகிறார்கள் என்பதும் ஏற்படுகிறது.

குறிப்பு — இவிடத்தில் ருத்ரனை ப்ரதானமாக எடுத்ததற்குக் காரணம் அவன் பக்திமான்களில் சிரேஷ்டனானதாலும் கூத்தாடுவதில்பிரஸித்திஉள்ளவனானதாலும். உலகத்தில்சில பக்தஜனங்கள் நாமஸங்கீர்த்தநத்தையே முக்கியோபாயமாகக்கொண்டு பகவானை ஆராதிக்கிறார்கள். அவர்கள் ஸ்வகோஷ்டிக்கு நாயகனாக ஒரு பெரியவரை வேஷம் போட்டு நடுவில் நிறுத்தி பகவத்பாகவதாசார்யபரமான கீர்த்தனங்களையும் நாமங்களையும் சொல்லிப் பாடிக்கொண்டு அவரை அநுஸரித்து ஆநந்தபரவசர்களாய் கூத்தாடுவதுண்டு. அப்படிப்பட்ட தேவர்களின் பாகவத கோஷ்டிக்கு சிவன் உசிதமான நாயகனாகலாம். இதை இந்த ச்லோகம் ஸூசிக்கிறதாகவுமாம்.

இத்தால் பக்தலக்ஷணமும் ஆசார்யலக்ஷணமும் பொருந்திய மஹான்கள் திவ்யதேசாதிகளில் பகவானோடு சேர்ந்து அனுபவிக்கும் அழகை ஸேவிப்பது ஸத்வஸ்தர்களுக்கு ஆநந்தாவஹமாக இருக்கும் என்பது காட்டப்படுகிறது. (73)

(கூ०௬) ஶ்ரீரங்கேந்தோஶ்சரணகமலம் தாத்ருஶம் தாரயந்தீ
காலே காலே ஸஹ கமலயா கல்பிதயாத்ரோத்ஸவஶ்ரீ: ।
ஏஹ்யேஹி ஸ்வயமனுக்ருஹத்வாரமுந்ருஷ்டநாதா
பௌராணாம் கிமபி குஶலம் பாதுகே ப்ருச்ச்ஸீவ ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! காலே காலே - அந்தந்த உசிதமான காலங்களில், கமலயாஸஹ - ஶ்ரீமஹாலக்ஷ்மியோடுகூட (ஒரு உத்தம ஸ்திரீயோடுகூட), கல்பித - ஏற்படுத்தப்பட்ட, யாத்ரோத்ஸவ - சைத்ரோத்ஸவம் முதலிய உத்ஸவங்களுடைய (காடுகளில் வேட்டையாடுவதை பிரயோஜநமாக உடைய வேடிக்கையான ஸஞ்சாரங்களுடைய), ஶ்ரீ: - ஸம்ருத்தியை உடையவளாயும், 1 தாத்ருஶம் - அப்படிப்பட்ட, அதாவது வாக்குக்கு எட்டாத பெருமையை உடையதான (நீ ஒருத்தியாலேமட்டும் வஹிக்கக்கூடியதான), ஶ்ரீரங்கேந்தோ: - ஶ்ரீரங்கனுதன் ஆகிற சந்திரனுடைய, சரண- திருவடியாகிற, கமலம் - தாமரைப்புஷ்பத்தை (மானை), தாரயந்தீ - வஹிக்கிறவளாயுமிருக்கிற, (படர்களைக் கொண்டு தூக்கி வரும்படி செய்கிற), த்வம் - நீ, உந்ருஷ்டநாதா - வெளிப்படுத்தப்பட்ட சப்தத்தை அதாவது வீடுகள் தோறும் அந்தந்த புருஷர்களுக்கும் ஸந்தர்ப்பங்களுக்கும் தக்கபடி ஏற்பட்டதான குசலப்ரச்நம் முதலான ப்ரீதி வார்த்தைகளை உடைத்தானவளாய்க்கொண்டு, அநுக்ருஹத்வாரம் - ஒவ்வொரு வீடுகளின் வாசல்படிகள்தோறும், ஸ்வயம் - தானே, ஏஹி ஏஹி - போய் போய். பௌராணாம் - பட்டணத்து ஜனங்களை, கிமபிகுஶலம்-எல்லா க்ஷேமங்களையும் அதாவது பிள்ளை

1 இந்தப் பதத்தை 'தாரயந்தீ' என்பதோடும் அந்வயிக்கலாம். அப்போது அப்படி ஒப்பில்லாமல்படிக்கு உன்னுடைய குணங்களின் பெருமையினுல் ரொம்ப அனுரூபமாக தரிக்கிறவளாயும் என்று அர்த்தம்.

பெண்டாட்டி, சிஷ்யர்கள், வேலைக்காரர்கள், அக்நிஹோத்ரம் முதலானவைகளுடைய க்ஷேமங்களை, வ்யூஹஸீவ - கேட்கிறாய் போல.

(கருத்து) ஒ பாதுகையே! உலகத்துக்கெல்லாம் அமிருத ப்ரவாஹமான தயையை வர்ஷித்து குளிரச்செய்து சந்திரனைப் போல் ஆஹ்லாதத்தை உண்டுபண்ணும் ஸ்ரீரங்கநாதனுடைய ஒப்பில்லாததும் உன் ஒருத்தியால் மட்டும் தரிக்கக்கூடியது மான தாமரைப்புஷ்பம் போன்ற திருவடிகளை ஒப்பில்லாமல்படி அனுரூபமாக வஹித்துக்கொண்டு அந்தந்த காலத்துக்குத் தக்க படி ஏற்படுத்தப்பட்ட சைத்திரோத்ஸவம் முதலிய உத்ஸவங் களில் தாயாரோடுகூட பெருமாளை பட்டணத்தை விட்டு வெளி யூர்களுக்கு துஷ்டநிக்ரஹ சிஷ்டரக்ஷணார்த்தமாகவும், லீலார்த்த மாகவும்எழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோய்,திரும்பிஸந்நிதிக்கு எழுந்தருளும் காலங்களிலும்,வீதிப்புறப்பாடுகளிலும் நாலு திரு வீதிகளிலும் வீடுகளதோறும் பெருமாள் நின்றுநின்று எழுந்தரு ளுகிறார். அப்போது வீடுகளின் வாசல்படிவரையில் போய்அர்ச் சகர்கள் அந்தந்த வீட்டு ஜநங்களின் தலையில் உன்னை ஸாதிக் கிறார்கள். அப்போது ஏற்படும் உன்னுடைய சப்தத்தைப் பார்த்தால் ஒவ்வொரு குடும்பிகளுடைய எல்லா யோகக்ஷேமங் களையும் அவரவர்கள் வீட்டண்டை போய் அவரவர்களுக்குத் தக்கபடி பிரியமான வார்த்தைகளால் நேரில் விசாரிப்பதுபோல் இருக்கிறது. நல்ல ராஜாக்கள் பிரியமான உத்தம ஸ்திரீகளோடு சில காலங்களில் பட்டணத்தை விட்டு வெளியில் கொஞ்சகாலம் போய் தேசத்தின் க்ஷேமத்தின் பொருட்டும், விளையாட்டின் பொருட்டும், காடுகளில் வேட்டையாடி துஷ்டமிருகங்களைக் கொன்றும், சில விளையாட்டுக்கு ஏற்ற மான் முதலிய மிருகங் களையும் காடுகளில் அகப்பட்ட வஸ்துக்களையும் படர்களைக் கொண்டு வஹித்துக்கொண்டும், திரும்பிப் பட்டணத்துக்குள் பிரவேசிக்கும் காலத்தில், வீடுகள்தோறும் குடும்பிகளுடைய எல்லா யோகக்ஷேமங்களையும் நேரில் விசாரிப்பது வழக்கம். அப்படியே யுத்தத்துக்குப்போய் திரும்பும் காலத்திலும் செய்வ துண்டு. அதுபோல் இருக்கிறது உன் வியாபாரம்.

இந்த உபமானம் ச்லேஷையால் கிடைக்கிறது. இந்த சுலோகம் ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸம்ரு ராஜ வாநராமது

......... கல்யாணம் வஸிஷ்யதி ॥ என்று ராமனைப் பற்றி ஜனங்கள் கொண்டாடின வார்த்தையை ஞாபகப்படுத்தப்படுகிறது.

இந்த சுலோகத்தில் பதப்பிரயோகங்களின் ஸ்வாரஸ்யத்தால் ஏற்படும் விசேஷார்த்தங்களாவன:—

(1) ஸ்ரீரங்கேந்த்ர: என்று இந்த்ர சப்தத்தால் பகவான் அமிருதம்போன்ற தயையை ஸர்வருக்கும் வர்ஷித்து ஸம்ஸார தாபத்தைப் போக்கி சந்திரனைப்போல் குளிர்ச்சியையும் ஆநந்தத்தையும்உண்டுபண்ணுகிறான்என்கிற அவனுடைய பரம காருணிகத்வமும், (2) தாத்ருசம் என்பதால் வேதத்தில் சொல்லியதுபோல் பெருமாளுடைய ஸ்வரூபரூபகுணவிபவங்களுடைய பிரபாவம் வாக்குக்கு எட்டாதது என்கிற அவனுடைய பரத்வமும் அல்லது அப்படிப்பட்ட பெருமாளுடைய திருவடிகளை அனுரூபமாக வஹிக்கும் பாதுகையின் பிரபாவமும் பரத்வமும், (3) ஸமயாஸஹ ஸஞ்சரதுயாதவஸ்ரீ: என்பதால் ஸ்ரீபாதுகைகளும் மஹாலக்ஷ்மியும் எப்போதும் அஜ்ஞாதநிக்ரஹைகளாயும் (கோபித்து தண்டிப்பது என்பதே அறியாதவர்களாய்) சேதநர்களுடைய ரக்ஷணவிஷயத்தில் அவஸரப்ரதீக்ஷர்களாகவும் இருந்துகொண்டு ஆச்ரிதர்களை ஒரு வியாஜத்தில் மூட்டி ரக்ஷிப்பதின்பொருட்டு எப்போதும் பெருமாளோடு கூட இருவரும் சேர்ந்தே ஸஞ்சரிக்கிறார்கள் என்கிற அவர்களின் காருண்யமும் வ்யாஜமாத்ர ஸாபேக்ஷத்வமும், (4) ஸக்ருத் ஸக்ருத் என்பதால் ஆச்ரிதர்கள் தேடி வரவேண்டியது போக, தானே பிரீதியாலும் த்வரையாலும் கவலையாலும் வலுவில் அவர்களை தன் பெருமையைப் பாராட்டாமல் தேடிப் போகும்படியான வாத்ஸல்யமும், (5) ஸந்த்ருஹத்வாரம் என்பதால் அவர்கள் பாதியாவது எதிர்கொண்டு வரட்டுமென்று பார்த்திராமல், அவர்களின் வீடு வரையில் தானே போய் அவர்களை விசாரிக்கும் ஸௌலப்யமும், (6) ஸ்வயம் என்பதால் இன்னொருவரை அனுப்பி அவர்களைக் கொண்டு விசாரியாமல் தானே நேரில் போய் விசாரிக்கும்படியான ஸௌசீல்யமும், (7) உசித்வாநாதா என்ப

தால் எல்லாருடைய விஷயத்திலும் பொதுவான ஒரு குசல ப்ரச்நத்தை மட்டும் பண்ணுமல் ஒவ்வொரு ஆச்ரிதர் விஷ யத்திலும் தனித்தனியாக அவரவர்களுக்குத் தக்கபடி அவரவர் களுடைய குடும்பவிஷயங்கள் முதலியதுகளை விபரமாக விசா ரிக்கிறது என்கிற சித்தாகர்ஷகமான சாதுர்யாதிகளும், (8) வ்யாப்ய என்பதால் ஒதுங்கி வஸிக்கும் ஜாநபதஜனங்களைக் காட்டிலும் எப்போதும் ஸமீபத்தில் வஸிக்கும் புரஜனங்க ளிடத்திலுள்ள விசேஷ கவனிப்பும், (9) நித்யம் என்பதால் இன்றைக்கு விசாரித்த விஷயங்களையே மறுபடி நாளைக்கும் விசாரிக்கிறது என்கிற ஆதராதிசயமும், (10) கிமபி ஸாமா ந்யம் என்பதால் ஆச்ரிதர்களுடைய எல்லா யோகக்ஷேமங்கள் முதலியதுகளுடைய ஸூக்ஷ்மஜ்ஞானமும் அவைகளில் முக்யா முக்யங்களை யோஜியாமல் எல்லா விஷயங்களிலுமுள்ள கவ னிப்பும் இவை முதலிய மற்றுமுள்ள குணவிசேஷங்களும் சாப்தமாகவும் ஆர்த்தமாகவும் கண்டுகொள்வது.

இவிடத்தில் பாதுகைகள் விஷயத்திலும் பிராட்டி விஷயத் திலும் சொல்லப்பட்ட எல்லா குணங்களும் ஸதாசார்யர்கள் விஷயத்திலும் முற்றிலும் பொருந்தியுளது என்பதும் ஸூசிப் பிக்கப்படுகிறது.

இப்படி இந்த சுலோகத்தால் ஸதாசார்யர்களுக்கு பகவத் விஷயத்திலுள்ள ஆநுரூப்யமும் ஆச்ரிதர்களுடைய ரக்ஷணத் துக்கு உறுப்பான அவர்களுடைய குணங்களும் ஸூசிப்பிக்கப் படுகிறது. (74)

(௭௫) வதாந்யவிஹாரிணீம் ப்ரவிரளக்ஷாந்திம் ஸ்மி
தீம் ஸநவிஜலாயகாய நமஸ்ணாவித ஸ்ஞா
ரவாம் | க்ஷநாவுபூவாதி ஸ்மபூமி ஸ்மேஹ் ஸிம்ஹா
ஸ்மித்ரம் ஹரிசரணாரவிந்தஸ்கரந் ஸ்யாம்ப்ருதி
காம் ॥

ஹே பாதுகே - வாராய் பாதுகையே! (என்று ஒரு பதம் சேர்த்துக்கொள்ளவேணும்) வதாந்ய - வெகு சமத்

காரத்தோடு கூடினதான, விஹாரிணீம்-ஸஞ்சாரத்தை உடையவளாயும் (சுற்றுவதை உடையதாயும்), ருசிர - அழகான, பக்ஷ - பார்சுவங்களினுடைய (இரக்கைகளினுடைய) ருசிம்-காந்தியை உடையவளாயும், மநஸிஜ - மன்மதனுடைய, ஸாய காஸந - வில்லினுடைய, குண - நாண்கயிற்றுக்கு, உசித-தகுந்ததான அதாவது நாண்கயிற்றினுடையதுபோலதான, மஞ்சு - அழகான, ரவாம் - சப்தத்தை உடையவளாயும் (ஜங்கார சப்தத்தை உடையதாயும்), மஹேந்த்ர - இந்திர நீலக்கல்லுகளின் காந்தியாலே (இந்திரநீலக்கல்லின் காந்திபோலொத்த கருப்பு நிறத்தாலே) மஹிதாம் - பெருமையை உடையவளாயும் (உடையதாயும்) இருக்கிற, ஹரி - பெருமாளுடைய, சரண - திருவடியாகிற, ஸரஸிஜ - தாமரைப்பூவினுடைய, மகரந்த - தேனுக்கு, மதுவ்ரதிகாம் - வண்டாகிய, பவதீம் - உன்னை, அநுபவம் - ப்ரதிக்ஷணமும், ஸுதியே மஹி - கொண்டாடக்கடவோம்.

(கருத்து) ஓ பாதுகையே! (ஸ்ரீ பெருமாள் பிராட்டியோடு கூட உல்லாஸமாக உன்னைத் திருவடியில் சாற்றிக் கொண்டு விநோதமாக ஸஞ்சரிக்கும்போது அவருடைய கதியை அனுஸரித்த) உன்னுடைய ஸஞ்சாரம் விசேஷ ஸாமர்த்தியத்துடன் வெகு அழகாக இருக்கிறது (அப்பொழுது) உன் இரண்டு பார்சுவங்களில் மட்டும் காணப்படும் உன் காந்தியானது மிகவும் அழகாக பிரகாசிக்கிறது. (அப்படி பெருமானைத் தூக்கிக்கொண்டு அனுபவிக்கும் ஸந்தோஷத்தாலும் நடையின் சமத்காரத்தாலும் ஏற்படும்) உன்னுடைய அழகான சப்தமானது மன்மதனுடைய வில்லின் நாண் கயிற்றினுடைய சப்தம் போல் தோன்றுகிறது. அதாவது நீ பெருமானை அனுபவித்துக்கொண்டு அந்த ஸந்தோஷம் உள்ளடங்காமல் கத்கத ஸ்வரத்துடனும், மழலைச்சொற்களுடனும் ச்ருங்கார வார்த்தைகளைப் பேசுவதுபோல் சப்திக்கிற உன் சப்தமானது ரஸிகர்களும் சபலர்களுமான பகவத் பக்தர்களுக்கு பகவான் விஷயத்தில் விசேஷ காமத்தை உண்டுபண்ணக்கூடியதாக இருக்கிறது. (ஸ்ரீ பகவான் தன் திருவடிகளிலிருந்து உன்னை கழற்றிவிட்ட பிறகு உன் மேல்பாகத்தில் தென்படும்) உன் இந்திரநீலக்கற்

களின் கருப்பு நிறத்தால் நீ பெருமையை அடைகிறாய், அதாவது மிகவும் சோபிக்கிறாய், பார்சுவத்திலுள்ள தங்கக் காந்தியோடும் மேலுள்ள இதர ரத்நகாந்தியோடும் சேர்த்தியினால் நீலகாந்தி பரபாக சோபையை அடைகிறது அல்லது அப்போதுள்ள உன் கருப்புக் காந்தியானது விரஹவ்யஸநத்தால் உண்டான கருப்புநிறம்போல் காணப்பட்டு உனக்கு பெருமாள் விஷயத்திலுள்ள பக்தியின் பெருமையைக் காட்டுகிறது என்று தாத்பர்யம். இன்னும் நீ ஸ்ரீ பெருமாளுடைய திருவடியாகிற தாமரஸ புஷ்பத்தினுடைய தேனையே குடித்து ஜீவிக்கிற பெண் வண்டுபோலும் இருக்கிறாய். அதாவது பெருமாளுடைய திருவடியின் அனுபவமே உனக்கு ஜீவாதாரமாகவும் போஷகமாகவும் போக்யமாகவும் இருக்கிறது. தேன் நிறைந்த தாமரைப் பூவை விட்டு அல்ப ரஸமுள்ளதும் முள்ளுள்ளதுமான மற்ற புஷ்பங்களை வண்டு * தேடாததுபோல் நீ அல்பமான இதர தெய்வங்களை ஆச்ரயிக்கிறதில்லை. இப்படி பகவத்விஷயத்தில் செயலினாலும், ஜ்ஞானத்தினாலும், வார்த்தையினாலும், பக்தியி

---

* குறிப்பு— பிரதிபத அர்த்தத்தில் காட்டியபடி ஸ்லேஷையால் பாதுகைக்கு பெண்வண்டோடு ஸாம்யம் சொல்லப்படுகிறது. வண்டு வேகமாக சுற்றும்போது வேகத்தினால் அதின் மார்க்கம் தத்க்ஷணத்தில் ஒரு கருப்புக்கோடு அல்லது கயிறு போல் தென்படும். அதை மன்மதனுடைய புஷ்பமயமான வில்லுக்கு நாண்கயிறாக வர்ணித்திருக்கிறது. மேலும் சுலோகத்தில் பதங்களின் ஸ்திரீலிங்கத்தால் ஒரு காமினியான பதிவ்ரதாஸ்திரீயின் லக்ஷணங்களும் ஸூசிக்கப்பட்டிருக்கிறது. அதாவது தன் பிரியதமன் விஷயத்தில் அவளுடைய சிருங்கார சேஷ்டைகள், அவள் செய்துகொள்ளும் அழகு, அவள் கொஞ்சி கொஞ்சிச் சொல்லும் வார்த்தைகள், அவளுடைய விரஹவ்யஸநமும் அதனால் உண்டாகும் தேஹவைவர்ண்யமும், புருஷனை அடைந்து அனுபவித்தாலல்லது தரிக்கமாட்டாத அபிநிவேசமும் (ஆசையின் மிகுதி). இதுமாதிரி லக்ஷணங்கள் பாதுகைக்கு பெருமாள் விஷயத்திலும் வண்டுகளுக்கு புஷ்பவிஷயத்திலும்போல் எல்லா உண்மையான பக்தர்களுக்கும் பெருமாள் விஷயத்தில் உள்ளது.

ணுலும், விருத்தியினுலும், (விருத்தியாவது ஜீவனம்) பாதிவ்ருத்யத்தாலும் மிகவும் உயர்ந்தவளான உன்னை (நாங்கள் பரமக்ஷேமத்தை அடையும்பொருட்டு) க்ஷணம்கூட விடாமல் கொண்டாடக்கடவோம். அதாவது உன் விஷயத்தில் பரிபூர்ண பக்தி பண்ணக்கடவோம்.

ஸ்ரீஆழ்வார் முதலிய ஸதாசார்யர்களுடைய சாஸ்திரீய அநுஷ்டான ப்ரகாரங்களும் (விஹார) ஸ்வஸித்தாந்த அந்ய ஸித்தாந்தங்களில் (பக்ஷ)உள்ள ஜ்ஞானமும் அல்லது நல்லதான ஸ்வஸித்தாந்தத்திலுள்ள ஈடுபாடும்; எல்லா உண்மையான பகவத் பக்தர்களுக்கும்கேட்கும்போதே பகவானிடத்தில் மிகுந்தஆசையைஉண்டுபண்ணும்படியாய்அவர்கள் ப்ரீதிஉள்ளடங்காமல்பெருமாள் விஷயமாக பேசும் வார்த்தைகளும், (ஸஂஜல்ப)பெருமாளுடைய பிரிவினுல் அவர்களுக்கு உண்டாகும் விரஹதாபமும் அதனுல் ஏற்படும் சரீரவைவர்ண்யமும் மிக அழகாக லோகவிலக்ஷணமாக விளங்கும். அவர்கள் பெருமாளுடைய திருவடியின் பரமபோக்யதையை உள்ளபடி அறிந்து, ஸதா அதின் அநுபவரஸத்தையே தங்களுக்கு தாரகபோஷகபோக்யமாக எண்ணி இருப்பார்கள். ஆகையால் அஸாரத்தையும் அத்யல்பஸாரத்தையும் மட்டும் கொடுக்கக்கூடிய இதர தெய்வங்களையும் மனிதர்களையும் அவர்கள் ஆச்ரயிக்கமாட்டார்கள்; அப்படிப்பட்ட மஹான்களிடத்தில் மிகுந்த ப்ரீதி பண்ணுவதே நமக்கு பரமசிரேயஸ்ஸைக் கொடுக்கும்.

இப்படி உத்தமபக்திமான்களுக்கு பகவத் விஷயத்திலுள்ள ஈடுபாடும் அதின் கார்யங்களும்; பாதுகை, வண்டு, காமினியான ஸ்திரீ, இவர்களுடைய விருத்தாந்தத்தால் சப்தத்தாலும் அர்த்த ஸ்வபாவத்தாலும் இந்த ச்லோகத்தில் ஸூசிப்பிக்கப் பட்டிருக்கிறதுகள். (75)

(௬௦௬) கலகண்டா ஜடா ஶாரஶ ஶளஹிஶணீது ஶணீஹி
ஷ்ருஷிவதாரம்பிணீம் தாரஜஶாக்ஷகஷீபிதிஷி: ।
காபிருதயா கவி த்யபிகரா ஶயஶீகாராஷே ஶார
ரிவா வாஜாஜிக வாராஹி த்:ஷிரவாஷிஷ்யதா ॥

ஹே முராரிபோ பாதுகே :- முராரன் என்கிற அஸுரனுக்கு சத்துருவான பெருமாளுடைய பாதுகையே! (த்வம் - நீ) புராரிணா - த்ரிபுராஸுரனைக் கொன்ற சிவனுடைய, ஶிரஸா - தலையினாலே, வித்ருதா - நன்றாக அதாவது மிகுந்த வணக்கத்துடன் தூக்கப்பட்டவளாய்க் கொண்டு, கநகருசா - உன்னுடைய தங்கத்தின் காந்தியினாலே, ஜடாம் - (சிவனுடைய சம்மட்டை நிறமுள்ள) ஜடையையும், மணிபி: - உன்னுடைய ரத்னங்களாலே, உரகமௌலிமணீந் - (அவனுடைய தலைக்கு அலங்காரமாக இருக்கும்) பாம்புகளினுடைய தலைகளிலிருக்கும் ரத்னங்களையும், தரல - சலித்துக்கொண்டிருக்கிற, மௌக்திக - உன் முத்துக்களின், தீதிபி: - காந்திகளாலே, * த்ரிதிவதரங்கிணீம் - (அவனுடைய ஜடாமண்டலத்தில் சுழன்றுகொண்டிருப்பதும் அலைகளோடு கூடியதுமான) தேவலோகத்து நதியாகிற கங்கையையும், குடிலரோமதயா- உன்னுடைய நடுபாகத்திலுள்ள வளைவினால், ஶஶிகலாம்-அவன் தலையிலிருக்கும் பிறைச்சந்திரனையும், லகூகரோஷி - தாழ்மைப்படுத்துகிறாய்; அதாவது இளப்பமாகச் செய்கிறாய். சிவன் தலையிலுள்ள வஸ்துக்களெல்லாம் உன்னிடத்திலுள்ள வஸ்துக்களைக்காட்டிலும்யோக்யதையில் மிகவும் குறைந்தவைகள்என்று பொருள்.

(கருத்து) த்ரிபுராஸுரனை ஸம்ஹரித்த சிவன், முரன் என்கிற மஹாஸுரனைக் கொன்ற பெருமாளுடைய பாதுகையாகிற உன்னை மிகுந்த வணக்கத்துடனும் பக்தியுடனும்தான் க்ஷேமத்தை அடையும்பொருட்டு தன் சிரஸில் தரித்துக்கொள்

---

* 'தரங்க' என்றால் அலைக்குப் பெயர். 'தரங்க'த்தை உள்ளது தரங்கிணீ அதாவது நதி.

கிறான். அப்போது அவனுடைய செம்மட்டை நிறமுள்ள ஜடையின் காந்தியானது உன்னுடைய தங்கக் காந்தியினால் (ஸூர்யன் முன்பு விளக்குப்போல்) அமுக்கப்பட்டு ஒளியிழந்து போகிறது. அப்படியே மிகுந்த பிரகாசமுள்ள உன் ரத்னங்களுக்கு முன்பு அவனுக்கு சிரோபூஷணமான நாகங்களின் தலைகளில் இருக்கும் ரத்னங்களும் பிரகாசிக்கிறதில்லை. அவன் தலையில் வஸிக்கும் கங்கையின் அலைகளின் பிரகாசமும் உன் முத்துக்கள் சலிப்பதினால் உண்டாகும் பிரகாசத்துக்குமுன் சோபிக்கிறதில்லை. உன்னுடைய மத்யபாகத்திலுள்ள வளைவான வடிவும் அவன் தலையிலுள்ள பிறைச்சந்திரனுடைய வடிவைத் தோற்கடிக்கிறது. இப்படி த்ரிபுராஸுரனையும் த்ரிபுரஸம்ஹாரியான ருத்ரனையும் காட்டில் முராஸுரனும் முராரியான பகவானும் எவ்வளவு உயர்ந்தவர்களோ அவ்வளவு சிவன் தலைக்கு அலங்காரமான எல்லா வஸ்துக்களைக் காட்டிலும் ஸ்ரீபகவான் திருவடிக்கு அலங்காரமான பாதுகையின் வஸ்துக்கள் குணங்களால் உயர்ந்தவைகள் என்று இந்தவாசிக்கு ஓர் அளவும் சொல்லிற்றுகிறது.

இந்த சுலோகத்தால்பரமைகாந்திகளான ஸ்ரீ ஆழ்வார் ஆசார்யர்கள் பிரும்மதேஜஸ்ஸினாலும், ஜ்ஞானஸம்பத்தினாலும், ஜ்ஞானப்பிரகாசத்தினாலும், ஸத்துவப்பிரகாசத்தாலும், விநயம் முதலான ஆத்மகுணங்களாலும், பிரும்ம ருத்திராதிதேவர்களைக்காட்டிலும் எப்படி உயர்ந்தவர்களோ, அப்படியே அந்த மஹான்களை ஆச்ரயித்தவர்களும் தேவதாந்தரங்களையும், தேவதாந்தரங்களை ஆச்ரயித்தவர்களையும் காட்டிலும் எல்லா பிரகாரத்தாலும் உயர்ந்தவர்கள் என்பதும், அவர்களை ஜயிக்கத் தகுந்தவர்கள் என்பதும், அந்த உயர்த்திக்குக் காரணம் அவர்களுடைய ஆச்ரயத்தின் கௌரவம் என்பதும், ஆகையால் அப்படிப்பட்ட பரமைகாந்திகள் தேவதாந்தரங்களாலும் கொண்டாடத் தகுந்தவர்கள் என்பதும் சொல்லப்படுகிறது.

குறிப்பு— மூன்று லோகங்களிலும் ப்ரவஹிக்கிற கங்கையை உள்ளடக்கிக்கொண்டிருக்கிற சிவனுடைய ஜடையானது அவனுடைய தீர்க்க தபஸ்ஸையும் தபோபலத்தையும் காட்டுகிறது. அந்த தபோபலத்தைக் காட்டிலும் பரமைகாந்திகளுடைய தபோபலம் மேலானது என்று காட்டப்படுகிறது.

இந்த கிரந்தத்தில் தங்கக்காந்தி பிரம்மதேஜஸ்ஸுக்கும், ரத்னங்கள் ஸ்ரீஸூக்திகளுக்கும், ரத்னகாந்திகள் ஜ்ஞானப் பிரகாசத்துக்கும், முத்துக் காந்தி ஸத்வப்ரகாசத்துக்கும், வளைந் திருத்தல் குருகியிருத்தல் வணக்கம் ஒடுக்கம் முதலிய ஆத்ம குணங்களுக்கும் உட்கருத்தைக் காட்டும் ஸங்கேதங்கள். (76)

(௲௦௭) காலே தல்பபுஜங்கமவபுஷ: பஜத: காஷ்டாங்கதாம்
ஶேஷதாம் மூர்த்திம் காமபி வேத்மி ரங்கந்ருபதே:
சித்ராம் பதத்ரத்வயீம் | ஸேவாநம்ரஸுராஸுர
ஶ்ரேஷ்ட மௌலி ஶேஷாபடீஸம்ஸ்தா மூர்த்தா வஹ்நிக
யேவ யா வ்யயதே நிகேசரசயோ ரம்பாத: ||

ரங்கந்ருபதே: - ஸ்ரீரங்கநாதனுடைய, சித்ராம் - ஆச்சரியகரமான, பதத்ரத்வயீம் - இரண்டு பாதுகைகளை, காலே - ஸஞ்சார காலத்தில், காஷ்டாம் - கடைசியான எல்லையை, அதாவது, மிகவும் உயர்த்தியை, கதாம் - அடைந்திருக்கிற, ஶேஷதாம் - தாஸனாக இருப்பவன் தன் ஸ்வாமிக்குச் செய்யும் வேலையை அதாவது, இவ்விடத்தில் திருவடியை வஹிக்கிறதாகிற கைங்கர்யத்தை, பஜத: - அடைந்தவராயிருக்கிற, தல்ப புஜங்கமவபுஷ: - எப்போதும் பெருமாளுக்குப் படுக்கையாயிருக்கிற ஆதிசேஷனுடைய, காமபி - ஒரு விலக்ஷணமான அதாவது, ஒரு ஆச்சரியமான, மூர்த்திம் - திருமேனிவிசேஷமாக அதாவது, ஒரு உருவமாக, வேத்மி - அறிகிறேன்; யா - எந்த இரண்டு பாதுகைகளானது, ஸேவா - ஸேவிப்பதற்காக, நம்ர - வணங்கி இருக்கிற, ஸுராஸுரஶ்ரேஷ்ட - தேவாஸுரச்ரேஷ்டர்களுடைய, மௌலி - தலைகளையடைந்திருக்கிற, § ஶேஷா

§ ஶேஷாபடீ என்றால் பெருமாள் ஸந்நிதியில் மரியாதை செய்வதற்காக ஸ்ரீசடாரி ஸாதிப்பதற்கு முந்தி ஸேவார்த்திகள் தலையில் சுற்றிக் கட்டப்படுகிற பெருமாளுடைய வஸ்திரத்திற்குப் பெயர். இது வெளுப்பு வஸ்திரமாகவே இருப்பது வழக்கம் என்று இந்த சுலோகத்தால் ஏற்படுகிறது.

படீ - திருப்பரியட்ட வஸ்திரத்தினுடைய, ஸம்ஶ்லேஷே - சேர்த்தியை அடையும்போது, மௌக்திகா - (தன்னிடத்திலிருக்கும்) முத்துக்களினுடைய, ஜ்யோத்ஸ்நயா இவ - நிலவினால் அதாவது, வெளுப்புக் காந்தியினால் போல, புநஃ - மறுபடியும், நிர்மோக-தோலினுடைய, அதாவது, உரித்த தோலினுடைய, (பாம்புச்சட்டையினுடைய), யோகம் - சேர்க்கையை, வ்யஞ்ஜயதே - எல்லாருக்கும் தெரியப்படுத்துகிறதோ,

(கருத்து) ஸ்ரீரங்கநாதனுடைய ஆச்சரியகரமான பாதுகையை ஸேவிக்கும்போது எப்பொழுதும் பெருமாளுக்குப் படுக்கையாக இருப்பதுடன் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸமஸ்தவித கைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டு, சேஷத்வம் (அதாவது, வேலைக்காரனாக இருக்கும் தன்மை) ஒன்றே தனக்கு நிரூபகமாக (அதாவது, தன் ஸ்வரூபத்துக்கு அடையாளமாக) இருக்கும்படி, சேஷத்வத்தில் உயர்ந்த பர்வாவை (எல்லையை) அடைந்து, அதினாலேயே சேஷன் என்கிற திருநாமம் பூண்ட ஆதிசேஷபகவானால் தன்னுடைய சேஷத்வகாஷ்டையை உலகத்துக்கெல்லாம் வெளிப்படுத்திக்கொண்டு பெருமாளுடைய ஸஞ்சாரகாலத்துக்குத் தகுந்தபடி கைங்கர்யம் செய்வதற்காக எடுத்துக்கொள்ளப்பட்ட ஒரு உருவம் என்று நினைக்கிறேன். அப்படி ஆதிசேஷன்தான் பாதுகா உருவம் எடுத்துக்கொண்டிருக்கிறார் என்று ஊஹிப்பதற்கு இரண்டு காரணங்கள் காணப்படுகிறதுகள். அவையாவன—(1)ஆதிசேஷனை வெள்ளிமலைபோல் இருப்பவர் 'ரஜதாத்ரிநிபம்' என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. அப்படியே ஸ்ரீபாதுகையும் தன்னுடைய முத்துக் காந்தியினால் ஒரே வெளுப்பு உருவமாகக் காணப்படுகிறது. (2)மறுபடியும், தேவாஸுரசிரேஷ்டர்கள் பெருமாளை ஸேவித்து வணங்கும்போது அவர்கள் தலையில் பெருமாளுடைய வெளுப்பு திருப்பரியட்டத்தைச் சுற்றிக்கட்டி அதின்பேரில் பாதுகையை ஸாதிக்கும் ஸமயத்தில் பார்த்தால் அந்த திருப்பரியட்டம் ஆதிசேஷனுடைய உரித்த சட்டை(தோல்) போலும், அதன் பேரிலிருக்கும் பாதுகை ஆதிசேஷன் போலும் காணப்படுகிறது.

குறிப்பு— எல்லா நற்குணங்களும் பெருமைகளும் நிறைந்த ஒரு எஜமானனிடத்தில் நல்ல குணசாலியான ஒரு வேலைக்காரன் படிந்திருப்பதற்கும், ப்ரீதி பண்ணுவதற்கும், உயர்ந்தது தாழ்ந்தது என்கிற வித்தியாஸம் இல்லாமல் எவ்வித வேலையையும் செய்வதற்கும் ஓர் எல்லை இல்லை எஜமானனுடைய காலை தலையின் மேல் வைத்துக்கொள்ளுகிறது, காலின் கீழ் இருப்பது, காலால் துகைக்கும்படி ஒப்புக்கொள்ளுகிறது என்பது வேலைக்காரனுடைய மிகுந்த வணக்கத்தையும் பிரீதியையும், கௌரவம் பாராமல் எவ்விதமான தணிந்த வேலைகளையும் செய்வதில் ஆவலையும் காட்டுகிறது. இப்படி இருப்பவன் மிகவும் உயர்ந்த வேலைக்காரன். இதற்கு மேல் உயர்த்தி கிடையாது. இதைத்தான் 'சேஷத்வ காஷ்டை' என்று சுலோகத்தில் சொல்லியிருக்கிறது. உலகத்தில் காணப்படும் வேலைக்காரர்கள் இப்படிக்கு இல்லை. அவர்களுக்கு கௌரவம் உள்ள வேலை, இளப்பமான வேலை என்கிற வ்யத்தியாஸம் உண்டு. கௌரவமான வேலை இட்டால் அதைத் தங்களுக்குப் பெருமையாக நினைத்து நாலு பேர் அறியும்படி செய்வார்கள். கொஞ்சம் இளப்பமான வேலையாகத் தோன்றினால், வெட்கப்படுவார்கள்; கோபித்துக் கொள்ளுவார்கள்; விலகிப்போவார்கள். இதற்குக் காரணம் உலகத்தில் நல்ல எஜமானனும் இல்லை, நல்ல வேலைக்காரனும் இல்லை. ஆனாலும் கூடிய வரையில் நல்ல யஜமானனும் நல்ல வேலைக்காரனும் சேருமிடத்தில் பரஸ்பரமுள்ள பிரீதியையும், பிரீதிகாரியமான வேலைகளையும் அதனால் உண்டாகும் பரஸ்பரஸுகமும் உலகத்திலேயே காணலாம். அப்படியிருக்க, லோகவிலக்ஷணமான பிரபுவான பகவான் விஷயத்திலும் லோகவிலக்ஷணதாஸர்களான நித்தியஸூரிகள் முக்தர்கள் இந்த உலகத்திலேயே உள்ள உத்தமபாகவதர்கள் ஆசாரியர்கள் விஷயத்தில் இந்த ஒத்துமைக்குக் கேட்க வேண்டியதில்லை. ஆதிசேஷன் பெருமாளிடத்தில் உள்ள மிகுந்த ஆசையினால் குடையாகவும், ஸிம்மாஸநமாகவும், பாதுகையாகவும், படுக்கையாகவும், தலையணையாகவும், விளக்காகவும், பீதாம்பரமாகவும் இன்னும் பலவிதமான ரூபங்களை எடுத்துக்கொண்டு பெருமாளுக்குக் கைங்கரியம் செய்கிறார் என்று சொல்லியிருக்கிறது. அப்படியே மற்ற நித்தியஸூரிகளும் முக்தர்களும் எவ்விதமான உருவத்தையும்

ஒரே காலத்தில் அநேக சரீரங்களையும் பெருமாள் திருவுள்ளத்துக்கு அநுகுணமாக தங்கள் இஷ்டப்படிக்கு எடுத்துக்கொண்டு தங்களுடைய உள்ளடங்காத பிரீதியினால் பெருமாளுக்குக் கைங்கரியங்கள் செய்வதாகச் சொல்லியிருக்கிறது. வேலைக்காரனுடைய ஸௌகரியத்தையும் இஷ்டத்தையும் யோஜிக்காமல் எஜமானன் தன் இஷ்டப்படி வேலைக்காரனை உபயோகித்துக் கொள்ளும்படி வேலைக்காரன் பிரீதியினால் உட்பட்டிருப்பது வேலைக்காரனுக்கு ஸ்வரூபமும் குணமும். அப்படி ஆசாரியாள் கீழ் சிஷ்யனும், பர்த்தாவின் கீழ் பத்நியும், பிதாவின் கீழ் புத்திரனும், தமையன் கீழ் தம்பியும் இருக்கவேண்டியது ஸ்வரூபம். அப்படி இல்லாமலிருப்பது ஜ்ஞாநக்குறைவினாலும், குணக்குறைவினாலும் ஏற்படுகிறது. இச்சேஷத்துவ நிலைகளை எல்லாம் ஸ்ரீபகவான் ராமன், லக்ஷ்மணன், பரதன், சத்துருக்நன் என்கிற நான்கு ரூபத்தோடும், பிராட்டியோடும், உலகத்திற்கு வெளிப்படுத்தி இருப்பதை ஸ்ரீமத் ராமாயண கதையிலும் மற்ற விடங்களிலும் கண்டு கொள்வது.

இந்த சுலோகத்தால் ஏற்படும் உட்கருத்தாவது— சேஷத்வகாஷ்டைக்கு நிரூபகர்களான ஸ்ரீ ஆழ்வார்கள், ஆசார்யர்கள் முதலிய பாகவதோத்தமர்கள் ஆதிசேஷன் முதலிய நித்யஸூரிகளுடைய அவதார விசேஷங்கள். அவர்கள் பெருமாளுடைய லோகரக்ஷண வியாபாரத்தில் பெருமாளுக்கு ஸஹாயமாக இருந்து கைங்கர்யம் செய்வதற்காக உலகத்தில் ஆசார்யர்களாக அவதரித்து உலகத்துக்குப் பாடுபடுகிறார்கள். இவர்களை ஸத்வகுணமே மூர்த்தீகரித்துவந்தவர்கள் என்று சொல்லலாம். இவர்களை வணங்கி ஆச்ரயிக்கிறவர்களுக்கெல்லாம் ஸத்வகுணம் மேலிடும். ஸத்வகுணம் தலையெடுத்தவர்கள்தான் இவர்களை ஆச்ரயிப்பார்கள். உலகத்துக்கு இவர்கள் ஸத்வகுணத்தையும் ஜ்ஞாநத்தையும் ஏற்படுத்த ஏற்படுத்த இவர்களுடைய ஸத்வமும் ஜ்ஞானமும் மிக பிரகாசிக்கும் (தோலுரித்த பாம்பின் பிரகாசம்போல்). இவர்கள் தேவாஸுர சிரேஷ்டர்கள் முதலிய எல்லா ஜீவராசிகளாலும் கொண்டாடி ஆச்ரயிக்கத் தகுந்தவர்கள்.

இப்படி ஆசாரியர்கள் அவதாரபுருஷர்கள், ஸத்வமூர்த்திகள், ஸத்வப்ரதர்கள், சேஷத்வகாஷ்டையை அடைந்தவர்கள்.

அதனாலேயே ஸர்வபூஜ்யர்கள் என்பது இந்த சுலோகத்தால் காட்டப்படுகிறது. (77)

(கூ०அ) சந்த்ராபீடஶிவஞ்சந்த்ரஶிகரஸ்ரவத்ஸுதா
நிஷ்யந்த லேஶாஶ்லிஷ்டஸுரேந்த்ரஶேகரரஜ꞉
ஸாந்த்ராம் ஸ்தும꞉ பாதுகாம் । ப்ரஹ்மஸ்தம்ப
விபக்தஸீமவிவிதக்ஷேத்ரஜ்ஞஸ்ருஷ்டிஸ்திதித்வம்ஸா
நுக்ரஹநிக்ரஹ ப்ரணயிநீ யா ஸா க்ரியா
ரக்ஷிண꞉ ॥

சந்த்ராபீட - (பிறைச்சந்திரனை முடியிலுடையவனுடைய அதாவது சிவனுடைய, ஶிவஂஶசந்த்ர - தலையில் இருக்கும் சந்திரனுடைய, ஶிகர - நுனியிலிருந்து, ஸ்ரவத் - பெருகுகிற, ஸுதாநிஷ்யந்த - அமிர்தவெள்ளத்தினுடைய, லேஶ - ஒரு லேசத்தினாலே (அதாவது ஸ்வல்பத்தினாலே), ஆஶ்லிஷ்ட - கலந்திருக்கிற, ஸுரேந்த்ர - தேவசிரேஷ்டர்களுடைய, ஶேகர - தலையிலிருக்கும் மாலைகளுடைய, ரஜ꞉ - புஷ்பதூளிகளினாலே, ஸாந்த்ராம் - ரொம்பியிருக்கிற, அதாவது ரொம்பவும் சேறுபோல் ஒட்டிக்கொள்ளப்பட்டிருக்கிற, பாதுகாம் - பாதுகையை, ஸ்தும꞉ - ஸ்தோத்திரம் பண்ணுகிறோம், யா - யாதொரு பாதுகையானது, ப்ரஹ்ம - பிரும்மாவென்ன (அதாவது பிரும்மசரீரத்தை உடைய ஜீவனென்ன), ஸ்தம்ப - புல்லென்ன (அதாவது புல்சரீரத்தை உடைய ஜீவனென்ன) இவைகளாலே, விபக்த - பிரிக்கப்பட்டிருக்கிற, ஸீம - எல்லைகளை உடைத்தாயிருக்கிற, அதாவது, அவரவர்களின் கர்மங்களுக்குத் தகுந்தபடி ஜ்ஞானசக்திஸாகங்களால் மிகவும் உயர்ந்த பிறவியுள்ள பிரும்மா முதல் மிகவும் தாழ்ந்ததாய் அறிவு முதலானதுகளுக்கு யோக்யமில்லாமல அசேதந ப்ராயமாய் புல்சரீரமுடைய ஜீவன்வரையிலுள்ள, விவித - பல பிறவிகளையுடைய, க்ஷேத்ரஜ்ஞ - ஜீவர்களுடைய, ஸ்ருஷ்டி - ஸ்ருஷ்டி என்ன, ஸ்திதி - கொஞ்ச நாள் வைத்து ரக்ஷிக்கப்படுதலென்ன, த்வம்ஸ - அழித்தலென்ன, அநுக்ரஹ-

புண்யகர்மாக்களுக்குத் தக்கபடி நல்ல பலன்களைக் கொடுத்து அனுக்ரஹிக்கப்படுவதென்ன, 𑌨𑌿𑌗𑍍𑌰𑌹 - பாபகர்மாக்களுக்குத் தக்கபடி கெட்ட பலன்களைக்கொடுத்து தண்டிக்கப்படுவதென்ன இவைகளில், 𑌪𑍍𑌰𑌣𑌯𑌿𑌨𑍀 - ப்ரீதியுள்ளவளாயிருக்கிற அதாவது, இவைகளை ப்ரீதியோடு செய்கிறவளாயிருக்கிற, 𑌰𑌂𑌗𑌿𑌣𑌃 - ஸ்ரீரங்கநாதனுடைய, 𑌸𑌾 - அந்த, அதாவது ஆச்சரியசக்தி உள்ளதும் பிரஸித்தியுள்ளதுமான, 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 - லீலாஸங்கல்ப ரூபமான வியாபாரமோ (விளையாட்டின் பொருட்டு நினைக்கிற நினைவோ.) இதனால் பகவானுடைய ஸங்கல்பம் பாதுகாதினம் என்று பொருளாகிறது.

(கருத்து) சிவனும் மற்ற தேவதைகளும் பெருமாள் பாதுகையை தங்கள் தலைகளில் வைத்துக்கொள்ளுகிறார்கள். அப்போது பாதுகையில் படும் சிவனுடைய சிரோபூஷணமான பிறைச்சந்திரனுடைய நுனியிலிருந்து பெருகும் அமிருதப்பிரவாஹத்தினுடைய துளிகளும் தேவதைகளுடைய முடிமாலைகளிலிருக்கும் புஷ்பரேணுக்களும் (தூள்களும்) ஒன்றாக சேறுபோல் கலந்து பாதுகையின் பேரில் கெட்டியாக ஒட்டிக்கொண்டு விடுகின்றன. அப்படி ஸமஸ்தமான தேவசிரேஷ்டர்களாலும் வணங்கப்படும் பெருமையை உடைய பாதுகையை முமுக்ஷுக்களான நாம் ஸ்தோத்திரம் பண்ணுகிறோம். இவ்வளவுமட்டும் இல்லை அதின் பெருமை. இன்னும் அதை ஸ்ரீபெருமாளுடைய ஆச்சரியகரமான ஸங்கல்பசக்தியினுடைய உருவமென்றே அறியவேண்டும். அந்த ஸங்கல்பம் (நினைவு) என்ன ஆச்சரியமான வேலைகளைச் செய்கிறது என்றால், மிகுந்த ஸுக்ருதவசத்தால் பிர்ம்ம சரீரத்தை அடைந்திருக்கிற ஜீவன்கள் முதற்கொண்டு மிகுந்த துஷ்கர்மவசத்தால் புல் சரீரத்தை அடைந்திருக்கிற ஜீவன்கள் வரையில் உள்ள எல்லைகளுக்கு உட்பட்ட எல்லா ஜீவராசிகளுடையவும் ஸ்ருஷ்டி (பிறப்பு, அதாவது - கர்மத்துக்குத் தக்கபடி ஒரு சரீரத்தோடு சேர்த்து ஆத்மக்ஷேமத்துக்குப் பிரயத்தினப்பட யோக்கியதையை உண்டுபண்ணுதல்) ஸ்திதி (ரக்ஷணம் அதாவது, கர்மபலன்களை அநுபவிப்பதற்கும் ஆத்மக்ஷேமத்திற்குப் பாடுபடவும் அவகாசம் கொடுத்து சரீரத்தோடு கொஞ்சகாலம் வைத்துக் காப்பாற்றுதல்) ஸம்ஹாரம்,

(அழித்தல் அதாவது, (1) பலனைக்கொடுக்க ஆரம்பித்த கர்மங்கள் முடிந்த உடன், எவ்வளவு சரீரங்கள் கொடுத்தும் ஆத்மக்ஷேமத்தைத் தேடாமல் ஜீவன்கள் ஸம்ஸாரவழியினாலே அழுந்தி கெட்டுப் போவதைப் பார்த்து கொடுத்த சரீரத்தை அழித்தல், (2) அடியோடு சரீரமில்லாமலும், நல்லது கெட்டது ஒன்றுக்கும் யோக்கியமில்லாமலும் கொஞ்சகாலம் வைத்தல், அதாவது பிரளயம் செய்வது,) அநுக்ரஹம், (ஸுக்ருதங்களால் ஸந்தோஷமடைந்து ஸுகரூபமானதும் ஆத்மாவிற்கு ஹிதமானதுமான நல்ல பலன்களைக் கொடுத்து ஈசுவரன் திருப்தி அடைதல்) நிக்ரஹம், (கெட்ட கர்மங்களால் கோபத்தை அடைந்து துக்கரூபமானதும், ஆத்மநாசத்திற்கு ஹேதுவானதுமான பலன்களைக் கொடுத்து தண்டித்தல்) இவைகளை இதர ஸஹாயமன்னியில் விளையாட்டாக நடத்துகிறது. அப்படி ஸர்வஜகத்வியாபாரங்களுக்கும் காரணமாயிருப்பதை அறிந்துதான் தேவசிரேஷ்டர்கள் அந்த திவ்விய பாதுகையை சிரஸால் வணங்கி தரித்து அந்த அநுக்ரஹத்தைப் பெற்று தர்மம், அர்த்தம், காமம் என்கிற மூன்று புருஷார்த்தங்களையும் அடைந்து அவைகளைக் காப்பாற்றியும் கொள்ளுகிறார்கள். அந்த பாதுகாஸம்பந்தம் இல்லாவிட்டால் பிருஹ்மாவும் கெட்டுப்போய்விடுவார். அந்த பாதுகாஸம்பந்தம் நேர்ந்தால் புல்ரூபமான ஜந்துக்களும் (ஸ்ரீராமாவதாரத்தில் காட்டியபடி) மோக்ஷம் வரையிலுள்ள நான்கு புருஷார்த்தங்களையும் அடைந்து க்ஷேமப்பட்டுவிடும்.

இப்படியே உட்கருத்திலும், முன்சுலோகத்தின்படி பரமைகாந்திகளும் சேஷத்வகாஷ்டையை அடைந்தவர்களும் பெருமாளுக்கு மிகவும் அந்தரங்கர்களுமான ஸ்ரீ ஆழ்வார்முதலியஸதாசாரியர்கள் ஸர்வலோகத்தாலும் கொண்டாடி ஆச்ரயிக்கத்தக்கவர்கள். அவர்களைப் பெருமாளுடைய ஸங்கல்பரூபம் என்று அறியவேணும். அவர்களை ஆச்ரயித்துத்தான் எல்லா க்ஷேமங்களையும் அடையவேணும். அவர்களை ஆச்ரயிக்காமல் உதாஸீநம் செய்தாலும், அநாதரித்தல் முதலியது செய்தாலும், எல்லா கஷ்டங்களுக்கும், ஆத்மா நாசத்துக்கும் காரணமாகும். ஒருவன் எவ்வளவு உயர்ந்தவனானாலும் ஸரி, தாழ்ந்தவனானாலும் ஸரி, அவன் விஷயத்தில் பெருமாளுக்கு அநுக்ரஹஸங்கல்பமோ நிக்ரஹஸங்கல்பமோ (அதாவது மோக்ஷம் வரையிலுள்ள நன்மைகளைக்கொ

டுத்துக்காப்பாற்றவேணும்என்கிற நினைவோ, அல்லது நரகம் முதலிய துக்கங்களையும் இளப்பமான மனுஷ்ய ஜன்மங்களையும், பசு பக்ஷிகள் முதலிய திர்யக்ஜன்மங்களையும் ஸ்தாவர ஜன்மங்களையும் கொடுத்து கடைத்தேராமல்படி செய்துவிடவேணும் என்கிற நினைவோ) இருப்பதை அவன் ஸதாசாரியர்களை ஆச்ரயிப்பதையும் ஆச்ரயிக்காமல் உதாஸீந ப்ரத்வேஷாதிகளைச் செய்வதையும் கொண்டு தீர்மானமாக அறியலாம். இந்த சுலோகத்தால் ஸதாசார்யர்களை அடைந்தவர்கள்தான் ஆத்மக்ஷேமத்தை அடைவார்கள்; அப்படி அடையாவிட்டால் இந்த ஜன்மம் வீணாய்ப்போவதுடன் மேல் ஜன்மங்களிலும் அனிஷ்டபரம்பரைகளுக்கு காரணமாகும் என்பது ஸூசிக்கப்படுகிறது. (78)

**(௭௯) ஶ்ரிய: நூபுரஶிஞ்ஜிதேந ப்ரணிதம் நாத³ம்**
**தவாகர்ண்ய நிக³மாந்தஸுரபி⁴ துளஸீ**
**தா³மோத்த²ம் ஸௌரப⁴ம் ஜிக்⁴ரந் | காலே க்வசிதா**
**க³தம் கருணயா ஸார்த⁴ம் ஶ்ரியா சா புர:**
**ப⁴ஜேயம் ஶ்ரீநிவாஸ பரதரம் ப⁴வதீக்ஷ**
**ணம் தை³வதம் ॥**

ஶ்ரிய: - ஸ்ரீமஹாலக்ஷ்மியினுடைய, நூபுர - தண்டையினுடைய, ஶிஞ்ஜிதேந - சப்தத்தினாலே, ப்ரணிதம் - விருத்தி பண்ணப்பட்ட, தவ - உன்னுடைய, நாத³ம் - சப்தத்தை, ஆகர்ண்ய - கேட்டுக்கொண்டும், நிக³மாந்த - வேதாந்தமாகிற, அல்லது வேதாந்தத்தினுடையதுபோன்ற, ஸுரபி⁴ - வாஸனையை உடைய, துளஸீதா³ம - துளஸிமாலையிலிருந்து, உத்த²ம் - உண்டாயிருக்கிற, ஸௌரப⁴ம் - வாஸனையை, ஜிக்⁴ரந் - முகர்ந்துகொண்டும், (அஹம் - நான்) க்வசித் - ஒரு, காலே - காலத்தில் (அதாவது மரணகாலத்தில்), கருணயா - தயையோடும் (அல்லது 'தை³வீ காருண்யரூபயா' 'ஶ்ரீயஸம் ஶ்ரீநிவாஸஸ்ய காருண்யரூபிணீம்' என்று சொல்லுகிறபடி கருணாமூர்த்தியான மஹாலக்ஷ்மியோடும்) ஶ்ரியா ச ஸார்த⁴ம் - உன்னோடும் கூட, புர: - முன்னே, ஆக³தம் - வந்திருக்கிற, பரதரம் - எல்லாரைக் காட்டிலும் உயர்ந்த

வராயிருக்கிற, பத்மேக்ஷணம் - தாமரைப்பூப்போன்ற அழகிய திருக்கண்களையுடைய, தைவதம் - பரதேவதையான நாராயணனை, பச்யேயம் - பார்க்கக்கடவேன்.

(கருத்து) வாராய் கல்விழைத்த பாதுகையே! என்னுடைய அந்திமதசையில் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் திருவடியில் அணிந்திருக்கும் தண்டைச்சிலம்பையின் ஓசையோடுகூட கலப்பதினால் விசேஷமாக (அதாவது பெரிதாக) சப்திக்கிற உன்னுடைய நாதத்தை காது குளிரக் கேட்டுக்கொண்டும், வேதவாஸனையோடு (அல்லது வேதவாஸனை போன்ற வாஸனையோடு) கூடிய துளஸிமாலையின் பரிமளத்தை க்ராணேந்த்ரியம் திருப்தியடையும்படி முகர்ந்துகொண்டும் தனக்கு ஸமானமானவர்களும் மேலானவர்களும் ஒருவரும் இல்லாதபடி எல்லாரையும்விட மிக உயர்ந்தவரும் 'கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ' என்கிற சுருதியின்படி நிரம்ப சேறுள்ளதாய் மிகவும் ஆழமான ஜலத்தில் நன்றாகச் செழுமையாக வளர்ந்திருக்கும் தாமரைத்தண்டில் உண்டாகி ஸூர்ய கிரணங்களால் நல்ல மலர்ச்சியை அடைந்திருக்கிற தாமரைப்புஷ்பம் போல் மிகவும் அழகிய திருக்கண்களை உடையவரும் அந்த அடையாளத்தினாலேயே பரதேவதையென்று கண்டுபிடிக்கப்பட்டவருமான நாராயணனை தயையோடும் (அல்லது மஹாலக்ஷ்மியோடும்) உன்னோடும் கூட என் கண்முன் நான் கண்டு ஸேவிக்கவேணும்.

குறிப்பு— வேதாந்தங்கள் ஸ்ரீமந்நாராயணனே பரதத்வம் என்றும் ஜகத்காரணவஸ்துவென்றும், அவனே பரம ப்ராப்யன் அவனே ப்ராபகன் என்றும், ஸர்வாந்தர்யாமி என்றும், எல்லா சேதநாசேதனங்களையும் சரீரமாக உடையவனென்றும், அந்த பகவானையே பற்றி முழுவதும் பேசுவதால் அவைகள் பெருமாளுடைய வாஸனையை அடைந்திருக்கிறதுகள். அப்படியே துளஸிமாலையும் எப்பொழுதும் பெருமாளுடைய திருமேனியையே ஆச்ரயித்திருப்பதால் பெருமாளுடைய வாஸனையை அடைந்திருக்கிறது. ஆகையால் இரண்டின் வாஸனைகளும் ஒரே மாதிரியானது என்று சொல்லியிருக்கிறது. வாஸனையாவது ஒரு வஸ்துவிலிருந்து வெளிக்கிளம்புகிற அவ்வஸ்து

வின் ஸௌக்ஷ்மபாகம். வேதாந்தத்தைக் கொண்டு அதனால் ப்ரதிபாத்யமான பகவானுடைய ஸங்கதியை அறிகிறோம். பெருமாளுடைய துளஸிமாலையின் பரிமளத்தைக்கொண்டு பெருமாளுடைய ஸங்கதியை (திருமேனி வாஸனையை) அறிகிறோம்.

பெருமாளை நம்முடைய இந்த ப்ராக்ருதமான கண் முதலிய இந்திரியங்களால் அறியமுடியாதாகையால் இந்த சுலோகத்தில் மானஸ ஸாக்ஷாத்காரத்தை, அதாவது இவ்விடம் அந்திம ஸ்ம்ருதியை, பிரார்த்திக்கிறதாகக் கொள்ளலாம். அல்லது 901-வது சுலோகத்தின்படி இவிடத்திலும் வேறொரு ப்ரகாரமாக அந்திமகாலத்தில் பெருமாள் தாயார் பாதுகை இவர்களுடைய ஸேவை இந்த இந்திரியங்களாலேயே அறியும்படி கிடைக்கவேணுமென்று பிரார்த்திக்கிறதாகவும் சொல்லலாம் அப்போது இவ்விடத்தில் சப்தத்தால் ஸ்பஷ்டமாக மூன்று பேர்களுடையவும் (பெருமாள் தாயார் பாதுகை) ஸேவையை பிரார்த்திப்பதையும் ப்ரகாரபேதத்தையும் புநருக்தி (சொன்ன விஷயத்தையே சொல்வதாகிற) தோஷத்துக்குப் பரிஹாரமாகக் கொள்ளலாம்.

ஆனால் இவ்விடத்தில் அந்திமஸ்ம்ருதியை ப்ரதிபாதிப்பதாகச் சொல்வதே விசேஷம். அந்திம ஸ்ம்ருதியாவது மரணகாலத்தில் மற்ற எல்லா இந்திரியங்களும் அடங்கினபிறகு மனது அடங்குவதற்குமுன் தோன்றுகிற கடைசியான நினைவு. இந்த நினைவு எதைப் பற்றி வருகிறதோ அதற்குத் தகுந்த ஜன்மம் வந்துவிடும். பெருமாளைப் பற்றி வந்தால்தான் பெருமாளை அடைந்து இந்த ஸம்ஸாரத்தைக் கழிக்கலாம். அதற்காக இங்கு பெருமாளைப் பற்றின அந்திமஸ்ம்ருதியைப் பிரார்த்திக்கிறது. பக்தன் இந்த நினைவை யோகபலத்தால் தன் பிரயத்னத்தினாலேயே ஸாதிக்கவேணும். அது இப்படி வந்தால்தான் அவனுக்கு மோக்ஷம். சரணாகதனுக்கு இந்த நினைவை பகவான் தயையினால் தானாகவே (அதற்காக இவனால் பிரார்த்திக்கப்பட்டோ பிரார்த்திக்கப்படாமலோ) கொடுத்து தன்னிடம் அழைத்துப்போகிறான் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. அப்படி பெருமாள் தயை பண்ணும்பொருட்டு இவ்விடம்

பாதுகையை புருஷகாரத்திற்காக (சிபார்சுக்காக) பிரார்த்திக்கிறது.

இவ்விடத்தில் பாதுகையின் ஸ்தானத்தில் ஆசார்யர்கள் என்று வைத்துக்கொண்டால் உட்கருத்தும் ஏற்பட்டுவிடுகிறது. மேற்சொன்ன அந்திமஸ்ம்ருதி ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு, அதாவது மறுபடியும் ஒரு கர்மசரீரத்தை அடையாமல், பகவானை அடைவதற்கு அவசியமானதாலும், அசக்தர்களாய் சரணாகதர்களானநமக்கு நமது பிரயத்நத்தால் அதைஸாதிக்கமுடியாதாகையாலும் அது பெருமாளுடைய தயையினாலேயே ஏற்படவேண்டியதாகையாலும், அதற்காகப்பெருமாளை நேரில் பிரார்த்திப்பதைக் காட்டிலும் ஆசார்யர்களையே பிரார்த்திப்பது நிபுணக்ருத்யம் (கெட்டிக்காரனுடைய வேலை) ஆகையாலும் இவ்விடம் அதற்காக ஆசார்யர்களையே பிரார்த்திக்கிறது. இவ்விடத்தில் பாதுகாநாதனும் லக்ஷ்மீநூபுரநாதனும் சேதநர்கள் விஷயமாக ஆசார்யர்களுடைய 'ஸம்பத்' (எனக்கு இந்த உபாயம் நிறைவேற வேண்டும்) என்கிற பிரார்த்தனவாக்யத்துக்கும் அதற்கு பதிலாக தாயாருடைய 'ஸம்பத்' (அப்படியே ஆகட்டும்) என்கிற அங்கீகாரவாக்யத்துக்கும் ப்ரதர்சநமாகவும்கொள்ளலாம்.

இப்படி இந்த சுலோகத்தால் அந்திமஸ்ம்ருதி பிரார்த்திக்கப்படுகிறது. (79)

(௯௮0) ஸமதி க்ஷிதிஸ்ய ஸமிதாம் ஸௌரேஸ்ததாம் மதி
ஷு பாதுகே ரங்கீ। கமலாம் ஸஹஜமுபரி
ஸ்யாகரிவார காசுமலிவரி ஸம்ஸிகா ஸஹஸ்ர:॥

இதி ஸ்ரீ கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய
க்ருதிஷு ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
ஸ்ரீணாம்பஸ்திரேகோநசீதிம்ஸீ ॥

வாஹகே - வாராய் பாதுகையே! (அதாவது பெருமாள் திருவடியையே ஆச்ரயித்து திருவடி கைங்கர்யத்தையே செய்கிறவளே,) ஸ: - அந்த (அதாவது ஆச்ரிதர்கள் விஷயத்தில் எல்லையில்லாத வாத்ஸல்ய, ஸௌலப்ய, ஸௌசீல்ய ஔதார்ய குணங்களையுடையவரென்று பிரஸித்தரான), ரங்கபதி - ஸ்ரீரங்கநாதனும், க்ஷிதிவ்யவஹிதாம் - நடுவில் பூமி என்கிற ஒரு மறைவினாலே ஒதுங்கியிருக்கிற, த்வாம்-உன்னை, ஸஞ்சார காலத்தில், கமடபதி - ஆதிகூர்மமென்ன, நாகராஜ பரிவ்ருட - நாகராஜனென்ன, அதாவது ஆதிசேஷனென்ன, கரிவர - உயர்ந்த யானைகளென்ன. அதாவது எட்டு திக் கஜங்களென்ன, குலசிகரி - ஸப்த (ஏழு) குலாசலங்கள் (பெரிய பர்வதங்கள்) என்ன இவைகளாகிற ஸம்ஹிதை, வேஷை: - வெவ்வேறுவிதமான வேஷங்களாலே, வஹதி - தானே தூக்குகிறார்.

(கருத்து) ஓ பாதுகையே! ஸஞ்சாரகாலத்தில் நீ பெருமாளை (ப்ரத்யக்ஷமாக) தூக்குகிறாய். அப்போது அவரும் உன்னை பூமி என்கிற மறைவை நடுவில் வைத்து ஆதிகூர்மம் ஆதிசேஷன் எட்டு திக்கஜங்கள், ஏழு குலாசலங்கள், என்கிற பல வேஷங்களை எடுத்துக்கொண்டு தூக்குகிறார். இப்படி அவர் செய்வதற்குக் காரணம் ஆச்ரிதையாய் அநந்யபரையான உன்னிடத்திலுள்ள ஆதராதிசயமும் அவருக்கு ஆச்ரிதர்கள் விஷயத்திலுள்ள வாத்ஸல்ய ஸௌலப்ய ஸௌசீல்ய ஔதார்யாதி குணங்களும்.

ஆதிகூர்மம், ஆதிசேஷன், எட்டு திக்கஜங்கள், ஏழு குலாசலங்கள் இவைகளால், பூமி தூக்கப்படுகிறது. பூமி பாதுகையைத் தாங்குகிறது. பாதுகை பெருமாளைத் தாங்குகிறது. உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களும் பெருமாளுக்கு சரீரமானதாலும் "யத்யத்விபூதிமத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவவா। தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ஸஸம்பவம்॥" என்று கீதையில் ஸ்ரீ பகவான் அருளிச் செய்தபடி உலகத்தில் எந்த எந்த வஸ்துக்களில் பலவிதமாய் விசேஷப் பெருமைகள் தென்படுகிறதோ, அவைகளெல்லாம் பெருமாளுடையபெருமையில் ஒரு பாகத்திலிருந்து

உண்டானவைகளாய், அவைகளெல்லாம் பெருமாளுடைய விசேஷ உருவங்கள் என்று சொல்லப்படுவதாலும், பூமியையும் பூமிமூலமாய் பாதுகையையும் தாங்கும் ஆதிகூர்மம் முதலிய வஸ்துக்களெல்லாம் பெருமாளுடைய உருவங்களாகின்றன.

'கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி' என்று சொல்லப்படுகிறவரும் 'கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்। ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்பதி' என்று சொல்லும் குணமுடையவருமான பகவான் அநந்யகதிகளும் அநந்யப்ரயோஜநர்களுமான ஆச்ரிதர்கள் விஷயத்தில் எவ்வளவு அல்பமான கைங்கரியங்களையும் அடைந்தும் அதற்குப் பதிலாக மோக்ஷபர்யந்தமான புருஷார்த்தங்களையெல்லாம் தன்னுடைய பரமௌதார்யத்தால் அவர்களுக்குக் கொடுத்தும், தகுந்த பதில் ப்ரயோஜனம் செய்யாதவனாகவும் தீராக் கடன் பட்டவன்போலும் நினைக்கிறான். ஆகையால் ஸர்வேசுவரன் ஸதாசார்யர்களையும் அவர்களைச் சேர்ந்தவர்களையும் அவர்கள் தன்னை அநந்யகதிகளாய் அநந்ய ப்ரயோஜநர்களாய் ஆச்ரயித்ததையே தனக்குச் செய்த பெரிய உபகாரமாக பாவித்து, அவர்களை இங்கிருந்த காலமும் ரக்ஷித்து மரணமடைவதற்கு முன் அந்திமஸ்ருதியைக் கொடுத்து மூர்த்தன்ய நாடியால் சரீரத்திலிருந்து வெளிப்படுத்தி ஸூக்ஷ்ம சரீரத்தோடு அர்ச்சிராதி மார்கத்தில் வெகு பெருமையுடன் தன் மனுஷ்யர்களைக் கொண்டு வழி நடத்தி பிராகிருத சரீரத்தைக் கழித்து தன் ஸ்தானமான பரமபதத்திற்குக் கொண்டுபோய் அப்ராக்ருத திவ்யதேஹத்தையும் ஜீவனுக்கு ஸ்வபாவமான ஸ்வரூபத்தையும் குணங்களையும் வெளிப்படுத்தி பரிபூர்ண ப்ரும்மானுபவத்தைக் கொடுக்கிறான் என்பது இந்த சுலோகத்தால் ஸூசிப்பிக்கப்படுகிறது.

சுலோகத்தில் 'வஹதி' என்கிறபதம் அர்ச்சிராதிமார்க்கத்தில் நடத்துவதைக் காட்டுகிறது. 'க்ஷிதிவ்யவஹிதாம்' என்பது ஸூக்ஷ்மசரீரம் விரஜை நதிக்கரை வரையில் அநுவர்த்திப்பதை உபலக்ஷிக்கிறது, 'பதிஷு' என்பதால் அர்ச்சிராதிமார்க்கம் சொல்லப்படுகிறது. "ஸம்பதி— ஹேதோ:" என்பது வழிநடத்தும் ஆதிவாஹிக புருஷர்களுக்கு ப்ரதர்சனம். ஸ்வஸ்

ஸ்வரூபாவிர்பாவமும் பரிபூர்ண ப்ரம்மானுபவ ப்ராப்தியும் மற்ற வைகளும் அர்த்தாத் ஸித்திக்கிறது.

இப்படி முதல் சுலோகத்தில் மோக்ஷ ப்ரார்த்தனையோடு ஆரம்பித்த இந்த ப்ரகீர்ணபத்ததி (பல ஸங்கதிகளைச் சொல்லுகிற) பத்ததியானது முமுக்ஷு விஷயங்களையெல்லாம் ப்ரதிபாதித்து அர்ச்சிராதி கதியையும் பரிபூர்ண ப்ரும்மானுபவ ப்ராப்தியையும் ஸூசிப்பிக்கிற இந்த கடைசீ சுலோகத்தால் தலைக்கட்டு கிறது. (80)

ஸ்ரீ ரங்கநாயகிஸமேத ஸ்ரீரங்கநாதாய நம: ||

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ||

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜ மஹாதேசிகாய நம: ||

இருபத்தோன்பதாவதான

ப்ரகீர்ணபத்ததி

முற்றிற்று.



ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ॥
ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ॥

## ஸ்ரீபாதுகாஸஹஸ்ரே சித்ரபத்ததி: த்ரிம்ஶீ

(கூகக) ப்ரதிஷ்டாம் ஸர்வசித்ராணாம் ப்ரவக்ஷ்யே மணிபாதுகாம் । விசித்ரஜகதாதாரோ விஷ்ணுர்யத்ர ப்ரதிஷ்டித: ॥ (க)

(ப-ரை) ஸர்வ - ஸமஸ்தமான, சித்ராணாம் - 1 சித்திரங்களுக்கும், ப்ரதிஷ்டாம் - (அதிகாரியாக இருப்பதாலோ,

1 சித்ரங்களாவன— (1) அனேக வர்ணமுள்ள பல ரத்நங்களின் சேர்க்கையினால் ஏற்படும் நிறத்தின் அழகு; (2) சங்கு பத்மம் முதலான உருவங்கள் போன்ற பலவித அலங்காரார்த்தமான ஆகாரங்கள்; (3) சப்தப்ராஸம்— அதாவது சுலோகத்தின் பாதங்களிலும் பதங்களிலும் ஒரேமாதிரியான ஒரோர் அக்ஷரங்களை இரட்டித்தல் யமகம். அதாவது வரிசையாகப் பல எழுத்துக்களை, சுலோகபாதங்களிலும் சுலோகத்தின்பாதியிலும் முழு சுலோகத்திலும் பல மாதிரிகளாக இரட்டித்தல். பந்தம் அதாவது சுலோகத்தின் எல்லா எழுத்துக்களையும் பல மாதிரியான சித்திரங்களிலுள்ள கட்டங்களுக்குள் அடைத்து அந்த சித்ரங்களிலிருந்து சுலோகத்தை வாசிக்கும்படி எழுத்துக்களைச் சேர்த்தல். கதி போவது, ப்ரதிகதி திரும்புவது— அதாவது சுலோகத்தில் பாதத்திலும் பாதியிலும் முழுசுலோகத்திலும் உள்ள எழுத்துக்களை முதலிலிருந்து கிரமமாக வாசித்தாலும், கடைசியிலிருந்து தலைகீழாகத் திருப்பி வாசித்தாலும் சுலோகம் ஒரேமாதிரியாக இருக்கும்படி எழுத்துக்களைச்சேர்த்தல் முதலான சப்தசித்ரங்கள், அதாவதுபதங்களுடையவும் அக்ஷரங்களுடையவும் விநோதமான சேர்க்கை. (4) உபமானம் முதலிய காவ்ய அலங்காரங்களினால் அர்த்தங்களை விநோதமாக வர்ணிக்கிறதாகிய அர்த்தசித்ரங்கள். (5) அசுவத்தாமாவின் பிரம்மாஸ்திரத்தால் கர்ப்பத்தில் கொளுத்தப்பட்டுக் கரிக்கட்டையாய் விழுந்த பரீக்ஷித்தைப் பிழைப்பு மூட்டுகிறது, கௌதமசாபத்தால் கல்லாய்க் கிடந்த அஹல்யையை மறுபடி பெண்ணாக்குகிறது முதலான ஆச்சரிய காரியங்களைச் செய்கிறதாகிற வியாபார சித்ரங்கள்.

1 விஷயமாக இருப்பதாலோ) இருப்பிடமாயிருக்கிற, மணி பாதுகாம் - ஸ்ரீரங்கநாதனுடைய கல்லிழைத்த பாதுகையை, ப்ரபத்யே - உபாயமாக நம்புகிறேன், யத்ர - எந்தப் பாதுகையினிடத்தில், விசித்ரா - ஆச்சரியகரமான, ஜகத: - உலகத்துக்கு, ஆதார: - ஆதாரமாயிருக்கிற, விஷ்ணு: - ஸர்வவ்யாபியான ஸ்ரீரங்கநாதன், ப்ரதிஷ்டித: - ஒரு தொந்தரவுமில்லாமல் ஸுகமாக எப்பொழுதுமிருக்கிறாரோ.

முன் பத்ததியில் நமக்கு சிரேயஸ்ஸைக் கொடுக்கக்கூடிய பாதுகையின் ரூபத்தையும் பெருமைகளையும் பலவிதமாக வர்ணித்து முமுக்ஷுக்கள் தெரிந்துகொள்ளவேண்டியதையும் தெரிவித்தார். இதில் அந்தப் பாதுகைகளுடைய ஸ்வரூப, ரூப, குண, விபவ, சேஷ்டிதங்களுடைய ஆச்சரியங்களை அதற்குத் தகுந்த சப்தசித்ரங்களும் அர்த்தசித்ரங்களும் அடங்கிய சுலோகங்களால் புலம்பி அவைகளிடத்தில் தன் ஆத்மக்ஷேமத்தை பிரார்த்திக்கிறார், இப்படி பல சித்ரங்கள் அடங்கிய சுலோகங்கள் இதில் இருப்பதால் இந்த பத்ததிக்கு சித்ரபத்ததி என்று பெயர் ஏற்படுத்தப்பட்டது. சித்ர என்கிற பதம் பல வர்ணங்கள் கலந்த ஒரு நிறம், கோலம், ஆச்சரியம் இவைகளைச் சொல்லும்.

---

1 சித்ரங்களுக்கு அதிகாரியாக இருப்பதாவது— பல சித்திரங்களை அடையும்படியான யோக்யதை உள்ளதாகவிருப்பது. சித்ரங்களுக்கு விஷயமாக இருப்பதாவது அவைகள் பாதுகையைப் பற்றினதாய் இருப்பது. ஸர்வசித்ரங்களுக்கும் வ்யாபாரசித்ரங்களுக்கும் அதிகாரியாக இருப்பிடமாகிறது. சப்த சித்ரங்களுக்கும் அர்த்தசித்ரங்களுக்கும் விஷயமாக இருப்பிடமாகிறது. இந்த சுலோகத்தில் உள்ள சித்ரங்கள்— (1) அநுப்ராஸம் என்கிறசப்தசித்ரம் ‘ப்ர,வி’ என்கிற எழுத்துக்களை இரட்டிப்பதால் ஏற்படுகிறது, (2) வ்யாபாரசித்ரம் உலகத்திற்கெல்லாம் ஆதாரமாக இருக்கிற பகவானை பாதுகை தாங்குகிறது என்பதால் ஏற்படுகிறது. (3) உதாராலங்காரம் என்கிற அர்த்தசித்ரம் ப்ரதிஷ்டாம் ஸர்வசித்ராணாம் என்பதால் இந்த பத்ததியில் மேலே சொல்லப்போகிற பல சித்ரங்களை இந்த சுலோகத்தில் ஸூசிப்பிக்கிறதினால் ஏற்படுகிறது.

(கருத்து) ஸமஸ்தமான சித்ரங்களுக்கும் இருப்பிடமாக இருக்கிற ஸ்ரீரங்கநாதனுடைய கல்விழைத்த பாதுகைகளேயே இந்த ஸம்ஸாரபந்தம் விடுபட்டு பகவத்ப்ராப்தியாகிற மோக்ஷம்கிடைப்பதற்கு உபாயமாக நம்பி ப்ரார்த்திக்கிறேன். அதற்கு அதை ஸாதித்துக் கொடுக்கக்கூடிய சக்தி உண்டோ என்றால், மிகவும் ஆச்சரியகரமான எல்லா உலகத்திற்கும் ஆதாரமாக இருப்பவரும் எல்லா உலகத்திலும் உள்ளும் வெளியும் வ்யாபித்திருப்பவரும் மோக்ஷப்ரதருமான பகவானை ஒரு தொந்தரவுமில்லாமல் மிகவும் ஸுகமாக எப்பொழுதும் தன்னிடத்தில் ஸ்திரமாக இருக்கும்படி தன்னுடைய குணத்தினால் வச்யம் பண்ணிக் கொண்டிருக்கிறதல்லவா ?

ஸதாசார்யர்களும் அப்படியே தங்களுடைய ஸ்வரூபத்தாலும் ரூபத்தாலும் குணத்தாலும் வ்யாபாரத்தாலும் ஆச்சரியசாலிகளாக இருந்து தங்களுடைய ப்ரேமையினாலும், பிரபத்தியினாலும் ஸர்வேச்வரனைத் தாங்கள் ஸ்வாதீனம் பண்ணிக் கொண்டு குமதிகள் அழிக்கமுடியாதபடி தெய்வத்திற்கும் உலகத்திற்குமுள்ள 1 சரீராத்மபாவஸம்பந்தத்தைக்காட்டி தெய்வத்தை உலகத்தில் நிராபாதமாக ஸ்தாபித்து தங்களை அநந்யகதிகளாக ஆச்ரயித்தவர்களுக்கு பரமபுருஷார்த்தத்தை ஸாதித்துக் கொடுக்கத்தகுந்தவர்கள் என்பது ஸூசிக்கப்படுகிறது. (1)

(ச்லோ) கு³ணாஸ்தே பாது³கே சித்ரம் சித்ராஶ்லேஷிணி
ஸிஷேவிரே: । யாந்த்யஸம்ஸேவா ஸம்ஸாரம்
யாந்தவ ஸம்ஸேவ ஸூயது ॥ (௨)

(பதவுரை) ஹே பாதுகே - வாராய் பாதுகையே ! தே - உன்னுடைய, சித்ரம் - சித்ரத்தை (வர்ணசித்ரத்தை),

1 உலகமானது பகவானால் எப்போதும் தரிக்கப்பட்டு, ஏவப்பட்டு அவனுடைய உபயோகத்திற்கே ஏற்பட்டு இருப்பதால் உலகம் பகவானுக்கு உடம்பு. ஈச்வரன் உலகத்தை எப்போதும் தரிக்கிறவனும், ஏவுகிறவனும், தனக்கே உபயோகப்படுத்திக்கொள்ளுகிறவனுமிருப்பதால் அவன் உலகத்திற்கு ஆத்மாவாகிறான். இந்த ஸம்பந்தமே உலகத்தில் சரீரத்திற்கும் ஆத்மாவிற்கும் காணப்படுகிறது.

1 ஶ்ருணு - பார், யா - யாதொரு நீ, விசித்ராபி: - நானு வர்ணங்களான, மணிபி: - ரத்னங்களாலே, விபோ: - ஸ்ரீரங்க நாதனுடைய, யுக - க்ருதயுகம் முதலிய யுகங்களில், க்ரம ஸம்பவா: - வரிசையாக உண்டாகிற, வர்ணாந் - வெளுப்பு முதலிய வர்ணங்களை, 2 யுகபத் - ஒரே காலத்தில், ஸ்வயம் - தானாகவே (வேறு அவதாரங்கள் எடுக்காமல்), வஹஸே - வஹிக்கிறாய். வர்ணாந் என்பதற்கு அக்ஷரங்கள் என்கிற அர்த்தத்தினால் ஶ்லோகத்தின் பின்பாதிக்கு ஏற்படும் மற்றொரு அர்த்தமாவது — யுக (யுகதயா) - இரட்டிப் பதை உடைத்தாயிருப்பதினாலும் (யமகம் முதலானவைகளில் ஶ்லோகபாதம் முதலானவைகளிலுள்ள அக்ஷரங்களைத் திருப்பிச் சொல்வதை உடைத்தாயிருப்பதாலும்), க்ரம (க்ரமேண) - அந்தந்த பந்தவிசித்ரங்களுக்கு வேண்டியபடி வரிசை

---

1 இவிடத்தில்பாதுகையினிடத்திலுள்ள பல வர்ணங்களால் ஏற்படுகிற அதிசயத்தைக்காட்டிச் சொல்லுகிறபடியால் 'பார்' என்று அர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய 'பஶ்ய' என்கிற பதம் இருக்கவேணும். ஆனால் 'கேள்' என்கிற அர்த்தம் கொடுக்கக்கூடிய 'ஶ்ருணு' என்கிற பதம் போடப்பட்டிருக்கிறது. வியாகரணசாஸ்திரப்படிக்கு 'தவ' என்கிற சப்தத்துக்கு 'தே' என்கிற ரூபம், பார்க்கிறது என்கிற அர்த்தம் கொடுக்கக்கூடிய வினைச்சொல்லுக்குப் பின்னிட்டல்லது வராது. ஆகையால் 'ஶ்ருணு' என்கிற பதத்திற்கு இங்கு 'பார்' என்றே அர்த்தம். இவிடம் இந்த பதம் உபயோகித்ததின் அபிப்ராயம் என்னவென்றால் சுத்தஸத்வமயமான பாதுகாஸ்வரூபத்துக்கு ஓரோர் இந்திரியங்களாலேயே மற்ற எல்லா இந்திரியங்களுடைய வியாபாரங்களைச் செய்யக்கூடும் என்பதைக் காட்டுவதற்காக. நிவேதனத்திற்கு பகவானுக்கு ஸமர்ப்பிக்கப்படும் அன்னம் முதலியவைகளின் ஸாராம்சத்தைபகவான் சக்ஷுஸ்ஸாலேயே க்ரஹிப்பதாகசாஸ்திரமிருப்பதால் அப்ராக்ருத ஸ்வரூபத்திற்கு இப்படிப்பட்ட சக்தியுண்டென்பது ஸ்ரீ நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியிலும் ஸூசிதமாகிறது.

2 பகவானுக்கு க்ருதயுகத்தில் வெளுப்புநிறமென்றும், த்ரேதாயுகத்தில் சிகப்புநிறமென்றும், துவாபரயுகத்தில் பொன்வர்ணமென்றும் கலியுகத்தில் கருப்புநிறமென்றும் சாஸ்திரம் சொல்லுகிறது.

யாகவும், ஹுவஃ - உண்டாயிருக்கிற, வணாநு - அக்ஷரங்களை, யுமுவகு - ஒரே காலத்தில், ஸ்வயம் - தானே, வஹஸெ - வஹிக்கிறாய். அதாவது உன்னைப் பற்றி வாக்யஸந்தர்ப்பத்திலுள்ள அந்த அக்ஷரங்கள் யமகத்துக்கு வேண்டிய இரட்டிப்புக்கும் விசித்ரமான பந்தங்களுக்கு வேண்டிய வரிசைக் கிரமத்திற்கும் ஒத்திருக்கும்படி நீயே செய்கிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே ! உன்னிடத்திலுள்ள இந்த ஒரு அதிசயத்தைப் பார். பகவான் தன் அவதாரங்களில் ஒவ்வொரு யுகத்தில் ஒவ்வோர் வர்ணத்தை மட்டும் வஹிக்கிறார். நீயோ ஒரே ஸமயத்தில் ஒரேரூபத்தில் பல வர்ணமுள்ள உன் ரத்நங்களாலே பகவானுடைய வர்ணங்களை எல்லாம் வஹிக்கிறாய். இன்னும் உன்னைப்பற்றிஸ்தோத்ரம்பண்ணவேணுமென்றுஆரம்பித்தாலும்உன்னுடைய அனுக்ரஹத்தினாலேயே சுலோகங்களில் அக்ஷரங்களும் பதங்களும் ஆச்சரியமான பல ஸர்க்கப்பங்களையும் அர்த்தங்களையும் கொடுக்கும்படி தானாகவே அமைகின்றன. அப்படிப்பட்ட வாக்கை நீதான் கொடுக்கிறாய். உன்னுடைய அனுக்ரஹமில்லாமல் என்னால் அப்படிச் சேர்க்கமுடியாது.

ஸத்வகுணத்தாலும் அதின் மூலமான ஜ்ஞாந சக்தி தர்மானுஷ்டானங்களாலும் படிப்படியாக மிகுதியும் குறைவுமுள்ள நான்கு யுகத்திலும் அந்தந்த யுகவைஷம்யங்களுக்குத் தக்கபடி பகவான் பல ரூபங்களோடு அவதரித்து பல மாதிரியான தன்னுடைய ஆராதனபிரகாரங்களைச் சாஸ்திரத்தாலும் உபதேசானுஷ்டானங்களாலும் ஏற்படுத்தி உலகத்திற்கு உஜ்ஜீவனோபாயத்தைக் காட்டிக்கொடுக்கிறார். ஸ்ரீ நம்மாழ்வார் முதலிய ஸதாசார்யர்கள் தங்களுடைய ஆச்சர்யமான திவ்யஸூக்திகளால் ஜநங்களுக்கு பகவத்ஜ்ஞானானுபவங்களை ஏற்படுத்தி, "கஸூள கூதயுமும் தஸ்ய கஷிஸஸ்ய கூலெத யுமெ | யஸ்யெ தவி மொவிமொ ஹூடிஙெ யஸ்ய நாவ்யுதஃ" என்கிறபடி யுகவைஷம்யத்தைப் போக்கி, ஸர்வகாலத்திற்கும் ஸர்வஜனங்களுக்கும் யோக்யமான சரணாகதி என்கிற ஸுலபோபாயத்தைக் காட்டிக்கொடுத்து உலகத்தை எல்லாம் உஜ்ஜீவிக்கும்படி செய்கிறார்கள். பகவானைக் காட்டிலும் அவர்களிடத்தில் இது விசேஷ அதிசயம். பக்தியோடு அவர்களை

ஸ்தோத்ரம் பண்ணவேணுமென்று ஆரம்பித்தாலும், அவர்களுடைய அனுக்ரஹத்தை முன்னிட்டு பகவானை ஸ்தோத்திரம் பண்ண பிரயத்நப்பட்டாலும் அவர்களுடைய அனுக்ரஹத்தாலேயே ஆச்சர்யமான வாக்கு உண்டாகிறது என்பதும் சுலோகத்தின் பின்பாதியால் த்வனிக்கிறது.

இந்த சுலோகத்தில் சந்த்ரஹாஸம் என்கிற சப்த சித்ரமும், பாதுகையில் பல வர்ணமுள்ள ரத்நங்களிருப்பதைக் கொண்டு பெருமாளைக் காட்டிலும் ஒரே காலத்தில் ஒரே உருவத்தில் பல வர்ணங்களை வஹிக்கக்கூடிய விசேஷ சக்தி இருப்பதாகச் சொல்லுகிற அர்த்தசித்ரமும், ஸுருணாதே என்று சேர்த்து தப்பி வாசித்தால் இரண்டு தனிப்பதங்களில்லாமல் கூடநிபதம் என்கிற வகுப்பைச் சேர்ந்த ஒரே க்ரியாபதம் என்று பிரமிக்கும்படி செய்கிற 'ஸுராஸுராஹாஸம்' என்கிற சப்தசித்ரமும் அடங்கியிருக்கின்றன. (2)

(௩) ஸுராஸுரார்சிதா தந்யா பூம்நாம் ஶ்ரேயஸாம் பாலிகா । சராசராஶ்ரிதா ஸாந்யா ரங்கபுங்கவ பாதுகா ॥ (௩)

(பதவுரை) ஸுராஸுர - தேவாஸுரர்களாலே, அர்சிதா - பூஜிக்கப்பட்டதும், 1 தந்யா - ஸகல ஸம்பத்துக்களுள்ளதும், பூம்ந-உத்கிருஷ்டங்களான, ஶ்ரேயஸாம்-சிரேயஸ்ஸுக்களை, பாலிகா - காப்பாற்றுகிறதும், 2 சராசர -

1 தந்யா என்கிற பதம் ஸம்பத்தை அடைவதற்குக் காரணமான பாக்யவிசேஷத்தையும் காட்டுமானதால் விசேஷ பாக்கியமுள்ளது என்றும் அர்த்தமாகும். அதற்குமேல் உயர்ந்தது ஒன்று உண்டு என்றில்லாதபடி பரம உத்க்ருஷ்டமும், பரம துர்லபமுமான பகவானுடைய திருவடிகளை ஒப்பில்லாதபடி அடைந்து, அனுபவிக்கும் பாக்கியமுள்ளதாகையால் பாதுகை தன்யமாயிற்று.

2 சராசராஶ்ரிதா என்பதற்கு ஸாமான்யமாக ஜங்கம ஸ்தாவரங்களடங்கிய ஸமஸ்த லோகத்தாலும் ஆச்ரயிக்கப்படுகிறது மான என்றும் சொல்லலாம். ஸ்ரீராமாவதாரகாலத்தில் ஸ்ரீ பாதுகா ஸம்பந்தத்தால் சராசரங்களெல்லாம் நற்கதி அடைந்தது என்பது புராண பிரஸித்தம்.

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஸ² | ரா | ஸ² | ரா | ஷீ | தா | ய | ந்ரா | த்ர³ம் | ரு | கம் | ரு | ஜ | வா | ஹி | கா |
| அ | ரா | அ | ரா | ஸ்ரீ | தா | ஜா | ந்ரா | ரம் | ரு | வஜ் | ரு | வ | வா | ஜ² | கா |

சுலோகம் 913 ] [ 445 பக்கம்

(தன்னிடத்தில் சித்ரரூபங்களாகஅமைக்கப்பட்டிருக்கிற) அசையும் பொருள் அசையாப்பொருள் இவைகளினுல், ஶ்ரித்ரா - ஆச்ரயிக்கப்பட்டிருக்கிறதுமான, ரங்கபர்த்து: - ஸ்ரீரங்கநாதனுடைய, பாதுகா - பாதுகையானது, ஶ்லாக்யா - எல்லாராலும் கொண்டாடத் தகுந்தது.

(கருத்து) ஸகல தேவாஸுரசிரேஷ்டர்களாலேயும் பூஜிக்கப்பட்டு அவர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கிறதும் பரம பாக்யசாலியாயும் ஸகல ஸம்பத்துக்களும் நிறைந்துள்ளதாயுமிருந்து, ஆச்ரிதர்களுக்கு அவைகளைக் கொடுக்கிறதும், உயர்ந்த சிரேயஸ்ஸுகளைக் கொடுத்துக் காப்பாற்றுகிறதும் ஜங்கம ஸ்தாவரங்களடங்கிய ஸர்வலோகத்தாலும் ஆச்ரயிக்கப் படுகிறதும், தன்னுடைய சரீரத்தில் அலங்காரார்த்தமாக அமைக்கப்பட்டிருக்கிற சராசரரூபங்களைப் பார்த்தால், பகவானுடைய விச்வரூபத்தில்போல் ஸமஸ்த லோகங்களையும் தன்னுடைய சரீரத்திலேயே வைத்துக் காப்பாற்றுவதுபோல் காணப்படுகிறதுமான ஸ்ரீரங்கத்தில் வஸிக்கும் புருஷோத்தமனுடைய பாதுகையானது எல்லா விதத்தாலும் அவனைப் போலவே அளவில்லாத பெருமையுடையதாக இருப்பதால் ஸமஸ்த லோகத்தாலும் விசேஷமாகக் கொண்டாடத் தகுந்ததாக இருக்கிறது.

ஆசாரியர்களும் அப்படியே ஸமஸ்த லோகத்தாலும் பூஜிக்கப்படுகிறவர்கள்; பரம பாக்யசாலிகள்; ஸகல ஸம்பத்துக்களையும் ஆச்ரிதர்களுக்குக் கொடுக்கத்தகுந்தவர்கள்; பரம சிரேயஸ்ஸான மோக்ஷபுருஷார்த்தத்தைக் காப்பாற்றிக் கொடுப்பவர்கள்; அவர்கள் ஸம்பந்தம் பெற்ற சராசரங்களுக்கெல்லாம் க்ஷேமத்தை உண்டுபண்ணக்கூடியவர்கள். ஆகையால் ஸமஸ்த லோகத்தாலும் விசேஷமாகக் கொண்டாடத் தகுந்தவர்கள்.

இந்த சுலோகத்திலுள்ள சித்ரத்திற்கு கோமூத்ரிகா பந்தம் என்று பெயர். அதாவது சுலோகத்தில் இரண்டு

பாதிகளிலும் இரட்டைப்படையான எழுத்துக்கள் ஒரே மாதிரியாக இருந்து ஒரு பாதியிலுள்ள இந்த பொதுவான எழுத்துக்களோடு மற்றொரு பாதியின் ஒத்தைப்படையான எழுத்துக்களைச் சேர்த்து சுலோக பாதிகளை வாசிக்கும் கிரமமானது பசுவானது மூத்ரவிஸர்ஜனம் பண்ணிக் கொண்டு நடக்கும்போது பூமியில் விழும் கோடுபோல் காணப்படுகிறது. (3)

(௯௰௪) வதெ³வ ஶ்ரேயஸாம் பூரம் ஸம்ஸாரஸ்ய ச ஸந்ததே: ।
உஜ்ஜி²தைநஸிகா ஸ்யாத் பாதுகா ரங்க³ஸந்ததே: ॥ (௪)

(பதவுரை) ஶ்ரேயஸாம் - மங்களங்களுடைய வெள்ளமாகவும், ஸம்ஸாரஸந்ததே: - ஸம்ஸாரத்தினுடைய தொடர்ச்சிக்கு, பாரம் - கரையாகவும் (முடிவாகவும்) இருக்கிற, ரங்க³ஸந்ததே: - ஸ்ரீரங்கநாதனுடைய, பாதுகா - பாதுகையானது, பத்³மேவ - மஹாலக்ஷ்மியைப்போல, உஜ்ஜி²தைநஸிகா - நம்முடைய பாபங்களைத் தொலைக்கிறதாக, ஸ்யாத் - ஆகவேணும்.

(கருத்து) மங்களங்களுடைய வெள்ளமாக இருப்பதிலும், (கரைபுரண்ட மங்களங்களை ஆச்ரிதர்களுக்குக் கொடுக்கும் தன்மையை உடைத்தாயிருப்பதிலும்) ஸம்ஸார பிரவாஹத்திற்கு முடிவாயிருப்பதிலும் (ஆச்ரிதர்களை ஸம்ஸாரத்திலிருந்து காப்பாற்றத் தகுந்த யோக்யதையை உடைத்தாயிருப்பதிலும்) ஸ்ரீ மஹாலக்ஷ்மியைப் போலிருக்கிற ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையானது அந்த மஹா லக்ஷ்மியைப் போல் நம்முடைய பாபங்களையெல்லாம்போக்குகிறதாக ஆகவேணும்.

ஸதாசார்யர்களும் அப்படியே மஹா லக்ஷ்மியைப்போல் மங்கள நிதிகளாகவும் ஸம்ஸாரத்திலிருந்து ஜனங்களைக் காப்பாற்ற தகுந்தவர்களாகவுமிருப்பதால் மஹாலக்ஷ்மியைப்போல் நமக்கு பகவானிடத்தில் புருஷகாரபூதர்களாகவிருந்து நம்முடைய பாபங்களை எல்லாம் போக்கிக் காப்பாற்றவேணுமென்று அவர்கள் விஷயமான பிரார்த்தனையாகவுமிருக்கிறது.

ஜ்ஜை ஸரிஸ என்பது இந்த லோகத்திலும் பரலோகங்களிலும் அடையக்கூடிய தர்மம், அர்த்தம், காமம் என்கிற புருஷார்த்தங்களையும, 'ஸம்ஸாரஸஜெதெ: வாரழ்' என்பது மோக்ஷபுருஷார்த்தத்தையும் காட்டுகிறபடியால் திருவமஹைத்துக்கோ ஐவவமஹைத்துக்கோ பிரதிபந்தகமான பாபங்களையெல்லாம்போக்க ஸ்ரீமஹாலக்ஷ்மியையும் பாதுகையும் ஸதாசார்யர்களையும்தான் பிரார்த்திக்கவேணுமென்று இதினுல் ஏற்படுகிறது.

இந்த சுலோகத்திலுள்ள சப்த சித்ரத்துக்கு 'ஶாஙிஊவதாயஹு' என்று பெயர். அதாவது இதில் நான்காவது பாதத்திலுள்ள அக்ஷரங்களெல்லாம் பாக்கி மூன்று பாதங்களில் அகப்பட்டதாகவே இருப்பது. இப்படியே ஶாஙிஊவூயஃம் முதலானவைகளுமுண்டு. (4)

**(கூகரு) ஊநநூஶரணஸூீஉஊநஜெகூஶஸாமரெ| ஶர ணஂவரணதாணஂ ரஜநாயஸூ ஸஂஶ்ருயெ|| (ரு)**

(ப-ரை) ஊநஜ - அளவில்லாத, கூெஶ - ஸம்ஸார கஷ்டங்களாகிற, ஸாமரெ - ஸமுத்திரத்தில், ஸீஷநு - ஸங்கடப்பட்டுக்கொண்டு, ஊநநூ ஶரண: - வேறு ஒரு ரக்ஷகர் இல்லாத நான், ரஂமநாயஸூ - ஸ்ரீரங்கநாதனுடைய, வரணதாணஂ - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையையே, ஶரணஂ - உபாயமாக, ஸஂஶ்ருயெ - வரிக்கிறேன் (அடைகிறேன்).

(கருத்து) எல்லையில்லாத கஷ்டங்கள் நிறைந்த இந்த முடிவில்லாத ஸம்ஸாரத்தில் அகப்பட்டு ஸ்ரீ பாதுகா ஸம்பந்தம் பெருமல்,அநாதிகாலமாக இதில் அலைந்துகொண்டு இதிலிருந்து மீள ஸ்ரீபாதுகாஸம்பந்தம்தவிர வேறுஒர் உபாயமில்லாததால் அதில்லாமல்துக்கங்களையேஅநுபவித்துக்கொண்டிருக்கிற நான் இப்போது ஸ்ரீரங்கநாதனுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையையே எனக்குஇந்தக்கஷ்டம்நீங்குவதற்குஉபாயமாக வரிக்கிறேன்.ஸம்ஸாரம் பகவானுல்தான்போக்கப்படவேணும் பகவத்ஸம்பந்தம் பாதுகா மூலமாகவும் ஸதாசார்யாள் மூல

மாகவும் தான் ஏற்படவேணும். ஆகையால் ஸதாசார்ய ஸம்பந்தம் ஒன்றால் மட்டும் தான் இந்த ஸம்ஸாரத்தைத் தாண்டமுடியும். அதில்லாமல் எப்படிப்பட்டவர்களுக்கும் எந்த உபாயத்தினாலும் ஸம்ஸாரத்தை நீக்கிக்கொள்ள முடியாது என்கிற சாஸ்திரார்த்தம் இதனால் ஸூசிக்கப்படுகிறது.

அநந்யசரணா: என்கிறவிடத்தில் சரணா: என்கிற பதத்திற்கு உள்ள பல அர்த்தங்களில் உபாயம் என்கிற அர்த்தம் கொள்ளாமல் ரக்ஷகன் என்கிற அர்த்தம் வைத்து வேறு ஒரு ரக்ஷகரில்லாமல் இருக்கிற நான் என்று பொருள் கொள்வதில் விசேஷ ஸ்வாரஸ்யமுண்டு. அப்படியானால் எவ்வித அதிகாரிக்கும் (பக்தியோகாதிகளுக்குத் தகுந்தவனுக்கோ, அல்லது அவற்றுக்கு யோக்யதையில்லாமல், பிரபத்தி மார்க்கத்தில் இழிகிறவனுக்கோ) ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்கு பாதுகைகளை (ஆசாரியர்களை)த்தவிர வேறு ரக்ஷகர்கள் இல்லை; ஆசார்யர்களை அடைவதினாலேயேதான் உபய மார்க்கமும் ஸித்திக்க வேணுமென்கிற சாஸ்திரார்த்தம் கண்டோக்தமாகச் சொன்னதாகும். அப்படிக்கில்லாமல் 'அநந்யசரணா:' என்பதற்கு உபாயாந்தரரஹித: வேறுஉபாயமில்லாதவன்(பக்தியோகாதிகளுக்கு யோக்யதை இல்லாதவன்) என்று மட்டும் அர்த்தம் கொண்டால்அந்தக்காரணத்தால்பாதுகையையே(ஆசார்யர்களையே) தான் ஆச்ரயிக்கவேணுமென்கிற நிர்பந்தம் நேரில் கண்டோக்தமாகஏற்படாது.இதரர்களைக்கொண்டும் காரியத்தை ஸாதிக்கலாம் என்பதற்கு அவகாசம் கொடுக்கும். ஆனால் ஸம்பும் வாக்யம் ஸாமாந்யாநாம் விசேஷேண பர்யவஸாநம் என்கிற நியாயப்படி சரணத்வேந பாதுகையையே, ஆசார்யர்களையே) என்று விவக்ஷிப்பது கொள்வது ஆசார்யவத்தையையே மோக்ஷத்திற்கு முக்கிய காரணமாக அருதியிடுகிற சாஸ்திரங்களுக்கும் ஒத்ததாகும். ஆகையால் இவ்விடமுள்ள சரணபதங்களுக்கு ஒரே அர்த்தம் பண்ணாமல் ரக்ஷகன், உபாயம் என்று அடைவே தனித்தனியாக அர்த்தம் கொள்வதே உசிதம். ஒரே அர்த்தம் கொள்ளவேணுமானாலும் இரண்டிடத்திலும் ரக்ஷகன் என்பதை வைத்துக்கொள்ளலாம்.

இந்த சுலோகத்திலுள்ள சப்தசித்ரத்துக்கு 'நிரோஷ்ட்யம்' என்று பெயர். இதின் லக்ஷணம் இரண்டு உதடும் சேர்ந்து உச்சரிக்கவேண்டிய அக்ஷரங்கள் சுலோகத்தில் ஒன்றுகூட இல்லாமலிருப்பது. இதிலுள்ள அநுஸ்வாரங்களையெல்லாம் உதடுகள் சேராமலே உச்சரிக்கவேண்டியது. (5)

(௯௪௫) **த்ருஶ்யேதா: பரம் தத்த்வம் பிப்ரதீ ஸரஸிஜநயநம் । பஶ்சிமாயாமவஸ்தாயாம் பாதுகே முஹ்யதோ மம ॥** (௫)

(ப-ரை) பரம் தத்த்வம் - தனக்கு ஸமமானதும் மேலானதுமான வஸ்து மற்றொன்றில்லாதபடி மற்றெல்லாவற்றையும் காட்டிலும் மிகவும் உயர்ந்த தத்வமாக இருக்கிற, ஸரஸிஜநயநம் - 'கப்யாஸம் புண்டரீகம்' என்கிற சுருதியின்படி ஆழமாய் சேறு நிறைந்த ஜலத்தில் செழிப்பாக வளர்ந்து ஸூர்யகிரணங்களால் நன்றாய் மலர்ந்து வாடாத தாமரைப்பூ போல் மிகவும் அழகிய திருக்கண்களையுடைய ரங்கநாதனை, பிப்ரதீ - தூக்கிக்கொண்டிருக்கிற, (த்வம் - நீ), பஶ்சிமாயாம் - கடைசியாக இருக்கிற, அவஸ்தாயாம் - அவஸ்தையிலே (மரண காலத்திலே), முஹ்யத: - மோஹத்தையடைகிற, மம - எனக்கு, த்ருஶ்யேதா: - பிரத்தியக்ஷமாகவேணும்.

(கருத்து) மரணகாலத்தில் மற்ற இந்திரியங்களெல்லாம் ஒவ்வொன்றாக அழிந்து மனதும் அடங்கி மோஹத்தை அடைவதற்கு முந்திய கடைசி க்ஷணத்தில் குளிர்ந்ததும் (அநுக்கிரஹம் நிறைந்ததும்) அழகியதும் (மனதை வசியம் செய்யக் கூடியதும்) ஸம்ஸாரதாபங்களையெல்லாம் அடியோடு போக்கக் கூடியதுமான தாமரைப்பூப்போன்ற திருக்கண்களையுடைய உயர்ந்த தேவதையான பகவானை வஹிக்கிற நீ என் மனதில் வந்து தோன்றவேணும்.

இந்த சுலோகத்தில் பாதுகாவிஷயமான அந்திமஸ்மிருதி பிரார்த்திக்கப்படுகிறது. ஸ்மிருதி பாதுகாவிஷயமானால் பகவத் விஷயமாகவும் ஆகிறது. ஏனென்றால் பாதுகை பகவானை விட்டுத் தனியாக வரக்கூடிய வஸ்துவல்ல, ஸர்வாவஸ்தைகளி

லும் அவனுடன் சேர்ந்தே இருக்கக்கூடியது; இத்தால் ஆசார்யர்கள் விஷயமான அந்திமஸ்ம்ருதியும் பிரார்த்திக்கப்படுகிறது. ஆசார்யர்களும் பாதுகையைப்போல் பெருமாளை விட்டுப் பிரியக்கூடாத வஸ்துவைப்போலிருப்பதால் அவர்களைப்பற்றின நினைவில் பகவானைப்பற்றிய நினைவும் உள்ளடங்கியது. இந்த பிரகாரபேதத்தால் இதில் சொல்லிய அந்திமஸ்ம்ருதிக்கு 901-வது 909-வது ச்லோகங்களில் சொல்லிய அந்திமஸ்ம்ருதியோடு புனருக்திதோஷம் வராது.

இந்த ச்லோகத்திலுள்ள சப்தசித்ரத்திற்கு 'க்ரியாவஞ்சந ப்ரஹேலிகா' என்று பெயர். 'ப்ரதிஷ்டாயாம்' என்கிற கிரியாபதம் 6-வது வேற்றுமையுள்ள பெயர்ச்சொல்போல் தோன்றிக்கொண்டு கிரியை என்று ஸ்பஷ்டமாகத் தெரியாமல் ஏமாற்றுகிறது. ப்ரஹேலிகா என்றால் அபலாரை ஏமாற்றுவது என்று பொருள். (6)

(ஶ்லோ) யாம் ஶ்ரயதி யா தம் வஹதி யேந யாதி யா யத்ர்த்தாய யா யஸ்ய ஶர்மணே ய யஸ்மாத் ஶாஸ்வத வாதுகா ॥ (எ)

(ப-ரை) ஸ: - பெருமாளானவர், யாம் - எந்த பாதுகையை, ஶ்ரயதி - அடைகிறாரோ (ஸஞ்சாரகாலத்தில் திருவடிகளில் சாற்றிக்கொள்ளுகிறாரோ), யா - எந்தப் பாதுகையானது, தம் - பெருமாளை, வஹதி - தூக்குகிறதோ, யா - எந்தப் பாதுகையானது, யேந - பெருமாளாலே (அவருடைய உதவியாலே), யாதி - ஸஞ்சரிக்கிறதோ, யா - எந்தப் பாதுகையானது, யத்ர்த்தாய - பெருமாளின்பொருட்டே ஏற்பட்டதோ (அவருடைய ஸொந்த உபயோகத்திற்காகவே ஏற்பட்டதோ) யா - எந்தப் பாதுகையானது, யஸ்மாத்-பெருமாளிடத்திலிருந்து உண்டாயிற்றோ (அதினுடைய இருப்பே அவருடைய அதீனமோ), யா - எந்தப் பாதுகையானது, யஸ்ய - பெருமாளுடைய, ஶர்மணே - பூஜையின் பொருட்டோ (புஷ்பாதிகளைப் போல் பூஜாகாலத்தில் ஸமர்ப்பிக்கப்படத்தகுந்த வஸ்துவாக

இருக்கிறதோ), * யா - எந்தப் பாதுகையானது, கே - பெருமாளிடத்தில், காம்யா - நன்றாக பக்தி பண்ணத்தகுந்ததோ, கா - அப்படிப்பட்ட (பாரார்த்ய, பாரதந்திரிய, தஃயீந ஸ்வரூப ஸ்திதி ப்ரவிருத்தியாதிகளை உடைத்தாயிருப்பதினால் பகவானுக்கு மிகவும் அந்தரங்கமான வஸ்துவாக இருக்கிற,) பாதுகா - பாதுகையானது, மாம் - என்னை (நாமும் பாதுகையைப்போல் உண்மையில் பாரார்த்ய, பாரதந்திரிய தஃயீந ஸ்வரூப ஸ்திதிபிரவிருத்தியாதிகளை உடையவர்களென்று அறியாத என்னை), அவது - காப்பாற்றவேணும் (அப்படிப்பட்ட தத்வஜ்ஞானத்தையும் அதற்குத்தகுந்த அனுஷ்டானங்களையும் கொடுத்தும் பகவானிடத்தில் என் விஷயமாக சிபார்சு செய்தும் காப்பாற்றவேணும்).

(கருத்து) எந்த பாதுகையின் ஸ்வரூபமும், இருப்பும், வியாபாரம் முதலானவைகளும், பகவானுக்கே ஏற்பட்டதாகவும் பகவததீனமாகவேயும் இருக்கிறதோ அப்படி உணர்ந்து நடப்பதினாலே பகவானுக்கு மிகவும் பிரீதி பாத்ரமாகவுமிருக்கிறதோ அப்படிப்பட்ட பாதுகையானது மிகவும் அஜ்ஞனாகவும் அகிஞ்சனனாகவும் ஆச்ரிதனாகவும் இருக்கிற என்னை தத்வ ஜ்ஞானத்தை கொடுத்தும், பகவத் புருஷகாரத்தாலும் காப்பாற்றவேணும் என்று பாதுகையினிடத்தில் பிரார்த்திக்கப்படுகிறது. இப்படியே ஸதாசார்யர்களும் பாதுகையைப் போன்றவர்களானதால் அவர்கள் விஷயத்திலும் அப்படியே பிரார்த்தித்ததாகிறது.

'ககாரோ விஷ்ணுவாசகஃ' என்கிற நிகண்டுப்படி க என்கிற பதம் பகவானைச் சொல்கிறது. அதின் 7 வேற்றுமைகளையும் இந்த சுலோகத்தின் 7 வாக்யங்களில் உபயோகித்திருக்கிறது. அவைகள் ஸந்தியில் மறைந்து வேறு பத ப்ராந்தியை உண்டுபண்ணுகிறபடியால் ப்ரஹேளிகா என்கிற சப்த சித்ரம் இதில் அடங்கியிருக்கிறது. ப்ரஹேளிகையில் இது ஒருமாதிரி.

* பகவதாராதனத்தில் 6 ஆஸனபூஜைகளிலும் பூஜையின் முடிவில் தன்னுடைய ஆத்மாவை, அதைச் சேர்ந்த வஸ்துக்களோடு பகவானிடத்தில் அவனுக்கே உபயோகப்படுத்திக்கொள்ளும்படி பிரார்த்தித்து ஸமர்ப்பிக்கவேணுமென்ற சாஸ்திரார்த்தம் இங்கு ஸூசிக்கப்படுகிறது.

(௯௧௮) க்ரியா நஶ்ஶௌரிபாது த்வம் ப்ராயஶ்சித்தேஷ்வனந்
தரா । நிவேஶ்யஸே ததஸ்ஸத்பி: ப்ராயஶ்சித்தே
ஷ்வனந்தரா ॥ (௮)

(ப-ரை) ஹே ஶௌரிபாது - வாராய் பெருமாளுடைய பாதுகையே !, த்வம் - நீ, ந: - அநாதியான ஸம்ஸாரத்தினு லுண்டான பாபங்களையுடைய எங்களுக்கு, ப்ராயஶ்சித்தேஷு - பாபங்களைப் போக்கக்கூடிய ஓரோர் கர்மங்களின் அங்கங்களுக் குள்ளோ அல்லது அப்படிப்பட்ட பல கர்மங்களுக்குள்ளோ, அனந்தரா - இதற்கு மேற்பட்டது வேறொன்று இல்லாதபடி ஸர்வோத்தமமான, க்ரியா - க்ரியையாக (அங்கரூபமான கர்மாவாகவோ, அங்கிரூபமான கர்மாவாகவோ) இருக்கிறாய். அனந்தரா (அனந்தா ரா யயா ஸா-யாதொரு பாதுகையினால் லக்ஷ்மீயானவள் தள்ளப்படவில்லையோ அந்த பாதுகை) தள்ளப் படாத லக்ஷ்மியை உடையவளாக இருக்கிறாய் (நீ உத்தேசிக் கிற ஸர்வ காரியங்களுக்கும் கூட உதவியாக இருக்கும்படி லக்ஷ்மியை ஸர்வஸ்வாதீனமாக உடையவளாயிருக்கிறாய்) தத:- அந்தக் காரணத்தினாலேதான், ஸத்பி:-ஸாதுக்களாலே (பாபங் களுக்கு அஞ்சி பிராயச்சித்தங்களில் முயலுகிற ஸாதுஜனங்க ளாலே, முமுக்ஷுக்களாலே), விதேஷு - மனஸுகளிலே, நிவேஶ்யஸே - வைக்கப்படுகிறாய் (பிராயச்சித்தகர்மாக்களில் நேருகிற மந்திரலோபம், தந்திரலோபம், கிரியாலோபம், த்ரவ்யலோபம், நியமலோபம் முதலிய குற்றங்களைப் போக்கி அவைகளைப் பூர்த்திசெய்விக்கும்பொருட்டு நீ ஸ்மரிக்கப்படு கிறாய், அல்லது அப்படிப்பட்ட பிராயச்சித்தங்களை அனுஷ் டிக்க சக்தியில்லாதவர்களால் அந்தப் பாபங்களைப் போக்கு வதற்கு நீயே உபாயமாக பிரார்த்திக்கப்படுகிறாய்). ப்ராய: என்கிற பதம் இப்படி உத்ப்ரேக்ஷிப்பதைக் காட்டுகிறது.

(கருத்து) ஆச்ரித ஸுலபனான பெருமாளுடைய பாது கையே ! நீ எல்லையில்லாத பிரபாவமுள்ளவள். ஆகையாலே கர்மபத்தர்களான ஜீவராசிகளுக்கு நீ உத்தமோத்தமமான பிரா யச்சித்தமாக இருக்கிறாய். ஓரோர் பாபங்களுக்கு பிராயச்சித்

தமாக அனேக ப்ராயச்சித்தங்கள் தர்மசாஸ்திரங்களில் விதிக்கப் படுகின்றன. அப்படிப்பட்ட எந்த கர்மங்களையும் சாஸ்திர முறைப்படி குற்றமில்லாமல் ஒருவராலும் செய்து நிறைவேற்ற முடியாது. ஏனென்றால் மனுஷ்யர்கள் அல்பஜ்ஞர்கள், அல்ப சக்தர்கள். அப்படி பிராயச்சித்தங்களை அனுஷ்டிக்கும்போது அதில் ஏற்படும் குற்றங்கள்நீங்கி கர்மா பூர்த்தியாகும்பொருட்டு கர்மாவின் முடிவில் உன்னை நினைத்தால் அப்படியே பூர்த்தி யாகிவிடுகிறது. ஆகையால் அப்படிப்பட்ட கர்மாக்களில் நீ உத்தமமும், பிராதனமுமான அங்கமாகிறாய். பின்னும் பல பிரா யச்சித்த கர்மாக்களைச் செய்யமுடியாத அகிஞ்சனர்கள் ஸர்வ பாபங்களையும் போக்குவதற்கு ஒரே அத்விதீய உபாயமான உன்னையே உபாயமாக வரித்துவிட்டால் பாபங்களையும் நீக்கி மேல்கொண்டு சிரேயஸ்ஸிலும் மூட்டிவிடுகிறாய். இது மற்ற பிராயச்சித்தங்களைக் காட்டிலும் உன்னிடத்திலுள்ள விசேஷம். இப்படிப்பட்ட அளவில்லாத பெருமை உனக்கே இருப்பதோடு கூட ஆச்ரிதர்களுடைய ரக்ஷண விஷயத்தில் உனக்கு எவ்வித உதவியும் செய்யும்படி ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் உனக்கு பிரீதிவச்ய மாக இருக்கிறாள். இவ்வளவு பிரபாவம் உனக்கு இருப்பதால் தான் உன்னையே ஸாதுக்கள் எதற்கும் எப்போதும் ஸ்மரிக்கவும் ஸ்மரிக்கிறார்கள். பிரபத்தியும் பண்ணுகிறார்கள். இப்படியே ஸதாசார்யர்களும் மிகுந்த பிரபாவசாலிகள். லக்ஷ்மீ ஸஹாயமுள் ளவர்கள். அவர்களை லௌகிகமோ, வைதீகமோ எந்த காரியங் களிலும் நினைத்தால் எந்த குற்றங்களும் நீங்கிவிடும். எந்த பாபங்களுக்கும் பிராயச்சித்தமாக அவர்களையே பிரபத்தி பண் ணிவிட்டால் அவர்கள் தாயாரையும் பெருமாளையும் கொண்டு எவ்வித பாபங்களையும் போக்கி மோக்ஷ பர்யந்தமான பலன் களையும் நமக்கு ஸாதித்துக் கொடுத்துவிடுவார்கள். பெருமாள் தாயார், பாதுகைகள், ஆசார்யர்கள் இவர்கள் எப்போதும் ஒரு வரோடொருவர் விட்டுப் பிரியாதவர்களானதால் அனுஸ்மரணத் தில் எல்லோரும் கலக்கவேணுமென்பதும், ஆசார்ய பரம்பரை யை நினைப்பது தாயார் பெருமாள் பாதுகைகள் பர்யந்தம் செல் லவேணுமென்பதும், எந்த காரியங்களுடைய ஆரம்பத்திலும் முடிவிலும் இப்படி அனுஸந்திக்கவேணுமென்பதும் இந்த ச்லோகத்தால் ஸூசிதமாகிறது.

'ஸம்ஹாஷ்ய பாஷண்ட்யைஸ் ததநு ஸப்தஜந்மயேஷ' என்று பேசத்தகாத பேச்சுக்கும், பேசத் தகாதவர்களோடு பேசினதற்கும் பிராயச்சித்தமாக மஹான்களை நினைக்கும்படி விதிக்கிற பிரமாணமும் இதிலுள்ள விஷயங்களுக்கு உபலக்ஷணம். இந்த கிரந்தத்தில் 24-வது பத்ததியாகிய த்வந்தபத்ததியின் 2, 7, 20-வது சுலோகங்களாலும் ஸநாதநோ, ஆயஸிதேஷு நாதநோ என்கிற பதங்களின் கருத்து ஸ்பஷ்டமாகும். இந்த சுலோகத்திலுள்ள, சப்த சித்ரத்துக்கு பாதாவ்ருத்தியமகம் என்றுபெயர். ஒரு பதத்திலுள்ள அக்ஷரங்களே மற்றொரு பாதத்திலும் வருவது. இங்கு இரண்டாவது பாதமும் நான்காவது பாதமும் ஒரே மாதிரி அக்ஷரங்கள்உள்ளன.

(௩௧௯) ராமபாதகதா ஸாபா ஸாமாதா மதபாமரா ।
காதிபாநஸகாஸத்ரா ஸத்ராஸகாநபாதிகா ॥

(ப-ரை) ராமபாதகதா - ஸ்ரீராமனுடைய திருவடியை அடைந்ததும், அமதபாமரா-அமதபா - வியாதியைக் காப்பாற்றிக்கொள்ளுகிறவர்களாக இல்லாமலிருக்கிற (மதம் என்றால் வியாதி, பா என்றால் காப்பாற்றுகிறது, அ என்பது இல்லை என்கிறது) அமரா-தேவர்களை உடைத்தாயிருப்பதும் (மனுஷ்யர்களைக்காட்டிலும் தேவர்கள் ஜ்ஞானாதிகர்களானாலும் ஒரோர் ஸமயங்களில் அவர்களுக்கும் பிரகிருதி ஸம்பந்தத்தாலும் பகவன்மாயையாலும் ஈச்வரஜ்ஞானத்தையும் கூட மறைத்து ருத்ராதிகளைப்போல் எதிரம்பு கோர்க்கும்படி செய்கிற அஹங்கார மமகாராதிகளாகிற * ஆத்மவியாதிகளை அவர்களிடத்திலுள்ள அனுக்ரஹத்தினாலே போக்கிக் காப்பாற்றப்பட்ட பிரம்மா முதலிய தேவர்களையுடைத்தானதும்) அல்லது (மதபா: வியாதியைக் காப்பாற்றுகிறவர்கள், இவிடம் மனோவியாதியை அதாவது துக்கத்தைக் காப்பாற்றுகிறவர்கள், அதாவது துக்கத்தைக் கொடுக்கிறவர்கள், சத்துருக்கள் என்று பலிதார்த்தம்) அமதபாமரா - சத்துருக்கள் இல்லாமலிருக்கிற

---

* அமிருதபிராசனத்தால் தேவர்களுக்கு சரீரவியாதி இல்லையாதலால் இங்கு ஆத்மவியாதியைச் சொல்லுகிறோம்.

தேவர்களை உடையதும், பா - ஸூர்யனுக்கு, துஸ்ஸஹா - தாங்கக்கூடாததுமான (தன்னுடைய தேஜஸ்ஸினால் லோகத்தையெல்லாம் கொளுத்துகிற ஸூரியனைக்கூடக் கொளுத்தக்கூடியதுமான), ஸா - அந்த (ஸௌலப்யம், தயை, தேஜஸ் முதலியதால் பிரஸித்தமான), காஞ்சநபாதுகா - தங்கப் பாதுகையானது, 1 காத் - பிரம்மாவிடத்திலிருந்து, உபாந்தே - ஸமீபத்தில் (ஸ்ரீரங்கவிமானத்தோடு பூமிக்கு) வந்தது; க்யாதா - இந்த விஷயம் ஸ்ரீரங்கமாஹாத்மியம் முதலானதால் பிரஸித்தமாக அறியப்பட்டதாக, நநு - இருக்கிறதல்லவா? ஶ்லோகத்துக்கு மற்றொரு விதமாகவும் அன்வயம் சொல்லலாம். (யா), ஸுபர்வாணா, ஸா, பாதுஸஹா, காத், உபாந்தே ஸா, காஞ்சநபாதுகா, ராமபாதகதா, க்யாதா, நநு. (பதங்களுக்கு அர்த்தம் முன்போலவே)

(கருத்து) ஆச்ரித ஸௌலப்யத்தினாலே பகவானோடுகூட ராமாவதார காலத்தில் ஸ்ரீராமன் திருவடிகளை அடைந்ததும், அநுக்கிரஹஸ்வபாவத்தினால் தேவர்களுக்கு அஹங்கார மமகாரங்களாகிற ஆத்மவியாதிகளையும் பாஹ்யசத்ருக்களையும் போக்கிக் காப்பாற்றுகிறதும், தேஜஸ்ஸினால் ஸூரியனைக்கூட கொளுத்தக்கூடிய பிரபாவமுள்ளதுமான அந்தத் தங்கப் பாதுகையானது பிரம்மலோகத்திலிருந்து ஸ்ரீரங்கவிமானத்தோடு பூமிக்கு வந்தது என்பது புராணப்ரஸித்தமல்லவா? (அல்லது) எந்தப் பாதுகையானது மிகவும் அநுக்ரஹசீலமுள்ளதானதால் தேவர்களுக்கு ஏற்படும் ஆத்மவியாதிகளையும் பாஹ்ய சத்ருக்களையும் போக்கிக் காப்பாற்றுகிறதோ, எந்தப் பாதுகை ஸூரியனைக்கூடக் கொளுத்தக்கூடிய தேஜஸ்ஸுள்ளதோ, எந்தப் பாதுகையானது பிரம்மலோகத்திலிருந்து ஸ்ரீரங்கநாத

1 க: என்கிற பதம் நிகண்டுப்படி பிரம்மாவையும் ஸஹஸ்ரநாமத்திலுள்ள திருநாமங்கள்படி பகவானையும் சொல்லுமானதால், காத் என்கிற பதம் பூர்வம் மஹர்ஷிகளுடைய ஆசார்யபரம்பரை பிரம்மாவிடத்திலிருந்து உண்டானதையும், ஸ்ரீ நம்மாழ்வார் துடக்கமாகவுள்ள நம்முடைய ஆசார்யபரம்பரை பெருமாளிடத்திலிருந்து உண்டானதையும் ஸூசிப்பிக்கும்.

ளோடு பூமிக்கு வந்ததோ அதே மஹிமையுள்ள அந்த தங்கப் பாதுகையேதான் பகவானுடைய ராமாவதார காலத்திலும் “ ராகவத்வேऽபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி । அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாநபாயிநீ ॥ தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ । விஷ்ணோர்தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ்தநும் ॥ ” என்கிற நியாயமாகவும் ஆச்ரித ஸௌலப்யவாத்ஸல்யாதி குணங்களாலே ஜீவராசிகளைத் தேடியும் ஸ்ரீராமனுக்குத் தகுந்த பாதுகையாக வந்து அவதரித்தது. இது பிரஸித்தமான விஷயமல்லவா? அதினால்தான் ஸ்ரீராமனுக்கு பிரதிநிதியாக ராஜ்பத்தை விசேஷமாக ஆளக்கூடிய சக்தியும் அதற்கு இருந்தது என்பதும் இதிலிருந்து த்வனிக்கிறது. ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யர்களும் அப்படியே தெய்வப்பிரகிருதிகளான ஆச்ரிதர்களுடைய ஆத்மவியாதி முதலானவைகளைப்போக்கி காப்பாற்றத் தகுந்தவர்கள். எப்படிப்பட்ட வித்வான்களாலும் அவமதிக்க முடியாதவர்கள். நித்யஸூரிகளாக இருந்து பகவானுடைய விபவாவதாரகாலத்திலும் அர்ச்சாவதாரகாலத்திலும் லோக ரக்ஷணத்தின்பொருட்டு பகவானுக்கு ஸஹாயமாக பூமியில் வந்து அவதரிக்கிறவர்கள்.

இந்த சுலோகத்திலுள்ள சப்தசித்ரத்துக்கு ‘ பாதப்ரதிலோமயமகம் ’ என்று பெயர். இதில் ஒரு பாதியில் ஒரு பாதத்திலுள்ள அக்ஷரவரிசையை தலைகீழாகத் திருப்பி வாசித்தால் மற்றொரு பாதமாகிறது. இப்படியே ‘அர்த்தப்ரதிலோமயமகமும், ச்லோகப்ரதிலோமயமகமுமுண்டு. அதில் ஒரு பாதியைத் தலைகீழாக வாசித்தால் மற்றொரு பாதியாகவும் சுலோகம் முழுவதுமே முதலிலிருந்து வாசித்தாலும் கடைசியிலிருந்து தலைகீழாக வாசித்தாலும் ஒரேமாதிரியாகவும் இருக்கும். (9)

(௩௱௰) பாதாவநீஸாத்யதாம் த்ராயமாணாநாய ஸர்வ வே । ஸாயஸ ஸம்ஜித்ஜுஷாம் வ்ருணோதிஸரி பாதுகே ॥ (௰)

(ப-ரை) ஹெ ஹரிவாஹநகெ - ஆச்ரிதர்களுடைய தோஷங்களையெல்லாம் போக்குகிறவராயிருக்கிற பெருமானுடைய பாதுகையே, வாஸா - திருடமான (அழிக்கமுடியாத), கவ - வியஸநங்களுடைய, கூஜே - வரிசையினுடைய, ஸாட - ஸம்பந்தத்தினலே, தாவெ - சூன்யமாக இருக்கிறதும் (அப்படிப்பட்ட வ்யஸநங்கள் ஒன்றும் ஸம்பந்தப்படாதபடி பண்ணுகிற) அல்லது, வாஸா - அழிக்கமுடியாமலிருக்கிற, கவாஜே - பாபக்கூட்டமாகிற, ஸாடா-காட்டினலே, தாவெ - சூன்யமாகவிருக்கிறதும் (உபாயானுஷ்டானத்திற்கு முந்தியும் பிந்தியுமுள்ள பாபக்கூட்டங்களையெல்லாம் நசிக்கும்படிக்கும் ஒட்டாமல்படிக்கும் பண்ணுகிறதும்), ஜாயா - தமிழ் பிரபந்தங்களுடைய, சூஹாநாய - நல்ல பிரகாசத்தின் பொருட்டு (திருவாய்மொழிகள் மேலே மேலே ஸுகமாகத் தோன்றுவதின்பொருட்டு), ஹாஜூ - மலர்ந்திருக்கிற, வெ - மனோரூபமான இந்திரியத்தை உடைத்தானதுமான, ஸோயள-மானஸ ஸாக்ஷாத்காரரூபமான பகவானைப்பற்றிய இடைவிடாத தியானத்திலே, ஶடஜிவஹாஸாஂ - ஸ்ரீ நம்மாழ்வாருடைய சிரஸ்ஸை, வரணொஷி - வரிக்கிறாய் (அடைகிறாய்).

(கருத்து) ஆச்ரிதர்களுடைய ஸகல பாபங்களையும் போக்கடிக்கும் ஸ்வபாவமுள்ள பெருமானுடைய பாதுகையே! நீயும் அவனைப்போன்ற ஸ்வபாவமுள்ளவளே! அது எப்படி ஏற்படுகிறது என்றால் சொல்லுகிறேன் கேள், எப்படிப்பட்ட ஸமாதியில் மனதானது நிலைநிற்கும்போது உலகத்தில் ஜனங்களை வருத்துகிற மாளாத வல்வினைகளால் ஏற்படும் துக்கங்கள் ஒன்றும் மனதில் தட்டாதோ, எந்த ஸமாதியில் உபாயானுஷ்டானத்துக்கு முந்தியும் பிந்தியுமுள்ள எல்லையில்லாத பாபவர்க்கங்களெல்லாம் நசித்தும் ஒட்டாமலும் போய்விடுமோ? எந்த ஸமாதியில் நிலைத்தால் பகவானுடைய ஸ்வரூப, ரூப, குணவிபவ, சேஷ்டிதங்களெல்லாம் தெளிவாக பிரத்யக்ஷீகரித்தாற்போல் தோன்றி திருவாய்மொழி ஸுகமாக மேல்மேல் தோன்றும்படி மனதானது முழுமலர்ச்சியை அடையுமோ, அப்படிப்பட்ட ஸர்வதுக்கங்களையும் பாபங்களையும் போக்கி

பேராநந்தத்தையும், ஜ்ஞானபிரகாசத்தையும் கொடுக்கக்கூடிய ஸமாதியை ஸ்ரீ நம்மாழ்வாருக்கு அனுக்கிரஹிக்கும்பொருட்டு நீயே அவருடைய சிரஸில் "செழும் பறவை தானேறித்திரிவான்தன் தாளிணையென்தலைமேலவே" என்ற ஆழ்வாருடைய ஸூக்திப்படி ஸாந்நித்யம் செய்கிறாயே. இப்படி ஸ்ரீபாதுகைகள் அனுக்கிரஹார்த்தமாக தானே ஸ்ரீநம்மாழ்வாருடைய சிரஸை அடைகிறதாகவும் சொல்லலாம். அல்லது ஸ்ரீ நம்மாழ்வார் அப்படிப்பட்ட ஸமாதிகாலத்தில் பகவானையே நிரந்தரமாக தியானிக்கும்போதும் அது ஸித்திக்கும்பொருட்டோ அல்லது புருஷார்த்தமாகவோ ஸ்ரீ பாதுகையையும் விடாமல் சிரஸில் தரிக்கிறார், தியானிக்கிறார் என்றும் சொல்லலாம். இத்தால் ஸதாசார்யர்களை உபாயதசையிலும், பலதசையிலும் விடாமல் தியானிக்கவேணுமென்பதும், அவர்களுடைய அனுக்கிரஹத்தால்தான் உபாயமும் ஸித்திக்கவேணும் அவர்களுடைய அனுபவமும் கலந்துதான் புருஷார்த்த காஷ்டையும் ஏற்படவேணுமென்பதும், ஆச்ரிதர்களுடைய ஸித்யர்த்தமாக அவர்களே ஸ்வபிரயத்னம் செய்கிறார்கள் என்பதும் ஸூசிதமாகிறது. இந்த சுலோகத்தில் 'கவாடநாடகு வாஜநூ' என்கிற சப்தசித்ரம் சொல்லப்படுகிறது. ஒரு தடவை வந்த அக்ஷரம் மறுபடி வாராமலிருப்பது. (10)

**(கூஉக) ஸா ஹவாராஉவாரஷூாவிஹவாஷிஸவா ரதா। தாரவா ஸகூவாஜுஷிவஹரவா ராஉ வாஜுகா ॥** (கக)

(பதவுரை) ஹவா - அர்ச்சாவதாரரூபியான பகவானோடு கூட எழுந்தருளியிருந்து மத்யமலோகமான பூமியைக் காப்பாற்றுகிறதும், ஸ்ரீராமன் ராஜ்யத்திலில்லாத காலத்தில் அவருக்குப் பதிலாக தானே ஏகதேசத்தில் பூமியை ஆண்டதும், ராஉ - ராமனென்கிற, வார - கரையிலே அதாவது எல்லையிலே, ஷூா - இருக்கிறதும் அதாவது லோக வேத மரியாதைகளை ஸ்தாபிக்கிறவராயிருக்கிற ஸ்ரீராமனிடத்திலிருந்து அந்தக் காரியத்தை அவருடன் நடத்துகிறதும், அல்லது

ராம - ராமனுகிற, வார - எல்லாவற்றிற்கும் அக்கரையாக (மேலாக) இருக்கிற பரப்ரம்மத்தினிடத்திலே, ஸூ - இருக்கிறதும் அதாவது விசேஷ பகுமானத்துடனும் செல்வாக்குடனும் ஸ்திரப்ரதிஷ்டிதமாக விளங்குகிறதும் என்று அபிப்பிராயம், விஹா - பகவானுடைய அல்லது எங்கும் வியாபித்த தான திவ்யாத்ம ஸ்வரூபத்தினுடைய, உபாஸ்தி - உபாஸனத்துக்கு அதாவது த்யானத்துக்கு. ஸபாரதா - கரையோடு கூடிக்கொண்டிருக்கும் தன்மையை உடைத்தானதும் அதாவது பகவதுபாஸநத்தினுடைய பலத்துக்கு எல்லை நிலமாக (புருஷார்த்த காஷ்டையாக) இருப்பதும், அல்லது படிப்படியாக ஸுகரமாகவும் சீக்ரபலப்ரதமாகவுமிருக்கிற திவ்யாத்ம ஸ்வரூப த்யாநம், திவ்யமங்கள விக்ரஹ த்யாநம், அதினும் திவ்யசரணாரவிந்த த்யாநம், திவ்யபாதுகா த்யாநம் என்கிற உபாயவரிசையில் கடைசியாக (அதாவது உபாயகாஷ்டையாக) இருக்கும் தன்மையை உடைத்தானதும், தார - பிரணவத்தால் சொல்லப்படுகிற பகவானை, பா - காப்பாற்றுகிறதும், அதாவது ஸஞ்சாரகாலத்தில் முள்முதலியவைகளால் உபத்திரவம் வாராதபடி காப்பதும், தோஷ - தோஷங்களினுடைய, பூர - வெள்ளத்தை, பா - குடித்துவிடக்கூடியதும் அதாவது ஆச்ரிதர்களுடைய ஸகல தோஷங்களையும் போக்கடிக்கக் கூடியதுமான, ஸா - அந்த் அதாவது மேற்சொன்ன குணங்களால் பிரஸித்தமான, ராமபாதுகா - ஸ்ரீராமனுடைய பாதுகையானது, ஸதயா - விசேஷ தயையோடும் கூடியதாகவல்லவோ இருக்கிறது என்று ஆச்சரியஸந்தோஷங்களுடன் சொல்லுகிறது.

(கருத்து) முந்திய சுலோகத்தில் ஸ்ரீ பாதுகையானது ஆச்ரிதர்களுடைய கார்யஸித்யர்த்தமாக தானே ப்ரயத்னம் செய்வதாகச் சொல்லப்பட்டது. இந்த சுலோகத்தில் அதின் காரணமென்னவென்று யோஜித்துப்பார்த்தவளவில் பரம கிருபைதான் என்று கண்டு அதைக் கொண்டாடி ஆச்சரியத்துடன் பேசுகிறார். அதாவது, தானுகவே உலகத்தை எல்லாம் ஆளக்

கூடிய ஸாமர்த்யமுள்ளதாக இருந்தும் ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனுக்கு பரம அந்தரங்கமாக இருந்து அவனோடுகூட லோக வேதமர்யாதைகளை உலகத்தில் ஸ்தாபிக்கக்கூடிய ஜ்ஞானமுள்ளதாக இருந்தும் அல்லது வேதங்களாலும் எட்டிப் பிடிக்கமுடியாததும் பிரம்மாதிகளுக்கும் கண்டுபிடிக்க பரம துர்லபமானதுமான ஸ்ரீராமவேஷம் பூண்ட பரப்ரம்ம ஸ்வரூபத்தினிடத்தில் விசேஷ பஹுமானத்துடன் ஸ்திரப்ரதிஷ்டிதமாக விளங்குவதாக இருந்தும், ஸுலபமாக உபாஸிக்கத்தகுந்ததாகவும் சீக்கிரத்தில் பரமபலத்தைக் கொடுக்கக்கூடியதாகவுமிருந்து உபாய காஷ்டையாம்படி திவ்யாத்மஸ்வரூபம் துடங்கிய உபாஸனத்தின் எல்லை நிலமாக இருந்தும் அல்லது 'எம்மா வீட்டுத்திறமும் செப்பம் நின் செம்மாபாதபற்புத்தலை சேர்த்தொல்லை' என்கிற பிரகாரம் புருஷார்த்தகாஷ்டையாம்படி அவ்வுபாஸநத்தின் பலன்களில் எல்லை நிலமாக இருந்தும் பிரணவப்ரதிபாத்யமான பகவானுக்கே ரக்ஷகமாகக்கூடிய வஸ்துவாக இருந்தும் உலகத்தினுடைய ஸகல பாபங்களையும் ஸ்ரீ அகஸ்த்யபகவான் ஸமுத்ரஜலத்தையெல்லாம் ஒரே ஆசமநத்தில் குடித்துவிட்டது போல் ஒரே க்ஷணத்தில் குடித்துவிடக்கூடிய தபோமஹிமையுள்ளதாக இருந்தும், இப்படிப்பட்ட பரத்வஸூசகமான ஜ்ஞானசக்தி விபவாதிகளால் உலகத்துக்கு பரம துர்லபமாகவும் முகங் கொடாமலும் ஆகாமல் இந்த பரத்வத்தையெல்லாம் தன்னுடைய பெருமையினால் மறைக்கும்படியானதும் லோகோஜ்ஜீவனத்துக்கு ஒரே காரணமானதுமான பரம தயையும் ஸ்ரீ பகவானிடத்தில் போலவே இந்த பாதுகையினிடத்திலும் இருக்கிறதே இது என்ன ஆச்சரியம் என்று நினைத்து ஸக்ருபா, ஸக்ருபா, ஸக்ருபா என்று ஆச்சரியத்துடனும் ஸந்தோஷத்துடனும் அதைக் கொண்டாடுகிறார். ஸக்ருபா என்று சுலோகத்தில் ஒரே தடவை இருந்தாலும் அர்த்த ஸ்வாரஸ்யத்தினால் பல தடவை சொல்லவேண்டுமென்பது ஏற்படும். ஸதாசார்யர்களும் அப்படியே உலகத்தைக் காப்பாற்றுகிறவர்கள். பகவதாஜ்ஞைக்கு உள்ளடங்கியிருந்து அதை உலகத்தில் ஸ்தாபிப்பவர்கள். பரப்ரம்மத்தினிடத்தில் ஸ்திரப்ரதிஷ்டிதமானவர்கள். அவர்களை உபாஸிப்பதே உபாயகாஷ்டையாகும். அவர்களுடைய கைங்கர்யமே

1 8 5 10 3

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஸா | ஹ௫ | உா | ணா | ஜ | உா | ர | ஷூ |
| வி | ஹ௫ | உா | ஷி | ஸ | உா | ர | தா |
| தா | ர | உா | ஸ் | க்ரு | உா | ஊம | ஷ்டீ |
| வ௫ | ர | உூா | ணா | ஜ | உா | ஊம | கா |

7 4 9 6 11

14 12 2 13 15

சுலோகம் 921 ] [ பக்கம் 461

புருஷார்த்தகாஷ்டையாகும். வேதமார்க்கத்துக்கு கண்டக ஸ்தானமான தூர்வாதிகளை நிரஸித்து பகவானை ஸ்தாபிப்பவர்கள்; தத்³த்³ருஷ்டிகோ³சராஸ்ஸர்வே முச்யந்தே ஸர்வகில்பி³ஷை: என்கிறபடி திருஷ்டிமாத்ரத்தாலேயே உலகத்தின் பாபங்களைப் போக்கத்தகுந்தவர்கள். அவர்களிடத்தில் இவ்வளவு பெருமைகளிருந்தும் அவர்களிடத்திலுள்ள தயாகுணமே எல்லாவற்றிலும் பிரதானமானது என்பது ஸூசிதமாகிறது.

இந்தசுலோகத்திலுள்ள பந்தத்துக்கு'கோமூத்ரிகாபந்தம்'என்று பெயர்.'கோமூத்ரிகா'மாவது உடுக்கு,உடல்,தவுல்முதலியதுபோலொத்த ஒரு மேளவிசேஷம். அதினுடைய பின்னலான குருக்குமூலைக் கட்டுகளும், மத்தியிலுள்ள சக்ரமான கட்டுக்களும் போலுள்ளது. இந்த பந்தசித்ரத்தில் சுலோகபாதங்களின் வாசிக்கிற கிரமம். இந்த ஒத்துமை இந்த பந்தத்தின் பெயருக்குக் காரணம். (11)

(௧௨) காரிகா ந ந யாத்ராயா யா ஸ்துத்யா ஸ்வஸ்வ
பா⁴நுபா⁴ । பாதுகா மம ஸா அஸி யஜ்ஞாய
ஸத்வரா ॥ (௧௨)

(ப-ரை) யா - யாதொரு நீ, யாத்ராயா: - ஸஞ்சாரத்துக்கு அதாவது லோகரக்ஷணார்த்தமான பகவானுடைய ஸஞ்சாரத்துக்கும், ஜீவராசிகளுடைய சரீரயாத்ரையைப்பற்றினதும் ஆத்மயாத்ரையைப்பற்றினதுமான வ்யாபாரங்களுக்கும், நகாரிகா ந - நடத்தாதவளாக இல்லாதவளாகவும் அதாவது அவைகளை நீயே அவசியம் நடத்துகிறவளாகவும், ஸ்துத்யா - உன்னுடைய குணங்களையும் பெருமைகளையும் பற்றி ஸ்துதி பாடத்தகுந்தவளாகவும், பா⁴நுபா⁴ - ஸூரியன் பிரகாசிப்பதுபோல் மிகுந்த பிரகாசமுள்ளவளாகவும், பாதுகா - ஸர்வ லோகங்களையும் காப்பாற்றுகிறதாக இருக்கிற பகவானுடைய திருவடிகளையும்கூட காப்பாற்றுகிறதாகவும், அஸி - இருக்கிறாயோ, ஸா - அப்படி அநேகவிதத்தில் பரமோத்க்ருஷ்டையான நீ, மம - பரமநீசனான என்னுடைய, யஜ்ஞாய - ஆராதனத்தின்பொருட்டு, ஸத்வரா - வெகுசீக்கிரத்தில் அதாவது

நான் பிரார்த்திப்பதற்கு முந்தியே நீயாகவே வலுவிலேயே, ஸிஸாவி - ஸித்தமாக இருக்கிறாயே, அதாவது என்னை நீ ஆராதி அப்பா என்று சொல்லிக்கொண்டு எல்லையில்லாத ஸௌலப்ய ஸௌசீல்ய வாத்ஸல்யங்களுடன் வந்து காத்திருக்கிறாயே, ஹ ஹ - என்பது ஸந்தோஷம், ஆச்சரியம் பரபரப்பு முதலியதைக் காட்டுகிறது.

(கருத்து) முன்சுலோகத்தின்படி பாதுகையினிடத்தில் உள்ள தயாகுணத்தின் பெருமையைக்கண்டு அநுபவித்தும் பின்னும் பாதுகையினிடத்திலுள்ள பரத்வோபயுக்தகுணங்களையும் தன்னிடத்திலுள்ள இளப்பத்தையும் யோஜித்து அநர்ஹதாநுஸந்தானத்தாலே அதினிடத்திலிருந்து விலக யத்னித்தவாறே பாதுகையானது தன்னை அப்படி விலகவொட்டாமல் அதனுடைய ஸௌலப்ய ஸௌசீல்ய வாத்ஸல்யத்வாதிகளையே காட்டிக்கொண்டு தன்னிடத்தில் மேல்விழுந்து கிட்டி அதை ஆராதிக்கும்படி நியமிப்பதை இந்த சுலோகத்தால் சொல்லி ஆநந்திக்கிறார். அல்லது தான் அப்படி பாதுகையின் தயாகுணத்தை அநுபவித்தவாறே அதைக்கண்டு ப்ரீதையான பாதுகையானது தன் தயையின் பரீவாஹமாக தன்னை ஸாக்ஷாத்தாய் ஆராதிக்கும்படி உடனே தன்னைக் கொடுக்கக் கண்டு இவ்வளவு பெருமையுள்ள நீ இவ்வளவு எளிதில் இளப்பமான எனக்கு ஆராத்ய வஸ்துவாக உன்னைக் கொடுத்துவிட்டாயே. இனி எனக்கு என்ன குறை உண்டு என்று சொல்லி ஆச்சரியஸந்தோஷங்களை யடைகிறார்.

இந்த சுலோகத்தில் ஜீவேசுவரர்களுடைய ஸகல பிரவிருத்திகளையும்தானுகவே தலைப்பொருப்பாகஏவுகிறவளாகவும் ஸகலலோகத்தாலும்ஸ்துதி பாடத்தகுந்தவளாகவும் ஸர்வ லோகத்துக்கும் ஜ்ஞானப்பிரகாசத்தைக் கொடுக்கிறவளாகவும் ஸர்வரக்ஷகனுக்கும் ரக்ஷகமாக இருப்பவளாகவும்இருக்கிற உன்னுடைய பெருமையையும் பார்த்து நீசனுக்கும் நீசனான என்னுடைய இளப்பத்தையும் யோஜித்து நான் உன்னைக் கிட்ட அஞ்சி விலகுவோமென்று பார்த்தால் நீ அதற்கு இடம் கொடாமல் உன்னுடைய தயையின் பிரிவுகளான ஸௌலப்ய ஸௌசீல்ய வாத்ஸல்யாதிகளையே காட்டிக்கொண்டு உன்னுடைய பரத்வத்தை

எல்லாம் நான் மறக்கும்படி அதிஸுலபமாக நான் பிரார்த்திப்பதற்கு முந்தியே 'அப்பா நீ என்னை ஆராதிக்கலாமே' என்று என் ஆராதனத்துக்கு வந்து காத்திருக்காயே; இது என்ன உன் தயையின் பெருமை; இது என்ன என் பாக்யம் என்று விஸ்மயப்படுகிறார்.

அல்லது— "இத்தனையடியரானார்க்கு இரங்கும் நம் அரங்கனாயபித்தனே" என்கிற கிரமமாக நான் உன் தயா குணத்தைக் கண்டு ஸந்தோஷித்தமாத்திரத்தை வியாஜமாகக் கொண்டு உகந்து உன்னுடைய ஸர்வநியந்திருத்வ, ஸர்வலோக ஸுஹ்ருத்த்வ, ஸர்வலோகைகநாயகத்வ, ஸர்வலோகரக்ஷகத்வாதிகளான பெருமைகளையெல்லாம் பாராமல் மிகவும் இளப்பமான என்னை அணுகி உன் பரத்வத்தைக்கூட மறக்கும்படி செய்து நான் பிரார்த்திப்பதற்கு முந்தியே உன்னை எனக்கு ஆராத்ய வஸ்துவாகவும் கொடுக்கும்படியான அபிமுக்கியத்தோடு என் ஆராதனத்தைப் பெற்றுக்கொள்வதற்கும் ஸித்தமாகவிருக்கிறாயே. இனி எனக்கு என்ன குறையுண்டு; என் பிரவிருத்திகளையும் நல்வழியில் நடத்தி, உன்னை ஸ்துதிக்கும்படியான வாக்கையுங்கொடுத்து, ஜ்ஞானத்தையும் மனதில்பிரகாசிப்பித்து, என்னை இந்த ஸம்ஸாரத்திலிருந்து ரக்ஷிப்பதற்கல்லவோ இப்படி யத்தனிப்பது என்று சொல்லி ஸந்தோஷப்படுகிறார்.

ஸதாசார்யர்களும் அப்படியே தாங்களே தலைப்பொறுப்பாக ஜீவராசிகள்விஷயத்தில் பகவானுடைய தயையையும் ப்ரேரணை பண்ணி, ஆச்ரிதர்களுடைய ஸத்பிரவிருத்திகளையும் நடத்துகிறார்கள். அவர்களுடைய குணங்கள் ஸர்வலோகத்தாலும் ஸ்துதிபாடத் தகுந்தது. ஜ்ஞானப்ரகாசத்தை உலகத்துக்கு உண்டுபண்ணுகிறவர்கள். பகவானுடைய திருவடியைக் காப்பாற்றுகிறவர்கள். ஆச்ரிதர்களுடைய பக்திபுரஸ்ஸரமான அபிஸந்தியை மாத்திரம் கவனித்து, அவர்களுடைய இளப்பத்தைப் பாராமல், அவர்களைத் தேடி அவர்களுக்கு தங்களுடைய ஸௌலப்யாதிகளையே காட்டி "கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி" என்கிற கிரமத்தில் ஸ்வல்பத்தைக்கொண்டே ஸந்துஷ்டர்களாய் ஆராத்யமாகும் சீலமுடையவர்கள்.

இதிலுள்ள சப்தசித்ரத்துக்கு "அநுலோமப்ரதிலோம ஸம்ருத ஸ்லோகம்" என்று பெயர். அதாவது சுலோகத்தை கிரமமாக வாசித்தாலும் கடைசியிலிருந்து தலைகீழாக வாசித்தாலும் சுலோகபதங்களும் அவைகளின் அர்த்தங்களும் மாறாமல்படி ஒரேமாதிரியாக இருப்பது. இது கீழ்க்கண்ட ப்ரதிலோமபாடத்தினால் ஸ்பஷ்டமாகும்

ஸாம்ஜஸா ஜஜ யஜ்ஞாய விஷாவி ஹஹ பாதுகா । ஸாநு ஸாஸ்யஸ்ய யா மேயா யாத்ராயா நந காரிகா ॥ (12)

(கூஉங) ஸதாவஹா ச்ருதெளத்ருஷ்டா பாதுகா ஸமந்ய வாஸநா । ஸஹாவஹா கதௌ ஸ்லிஷ்டா ஸ்வாது மே ஸமதவாஸநா ॥

(பதவுரை) ஸதாவஹா - ஸர்வாவஸ்தைகளினும் ஸ்ரீராமனோடுகூட சேர்ந்தே இருப்பதும், ச்ருதௌ - வேதத்தில், த்ருஷ்டா - உட்கருத்தாக பார்க்கப்படப்பட்டதும், ஸமந்யவாஸநா - ராஜ்ஜாஸநத்தை அடைந்ததும், கதௌ - ஸஞ்சாரகாலத்தில், ஸஹாவஹா - சிரமம் அறியாமலும் த்வரையோடும் வெகு ஸாமர்த்யம் பழக்கங்களுடனும் செல்லக்கூடியதும், ஸ்லிஷ்டா - எப்பொழுதும் ஒன்றை விட்டொன்று பிரியாமல் சேர்ந்தே இருப்பதும் அதாவது ஒருவராலும் பேதிக்கமுடியாதபடி எப்பொழுதும் கார்யஸமர்த்தமாக இருப்பதும், ஸமதவாஸநா - ஸாதுக்களாலே த்யானம் செய்யப்படுகிறதுமான, பாதுகா - பாதுகையானது, மே - எனக்கு, ஸ்வாது: - ருசிக்கிறது, அல்லது ருசிக்கவேணும்.

முன் சுலோகத்தில்படி பரமோத்க்ருஷ்டமான பாதுகையானது அகிஞ்சனனான தனக்கு பரமஸுலபமாக ஆராத்யவஸ்துவாக ஸித்தமானவாறே அதன் மஹிமையையறிந்து அதனிடத்தில் பரம பக்தி உண்டாகவேண்டுமென்று இதில் ப்ரார்த்திக்கிறார்.

(கருத்து) இப்படி பரமோத்க்ருஷ்டமான பாதுகையானது பரம அகிஞ்சனனான எனக்கு பரமஸுலபமாக ஆராத்ய வஸ்துவாக ப்ராப்தமானதுமட்டும் போதாது. ஸர்வாவஸ்தைகளிலும் பரமாந்தரங்கமாக பகவானை விட்டுப் பிரியாமல்

நெருங்கிப் பழகுவதும், வேதப்ரதிபாத்யமானதும், பகவானுக்கு ப்ரதிநிதியாக ராஜாஸநத்தை அடைந்ததும் பகவானுடைய ஸஞ்சாரத்துக்குப் பரம ஸாதனமானதும், ஒருவராலும் பேதிக்கமுடியாதபடி அந்யோந்யம் பரம மைத்ரத்தோடு கூடியிருந்து எப்போதும் கார்யஸமர்த்தமாகக்கூடியதும், ஸத்துக்களாலே பரமோபாயமாக உபாஸிக்கப்படுவதுமான அதின் மஹிமைகளையெல்லாம் உள்ளபடி அறிந்து அதனிடத்தில் எனக்கு விஷயவைராக்யபூர்வகமாக பரம பக்தி ஸித்திக்கவேணும் என்று பிரார்த்திக்கிறார்.

இப்படியே ஹமவதூரகவம், ஶ்ருதிஸ்ம்ருதிவாத்ஸல்யகவம், ஹமவஜ்ஞாயநிவூரஹஸாயேம்ஸ்யம், ஶோகாநந்தஹாயம் ஸஞ்சாரஶீலகவம், ஜநஸமூஹபாஷிஷோஷரஹிதகவம், வரதேஶத்ருகவம், ஸதாசாரஸ்யகவம் முதலிய எல்லாக்குணங்களும்நிறைந்த ஸதாசார்யர்கள் விஷயத்திலும் அவர்கள் மஹிமை உள்ளபடி மனதில் தென்பட்டு அவர்களிடத்தில் பரமபக்தி உண்டாகவேணுமென்றும் பிரார்த்தித்ததாகிறது இதே விஷயத்தையே ஸ்ரீ குருநும் பராஸாரத்தில் 'ஸதிதஹ்ஸம்' என்கிறசுலோகத்திலும் பிரார்த்தித்திருக்கிறார்.

இந்த சுலோகத்திலுள்ள பந்தத்துக்கு, அம்பினுடைய ஆகிருதியை உடைத்தாயிருப்பதால், சரபந்தம் என்றுபெயர். சுலோகபாதிகளை மொசேதிரகாஶீதியில் வாசிப்பது. ,,ஶ''வுக்கும் ,,ஷ''வுக்கும் அபேதம் வழக்கமானதால் பந்தத்தில் ஸாரா ஷவா என்பது ஸஶாஷவா என்றும் ஆகும். (13)

(௧௪) காவ்யாயாஶ்ரித சாவமூவ்யாஜயாதஹசாமகா!
காசஷாஜமத꞉ ஶ்ரியேத்ரா ரம்மவரம்மவவாஷகா ॥

(ப.ரை) ஶா - மஹாலக்ஷ்மியினுடைய, கூவமூ - அழைப்பதிலே, வ்யாஜ - ஒரு காரணமாக இருக்கிற, யாத - ஸஞ்சாரத்தை, ம - அடைந்திருக்கிற, ஶாமகா-அல்பமார்க்கத்தை உடையதாயும் * காசஷா-(ஆச்ரிதர்களுக்கு சாஸ்திரவிருத்தமல்

* அதாவது ஏதாவது ஒரு இடத்தில் எக்காரணத்தினாலாவது தன்னுடைய ஸஞ்சாரம் ஸ்வல்பம் ஏற்பட்டாலும் அவிடத்தில் மஹாலக்ஷ்மியின் கடாக்ஷத்தை வரவழிக்கக் கூடியதாயும் என்று தாத்பர்யம்.

தா) ஸகல அபீஷ்டங்களையும் கொடுப்பதாயுமிருக்கிற, ரங்க வாஸிந: பாதுகா - ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையானது, ஜகத: - உலகத்தினுடைய, குப்த்யை - ரக்ஷணத்திற்காக, காவ்ய - (ஸ்ரீமத் ராமாயணம், ஸ்ரீ பாதுகாஸஹஸ்ரம் முதலிய) காவ்யங்களுக்கு விஷயமாக, அபூத் - ஆச்சுது.

(கருத்து) ஸ்ரீரங்கத்தில் வஸிக்கும் ஸ்ரீ புருஷோத்தமனுடைய பாதுகையானது அவனைப்போலவே பரம ஔதார்யமும் பரம தயையும் பொருந்தியதானதால், ஜனங்களுடைய அஜ்ஞாத, யாத்ருச்சிக, ப்ராஸங்கிக ஸுக்ருதலேசமடியாக ஏதாவது ஒரு இடத்தில் எக்காரணத்திலாவது தன்னுடைய ஸ்வல்ப ஸஞ்சாரம் சேர்ந்தாலும் அதையே ஒரு பெரிய வியாஜமாகப் பாராட்டி, அவிடத்திலுள்ள ஜனங்களுக்கு லக்ஷ்மீகடாக்ஷத்தையும் அதின் மூலமான திரவ்யஸம்பத்தையும் ஜ்ஞானஸம்பத்தையும் ஏற்படுத்த ஆரம்பித்துவிடுகிறது. தன்னுடைய கடாக்ஷத்தால் ஜ்ஞானம் உதித்தவாறே ஜனங்கள் தன்னை உள்ளபடி ஆச்ரயிக்க அவர்களுக்கு மோக்ஷபர்யந்தமான ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கிறது. ஆனால் அப்படிப்பட்ட புருஷோத்தமனை பகவானுடைய பாதுகை நமக்குக் கிட்டினாலும் அதின் ஸ்வரூபஸ்வபாவங்கள் நமக்குத் தெரிந்தாலுமல்லவோ உலகமானது அதை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கலாமென்றால், அதற்காகத்தானே அந்த திவ்ய பாதுகையானது பகவானுடைய விபவாவதாரத்திலும் அர்ச்சாவதாரத்திலும் தானும் கூடவே அவதரித்து தன்னுடைய ஸங்கல்பத்தால் ஏற்படுத்தப்பட்டதும் தன்னுடைய சரித்ரங்களடங்கியதுமான ஸ்ரீமத்ராமாயணம் ஸ்ரீபாதுகாஸஹஸ்ரம் முதலிய காவ்யங்களால் தன்னுடைய ஸ்வரூபஸ்வபாவங்களின் பெருமைகளை உலகத்திற்கு காட்டிக்கொடுக்கிறது. ஆகையால் இந்த உண்மையை அறிந்து நம்முடைய ஜன்மத்தை வீணாக்காமல் நாம் கடைத்தேறும் வழியைச் சேரவேணும்.

ஸதாசார்யர்களும் அப்படியே பாதுகையைப் போன்ற குணமுடையவர்கள். அவர்களுடைய ஸ்வல்ப கடாக்ஷமும், அவர்கள் விஷயத்தில் செய்த ஸ்வல்ப சுச்ரூஷாதிகளும் அஜ்ஞானத்தையும் கஷ்டத்தையும் போக்கி பரம ச்ரேயஸ்ஸு வரையில் கொண்டுவிடும். ஆனால் அவைகள் ஸுக்ருதவசத்

தால் நேரவேணும். உலகத்தின் க்ஷேமத்திற்காகவேதான் அவர்கள் இங்கு அவதரித்து தங்களுடைய சரித்திரங்களை ஏற்படுத்தி தங்களுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களை உலகத்துக்கு வெளிப்படுத்துகிறார்கள். இந்த உண்மையை அறிந்து அவர்களை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கவேணும்.

இந்த சுலோகத்திலுள்ள பந்தத்துக்கு 'கோமூத்ரிகா பந்தம்' என்று பெயர். அதாவது இதில் காட்டப்பட்ட இரண்டு விதமான சித்ரங்களிலும் அடைக்கப்பட்ட சுலோக அக்ஷரங்களை குறிக்கப்பட்ட எண்ணிக்கையின் வரிசையில் கூட்டி சுலோகத்தின் இரண்டு பாதிகளையும் வாசிக்கும் க்ரமமானது கருடன் ஆகாசத்தில் பறக்கும் காலத்தில் கொஞ்சம் மேலே ஏறியும் கொஞ்சம் கீழ் இறங்கிக்கொண்டும் சக்ரமாக வட்டமிடுவதுபோல் காணப்படும். (14)

(௯௨௫) ஸுரகார்யகரீ தேவீ ரங்கதுர்யஸ்ய பாதுகா ।
காமதா கலிதாதேசா ஸஞ்சாரா ஸாது பத்ததிஷு ॥

(ப-ரை) ஸுர - தேவதைகளுடைய, கார்ய - (இஷ்டங்களைக் கொடுப்பதும் அநிஷ்டங்களைப் போக்குவதுமாகிய) காரியங்களை, கரீ - செய்கிறவளும், கலித - செய்யப்பட்ட, ஆதேசா-(ச்ருதிஸ்ம்ருதிரூபமான) ஆஜ்ஞையை உடையவளும் அதாவது அவற்றை ஏற்படுத்துகிறவளும், ஸாது - நல்லதான, பத்ததிஷு - வழிகளில், ஸஞ்சாரா - ஸஞ்சரிக்கிறவளுமான, ரங்கதுர்யஸ்ய - இந்த உலகமாகிற கூத்தை (ரங்கம்) நடத்துகிறவராயிருக்கிற பகவானுடைய, தேவீ - விளங்காநிற்கிற அல்லது விளையாட்டில் ப்ரியமுள்ள, பாதுகா - பாதுகையானவள், காமதா - ஆச்ரிதர்களுடைய அபீஷ்டங்களை எல்லாம் நிறைவேற்றுகிறவள்.

குறிப்பு— ஸஞ்சாரா ஸாது பத்ததிஷு என்பதால் (1) நல்லவர்களைத் தேடி அவர்களிடம் செல்லக்கூடியது என்றும் (2) உயர்ந்ததான மார்க்கங்களையுடைய பரமபதத்தில் ஸஞ்சரிக்கக்கூடியது என்றும் அர்த்தங்கள் த்வனிக்கிறது.

(கருத்து) முன் ச்லோகத்தில்படி பாதுகையானது லோக ரக்ஷணார்த்தமாக ஏற்பட்டதென்றும், லக்ஷ்மீகடாக்ஷத்தை உண்டு பண்ணக்கூடியதென்றும், ஸ்ரீமத்ராமாயணம் முதலிய காவ்யங்களில் கொண்டாடப்பட்ட வைபவமுள்ளதென்றும் சொன்னது ஸ்தோத்ரத்திற்காக மட்டுமன்று. வாஸ்தவத்தில் ஸ்ரீபகவானுக்கு உதவியாக இருந்து அவரோடுகூட இந்த உலகமாகிற கூத்தை ஆட்டிவைக்கிறதும் அதுவே. ஸத்வப்ரகிருதிகளான தேவர்கள் முதலியவர்களுடைய இஷ்டங்களைக் கொடுப்பதும் அநிஷ்டங்களை அழிப்பதும், அவர்களுக்கு விரோதிகளாய் தாமஸ ப்ரகிருதிகளான அஸுரர்கள் முதலியவர்களுக்கு விபரீதத்தைச் செய்வதும் அதின் கார்யமே. ச்ருதிஸ்மிருதிரூபமான சாஸ்திரங்களிலுள்ள விதி (நல்லதைச் செய்யும்படி கட்டளையிடுவது) நிஷேத(கெடுதலைத்தடுப்பது)ரூபமான உபதேசங்களும் அதனால் ஏற்படுத்தப்பட்டதே. ஸன்மார்க்கத்தில் தானும் நடந்து உலகத்தை பனுஷ்டிப்பிப்பதும் அதுவே. பகவத்பக்தர்களிடம் சென்று ஆதரித்து அவர்களுக்கு பகவானையடைவிப்பதும் அதின் கார்யம். பரமபதத்தில் ஸஞ்சரிக்கத்தகுந்தது. இப்படி ஞானுனுஷ்டானங்களாலும் சிக்ஷாரக்ஷண ஸாமர்த்தியத்தினாலும் விளங்காநின்றிற தும் பகவானுடைய திருவுள்ளப்படிக்கும் நியமனப்படிக்கும் உலகவ்யாபாரமாகிற விளையாட்டை நடத்துகிறதுமான பாதுகையை நாம் உள்ளபடி அறிந்து ஆச்ரயித்தால் நமக்கு ஸகல புருஷார்த்தங்களும் ஸித்திக்கும் என்பது நிச்சயம்.

ஸதாசார்யர்களும் அப்படியே பகவானுக்கு ஸஹாயமாக இருந்து அவன் திருவுள்ளப்படிக்கும் நியமனப்படிக்கும் உலக ரக்ஷணவியாபாரத்தை நடத்துபவர்கள். தெய்வப்ரகிருதிகளை ரக்ஷிப்பவர்கள்; சாஸ்திரங்களை ப்ரவர்த்திப்பிக்கிறவர்கள்; தங்களுடைய நல்ல அனுஷ்டானங்களால் ஸன்மார்க்கத்தை உலகத்தில் ஸ்தாபிப்பவர்கள். பகவத்பக்தர்களைத் தேடி ஆதரித்து அவர்களுக்கு பகவானைக் கிட்டுவிக்கிறவர்கள்; பரமபதத்தில் வஸிக்கத்தகுந்தவர்கள். அவர்களுடைய பெருமைகளை உள்ளபடி அறிந்து உண்மையில் ஆச்ரயித்தால் நமக்குக் கிடைக்கக் கூடாத புருஷார்த்தம் ஒன்றுமில்லை. எதுவும் ஸித்திக்கும் என்பதும் ஸூசிதம்.

இந்த சுலோகத்திலுள்ள பந்தத்துக்கு விஶ்வஜைாடக வைூலபாபம் என்று பெயர். (15)

(கூஉகூ) ஹாரதாரிதாம் தாரம் வநெ ராவவவாஜூ காம் । ஸவதாவாயிதாஜாநம் வநூாம் ராஜீ வபெஷவாம் ॥

(ப-ரை) ஹாரத - பரதனாலே, கூராயிதாம் - பூஜிக்கப் பட்டதும், தாரம் - உத்கிருஷ்டமானதும், ஸவ - ஸம்ஸா ரத்திலுள்ள, தாவ - ஆத்யாத்மிக, ஆதிபௌதிக, ஆதிதெை விகங்களாகிற தாபத்ரயங்களாலே ஏற்படுகிற, ஆயி - மனஸ் ஸங்கடத்தாலே, தாஜாநம் - துக்கங்களை அநுபவிக்கிறவர் களுக்கு, வநூம்-(அந்த ஸங்கடங்கள் நீங்குவதற்காக) ஸ்தோ த்ரம் பண்ணத் தகுந்ததும், ராஜீவ - (பூஜாகாலத்தில் ஸமர்ப் பிக்கப்பட்ட) தாமரைப்பூக்களாலே, பெஷாம் - நிறைந்திருப் பதுமான, ராவவ வாஷகாம்-ஸ்ரீராமனுடைய பாதுகையை, வநெ - ஸேவிக்கிறேன்.

(கருத்து) முன் சுலோகத்தில் சொன்னபடி உலகத்தை ரக்ஷிக்கக்கூடிய சக்தி முதலானதுகள் ஸ்ரீ பாதுகைகளுக்கு பர, வ்யூஹரூபங்களிலிருந்தாலும் ஸ்ரீ பகவான் ராமனாக மனுஷ்யாவதாரம் பண்ணின காலத்தில் கூடவந்தவதரித்த பாதுகைக்குள்ளதோவென்றால் அப்படியே உள்ளது. ஆகை யினால்தான் மிகவும் புத்திமானாய் தத்வத்தை உள்ளபடி அறிந்த பரதாழ்வானால் பகவானுக்கு ப்ரதிநிதியாக ப்ரார்த் திக்கப்பட்டு பகவானாகவே ஆராதிக்கப்பட்டது. ஆராதிக்கப் பட்டதுமாத்திரமல்லாமல் பகவானைக் காட்டிலும் மேலாகவே ராஜ்யத்தை நடத்தி உலகத்தை எல்லாம் விசேஷமாக ரக்ஷித் தது. அதனாலேயே அதின் மஹிமையும் உலகத்துக்கு வெளிப் பட்டு பரமோத்கிருஷ்டமாக விளங்கிற்று. விபவாவதாரத்தில் அப்படிப்பட்ட மஹிமையை அது வெளியிட்டாலும், இப்போது ஸ்ரீரங்கவிமானத்தில் அர்ச்சாவதாரமாக எழுந்தருளியிருக்கும் ஸமயத்தில் அப்படிப்பட்ட சக்திகளை வெளிக்காட்டுவதுண்டோ வென்றால் இந்த தசையிலும் ஸம்ஸாரதாபத்ரயத்தால் வருந் துகிற ஸர்வஜனங்களாலும் ஸ்தோத்ரம் முதலியதால் ஆரா திக்கப்பட்டு அவர்களுடைய கஷ்டங்களையெல்லாம் நீக்குகிறது;

அதற்கு ஒரு ப்ரத்யக்ஷமான த்ருஷ்டாந்தம் என்னவென்றால் இதோ நாம் பார்க்கிறபடி அநேக ஜனங்களாலே பூஜைக்கு மிகவும் உயர்ந்ததான தாமரைப்புஷ்பங்களாலே அர்ச்சிக்கப்பட்டு, ஏராளமான அந்தப் புஷ்பங்களாலே ரொம்பி இருப்பதே. இப்படி ஸர்வாவஸ்தைகளிலும் மிகுந்த மஹிமையோடு கூடிய அந்த திவ்ய பாதுகையை எல்லா க்ஷேமங்களையும் அடையும்பொருட்டு ஸேவிக்கிறேன்.

இந்த ச்லோகத்தின் முதல் பாதியால் இந்த க்ரந்தத்தில் முதல் பத்ததி இரண்டாவது ச்லோகத்தில் சொல்லப்பட்ட விஷயமே சொல்லப்படுகிறது. முன் ச்லோகம் பரவ்யூஹதசைகளையும் இதில் முதல் பாதி விபவதசையையும், இரண்டாவது பாதி அர்ச்சாரூபத்தையும் காட்டுகிறது என்பது அர்த்தஸ்வாரஸ்யத்தால் த்வனிக்கிறது.

ஸதாசார்யர்களும் நித்யஸூரிகளான தசையிலும் முக்த தசையிலும், அவதாரதசையிலும் அர்ச்சாரூபியாக எழுந்தருளியிருக்கும் காலத்திலும், குறைவில்லாத மஹிமையுடையவர்கள். ஸர்வ அநிஷ்டங்களையும் போக்கி ஸர்வ அபீஷ்டங்களையும்கொடுக்கத்தகுந்தவர்கள்; ஸர்வலோகத்தாலும் ஸ்துதி கீர்த்தன வந்தனாதிகளால் பூஜிக்கத்தகுந்தவர்கள் என்பதும் ஸூசிதம்.

இதிலுள்ள பந்தத்துக்கு அஷ்டதளபத்மபந்தம் என்று பெயர். அதாவது எட்டு கோணங்கள் அடங்கிய சக்ரபந்தம். ச்லோகத்தின் இரண்டு பாதிகளிலுமுள்ள பொதுவான ஒத்தைப்படை எழுத்துக்கள் இந்த எட்டு கோணங்களிலும் அடைக்கப்பட்டிருக்கிறதுகள். இந்தப் பொது எழுத்துக்களோடு இரண்டு பாதிகளிலுமுள்ள (பந்தத்தில் இரண்டு சக்ரங்களில் அடைக்கப்பட்ட) இரட்டைப்படை எழுத்துக்களை வாசிக்கும் க்ரமம் கோமூத்ரிகையை ஒத்தது, முன் 913-வது ச்லோகத்தில் இந்த ரீதி இரட்டைப்படை எழுத்துக்களால் ஏற்பட்டது. இதில் ஒத்தைப்படை எழுத்துக்களால் ஏற்படுகிறது. (16)

(௯௧௭) पादपावस्य सदाध्यापा पाध्यापादाह्वदपा
दापका । पादपाङ्क्तिरंसापा पासा प्रद
पादुका ॥

(பதவுரை) க - ஜலத்தை, ஈஸ் - சாப்பிடுகிறவர்களாலே அதாவது * மஹர்ஷிகளாலே உபாஸ்ய - த்யானம் பண்ணத் தகுந்ததான, ஸஸ் - உத்க்ருஷ்டமான, ரூமோகா - பிரகா சத்தை உடைத்தானதும், காமு - ஆராதனகாலங்களிலே, உதாஹ்ருத - தூக்கி ஸமர்ப்பிக்கப்பட்ட (அதாவது பெருமா ளிடத்திலிருந்து களைந்து ஸமர்ப்பிக்கப்பட்ட), தாமோ-புஷ்ப மாலைகளை உடைத்தானதும், காஷா - (தா தாநெ என்கிற தாதுவின்பேரில்) நல்லதான அபீஷ்டங்களைக் கொடுக்கிறதும், அல்லது (தெரா - கவ வணெந என்கிற தாதுவின்பேரில்) கெட்ட சபலங்களைப் போக்குகிறதும், கஸு - மார்க்கங்களில், ப்ராமஸாகா - விளையாடுவதில் ப்ரியமுள்ளதுமான (அதாவது ஸஞ்சாரத்தில் ப்ரியமுள்ளதான), ஙஜெூபவாதுகா - ஸ்ரீரங்க நாதனுடைய பாதுகையானது, க-பெருமாளுடைய, காஸா- நடைபோல் நடையுள்ளது.

(கருத்து) மஹர்ஷிகளால் அபாரமான தேஜஸ்ஸுள்ளதாக த்யானம் பண்ணப்பட்டு அவர்களுடைய ஹ்ருதயத்திலுள்ள அந்தகாரங்களைப் போக்குகிறதும், பூஜாகாலங்களில் பெருமாளு டைய திருமேனியிலிருந்து களைந்து புஷ்பமாலைகளை ஸமர்ப்பிக் கப்படுகிறதாகிற மரியாதையை அடைகிறதும், ஆச்ரிதர்களு டைய நல்ல ஆசைகளை நிறைவேற்றி கெட்டசபலங்களைப்போக்கு கிறதும், லோகரக்ஷணார்த்தமாக எப்போதும் பெருமாளை வெளி யில் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு ஸஞ்சரிப்பதில் ப்ரியமுள்ள துமான இந்த ரங்கநாதனுடைய திவ்ய பாதுகையானது அவ ரைப்போலொத்த நடையும் வ்யாபாரமுமுள்ளதாகவேயல்லவோ இருக்கிறது என்று ஆச்சர்யப்படுகிறார்.

ஸத்ஸம்ப்ரதாய ஸித்தியுடைய ஸதாசார்யர்களுடைய ஜ்ஞாந ப்ரகாசம், பூர்வம் க்ருத த்ரேதாயுகாதிகளில் ஜலம், காற்று இலை சருகு முதலியதுகளில் ஏதாவது ஒன்றை மட்டும் ஆஹார மாகக்கொண்டு உக்ரமான தபஸ்ஸுக்களைச் செய்த மஹர்ஷிக

---

* மஹர்ஷிகள் ஜலத்தை மட்டும், காற்றைமட்டும் சாப்பிட்டுக்கொ ண்டு உக்ரமான தபஸ்ஸுகள் பண்ணுவதாக ப்ரஸித்தம்.

ளாலும் கொண்டாடத் தகுந்தது. ஏனென்றால் வெகுகாலம் வெகு சிரமப்பட்டு பக்தியோகத்தால் அவர்களால் அடையப் பட்ட தெய்வத்தை இவர்கள் ஸுலபமான க்ஷணிகோபாயமாகிற ப்ரபத்தியினாலேயே தாங்கள் வச்யம் செய்து பிறர்களையும் அடைவிக்கிறார்கள். அந்தந்த ஸமயங்களுக்குத் தக்கபடி சிஷ்யாதிகளுடைய அஜ்ஞான ஸம்சயவிபர்யயங்களைப் போக்கக்கூடியதும் அழகான சப்தரசனையோடு கூடியதுமான ஸ்ரீஸூக்திகளை உடையவர்கள்; அல்லது ஸேவாகாலங்களில் பகவன் மாலையாகிற மர்யாதையை அடைகிறவர்கள். ஆச்ரிதர்களுடைய கெட்ட சபலங்களைப் போக்கி, நல்ல இஷ்டங்களை நிறைவேற்றிக் கொடுப்பவர்கள். லோகரக்ஷணார்த்தமான ஸஞ்சாரத்தில் ப்ரியமுள்ளவர்கள். ஆகையால் பகவானைப்போலொத்ததும் பகவானுக்கு உகப்பானதுமான வ்யாபாரம் முதலியது உள்ளவர்கள் என்பதும் இதனால் ஸூசிதம்.

இந்த சுலோகபந்தத்துக்கு (1) அஷ்டதளபத்மபந்தம் (எட்டு தளங்களடங்கிய பத்மபந்தம்) என்றும் (சித்திரத்தில் முதல் பாதத்துக்குக் காட்டிய கிரமப்படி எல்லா பாதங்களையும் வாசிக்கவும்) (2) சதுரரசக்ரபந்தம் (4-வட்டங்களடங்கிய சக்ரபந்தம்) என்றும் பெயர். (17)

**(கஅ) பாபாகூபாரபாளீபா த்ரிபாதீபாதபா
தபா । ஸ்வபாரூபா ஜபாநூபா லபாபாஸா பாஸ்வபாதிபா ॥ (கஅ)**

(ப-ரை) பாப - பாபங்களுடைய, அகூபார - ஸமுத்ரங்களுடைய, பாளீ - வரிசையை, பா - குடித்துவிடுகிறதும் (அதாவது போக்குகிறதும்), ஸ்வரூபா - தயையே வடிவு கொண்டதுபோல் இருப்பதும், ஜப - ஜபத்தைப் போலொத்த, அதாவது அஷ்டாக்ஷரம் முதலிய மந்திரங்களுடைய ஜபம்போல் பரிசுத்தம் பண்ணத்தகுந்த, ஸ்வபா - தன்னுடைய பெயரைச் சொல்வதை உடைத்தானதும், லபா-(அதிகமான ஸௌலப்யகுணமுள்ளதானதால்) ஆச்ரயிப்பவர்களால் ஸுலபமாக அடையப்படக்கூடியதும், ந்ரு

வாஜிவா - ராஜராஜேச்வரியாயும் இருக்கிற, த்ரிவாகீ-(இந்த லீலாவிபூதியைப்போல்)மூன்று பங்குள்ளதான ஸ்தானத்தை, வாஹ - அடைந்தவராயிருக்கிற அதாவது பரமபதநாதனுன பகவானுடைய, வாஹவா - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையானது, மா - (பரமபாபியாய் பரம அகிஞ்சநனை) என்னை, ஐவாஜ - காப்பாற்றிற்று.

(கருத்து) ஆச்ரிதர்களுடைய ஸமுத்ரங்கள் ஸமுத்ரங்களாக எல்லையில்லாமல் பரவியிருக்கிற பாபக்கூட்டங்களையெல்லாம் ஒரே க்ஷணத்தில் இருந்த இடம் தெரியாமல் குடித்துவிடக் கூடியதும், தயையே வடிவுகொண்டாப்போல் பரமதயாமூர்த்தியாக இருப்பதும், மஹாமந்த்ரஜபங்கள் போல் ஸர்வபாபங்களையும் போக்கி பரிசுத்தம் பண்ணக்கூடிய தன்னுடைய நாமஸங்கீர்த்தனத்தை உடையதும், ஆச்ரிதர்களால் மிகவும் எளிதாக ஆராத்ய வஸ்துவாக அடையக் கூடியதும், இந்த பூமியில் உள்ள ராஜாக்கள் முதற்கொண்டு அண்டாதிபதியான பிர்ம்மா வரையிலுள்ள ஸகல ஈசுவரர்களுக்கும் பரமேசுவரியானதுமான ஸ்ரீ பரமபதநாதனுடைய இந்த திவ்யபாதுகையானது அவனைப் போன்ற குணமுடையதாய் பரமபாபியும் பரம அகிஞ்சனனுமான என்னை ஸ்ரீரங்கநாதபாதுகா ஸ்ரீரங்கநாதபாதுகா என்று தன் பெயரைப் பலதடவை நான் சொன்ன மாத்திரத்தை வ்யாஜமாகக் கொண்டு தன்னுடைய அபார சக்தி தயை ஸௌலப்யம் முதலிய குணங்களை எனக்குக்காட்டி தன்னிடத்தில் ப்ரீதியை உண்டுபண்ணி, என்னுடைய எல்லையில்லாத பாபங்களை இருந்த இடம் தெரியாமல் போக்கி, மோக்ஷோபாயத்தில் மூட்டி எனக்குத்தன்னை ஆராத்யவஸ்துவாகவும் கொடுத்துக்காப்பாற்றிவிட்டது. இனி எனக்கு ஸம்ஸாரபயமில்லை. இது என்ன ஆச்சர்யம் என்று அதின் க்ருபையையும் தன்னுடைய பரமலாபத்தையும் தன்யதையையும் நினைத்துக் கொண்டாடுகிறார்.

ஸதாசாரியர்கள் "தத்த்வஷ்டிஸாவராஸவெ" என்கிற படி ஆச்ரிதர்களுடைய ஸர்வபாபங்களையும் போக்கத் தகுந்தவர்கள்; பரமதயாமூர்த்திகள். "ஸ்ரோநந்நா ஸஹாஜவெஜ" என்கிற பிரமாணப்படி அவர்களுடையபெயரை ஆவர்த்திபண்ண மாத்திரத்திலேயே ஸர்வபாபங்களும் ஸங்கடங்களும்போம்;

பரமஸாத்விகர்கள்; ராஜராஜாக்களுக்கும் மேல்பட்டவர்களாய் அவர்களால் பூஜிக்கத் தகுந்தவர்கள். இப்படிப்பட்ட தெய்வகுணங்களுள்ளவர்களானதால் எப்படிப்பட்ட பாபிகளையும் காப்பாற்றி பரம க்ஷேமத்தைக்கொடுக்கத் தகுந்தவர்கள். அவர்களை அடைந்தவர்களே தன்யர்கள் என்பதும் ஸூசிதம்.

இதில் பந்தத்துக்கு ஷோடசதளபத்மம் (16-தளங்களுள்ள பத்ம) பந்தம் என்று பெயர். சுலோகத்தில் இரண்டு பாதியிலுமுள்ள இரட்டைப்படையான அக்ஷரங்கள் ஒரே அக்ஷரமாக இருந்து அந்த பொது அக்ஷரத்தை பத்மத்தின் கர்ணிகையில் எழுதி மற்ற ஒத்தப்படையான அக்ஷரங்களை வரிசையாக பதினாறு தளங்களில் எழுதி ப்ரதக்ஷிணரீதியில் சுலோகத்தை வாசிப்பது. (18)

**(௯௨௯) க்ஷீணாகஸாம் ஸதாராத்யா விஹதாகததாகதா ।**
**ஸத்பாதுகே ஸநாதா மா ரங்கராஜ**
**பதம் நய ॥** (௯௯)

(ப-ரை) ஹே ஸத்பாதுகே - ஸத் என்கிற பதத்தால் சொல்லப்படுகிற பரப்ரம்மத்தினுடைய பாதுகையே! க்ஷீண - அழிக்கமுடியாத, ஆகஸாம் - அபராதங்களை (அதாவது பாபங்களை)உடையவர்களுக்கு அதாவது ஸம்ஸாரிகளுக்கு, ஸதா - எப்பொழுதும், ஆராத்யா - பூஜிக்கத்தகுந்ததும், விஹத - போக்கடிக்கப்பட்ட, அக - அஸுகங்களுடைய, தத - விஸ்தாரங்களென்ன, ஈதா - அநிஷ்டங்களான துக்ககாரணங்களென்ன இவைகளையுடையதும், ஸநாதா - (மதுரமான) சப்தத்தோடு கூடியதுமான, (த்வம் - நீ) மா - என்னை, ரங்கராஜ - ஸ்ரீரங்கநாதனுடைய, பதம் - திருவடியை அல்லது ஸ்தானத்தை, நய - அடைவி.

(கருத்து) 'ஸத்' சப்தத்தால் சொல்லப்படுகிற பரப்பிரம்மமான ஸ்ரீமன் நாராயணனுடைய திருவடிகளைக் காப்பாற்றுகிறவளே! மாளாத பாபங்களையுடைய ஸம்ஸாரிகளுக்கு அந்த பாபங்கள் நீங்கி இந்த ஸம்ஸாரபந்தம் கழிவதற்காக இங்கும், முக்த தசையில் புருஷார்த்தமாகவும் நீயே அல்

ஸதோ எப்போதும் ஆராதிக்கத் தகுந்தவள். அப்படி உன்னை ஆச்ரயித்து உன்னை பிரபத்தி பண்ணுகிறவர்களுக்கு அஸங்கங்களுடைய விஸ்தாரத்தையும் (அதாவது அவற்றுக்குக் காரணமான ஸஞ்சித கர்மங்களையும்) மேல் வரப்புகும் அநிஷ்டங்களையும் (அதாவது ப்ராரப்த சேஷமான கர்மங்களை அனுபவிப்பதற்காக மேல்கொண்டு எடுக்கவேண்டிய ஜன்மாக்களையும்) நீ போக்கிவிடுகிறாய் (அதாவது இந்த சரீரத்தில் அனுபவிக்க வேண்டிய ப்ராரப்த கர்மம் முடிந்ததும் சரீரமாகிற ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அடியோடு நீக்கி மோக்ஷத்தைக்கொடுத்துவிடுகிறாய்.) நீ எப்போதும் இந்த ஸம்ஸாரத்தில் வருந்துகிற உன் ஆச்ரிதர்கள் விஷயத்தில் துக்கங்களைக்குறைக்கும்படியான ஆசுவாஸனரூபமானதும் ஸங்கடகாலங்களில் அபயப்ரதானரூபமானதுமான மதுரமான சப்தத்தை உடையவளாயிருக்கிறாய். அப்படிப்பட்ட நீ ஸம்ஸாரத்தின் அடிச்சூட்டாலே வருந்தி பகவத்ப்ராப்திக்காக த்வரித்துக்கொண்டிருக்கிற என்னை சீக்கிரத்தில் அந்த பரமபதநாதனுடைய திருவடியையும், ஸ்தானத்தையும் அடைவிக்கவேணும் என்று உத்கண்டை (ஆவல்) ப் படுகிறார்.

ஸதாசார்யர்களும் ஸம்ஸாரபந்தம் நீங்குவதின்பொருட்டு அளவில்லாத பாபங்களையுடைய ஸம்ஸாரிகளால் ஆராதிக்கத் தகுந்தவர்கள். ஆச்ரிதர்களுடைய ஸகல பாபங்களையும் பகவத்ப்ரபத்தியினால் போக்குகிறவர்கள். மதுரமும் ஹிதமுமான பேச்சையுடையவர்களாய், ஜனங்களை வச்யம் செய்து சீர்திருத்தி நல்வழிக்குக் கொண்டுவருகிறவர்கள். ஆச்ரிதர்களுக்கு பகவானுடைய திருவடியையும் ஸ்தானத்தையும் அடைவிப்பவர்கள்.

(௬௰) ஸ்ரீதா ஸமயராஜத்வா மதரா ஶாதகெ மவி ।
ஸ்ரீரங்கஸா ஸமதாஞா ஸாஜ்யாதாவகரா
ஸரா ॥ (௨௦)

(படை) ஸமய-சிஷ்டாசாரஸங்கேதத்தினாலே, அதாவது ஸத்ஸம்ப்ரதாய அனுஷ்டானங்களாலேயே ராஜக - பிரகாசிக்கிறவர்களை, வா-காப்பாற்றுகிறதும், ஆமத-அடையப்பட்ட, ரா - ஸ்வர்ணத்தை, அல்லது ஐசுவரியத்தை உடையதும், ஶாத கெ - ஸந்தோஷகரமான, மவி - தன்னுடைய ரத்நகிரணங்க

ளின் மத்தியிலே, அல்லது ஸூர்யமண்டலமத்தியிலே, ஸ்தி தா - இருப்பதும், உரம்ஹஸாம் - கொடுமையான பாபங் களையுடையவர்களுக்கு, ஸநதா - அந்த பாபங்களின் பலனுக ரொம்ப துர்தசையை அடைந்திருக்கும் தன்மையை, ஹா - அழிக்கிறதும், ஸாகூ - உண்டாக்கக்கூடிய, அதாவ-தாபமில் லாத்தன்மையையுடைய, கரா-கிரணங்களை (ரத்னகாந்திகளை) உடைத்தானதும், ஸுஸரா-எங்கும் ஸஞ்சரிக்கக்கூடியதுமான, (கூவம் - நீ, மா - என்னை, ரஜராஜவஷம் நய - ஸ்ரீரங்கநாதனு டைய திருவடிகளில் சேர்க்க வேணும் என்று கீழ் சுலோகத் தோடு அந்வயிப்பது).

(கருத்து) ப்ராசீனமான ஸத்ஸம்ப்ரதாய மார்க்கத்தை ஸ்வபுத்தியாலே மாற்றுமல் அதற்குட்பட்டு நடந்து அதையே காப்பாற்றிவரும் ஸாதுக்களை அபிமானித்துக் காப்பாற்றுகிற வளும், ஸமஸ்த லோக ஐசுவரியங்களையும் தன்னதீனமாய்க் கொண்டு ஆச்ரித அநாச்ரிதவிஷயத்தில் தானிட்ட வழக்காம் படி உபயோகிக்கக்கூடியவளும், ஒரே ஜ்யோதிர்மயமாய் ஜகத் துக்கெல்லாம் ஆநந்தகரமான தன்னுடைய ரத்னகிரணங்களின் மத்தியிலே இருப்பவளாயும் (அல்லது அப்படிப்பட்ட ஸூர்ய மண்டலத்தின் மத்தியிலே இருப்பவளாகவும்) த்யானிக்கத்தகுந் தவளும், கொடுமையான பாபங்களால் பரம துர்தசையை அடைந்திருப்பவர்களுக்குத் தன்னை ஆச்ரயித்தமாத்திரத்தில் அந்த துர்தசையையெல்லாம் போக்குகிறவளும், தன்னை வணங்கு கிறவர்களுக்குத் தன்னுடைய ரத்னகிரணங்களின் ஸ்பர்சமாத்தி ரத்தினாலே ஸமஸ்த தாபங்களையும் போக்குகிறவளும், ஸர்வ லோக ஸஞ்சார ஸாமர்த்யமுள்ளவளாய் ஆச்ரிதர்கள் எங்கிருந் தாலும் தேடிச் சென்று காப்பாற்றும் ஸ்வபாவமுள்ளவளு மான நீ (கூஹா கூஹா என்று ஸ்ரீ ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் சொன்னபடி எதிர்பார்த்திருக்கிற) என்னை உன்னுடைய உயர்ந்த ஸ்தானத்தில்ஸ்ரீபகவானுடையதிருவடிகளில்சேர்ப்பிக்கவேணும்

ஸதாசார்யர்களும் சிஷ்டாசாரத்திற்கு உட்பட்டிருப்பவர் களிடத்தில் கிருபையுடையவர்கள். ஸர்வேச்வரனை ஸ்வாதீநம் பண்ணிக்கொண்டவர்களானபடியினாலே அவர்கள் இச்சித்தால்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஷி ய 1 | ரா 30 | ற 9 | ஷாம் 20 | ஷ 3 | ஊா 24 | ரா 11 | ஸ்ரா 26 |
| வி 16 | ஹ 19 | தா 2 | க 29 | த 10 | தா 27 | ஓ 4 | தா 23 |
| ஷ 31 | தூ 8 | ஊ 17 | கெ 14 | ஷ 21 | ரா 6 | ஷா 25 | ஓா 12 |
| ரும் 18 | ற 15 | ரா 32 | ஜ 7 | வ 28 | ஊ 13 | ஜு 22 | ய 5 |

ஸர்வ ஐசுவரியங்களும் அவர்கள் இட்ட வழக்காகும். ஸதா ஆநந்தகரமான ஆத்மஜ்ஞானப்ரஸாரத்தின் மத்தியிலே இருப்பவர்கள். ஆச்ரிதர்களுடைய ஸகல துர்தசையையும் போக்கக்கூடியவர்கள். தங்களுடைய ஜ்ஞானப்ரகாசத்தினாலே ஆச்ரிதர்களுடைய அஜ்ஞானத்தைப் போக்கி அதன் மூலமாய் ஸம்ஸார துக்கங்களையும் அவர்களிடம் ஒட்டாமல் பண்ணக்கூடியவர்கள். லோகரக்ஷணார்த்தமாக நானாதேசங்களிலும் ஸஞ்சரிப்பவர்கள். அப்படிப்பட்ட ஸதாசார்யர்கள்தான் நம்மை பகவானுடைய திருவடிகளில் சேர்க்கவேணும் என்பதும் ஸூசிதம்.

இந்த இரண்டு சுலோகங்களும் வதுராஜூதுராஜூவஙு த்தில் அடங்கியது. ஒரு சுலோகத்திலுள்ள முப்பத்திரண்டு அக்ஷரங்களை மற்ற சுலோகத்திலுமுள்ளது. முதல் சுலோகத்தின் நாலு பாதங்களையும் வரிசையாக நான்கு வரிசைக் கட்டங்களில் அடைத்து இரண்டாவது சுலோகத்தை சதுரங்க ஆட்டத்தில் குதிரை அடி க்ரமத்தில் துடர்ச்சியாக வாசிக்கவேண்டியது. குதிரையின் கதியாவது ஆரம்பக் கட்டத்திலிருந்து ஒரு பக்கக்கட்டம் விட்டு அடுத்த மூலை கட்டத்துக்குப் பாய்வது. இந்தமாதிரியானது மேல்பந்தத்தில் எண்ணிக்கையினால் காட்டப்பட்டிருக்கிறது. (20)

(கூஙக) ஜொகதாரா காஉசாரா கவிராஜஉுராவவா ।
தாராமஹெத வாஉராZZஉராஜஹெத ராஉவாஉுகா ॥

(ப-ரை) ஜொக - ஜனங்களை அதாவது தன்னை ஆச்ரயித்த ஜனங்களை, தாரா - காப்பாற்றுகிறதும், காஉசாரா - இஷ்டப்படி எங்கும் ஸஞ்சரிக்கிறதும், அல்லது, ஞுகாஉ - எல்லா ஜனங்களாலும் ஆசைப்படத்தகுந்ததான, வாரா - ஸஞ்சாரத்தை உடையதும், கவிராஜ . கவிசிரேஷ்டர்களான வ்யாஸ வால்மீகி முதலானவர்களாலே, உுராவவா - தன்னுடைய பெருமைகளைப்பற்றி பூராவாகச் சொல்லப்படமுடியாததும், மஹெத - (தன்னுடைய அல்லது பகவானுடைய) ஸஞ்சாரத்தில், தாரா - உத்க்ருஷ்டமானதும் அல்லது உத்க்ருஷ்டமான த்வனியுள்ளதும், வாஉ - தன்னுடைய கிரணங்களை, ரா - கொடுக்கிறதுமான, ராஉவாஉுகா - ஸ்ரீராமனுடைய

பாதுகையானது, கூ - இந்தமாதிரியல்லவோ, ராஜதே விளங்குகிறது.

(கருத்து) ஸ்ரீபாதுகைகளை அதிக பக்தியாலே ஸ்துதித்து புலம்பிக்கொண்டுவரும் காலத்தில் நடுவில் நடுவில் தன்னுடைய லாபத்தைக் கொண்டாடுவதும் இஷ்டங்களை ப்ரார்த்திப்பதுமாகிற கிரமத்தில் முந்திய மூன்று சுலோகங்களிலும் சொல்லி மறுபடியும் அதின் குணத்தை நினைத்து நினைத்து மேலும் புகழுகிறார். அதாவது- ஆச்ரிதர்களுக்குஸுலபமாம்படி இந்தலோகத்தில் மனுஷ்யனோடு மனுஷ்யனாய் ஸ்ரீராமனாக வந்துஅவதரித்த அந்த புருஷோத்தமனுடைய பாதுகையே! அவனுக்கனுரூபமான உன்னுடைய ஸௌலப்யாதி குணங்களுடைய பெருமையை நான் என்னவென்று சொல்லுவேன். இப்படிப்பட்டது இப்படிப்பட்டது, அதாவது ஸ்ரீ பகவானைப்போலொத்தது, பகவானைப்போலொத்தது என்று இவ்வளவுதானே சொல்லமுடியும்; ஆனால் ஒருவராலும் சொல்லமுடியாதோவென்றால், உலகத்தில் கவிசிரேஷ்டர்கள் என்று பெயரெடுத்த வ்யாஸ வால்மீகி முதலான மஹாகவிகளாலும் எங்கே சொல்லமுடிந்தது. அப்படியானால் நீ இதில் யத்தனிப்பானேனென்றால் உன்னுடைய அநுக்ரஹத்தாலுண்டான உன்னுடைய குணானுஸந்தானத்தாலே சொல்லிப் புலம்பாமலிருக்கமாட்டாமையாலே புலம்புகிறேன். உன்னுடைய தயாகுணமானது ஸர்வலோகங்களிலும் உள்ள ஜனங்களையெல்லாம் தேடிப்போய் காப்பாற்றும்படி தூண்டுகிறது. அதையறிந்த ஸர்வ லோகத்திலுமுள்ள ஆச்ரிதர்கள் ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கத்தக்க உன் வரவை ஆவலுடன் ஸர்வதா எதிர்பார்க்கிறார்கள். அப்படி ஆச்ரிதர்களிடம் செல்ல மற்ற ஸாதனங்கள் அமையாதென்று பார்த்து நினைத்த மாத்திரத்தில் எங்கும் செல்லும்படியான ஸாமர்த்யத்தை பகவானைப்போல் நீயும் வைத்துக்கொண்டாய். உன்னுடைய ஸஞ்சாரமோ ஒப்பில்லாதது. எல்லையில்லாத நன்மைகளைக் கொடுக்கத் தக்கது. நீ வரும் காலத்தில் உன்னுடைய சப்தமும் பிரார்த்தனைகளை அளிப்பதும் பயத்தைப் போக்குவதுமாய் இனிமையாயும் கம்பீரமாயும் "ஸித்தவ-ுவ-ுாஹிஹாஷீவ வ-ுவ-ுஹாஷீவ ராவவ:" என்கிறபடி முன் நிற்கிறது. அப்படியே உன்னுடைய கிரணங்களும் (ஸூரிய

னுக்குமுன் அவன் கிரணங்கள் பரவி ப்ரகாசத்தை உண்டு பண்ணுவதுபோல்) முன்னடியே ஆச்ரிதர்களிடத்தில் பரவி அவர்களுடைய அஜ்ஞானமாகிற இருட்டைப் போக்குகிறது. அல்லது பகவானுடைய ஸஞ்சாரத்துக்கு உன்னைப்போலொத்த ஸாதனம் மற்றொன்று கிடையாது. அந்த ஸஞ்சாரங்களில் உன்னுடைய சப்தமானது மிகவும் கம்பீரமாயும் இனிமையாயும் பகவானுடைய வரவுக்கு ஆச்ரிதர்களை ஸித்தப்படுத்துவதாயும் இருந்து உத்க்ருஷ்டமாக இருக்கிறது. அப்படியே உன்னுடைய கிரணங்களும் முந்தியே ஆச்ரிதர்களுடைய அஜ்ஞானத்தைப் போக்கி ஜ்ஞானத்தைக் கொடுத்து பகவானை உள்ளபடி அறியும்படிக்கும் அனுபவிக்கும்படிக்கும் செய்கிறது.

நித்யஸூரிகளான ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யர்களும் காமசாரர்களாய் ஸ்வேச்சையாலும் பகவானுடைய திருவுள்ளத்தாலும் தயையினால் உலகத்தை ரக்ஷிப்பதின் பொருட்டு இவ்வுலகத்தில் வந்து அவதரிக்கிறார்கள். மிகவும் க்ஷேமகரமான அவர்களுடைய ஸஞ்சாரத்தை ஜனங்கள் ஆவல் படுகிறார்கள். அவர்களுடைய பெருமையை எந்த மஹாகவிகளாலும் ஒரு அம்சத்திலும் அளவிட்டுச்சொல்லமுடியாது. அவர்

---

குறிப்பு— இது 477-ம் பக்கத்தில் ராகவோதயா என்பதற்கு குறிப்பு. முந்திய இரண்டு ச்லோகங்களில் 'ஸத்வோதயே' என்று ஸம்போதனம் பண்ணி இதில் ராகவோதயா என்று சொல்லியிருக்கிறது. அதனால் பரரூபமும் அவதார ரூபமும் அவதாரத்திற்கு காரணமும் த்வனிக்கிறது. முந்திய ச்லோகத்தில் கடைசிபதத்தில் ஸத்வோதயம் சொல்லி மறுபடியும் இதில் ஸத்வோதயம் சொல்லுவது புநருக்தியாகாமைக்காக விசேஷ பாவமும் சொல்வது உசிதம். வ்யாஸாதிமஹாகவிகளால் சொல்லமுடியாத பாதுகையை இதில் ஸ்துதிப்பதற்கும் காரணம் சொல்லவேணும். மதே என்பதை தாரா, வாஹா இரண்டிலும் காகாக்ஷி ந்யாயமாக அந்வயித்து பாவம் சொல்வதும் ஸ்வாரஸ்யமுள்ளது. ஸூதே என்கிற பதத்திற்கும் ஸமுச்சயபாவம் சொல்லாமல் விசேஷ பாவம் சொல்வதிலும் ரஸமுண்டு.

களுடைய ஸஞ்சாரம் பல நன்மைகளை விளைவித்துக்கொண்டு உத்கிருஷ்டமாக விளங்கும். அல்லது அவர்கள் வரும்பொழுது கம்பீரமானதும் இனிமையானதும் க்ஷேமகரமானதுமான வார்த்தைகளை முன்னிட்டு வருவார்கள். அவர்கள் செல்லுமிடமெல்லாம் அவர்களுடைய ஜ்ஞாநப்ரகாசத்தினால் அஜ்ஞாநத்தைப் போக்குகிறவர்கள். அவர்கள் பகவானுடைய கதிக்கு உத்கிருஷ்டஸாதனம். அதாவது அவர்களுடைய பிரார்த்தனையால் தான் பகவான் ஜனங்களிடத்தில் வருகிறார். அவர்களுடைய உபதேசாதிகளேதான் பகவான் ஸஞ்சரிக்கிற மார்க்கமாகிற ஜனங்களுடைய மனதை இருட்டில்லாமல் செய்து நற்குணங்களால் அலங்கரிக்கிறது. ஆகையால் ஆசார்யர்கள் பகவானைப் போன்ற குணமுடையவர்கள் என்பதும் இதனால் ஸூசிதம்.

இதிலுள்ள பந்தத்துக்கு 'சதுஷ்பாதீசக்ரம்,' அதாவது, சுலோகபாதங்களின் பாதிகளுடைய சுற்றுள்ளது என்று பெயர். அதின் கிரமம், குறுக்கான 5 கோடுகளால் சுலோக பாதங்களை உள்ளே எழுதும்படி 4 வரிசைகளை ஏற்படுத்தி அந்த 4 வரிசைகளையும் நெடுக்கான 9 கோடுகளால் 8 கட்டங்கள் உள்ளதாகச் செய்து, 4 வரிசைகளிலும் 4 பாதங்களையும் கிரமமாக எழுதினால் முதல் பாதமானது நெடுக்கு வரிசையாக முதல்(1)அக்ஷரத்திலிருந்து கீழ் நோக்கி ஒரு பாதியாகவும் கடைசியிலிருந்து முதல் (32) அக்ஷரத்திலிருந்து மேல் நோக்கி மற்றொரு பதியாகவும், அதேமாதிரியாக இரண்டாவது பாதமானது 2-வது அக்ஷரத்திலிருந்து கீழாகவும் கடைசியிலிருந்து 2-வது (31) அக்ஷரததிலிருந்து மேலாகவும், மூன்றுவது பாதம் 3-வது அக்ஷரத்திலிருந்து கீழாகவும் கடைசியிலிருந்து 3-வது (30) அக்ஷரத்திலிருந்து மேலாகவும், நான்காவது பாதம் 4-வது அக்ஷரத்திலிருந்து கீழாகவும் கடைசியிலிருந்து 4-வது (29) அக்ஷரத்திலிருந்து மேலாகவும் சுற்றுவதுபோல் வாசிக்கும்படி சுலோகத்தில் அக்ஷரங்கள் சேர்ந்திருப்பது. இது ஒரு துஷ்கரமான யமகபந்தம்.

இந்த பந்தத்தில் இன்னும் மேற்கண்ட 4 (குறுக்கு) வரிசைகளோடு கீழே அதே மாதிரியாக மற்றொரு 4 வரிசைகள் சேர்த்து அதில் சுலோகத்தை மறுபடியும் முழுவதும் தலை கீழாக எழுதினால் நெடுக்கு வரிசைகளில் முதல் பாதம் முதல்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஹொ | க | தா | ரா | கா | ஸ்ரீ | ஆ | ரா |
| க | வி | ரா | ஜ | ஓம் | ரா | வ | ஆ |
| தா | ரா | ஹ | தெ | வா | ஓ | ரா | ஸ்ரீ |
| ரா | ஜ | தெ | ரா | ஸ்ரீ | வா | ஓம் | கா |
| கா | ஓம் | வா | ஸ்ரீ | ரா | தெ | ஜ | ரா |
| ஸ்ரீ | ரா | ஓ | வா | தெ | ஹ | ரா | தா |
| ஆ | வ | ரா | ஓம் | ஜ | ரா | வி | க |
| ரா | ஆ | ஸ்ரீ | கா | ரா | தா | க | ஹொ |

சுலோகம் 931 ]    [ பக்கம் 480

வரிசையில் கீழ்நோக்கியும் கடைசியிலிருந்து முதல் வரிசையில் மேல்நோக்கியும் இந்த க்ரமத்தில் மற்ற பாதங்களும் சுற்றுகிற மாதிரி வாசிக்கும்படி இருக்கும். (21)

(கூகூஉ) ஜயாஜ வாவாஜ யாஜ யாஜஹெஜஹஜஹெஜயா।
ஜஹெஜஹெ காகாஜஹெஜ வாஜஹகாஜஜகாஜஹவா ॥

(ப-ரை) ஜயாஜவா, ஜய-ஜயமானது அதாவது இந்திரியஜயம் முதலியதேர்ச்சியானது, ஜ-பக்வத்தை அடையாததாகவுடையவர்களை அதாவது முமுக்ஷுக்களை, வா-காப்பாற்றுகிறதும், அவாஜயா, அவ-போக்கடிக்கப்பட்ட, ஜயா-சரீரவியாதி மனோவியாதிகளை உடையதும் (அதாவது போக்கடிக்கப்பட்ட ஆச்ரிதர்களுடைய தாபத்ரயங்களையுடையதும்) அஜஜகாஜவா அஜஜக - ஜஜகாரம் (அதாவது தெய்வம் நம்மிடம் கொடுத்துவைத்திருக்கிற ஸொத்து முதலானதுகளில் எனக்கேயுள்ளது என் அதீனமானது முதலானஎண்ணங்கள்) இல்லாமலிருக்கிறவர்களை, அஜ-அடைந்திருக்கிற (அதாவது அப்படிப்பட்டவர்களுடைய கோஷ்டியில் சேர்ந்தவனை), உ - ருத்திரனை, வா - காப்பாற்றுகிறதுமான அல்லது அஜஜ - ஜஜகாரம் இல்லாமலிருக்கிற, க - பிர்மாவை, அஜ - பிடித்தவனை (தலையைக் கிள்ளுவதால் உபத்திரவத்தை உண்டுபண்ணி பிர்ம்மஹத்தி பாபத்தை அடைந்தவனை), உ-ருத்திரனை, வா-காப்பாற்றுகிறதுமான, ஜஹெஜகாகாஜ, ஜஹ - பெரிதான, ஜஜக - ஐசுவரியத்தை அடைந்தவர்களுடைய(அதாவது இந்திரன் முதலியவர்களுடைய) அக - அஸுகத்தை, அஜ - சாப்பிட்டுவிடுகிற (அதாவது போக்கடித்துவிடுகிற) வருடைய, அதாவது பகவானுடைய ஹெஜ-தங்கமயமான, வாஜ-காபாதுகையானது, அஜயாஜஹெ அஜ-பெருமாளை, யா-அடைந்திருக்கிற, ஜஹெ - உத்ஸவங்களில் அதாவது ஸ்ரீரங்கநாதனுடைய பல உத்ஸவங்களில், ஜயா - என்றாலே, ஜஹஜஹெ - கறக்கப்படுகிறது, அதாவது பாதுகையினிடத்திலிருந்து வேண்டிய இஷ்டங்கள் என்றால் கேட்டு அடையப்படுகிறது.

(கருத்து) ஆச்ரிதர்களான இந்திரன் முதலான ஸகல ஐசுவரியவான்களுக்கும் அந்த ஐசுவரியநிமித்தமாய் ஏற்படும் அஸுகங்களைப் போக்கி, ஸுகத்தை மறுபடி ஸ்தாபித்துக் கொடுக்கிறவராயிருக்கிற விஷ்ணுவான பகவானுடைய தங்கப் பாதுகையானது, அவருடன் அந்தக் காரியத்தைச் செய்வதோடு இன்னும் எப்படிப்பட்ட தயாகுணமுடையதென்றால், ஆத்ம க்ஷேமத்தின் பொருட்டு பிரயத்தனப்படும் ப்ரதிபந்தகபாபங்களால் இந்திரியஜயம் பகவதனுபவம் முதலியதில் ஸித்தியடையாமலிருக்கிற முமுக்ஷுக்களுக்கு அப்பிரதிபந்தங்களைப் போக்கியும் அனுகூலங்களை ஏற்படுத்தியும் ஸித்தி பர்யந்தமாக உதவி செய்து அவர்களைக் காப்பாற்றுகிறது அப்படிப்பட்டவர்களுக்கு ஸம்ஸாரத்தில் ஏற்படுகிற கஷ்டங்களில் விலக்கக்கூடியதை விலக்கியும் ப்ராரப்த கர்மவசத்தால் அவச்யம் அனுபவிக்கும்படி நேருமவைகளிலும் பரம தயாளுவாய் நமக்கு பரமஸுஹ்ருத்தான பகவான் இவைகளை அவசியம் அனுபவித்தே தீரவேணுமானதால் இவைகளுக்குக் காரணமான மஹாபாபங்களை அவசியம் கழிக்கவேண்டியதற்காக தயையினால் எவ்வளவோ ஸ்வல்பமாகக் கொடுத்துத் தீர்க்கிறான். ஆகையால் அதற்கு நாம் மனஸ்தாபப்படாமல் க்ருதஜ்ஞதையுடனும் திருப்தியுடனும் அநுபவித்துத் தீர்க்கவேணும் என்கிற உண்மையான அறிவைக் கொடுத்து மனஸ் ஸங்கடமில்லாமல் பண்ணியும் அவர்களுடைய தாபத்ரயங்களையெல்லாம் ஓட்டாமல் போக்கிவிடுகிறது. எதிலும் தன்னுடையது என்கிற எண்ணமில்லாமல் பகவானுடைய ஸொத்தாகவே பார்க்கிறவர்களுடைய கோஷ்டியில் சேர்ந்தவனாய் உயர்ந்த ஜ்ஞானமுடைய ருத்திரனுக்கு ஏற்படும் ஸங்கடங்களைப் போக்கிக் காப்பாற்றுகிறது. அல்லது மமகாரபுத்தியில்லாமல் தத்துவத்தை உணர்ந்தவரான பிர்ம்மாவின் சிரஸ்ஸைக்கிள்ளி உபத்திரவத்தைக்கொடுத்து மகாபாகவதாபசாரத்தையும் பிரம்மஹத்தி பாபத்தையும் அடைந்து அதனால் அனுதாபம் பிறந்து தன்னை ஆச்ரயித்த ருத்திரனுக்கு அந்தபிர்ம்மஹத்தி பாபத்தைப்போக்கிக்காப்பாற்றிற்று. இப்படி அந்த பாதுகையானது ஆத்மக்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியதாயும், தாபத்ரயங்களைப் போக்கக்கூடியதாயும் மஹாஸங்கடங்களைநிவர்த்திக்கக்கூடியதாயுமிருந்து, அநேகஜனங்

கள் அதை ஆச்ரயித்து க்ஷேமப்படாமல் இழந்து போகிறார்களே என்றால், அப்படிப்பட்ட புத்தியில்லாதவர்களை அந்யபரர்களாகவாவது (அதாவது பாதுகையை ஸேவிக்கவேணுமென்கிற எண்ணம் அவர்களுக்கு இல்லாவிட்டாலும் பாட்டைக் கேட்பதற்கோ, ஸ்திரீகளைப் பார்ப்பதற்கோ, வம்பளப்பதற்கோ, போது போக்குவதற்கோ, மற்ற எந்த வியாஜத்தினாலோ வரும்படிச் செய்து) தன்னிடத்தில் இழுத்து அவர்களை கடாக்ஷித்து, அவர்களுக்கு அஜ்ஞாத யாத்ருச்சிக ப்ராஸங்கிகாதி ஸௌகிருதங்களை ஏற்படுத்தி க்ரமேண நல்மார்க்கத்துக்குக் கொண்டுவருவதற்காகவும்) ஆஸ்தானத்தில் வந்து ஸேவிக்கமுடியாத அசக்தர்கள் முதலானவர்களுக்கு ஸேவை ஸாதித்து அனுக்ரஹிப்பதற்கும் தானே உத்ஸவங்களைக் கொண்டாடுகிறது. ஆகையால், ஸாமான்யமாய் வழியில் தேடிப்போய் கேட்டவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் கொடுக்கக்கூடிய ஒரு பிரபு தானே யாசகர்களைத்தேடி வித்தஸங்கல்பனுப் ஏராளமான ப்ரதானம் பண்ணும்சமயத்தில் அந்த ஸந்தர்ப்பத்தை விடாதார்போல், அந்த * உத்ஸவகாலங்களில் அதினுடைய மஹாநுக்ரஹம் கொள்ளைபோகிறதைப் பார்த்து மந்தபுத்திகளால் அதின் பரமௌதார்யம் வீணாகாமைக்காகவும் ஸமயம் பார்த்து கேட்பதற்கு அது ரொம்ப நல்ல ஸமயமானதாலும் காமதேனுவைப்போல் வேண்டினதை எல்லாம் கொடுக்கத்தக்க அதனிடத்தில் எனக்கு வேண்டியவற்றை எல்லாம் வேண்டினபடிக் கேட்டு வாரிக்கொள்கிறேன், இந்த ஸந்தர்ப்பத்திலும் வாராமலும் வந்தும் கேட்காமலும் இழந்துபோகிறவர்கள் மஹாதரித்ரர்கள், பரமபாபிகள்—என்று இப்படி அது இஷ்டங்களைக் கொடுப்பதைப் பேசுகிறார்.

* குறிப்பு— இது தயையையே கொண்டாடுகிற ப்ரகரணமானதால் தயாகார்யங்களை விஸ்தரிக்கிறது. தயையாவது அயலாருடைய துக்கத்தை ஸஹியாமல் அதை நீக்கவேணுமென்கிற இச்சை. இந்த ஸந்தர்ப்பத்தில் உத்ஸவப்ரஸ்தாபத்திற்கும், இந்த ஸமயம் பார்த்து தான் வேண்டினவற்றைக் கேட்டுக்கொள்வதாகச் சொல்வதற்கும் உ—உ—லுை என்கிற பதத்திற்கும் விசேஷ காரணங்களும் பாவங்களும் கண்டுபிடிக்க வேணும். இதுகளை யோஜித்து கருத்து எழுதப்பட்டிருக்கிறது.

ஸதாசார்யர்களும் மேற்கண்டபடியே முமுக்ஷுக்களை ரக்ஷிப்பவர்கள்; தாபத்ரயங்களைப் போக்குகிறவர்கள்; உலகத்திலுள்ள ஐசுவரியவான்களுக்கு ஆச்ரயித்தமட்டில் நற்புத்தி சொல்லி ஏதோ ஒரு ஸுக்ருதவசத்தால் பகவானால் கொடுக்கப்பட்ட அந்த ஐசுவரியத்தால் தொந்திரவு ஏற்படாதபடி அதை காப்பாற்றிக்கொள்வதற்கும் நல்வழியில் அதை உபயோகிப்பதற்கும் ஹிதம் சொல்லி ஐசுவரியம் துக்ககாரணமாகாமல் ஸுககாரணமாம்படி செய்கிறவர்கள். ஜ்ஞானஸம்பத் விஷயத்திலும் அது விபரீதமாகாமல்படி உதவி செய்வார்கள். பாபிகளானாலும் புண்யசாலிகளானாலும் ஸங்கடகாலங்களில் அனுதாபப்பட்டு ஆச்ரயித்தால் விலக்காமல் ரக்ஷிப்பவர்கள். பகவானுடைய மஹோத்ஸவ காலங்களில் லோகானுக்ரஹார்த்தமாக அங்கே செல்வார்கள். அவர்களுடைய உத்ஸவங்களும் அதற்காகவே. அந்த ஸமயங்களில் அனுக்ரஹம் பண்ணுவதில் வெகு குதூகலத்துடன் இருந்து வேண்டினதை எல்லாம் அனுக்ரஹித்துவிடுவார்கள். ஆகையால் அவர்களுடைய உத்ஸவங்களிலும் பகவானுடைய உத்ஸவங்களிலும் அவர்களை அவசியம் ஸேவித்து அனுக்ரஹம் பெறவேணும்.

இதிலுள்ள பந்தத்துக்கு 'ஸர்வதோபத்ரம்' என்று பெயர். முந்திய சுலோகத்திலுள்ள கோமூத்ரிகை போல் இல்லாமல் நான்கு பாதங்களும் 'அநுலோமப்ரதிலோம' யமகமாய், அதாவது நேராக வாசித்தாலும் தலைகீழாக வாசித்தாலும் ஒரே மாதிரியாக இருப்பதால், இந்த பந்தத்தில் சுலோகபாதங்கள் நேராக வாசித்தாலும் தலைகீழாக வாசித்தாலும் ப்ரதக்ஷிணமாக வாசித்தாலும் அப்ரதக்ஷிணமாக வாசித்தாலும் ஒரே மாதிரியாய் நாலாபுரமும் சுற்றும்படி இருப்பதால் 'ஸர்வதோபத்ரம்' (நாலாபுரமும் நன்றாயுள்ளது) என்று பெயர் ஏற்பட்டது.

முந்திய சுலோகத்தில் பந்தம்போல் குறுக்கும் நெடுக்குமான 9-கோடுகளால் குறுக்கும் நெடுக்குமாக 8-கட்டங்களடங்கிய 8-வரிசையுள்ள ஒரு ஸமசதுரத்தில் முன்போல் 4-வரிசையில் கிரமமாகவும், மற்ற 4 வரிசையில் தலைகீழாகவும் சுலோக பாதங்களை எழுதி முன்போல் வாசிப்பது. இந்த கட்டங்களில் ஒவ்வொரு பாதத்தையும் 8-மாதிரியாக வாசிக்கலாம். (22)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஐ | யா | ௐ | வா | வா | ௐ | யா | ஐ |
| யா | ௐ | ஹெ | ஊ | ஊ | ஹெ | ௐ | யா |
| ௐ | ஹெ | ஸ | கா | கா | ஸ | ஹெ | ௐ |
| வா | ஊ | கா | ௐ | ௐ | கா | ஊ | வா |
| வா | ஊ | கா | ௐ | ௐ | கா | ஊ | வா |
| ௐ | ஹெ | ஸ | கா | கா | ஸ | ஹெ | ௐ |
| யா | ௐ | ஹெ | ஊ | ஊ | ஹெ | ௐ | யா |
| ஐ | யா | ௐ | வா | வா | ௐ | யா | ஐ |

(௯௩௩) 𑌪𑌾𑌪𑌾𑌦𑌪𑌾𑌪𑌾𑌦𑌪𑌾𑌪𑌾 𑌪𑌾𑌦𑌪𑌾𑌦𑌦𑌪𑌾𑌦𑌪𑌾 ।
𑌦𑌪𑌾𑌦𑌪𑌾𑌪𑌾𑌦𑌪𑌾𑌦 𑌪𑌾𑌦𑌪𑌾 𑌦𑌦 𑌪𑌾𑌦𑌪𑌾 ॥

பதங்களின் பிரிவு—

5 𑌪𑌾𑌪𑌾𑌤𑍍, 6 𑌅𑌪𑌾𑌪𑌾𑌤𑍍, 1 𑌅𑌪𑌾𑌪𑌾, 2 𑌅𑌪𑌾𑌦𑌪𑌾𑌦𑌦𑌪𑌾𑌦𑌪𑌾,
4 𑌦𑌪𑌾𑌦𑌪𑌾𑌪𑌾𑌦𑌪𑌾𑌦𑌪𑌾𑌦𑌪𑌾, 3 𑌦𑌦𑌪𑌾𑌦𑌪𑌾 ॥

(ப-ரை) 1 𑌅𑌪𑌾𑌪𑌾 - பாபமில்லாததும், 2 𑌅 - விஷ்ணுவான பகவானுடைய, 𑌪𑌾𑌦 - திருவடிகளில், 𑌪𑌾𑌦 - கிரணங்களை, 𑌦 - கொடுக்கிறதாயிருக்கிற, 𑌪𑌾𑌦 - கிரணங்களை, 𑌪𑌾 - காப்பாற்றி வைத்துக்கொண்டிருக்கிறதும், 3 𑌦𑌦 - கொடுக்கிறவர்கள் விஷயத்தில் அதாவது தன்னைப் பகவானுடைய திருவடிகளில் ஸமர்ப்பிக்கிறவர்கள் விஷயத்தில் 𑌪𑌾𑌤𑍍-காப்பாற்றுகிறதாயிருக்கிற, 𑌅𑌪𑌾 - ஜலத்தை அதாவது அபிஷேகஜலத்தை உடைத்தானதுமான, 4 𑌦 - ரக்ஷணத்தை 𑌪𑌾𑌦 - ஸம்பாதித்துக்கொடுக்கத்தக்கதும், 𑌪𑌾𑌪-பாபத்தை, 𑌅𑌦 - போக்குகிறதாயுமிருக்கிற, 𑌪𑌾𑌦 - திருவடிகளையுடைத்தான விஷ்ணுவினுடைய, 𑌪𑌾𑌦𑌪𑌾 - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையானது, 5 𑌪𑌾𑌪𑌾𑌤𑍍-பாபங்களிலிருந்து, 6 𑌅𑌪𑌾𑌪𑌾𑌤𑍍 - (என்னைக்) காப்பாற்றிற்று.

(கருத்து) இப்படி அந்த திவ்ய பாதுகையானது தன்னுடைய பரம ஔதார்யத்தாலும் தயையாலும் ஆச்ரிதர்களுடைய இஷ்டங்களையெல்லாம் கறப்பதுடன் இன்னும் என்ன செய்கிறதென்றால் அதினுடைய உபகாரங்களைச் சொல்லுகிறேன். பகவானிடத்திலுள்ள ப்ரேமாதிசயத்தாலும், ஜீவராசிகளிடத்திலுள்ள பரம தயையினாலும், ஸர்வலோகரக்ஷகமாயும் ஸர்வபாபநாசகமாயுமிருந்து, ஜீவராசிகள் க்ஷேமத்தை அடைவதற்கு ஒரே உபாயமாக இருக்கிற அந்த பகவானுடைய திவ்யதிருவடிகளுக்கு ஸஞ்சாரகாலங்களில் முள் முதலியதுகளால் ஒரு அபாயமும் வாராதபடி காற்கிறது. தான் ஸ்வாபாவிகமாக ஒருபோதும் பாபஸம்பந்தமே இல்லாமல் எப்போதும் குறைவில்லாத ஜ்ஞாநத்தோடு பகவானை அனுப

விப்பதையும் தனக்கு ஸஜாதியமான ஜீவராசிகள் பாபத்தில் மூழ்கி அஜ்ஞானத்தையும் பசவசனுபவத்தையும் இழந்திருப்பதை யும் பார்த்து அவர்களுடைய பாபங்களைப் போக்க யத்தனிக் கிறது. அதற்காக “திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மந:” என்கிறபடி பகவான் கோடிஸூர்ய ப்ரகாசமுள்ளவனுகவே இருந்தாலும் அவன் பரமபதத்திலேயே இருந்துவிட்டால் இப்ப்ரக்ருதிமண்டலத்திலுள்ள ஜீவர்களுக்கு அவன் அப்படிப் பட்ட ப்ரகாசமுள்ளவனுக இருப்பதும் இராததும் ஒன்றே யானபடியால் அவனுடைய ப்ரகாசத்தை இந்த ப்ரக்ருதியில் ஸ்தா பிப்பதற்கு அவனையும் இவ்விடம் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து தன்னுடைய ப்ரகாசத்தால் உலகத்தாருடைய (ஜ்ஞான) கண்ணுக்கும் ப்ரகாசம் உண்டுபண்ணி அவனைக்காட்டிக்கொடுத்து இரண்டுவிதத்தாலும் அவனுடைய திருவடிகளை ப்ரகாசம் உள்ள தாகச்செய்கிறது. அல்லது பகவானுக்குத் தகுந்த பாதுகையாக இருப்பதால் தன்னுடைய ப்ரகாசத்தினுல் அவனுடைய திரு வடிகளுக்கு விசேஷ சோபையை உண்டுபண்ணி, ஆச்ரிதர் களுக்கு நேத்ரானந்தத்தைக் கொடுக்கிறதென்றும் ஸாமான்ய மாகச் சொல்லலாம். பூஜாகாலங்களில் அந்தந்த ஆலயங்களுக்கு பகவான் எழுந்தருளும்பொருட்டு அவனுடைய திருவடிகளில் தன்னைத் தெரிந்தமட்டில் ஸமர்ப்பிப்பவர்களுக்கு பகவானு டையதும் தன்னுடையதுமான அபிஷேகஜலத்தைக்கொடுத்து பாபங்களைப் போக்கிக் காப்பாற்றுகிறது. இப்படிப்பட்ட அதின் பெருமையை ஸ்வல்பம் பேசுவதையும், பகவானுடைய பூஜாகாலங்களில் அதை அவனுடைய திருவடிகளில் ஏதே னும் ஒரு ப்ரகாரமாக ஸமர்ப்பிப்பதையும் வ்யாஜமாகக் கொண்டு அஜ்ஞனை எனக்குத் தன்னை ஆச்ரயிப்பதற்கு விரோதியாயுள்ள பாபங்களை தன்னுடைய கடாக்ஷத்தாலும் ஸ்பர்சத்தாலும் தீர்த்தத்தாலும் போக்கி என்னை பரிசுத்த மாக்கி, ஸர்வத்துக்கும் தன்னையே ஆச்ரயிக்கும்படி காப்பாற்றி விட்டது. இப்படி அது உலகத்தாருக்கும் தனக்கும் செய்கிற, அநிஷ்டங்களைப் போக்குவதாகிற, உபகாரத்தை இதில் ஆச்ச ரியத்துடன் பேசுகிறுர்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஓ | ஓ | ஊ | ஓ | ஓ | ஊ | ஓ | ஓ |
| ஓ | ஊ | ஓ | ஊ | ஊ | ஓ | ஊ | ஓ |
| ஊ | ஓ | ஊ | ஓ | ஓ | ஊ | ஓ | ஊ |
| ஓ | ஊ | ஓ | ஊ | ஊ | ஓ | ஊ | ஓ |
| ஓ | ஊ | ஓ | ஊ | ஊ | ஓ | ஊ | ஓ |
| ஊ | ஓ | ஊ | ஓ | ஓ | ஊ | ஓ | ஊ |
| ஓ | ஊ | ஓ | ஊ | ஊ | ஓ | ஊ | ஓ |
| ஓ | ஓ | ஊ | ஓ | ஓ | ஊ | ஓ | ஓ |

சுலோகம் 933 ]          [ 487 பக்கம்

இப்படியே அவதாரபுருஷர்களான ஸதாசார்யர்களும் பகவானிடத்திலுள்ள ப்ரேமையாலும் ஜீவராசிகளிடத்திலுள்ள கருணையாலும் பாதத்வத்தை இல்லையென்று சொல்லுகிற வேதாந்தசாஸ்திரவிரோதிகளான குமதிகளிடத்திலிருந்து நல்லதான யுக்திகளால் தெய்வத்தை மீட்டும், சாஸ்திரத்தினாலேயே அறியவேண்டியதான தெய்வத்தை தங்களுடைய ஸ்ரீஸூக்திகளால் ப்ரகாசப்படுத்தியும் உலகத்தில் ஸ்தாபிக்கிறார்கள். அவர்கள் ஸ்வபாவத்திலேயே எப்போதும் பாப ஸம்பந்தமில்லாதவர்களாய், மற்ற ஜீவர்களுடைய பாபத்தைப் போக்குவதில் எண்ணமும் பிரயத்னமும் உள்ளவர்களாக இருக்கிறார்கள் அவர்களுடைய பகவதாராதனத்திற்கு உபகரிப்பவர்களையும், அவர்களை ஆராதிப்பவர்களையும் பகவானுடைய தீர்த்தத்தினாலும், தங்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தினாலும் பரிசுத்தமாக்கிக் காப்பாற்றுகிறார்கள். இப்படி அவர்கள் ஜனங்களுக்கு அஜ்ஞானமும் பாபமுமாகிற அநிஷ்டங்களைப் போக்கிக் காப்பாற்றுகிறார்கள் என்பதும் இதனால் ஸூசிதம்.

இதில் க, கு, வ, உ என்ற இரண்டே உயிரெழுத்துக்கள் மெய்யெழுத்துக்கள் அடங்கிய க்ஷ்ணோஹோஶ்வைக்ஷிகோஶ யக்ஷங்களால் ஏற்படுகிற ஸமுத்ரோதகம் என்கிற பந்த சித்ரம் முன்சுலோகத்தில்போலுள்ளது. (23)

(௨௰௪) கோபோத்தீபக பாபபாஜி கருணா பாகோபகா ரிகா । பாவநோதகபாதோத்தீபிகாகார பிதாநகா ॥

(பதவுரை) கோப - பகவானுடைய கோபத்தை, உத்தீபக - ஜ்வலிக்கப்பண்ணுகிற அதாவது விருத்தி பண்ணுகிற, பாபபாஜி - மஹாபாபிகளிடத்திலும், கருணா - பகவானுடைய தயையினுடைய, பாக-பரிபக்வத்தை, உபகாரிகா - ஸம்பாதிக்கிறதும், பாவந - (பாவ - பாரிசுத்யத்தை, ந - கொடுக்கிறதான) பரிசுத்தம் பண்ணத்தகுந்ததான, பாதோதக - திருவடி தீர்த்தத்தை (அதாவது கங்காரூபமான திருவடி தீர்த்தத்தை) உடையவரான, க - பகவானுடைய, பாத - திருவடிக்கு, உத்தீபிகா - ப்ரகாசத்தைக் கொடுக்கிறதான,

பாது³கா - பாதுகையானது, காபி - இப்படிப்பட்டது என்று எண்ணவும் சொல்லவும் முடியாதது; அதாவது வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதபடி ஆச்சர்யமான ஸாமர்த்யம், தயை. ப்ரபாவம் முதலியதுள்ளது.

(கருத்து) ஸ்ரீபாதுகையானது தன்னுடைய எல்லையில்லாத தயையின் கார்யமாகத் தன்னுடைய உயர்ந்த ஸ்தானத்திலிருந்து ஆச்ரிதர்களைத் தேடி இந்த ப்ரக்ருதியில் வருவதும் அவர்களுக்கு ஹிதத்தைக்கொடுப்பதும், அஹிதத்தைப் போக்குவதுமிருக்கட்டும்- இந்த மற்றொரு விசேஷ ஆச்சரியத்தைப் பார். எப்படியோ ஒருவிதமாய் பாதுகையின் கடாக்ஷத்துக்கு விஷயமாய் அதனால் ஏவப்பட்டு ஒரு மஹா பாபியானவன் ஸ்ரீரங்கநாதனுடைய ஸந்நிதிக்குள் நுழைகிறான். எல்லோருக்கும் ஸ்வபாவஸுஹ்ருத்தும் பரம தயாளுவுமானாலும் ஸ்ரீரங்கநாதனுக்கு அவனைக் கண்டதும் அவனுடைய பகவதபசாரங்கள், பாகவதாபசாரங்கள், இன்னும் மற்ற ஆஜ்ஞாதிலங்கனங்கள் முதலான எல்லையில்லாத மஹாபராதங்களை நினைத்து "க்ஷிபாமி ந க்ஷமாமி" என்கிறபடி அவன் விஷயத்தில் கோபமானது விருத்தியடைந்து, பார்க்கிறவர்களுக்கும் பயங்கரமாம்படி பெரிய அக்னிபோல் ஜ்வலிக்கிறது. அந்த ஸமயத்தில் பாதுகையானது சலுகையுடன் நடுவில் புகுந்து இந்த பாபிவிஷயமாய் பகவானிடத்தில் பலபடியாய் மன்றாடி ஸிபார்சு செய்து அவன் விஷயத்தில் பூர்ண க்ருபையை ஸம்பாதித்தும், அந்த ஆச்ரிதனுக்கு திருவடிகளைக் காட்டி ப்ரணமம் முதலியதைச் செய்யும்படிச் செய்தும், ஸமஸ்த பாபங்களையும் போக்கும்படியான பகவானுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்வீகரிப்பித்தும் காப்பாற்றிவிடுகிறது. *

---

* இதின் பிரகாரம்— இவனோ என்னை ஆச்ரயித்தவன். ஏன் இவ்வளவு கோபம்? உலகத்தில் குற்றம் பண்ணாதவர்கள் யார்? குற்றமும் பூர்வமுள்ள பாபத்தினாலும் அஜ்ஞானத்தினாலும் அவசமாகத்தானே ஏற்படுகிறது; பூர்வம் எவ்வளவு அபராதியாக இருந்தாலும் ஒரு ஸமயத்தில் ஸ்வல்பம் நல்ல புத்தியால் வந்தால் விடலாமா? அன்று ராமாவதார காலத்தில் கடற்கரையில் சரணாகத ரக்ஷணவிஷயமாக தேவரீரே அருளிச்செய்த வார்த்தைகளையெல்லாம்

இது என்ன ஆச்சரியம்; என்ன தயை; என்ன நடனம் பண்ணுகிறது; என்ன ஸாமர்த்யம்; என்ன ஸௌபாக்யச் செருக்கு; ஸர்வேச்வரன் எப்படி வசப்படுகிறான். எல்லாம் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத ஆச்சர்யமாகவல்லவோ இருக்கிறது— என்று இப்படிப்பட்ட ஸந்தர்ப்பத்தை மனஸால் பிரத்யக்ஷீகரித்து பாதுகையினுடைய புருஷகார ப்ரகார ஆச்சரியத்தைப் பேசுகிறார்.

ஸதாசார்யர்களும் அப்படியே பகவானுக்கு மிகவும் அந்தரங்கர்களாய், பரம ப்ரீதிபாத்ரர்களாய், மகா குணவான்களாய், வாக் ஸாமர்த்தியமுள்ளவர்களாய், தத்வத்தை அறிந்தவர்களா

---

இந்த கோபவேகத்தால் இப்போது மறந்துவிட்டதோ; இவனுடைய அபராதங்களுக்கு பிராயச்சித்தமே இல்லையோ; தேவரீருடைய இந்தத் திருவடிஸேவையும் ஸம்பந்தமும் ஸ்ரீபாததீர்த்தமும் தகுந்த பிராயச்சித்தமாகாதோ; நானேதான் தேவரீருடைய ஸ்வபாவ தயையை அவலம்பித்து அவனை இங்கு வரவழைத்தேன்; தயை பண்ணவேணும். அவனிடத்தில் இந்த கோபத்தை மாற்றி அனுக்ரஹம் பண்ணவேணும் என்று தயையைக் கிளப்பும்படி உண்மைகளைச் சொல்லி வாதித்தும், பிரார்த்தித்தும் தன்னுடைய ஸௌபாக்யத்தாலே, அவருடைய கோபத்தையும் தணித்து அந்த அபராதியையும் பார்த்து, அவனுக்கு பகவானுடைய திருவடியைக் காட்டி, அடே வெறுமனே நிற்கிறாயேடா; திருவடியில் விழேண்டா; பரம தயாளோ காப்பாற்றவேணுமென்று பிரார்த்தியேண்டா; இந்த திருவடி தீர்த்தத்தை வாங்கிக்கொள். இது உன்னுடைய ஸமஸ்த பாபங்களையும் போக்கிவிடும்; இதுதாண்டா உலகத்தில் கங்கையாக பிரவஹித்து உலகத்தை எல்லாம் பாவனம் பண்ணுகிறது; இத்தோடு உன் பாபங்களெல்லாம் கழிந்துவிட்டது; இனி பகவானுடைய பூர்ண அனுக்கிரஹத்திற்குப் பாத்திரமாய்விட்டாய்; ஒன்றும் கவலைப்படாதே என்று தானே எல்லாவற்றையும் சொல்லி அவன் தலையிலும் ஏறி உட்கார்ந்துவிடுகிறது. பரமகுணவதியாய் பிரீதிபாத்ரையான பாதுகையின் தாக்ஷிண்யத்தைத் தட்டமுடியாத பகவானால் தடுத்து ஒன்றும் சொல்ல ஸாத்தியப்படவில்லை. பிறகு கோபமும் சாந்தமாய்விடுகிறது. பாதுகையினுடைய விலக்கமாட்டாத சிபார்சினாலும் தன்னுடைய ஸஹஜகிருபையினாலும் முன்னிருந்த நிக்ரஹஸங்கல்பத்தை மறந்து இத்தமட்டுமாவது வந்ததே என்று பூர்ண அனுக்ரஹமும் பண்ணிவிடுகிறான். ஸகல க்ஷேமங்களும் வந்துவிடுகிறது.

யிருந்து பகவானிடத்திலுள்ள விசேஷ சலுகையினுல் பூர்வம் எப்படிப்பட்ட மஹா பாபிகளாஞலும், அனுதாபம் பிறந்து தங்களை யாச்ரயித்தவர்கள் விஷயத்தில் பகவானுக்குள்ள எப்படிப்பட்ட கோபத்தையும் தணித்து, அனுக்ரஹத்தை ஏற்படுத்தி, அவர்களையும் சீர்திருத்திக் காப்பாற்றிவிடுகிருர்கள் என்கிற அவர்களுடைய ஆச்சரியமான புருஷகார ப்ரகாரமும் இதிஞல் ஸூசிதம். (24)

(௯௩௫) ததாதத்தாதிதத்தேதா தாததீதேதி தாதிது: । தத்தத்தாததிததா ததேதா தேததாதாதா ॥

த என்கிற ஒரே மெய்யெழுத்தைக் கொண்டு பண்ணப்பட்டது. இதில் பதப்பிரிவு

1 ததாதத்தா 2 அதிதத்தேதா 3 தாததி 4 உதேதிதாதிது: ।
5 தத்தத்தாததிததா 6 ததா 7 உதாதேததாதாதா ॥

(ப-ரை) 1 தத - விஸ்திருதமான, அததா - எப்பொழுதும் ஸஞ்சரிக்கும் தன்மையை உடைத்தானதும் (அதாவது உலகரக்ஷணத்தின்பொருட்டு எப்பொழுதும் எங்கும் ஸஞ்சரிக்கும் ஸ்வபாவமுள்ளதும்), 2 அதி - அதிக்ரமிக்கப்பட்ட, தத்தா - தத் என்கிற சப்தத்திஞல் சொல்லப்படுகிற பிர்ம்மத்திஞுடைய தன்மையினுலே, உதா - அடையப்பட்டதும் (அதாவது உயர்ந்த வஸ்துவாக அடையத்தகுந்ததாக இருப்பதிலும், உயர்ந்த இன்பமாக அனுபவிக்கத்தகுந்த வஸ்துவாக இருப்பதிலும் பிர்ம்மத்தைக்காட்டிலும் மேலானதும்), 4 உத- அடையப்பட்ட, ஈதித - ஈதிபாதையை உடைத்தாயிருக்கும் தன்மையை, அதிது: - அடியோடு போக்குகிறதும் (அதாவது ஸம்ஸாரிகளால் அடையப்படுகிற அதிவிருஷ்டி அனுவிருஷ்டி முதலியதால் ஏற்படும் துக்கங்களை அடியோடு போக்குகிறதும்), 5 தத்த: - அந்தந்த வஸ்துவினுடைய, தத்தா - அந்தந்த ஸ்வபாவத்திஞுடைய, ததி-வரிசையினுலே,

ததா - விஸ்திருதமானதும் (அதாவது உலகத்திலுள்ள அந்தந்த வஸ்துக்களையும் அந்தந்த வஸ்துக்களுக்கு ஏற்பட்ட ஸ்வபாவங்களையும் தனக்கு அதீனமாக உடையதும்), 6 ததா - விஸ்திருதமானதும் அல்லது கு-ததா - (கு) அடையப்பட்ட (ததா) விருத்தி வாத்யங்களையுடையதும், 7 உ - மன்மதனுக்கு, தாத - தகப்பனான பகவானாலே, உத - அடையப்பட்டதுமான, தாதாதா - பாதுகையானது (இந்த சுலோகத்தை 'த' என்கிற ஒரே எழுத்தால் சொல்லவேண்டியதாக இருப்பதால் 'வாதூகா' என்பதற்கு பதிலாக அதின் ஸ்வரத்தை ஒத்து 'த' என்கிற எழுத்தால் 'தாதாதா' என்று கவிகளின் வழக்கப்படி போடப்பட்டிருக்கிறது) 3 தாததி - தகப்பனாக ஆகிறது (அதாவது ஜனங்களுக்குத் தகப்பனைப் போலிருந்து வேண்டிய ஹிதங்களைச் செய்து அவர்களுடைய ஸுகதுக்கங்களால் தான் ஸுகதுக்கங்களை அடைகிறது).

(கருத்து) இப்படி மஹாபாபிகளாய் உலகத்தாராலும் தெய்வத்தாலும் வெறுக்கத்தகுந்தவர்கள் விஷயத்திலும், இவ்வளவு தூரம் பகவானிடத்தில் மன்றாடி தயையை ஸம்பாதித்தும் அந்த பாபிகளுக்கும் மன்றாடி நற்புத்திசொல்லி பகவானை ஆச்ரயிக்கும்படி செய்தும் காப்பாற்றுவானேன்; என்ன தலைப்பொறுப்பு என்றால், அது பாதுகையினுடைய அதிகமான தயையின் கார்யம். * அந்த தயையானது வாத்ஸல்யமாகப் பரிணமிக்கிறது.

* குறிப்பு-வாத்ஸல்யமாவது இளங்கன்றினிடத்தில் பசுவிற்குள்ள ப்ரீதிபோல் தோஷங்களைக்கவனியாமல் உள்ளடங்காத ப்ரீதிபண்ணுவது. அப்படிப்பட்ட ப்ரீதியானது ஜீவராசிகள் விஷயத்தில் ரக்ஷிப்பதோடு சிக்ஷிக்கிற வியாபாரத்தையும் வைத்துக்கொண்டிருக்கிற பகவானைக்காட்டிலும் சிக்ஷிப்பதையறியாமல் ரக்ஷணத்தை மட்டுமே தங்கள் பங்காக வைத்துக்கொண்டிருக்கிற பகவானுடைய தேவிமார்களுக்கும் பாதுகைகளுக்கும் விசேஷமாக உள்ளதானதால் ஜீவராசிகளை கஷ்டங்களிலிருந்து விடுவித்து ஸுகப்படுத்தினாலல்லது தரிக்கமாட்டாத ஸ்வபாவமுள்ளதாய் அருமையாய் அகப்படுகிற ஜீவர்களை ரக்ஷிப்பதற்கு பாதுகையானது இப்படிக் கடந்து த்வரிக்கிறது. ஆனால்

அப்படிப்பட்ட வாத்ஸல்யத்தின் கார்யமாய் அது என்ன என்ன வியாபாரங்கள் செய்கிறதென்றால் மேலும் சொல்லுகிறேன். அதாவது இளங்கன்றைப் பிரிந்த பசுவைப்போல் ரக்ஷிப்பதற்கு ஜீவராசிகளைத் தேடிக்கொண்டு எப்பொழுதும் எங்கும் ஸஞ்சரிக்கிறது. ஜீவன்கள் தன் பெருமையையறிந்து தன்னை வந்து ஆச்ரயித்து பகவானிடத்தில் புருஷகாரமாகக்கொண்டு உஜ்ஜீவிப்பதின்பொருட்டு தான் ஜீவர்களால் பரம ப்ராப்யமாக அடையப்படுகிற விஷயத்தில் பகவானைக் காட்டிலும் வச்யமாகும் தன்மையில் மேலானது என்பதையும், அப்படியே பரம

பாதுகை எவ்வளவு தயையுள்ளதாக இருந்தாலும், நல்லவர்கள் கெட்டவர்கள் என்கிற விவேகம் பண்ணுமல் பகவானை வற்புறுத்தியாவது மிகவும் பாபிகளைச் சேர்க்கலாமா? அப்படிச் செய்தால் ஜனங்கள் இஷ்டப்படி எதையும் செய்து ஒரு நாள் ஸுலபமாக தப்பித்துக்கொள்ளலாம் என்கிற எண்ணமுண்டாகி பயம் நீங்கி அதர்மங்களை ஒரு தடையில்லாமல் செய்யமாட்டார்களா? இதனுல் சாஸ்திரம் குலைந்துபோகாதா என்று ஸாமான்ய ஜனங்கள் நினைக்கலாம். ஜீவர்கள் ஸொந்த ஸ்வரூபத்தினுல் பகவானைப்போல் நிர்தோஷர்கள். ஆனுல் அநாதியான ஆஜ்ஞாதிலங்கனத்தால் ஏற்பட்ட பகவானுடைய நிக்ரஹத்தால் ஜ்ஞாநத்தை இழந்து, மேல்மேல் பாபங்களைச் செய்து, ஸம்ஸாரவலையிலகப்பட்டு அதிலிருந்து தன் பிரயத்தனத்தால் வெளிக்கிளம்பமுடியாமல் எல்லையில்லாத துக்கங்களை அநுபவிக்கிறுர்கள். இதிலிருந்து பகவானும் பகவானைச் சேர்ந்தவர்களும்தான் மீட்கவேணும். அதற்காக இவர்களிடமிருந்து பகவானும் அவனைச் சேர்ந்தவர்களும் பரம பாபியாய் கையாலாகாமல் தபிக்கிறவனை என்னைக் காப்பாற்றவேணும் என்று சொல்லி சரணுகதி பண்ணுகிறதாகிற ஒரு வியாஜத்தை மட்டில் எதிர்பார்க்கிறுர்கள். லோகத்தில் முழுவதும் கெட்டவன், முழுவதும் நல்லவன் என்று ஒருவரும் கிடையாது. இந்த ஜன்மத்தில் ப்ரத்யக்ஷமாக சில ஸங்கதிகள்தான் நமக்குத் தெரிகிறது. அதைக்கொண்டே நல்லது கெட்டது என்று பிரித்துவிடுகிறோம். ஜீவராசிகளின் ப்ராரப்த கர்மங்களாகிற பழய கணக்கைப் பார்த்தால் நல்லவனுக இப்போது தென்படுகிறவனைப்போல மஹாபாபி வேறு ஒருவன் இருக்கமாட்

இன்பமாக அனுபவிக்கப்படுகிற விஷயத்திலும் பகவானைக் காட்டிலும் மேலானது என்பதையும் அவர்களுக்குக் காட்டிக்கொடுக்கிறது.

---

டான். ரொம்ப கெட்டவனாகத் தெரிகிறவன் பழைய கணக்கினால் ரொம்பவும் நல்லவனாக ஏற்படுவன். நல்லவனாயிருப்பதும் கெட்டவனாயிருப்பதும் ஒரே ஜன்மத்திலும் நிலையில்லை. தெய்வமானது எல்லாவற்றையும் அறிந்ததாகையாலும், "[illegible]—" என்கிற பிரமாணப்படி அநாதி கர்மப்ரவாஹத்தில் அவசமாக அடித்துக்கொண்டுபோகப்படுகிற ஜீவன்களிடத்தில் மிகவும் தயையுடையதாகையாலும், எல்லாரையும் காப்பாற்றுவதற்கு ஒரு ஸமயத்தை மட்டும் எதிர்பார்த்திருந்து, ஒரு அல்ப வியாஜம் ஏற்பட்ட உடனே அதற்கு ஒரு பெரிய ஸுக்ருதத்தின் பலனைக் கொடுத்து ஓர் உபாயத்தில் மூட்டி இந்த ஸம்ஸாரத்திலிருந்து ஒருவனைப் பளிரென்று தூக்கிவிடுகிறது. இப்படிப்பட்ட வியாஜம் நல்லவனோ, கெட்டவனோ யார்விஷயத்தில் எப்போ நேருகிறதென்று நம்மால் சொல்லமுடியாது. இதுவிஷயத்தில் நம்முடைய வெளிப்பார்வையும் தீர்மானமும் போராது. இப்பொழுது எப்படியிருந்தாலும் ஜன்மாந்திரஸுக்ருதவசத்தால் பகவானும் தத்வத்தை அறிந்த மஹான்களும் எவன் ஒருவனை அங்கீகரித்து விடுகிறார்களோ அவனே நல்லவன், அதிர்ஷ்டசாலி; அவர்களால் அப்படி அங்கீகரிக்கப்படாதவனே கெட்டவன், பாக்ய ஹீனன். அப்படி அவர்களுடைய கடாக்ஷத்துக்கு விஷயமான ஒருவனை இளப்பமாக நினைக்கலாகாதென்பதை "அபிசேத்ஸுதுராசாரோ, க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா" என்கிற சுலோகங்களில் கீதையில் பகவான் அருளிச்செய்தபடி நல்லதாயிருப்பதும் கெட்டதாயிருப்பதும் பிராரப்த கர்மாதீனமும் அனுக்ரஹாதீனமுமாகையால் இந்த சரீரத்திலேயே பிறகு நல்லவனாய்விடலாம். கர்மவசத்தால் கெடுதலாகவே இருந்துவிட்டாலும் அது மோக்ஷத்திற்குத் தடங்கலாகாது. ஆகையால் பாபி என்றும், ஸுக்ருதியென்றும் தாரதம்யம் பாராமல் பகவானும் அவனைச் சேர்ந்தவர்களும் ஸுக்ருதவசத்தால் காப்பாற்றுகிற காலம் வந்துவிட்டால்

தன்னையாச்ரயித்து வேண்டுகிற ஸம்ஸாரிகளுக்கு இங்கு இருக்கும் காலத்தில் அதிவிருஷ்டி அனாவிருஷ்டி முதலியது களால் ஏற்படும் துக்கங்களை அக்காரணங்களை நீக்கிப் போக்கி விடுகிறது. அயலாரிடம் நம்பிவிடாமல் தான் நேரிலே கவ னித்து வேண்டினவற்றைச் செய்யும்பொருட்டு உலகத்திலுள்ள பற்பல வஸ்துக்களையும் அவைகளின் ஸ்வபாவங்களையும் பகவா னோடு கலந்து தன் அதீனமாக வைத்துக்கொண்டிருக்கிறது. ஜீவராசிகளால் விரும்பக்கூடிய ஸகல புருஷார்த்தமாகவும் தானே இருக்கிறது; அதாவது அவைகளை தானே ஸம்பாதித்துக் கொடுக்கிறது. அல்லது, அவர்களுக்கு இன்பமாக வீணை தி வாத்யங்களைக்கொண்டு ச்ரோத்ராநந்தம் அனுபவிப்பதற்கு தானே விஷயமாகவும் ஆகிறது, அதாவது அதற்குத்தகுந்த தான ஸ்தோத்திர கானங்களையுடையதாக இருக்கிறது. அல்லது வீணாகானம் போலொத்த நாதத்தை அதாவது வாங்மாதுர் யத்தை உடையதாக அதாவது இனிமையான பேச்சுள்ளதாக இருக்கிறது. "லாவண்யநிதயே நம:" என்கிறபடி உலகத்தில் அழகுள்ளவர்களுக்குள் உயர்ந்தவனான மன்மதனையும் பிரமிப்பிக் கும்படியான எல்லையில்லாத ஸௌந்தர்யமுடைய பகவானாலும் அழகுக்கு ஆசைப்பட்டு அடையும்படியான தன்னுடைய உயர்ந்த அமைப்பினாலும் உத்தமமான தங்கக்காந்தி ரத்நகாந்தி முத்துக்காந்தி முதலியதுகளாலும் ஏற்படுகிற அழகைக்காட்டி 'மனோஹர த்ருஷ்டி வித்ராவணம்' என்கிறபடி ஜனங்களு டைய மனதை அபஹரித்து அவர்களுக்குத்தன்னிடத்தில் ப்ரீதி யைஉண்டுபண்ணிவைக்கிறது. இப்படியெல்லாம் பலபடியாய் ஜீவ ராசிகளை தன் வசப்படுத்தி அவர்களுக்கு வேண்டிய ஹிதத்தை யெல்லாம் செய்து துக்கங்களைப் போக்கி ஸுகத்தைக்கொடுத்து "வ்யஹந்த்ரேஷு த்ருஷ்ணாநாம் ஹ்ருதயம் ஹவதி ஜீவித: | உத்ஸவேஷு ஸமேதேஷு விதேவ பரிதுஷ்யதி ||" என்று

---

தோஷத்தைப் பார்க்காமல் ஆதரிக்கிறார்கள். அப்படிச் செய் வதால் சாஸ்திரத்திற்கு ஒரு கெடுதியும் நேராது. பகவானு டைய தேவிகளான ஸ்ரீதேவி பூதேவிகளும் இப்படியேதான் பகவானிடத்தில் சிபார்சு செய்கிறார்கள் என்பதை த்வந்த பத்ததியில் 7-வது சுலோகத்தில் பார்க்க.

அவாப்த ஸமஸ்தகாமனை ஸ்ரீராமனைப்பற்றிச் சொன்னது போல் அவாப்தஸமஸ்தகாமையானதாலும், அவர்களுடைய துக்கத்தால் தான் துக்கித்தும், ஸுகத்தால் தான் ஸந்தோஷித்தும், அவர்களிடத்தில் மாதாபிதாக்களைப்போல் வாத்ஸல்யமுள்ளதாயிருக்கிறது. இது என்ன ஆச்சரியமான வாத்ஸல்யம். இப்படியிருந்தும் எவ்வளவோ ஸம்ஸாரிகள் இதை இழந்து போகிறார்களே என்று இப்படி பாதுகையினுடைய வாத்ஸல்யத்தையும் வாத்ஸல்ய கார்யங்களையும் நினைத்து ஆச்சரியப்படுகிறார்.

ஸதாசார்யர்களும் ஜீவராசிகள்விஷயத்தில் இப்படிப்பட்ட வாத்ஸல்யமும் வாத்ஸல்யகார்யமான வியாபாரங்களும் உடையவர்கள் அதாவது—ஜீவர்களை எப்போதும் தேடி ரக்ஷிப்பவர்கள்; தங்களுடைய அதிசயித ப்ராப்யத்வத்தையும் போக்யத்வத்தையும் சாஸ்திரஸம்ப்ரதாய அனுஷ்டானங்களால் ஆச்ரிதர்களுக்குக் காட்டிக்கொடுப்பவர்கள்; ஈதிபாதைகளைப் போக்கடிப்பவர்கள்; எல்லாரையும் நேரில் கவனித்து வேண்டிய ஹிதங்களைச் செய்பவர்கள். ஸர்வவித பந்துவாய் ஸர்வ புருஷார்த்தங்களையும் ஸாதித்துக்கொடுப்பவர்கள்; தங்களைப் பற்றின ஸ்தோத்ரகீதாதிகளை உடையவர்கள்; மதுரபாஷிகள்; தங்களுடைய பிரம்மதேஜஸ்ஸுள்ள ரூபத்தால் மனதை வச்யம் செய்பவர்கள். அவர்களுக்கு ஒருவராலும் ஒன்றும் ஆகவேண்டியதில்லையானாலும், எல்லாரிடத்திலும் மாதாபிதாக்களைக்காட்டிலும் விசேஷ வாத்ஸல்யம் பாராட்டி மற்றவர்களுடைய ஸுகதுக்கங்களை தங்களுடைய ஸுகதுக்கங்களாகப் பாராட்டுகிறவர்கள் என்பதும் இதில் ஸூசிதம். (25)

(௯௨௬) யாயாயாயாயாயாயாயா யாயாயாயாயாயாயாயா ।
யாயாயாயாயாயாயாயா யாயாயாயாயாயாயாயா ॥ (௨௬)

இதில் பதங்களின் பிரிவாவது—

1 யாயாயா, 2 ஆய, 3 ஆயாய, 4 அயாய, 5 அயாய, 6 அயாய, 7 அயாய, 8 அயாயா ; 9 யாயாய, 10 ஆயாயாய, 11 ஆயாயா, 12 யா, 13 யா, 14 யா, 15 யா, 16 யா, 17 யா, 18 யா, 19 யா ॥

(பதவுரை) 12 யா . யாதொரு பாதுகையானது, 3 ஆயாய - லாபத்தின் பொருட்டோ (அதாவது தன் எஜமானனை பகவானுடையவும் அவனைச் சேர்ந்தவர்களுடையவும் லாபத்தின்பொருட்டே இருந்து பாடுபடுகிறதோ), 13 யா-யாதொரு பாதுகையானது, 4 சுயாய - சுபத்தைக் கொடுக்கும் காரியத்தின் பொருட்டோ (அதாவது ஆச்ரிதர்களுக்கு நல்லதான அதிர்ஷ்டத்தைக் கொடுக்கிறதோ), 14 யா - யாதொரு பாதுகையானது, 5 அயாய - ஜ்ஞானத்தின்பொருட்டோ (அதாவது ஆச்ரிதர்களுக்கு நல்ல ஜ்ஞானத்தைக் கொடுக்கிறதோ), 15 யா- யாதொரு பாதுகையானது, 6 அயாய - இச்சையின்பொருட்டோ (அதாவது ஜனங்கள் தங்களுக்குத் தன்னையே உபாஸிக்கத்தகுந்த பரதேவதையாக விரும்பும்படி இருக்கிறதோ), 16 யா - யாதொரு பாதுகையானது, 7 அயாய - துலைப்பதின் பொருட்டோ (அதாவது ஆச்ரிதர்களுடைய ஸகல விரோதிகளையும் துலைக்கிறதோ), 8 அயாயா, அ - பெருமாளை, யாயா - அடைந்திருக்கிற, 17 யா - யாதொரு பாதுகையானது, 9 யாயாய - ஸஞ்சாரத்தின்பொருட்டோ (அதாவது விளையாட்டாக பெருமாள் வெளிக்கிளம்பும்போது எந்தப் பாதுகைகள் திருவடிகளில் சாற்றிக்கொண்டு எழுந்தருளுவதற்கு உபயோகமாகிறதோ), 18 யா - யாதொரு பாதுகையானது, ஆயாயாய - வருவதின்பொருட்டோ (அதாவது தன்னுடைய ஆச்ரிதர்களுடைய ரக்ஷணார்த்தமாக பகவானை அவர்களிடம் அழைத்துவருவதின்பொருட்டு இருக்கிறதோ), 19 யா - யாதொரு பாதுகையானது, 11 ஆயாயா - (ஆய) எங்கும் ஸஞ்சரிப்பதினுடைய (ஆயா) ப்ராப்தியோ(அதாவது ஆச்ரிதர்களுக்கு காமசாரத்தை ஸம்பாதித்துக்கொடுக்கிறதோ அதாவது காமசாரத்வம் வரும்படியான முக்ததசையை ஸம்பாதித்துக்கொடுக்கிறதோ), (ஸா - அந்த), 1 யாயா - நல்ல கதியை அடைவிப்பதை, யா - அடைந்ததான அதாவது ஆச்ரிதர்கள் பரம புருஷார்த்தத்தைப் போய் அடைவதை ஸாதித்துக்கொடுப்பதான பாதுகையானது, 2 ஆய-பெருமா

ளின் பொருட்டே (அதாவது பெருமாளுக்கு எப்போதும் சேஷபூதமாகவே இருக்கிறது).

(கருத்து) முன்சொன்ன வாத்ஸல்ய காரியமாக சேஷர்களான ஆச்ரிதர்கள் விஷயத்திலும் பரமசேஷியான பகவான் விஷயத்திலும் பாதுகையானது இன்னும் என்ன செய்கிறதென்றால்:— ஆச்ரிதர்களான ஸம்ஸாரிகளுக்கு பகவத்ப்ராப்தியாகிற மஹாலாபத்துக்கும் ஸர்வசேஷியான பகவானுக்கு ஸம்ஸாரத்தில் நஷ்டமாய்ப்போன ஜீவராசிகளுடைய ப்ராப்தியாகிற மஹாலாபத்துக்கும் காரணமாயிருக்கிறது. சுபாசுபங்களுக்குக் காரணமான பற்பல கர்மங்களையுடைய ஆச்ரித ஜனங்களுக்கு கூடியவரையில் அசுபங்கிமித்தங்களைத் தடைசெய்து, ஸ்வல்பவ்யாஜங்களைக்கொண்டு நல்ல அதிர்ஷ்டங்களையே சீக்கிரத்தில் பலிக்கச் செய்கிறது. ஸகல க்ஷேமங்களுக்கும்காரணமான தத்வஜ்ஞானத்தை ஆச்ரிதர்களுக்கு விளைவிக்கிறது. பகவான் ஸ்வத: ஸர்வஜ்ஞனுனாலும் அவனிடத்தில் ஆச்ரிதர்களுடைய ரக்ஷணவிஷயமாக ஆதராதிசயத்தாலே அடிக்கடி ஞாபகப்படுத்துகிறது. ஆச்ரிதர்களுக்கு அர்த்தகாமங்களடியாக தேவதாந்தரஸம்பந்தம் முதலியது வாராதபடி காத்து "தேவு மற்றறியேன்" என்கிறபடி "எனக்கு வேறொரு தெய்வமும் வேண்டாம். ஸர்வத்துக்கும் பகவானுடைய இந்தபாதுகையே போதும். இதுதான் எனக்குப்பரதேவதை" என்று அபிஸந்திபண்ணும்படி செய்கிறது. ஆச்ரிதர்களுடைய வெளிப்படையான விரோதிகளையும் உள் சத்ருக்களை (காமக்ரோதாதிகளை) யும் துலைப்பதற்கு எப்போதும் காத்துக்கொண்டிருக்கிறது. ஸர்வஜனங்களுக்கும் நேத்ராநந்தத்தையும் ஸகலக்ஷேமங்களையும் கொடுக்கும்படியான பகவானுடைய லீலாஸஞ்சாரங்களை (உத்ஸவாதிகளில் வெளிப்புறப்படுவதை) உண்டுபண்ணுவதின் பொருட்டு எப்போதும் காத்திருக்கிறது. எந்த ஆச்ரிதன் என்ன ஆபத்தில் எப்போ பகவானை அழைப்பனோ அல்லது எந்த ஜ்ஞானி எந்த ஸமயத்தில் பகவானைக்கண்டாலல்லது தரிக்கமாட்டாத தாபமுடையனாய்த் தவிப்பனோ என்று அந்த ஸமயங்களில் பகவானை அவர்களிடம் தாமதமன்னியில் அழைத்துவருவதற்கு காத்திருக்கிறது. தன்னைப்போலொத்த காமசாரத்தை ஆச்ரிதர்களுக்கும் ஏற்படுத்துவ

தற்கு (அதாவது அவர்களை முக்தர்களாக்குவதற்கு) ஸமயம் பார்த்திருக்கிறது. இப்படி பரமபுருஷார்த்த (மோக்ஷ) பர்யந்தமான நன்மைகளை ஆச்ரிதர்களுக்கு பகவானைக்கொண்டு அடைவிப்பதின் பொருட்டு எப்போதும் பகவானுக்குச் சேஷபூதமாகவே (ஸர்வதா அவனுக்கு உபயோகப்பட்டுக்கொண்டே) இருக்கிறது. அதாவது ௩௦ அவதாரிகை 7வது சுலோகத்தில் சங்கித்தபடி நாம் எந்த ஸமயத்தில் விலகி இருந்தால் அப்போ பகவான் ஆச்ரிதர்கள் விஷயத்தில் உதாஸீநம் முதலானதுகளைச் செய்துவிடுவானோ என்று அதிஸ்நேகத்தால் பயந்து ஒருஸமயமும் பகவானை விடாமல் உசிதமான பணிவிடைகளைப் பண்ணிக்கொண்டு ப்ரீதியை ஸம்பாதித்து எப்போதும் அவனோடு சேர்ந்தே இருக்கிறது. இது என்ன நித்யயோகம். இப்படிப்பட்ட ஆச்ரிதவாத்ஸல்யாதிசயமன்றோ இந்த நித்ய யோகத்துக்கு (எப்போதும் சேர்ந்தே இருப்பதற்கு) காரணம்— என்று பகவானோடு அதின் நித்ய யோகத்தின் ஆச்சரியத்தைப் பேசுகிறார்.

ஆச்ரிதவத்ஸலர்களான ஸதாசார்யர்களும் அப்படியே புத்ராதிகளைப்போன்ற ரக்ஷணீயர்களான சேஷர்களுக்கும் பித்ராதிகளைப்போன்ற ரக்ஷகனான ஈசுவரனுக்கும் பரஸ்பர ப்ராப்தியாகிற பரஸ்பரலாபத்தை உண்டுபண்ணுகிறார்கள். ஆச்ரிதர்களுக்கு நல்ல அதிர்ஷ்டங்களை விளைவிக்கிறார்கள். ஸகல க்ஷேமங்களுக்கும் காரணமான தத்வஜ்ஞானத்தை உண்டுபண்ணுகிறார்கள். ஆச்ரிதரக்ஷண விஷயமாக அடிக்கடி பகவானிடத்தில் விண்ணப்பம் செய்கிறார்கள். "தேவு மற்றறியேன்" ஆவாயநாதிஹ தேவதாம் ஸமயிநாமேநாம் நமேநாமிஹ" என்கிறபடி ஆசார்யர்களை பரதெய்வம் என்று நினைக்கும்படி ஸத்புத்தியை அனுக்ரகிக்கிறார்கள். எல்லாவிரோதிகளும் தொலையும்படி அனுக்ரஹிக்கிறார்கள்- லோகக்ஷேமார்த்தமாக பகவானுடைய உத்ஸவாதிகளை ஏற்படுத்தி நடத்திவைக்கிறார்கள். ஆச்ரிதர்கள் ஆபத்காலங்களிலும் ப்ரேமையினாலும் பகவானுடைய ஸேவைக்கு ஆவல்படும் காலத்தில் பகவான் ஸேவைஸாதித்து கஷ்டத்தைத் தீர்க்கும்படி பகவானிடத்தில் பிரார்த்தித்து நிறைவேற்றிவைக்கிறார்கள். காமசாரம் முதலிய சக்திகளைக் கொடுக்கும்படியான மோக்ஷத்தை ஸாதித்துக்கொடுக்கிறார்கள். இப்படி பரமபுரு

க்ஷார்த்த பர்யந்தமான நன்மைகளை பகவானைக்கொண்டு ஆச்ரிதர்களுக்கு அடைவிப்பதற்காக எப்போதும் பகவானையே ஒரு க்ஷணமும்விடாமல் ப்ரீதியுடன் த்யானித்துக்கொண்டும் அவனுக்குக் கைங்கர்யம் செய்துகொண்டும் இருக்கிறார்கள் இப்படி அவர்களும் பகவானோடு நித்யயோகமுள்ளவர்களாயிருக்கிறார்கள் என்பதும் இதினால் ஸூசிதம்.

இந்த ச்லோகமானது அநேகவிதமான சித்ரங்கள் அடங்கிய ச்லோகத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. அவை யாவன— (1) ஏகஸ்வரசித்ரம் (ஒரே ஸ்வரமுள்ளது), (2) ஏகவர்ணசித்ரம் (ஒரே அக்ஷரமுள்ளது), (3) வாக்கில் இரண்டே ஸ்தானங்களால்உண்டுபண்ணப்பட்ட சப்தமுடைய த்விஸ்தானகம் ஸ்தாநநியமம், (4) கோமூத்ரிகா, ஸர்வதோபத்ரம், கங்கணபந்தம், கோபுரபந்தம் பத்மபந்தம், முதலிய பந்தசித்ரங்கள். (5) ச்லோகார்த்தப்ரதிலோமயமகசித்ரம், (6) ஸமபாதயமக, பாதமத்யாவ்ருத்தியமக, பாதாத்யந்தாவ்ருத்தியமக, பாதஷோடசாவ்ருத்தியமக, ஏகாக்ஷராதிஸஹாவ்ருத்தியமகங்களடங்கிய ச்லோகமிது. 'விஷமா நாமா' என்கிற வ்ருத்தமும் இதிலுள்ளது. (26)

(௯௨௭) ரகுபதே: சரணாவநீ ததா விரசிதஸஞ்சர
ணாவநீவநே । க்ருதவரீசரணாவநீ வநீபகை:
நிரமசநோஸ்ஸரணாவநீ மதா ॥ (உஎ)

(ப-ரை) ததா - விச்வாமித்திரருடைய யாகஸம்ரக்ஷணத்திற்காக ஸித்தாச்ரமத்துக்குச் சென்ற ஸமயத்திலே, வநீ வநே - காட்டுமார்க்கத்திலே, விரசித - செய்யப்பட்ட, ஸஞ்சரணா - ஸஞ்சாரத்தை உடையதும், ரணாவநீ - (ஸுபாஹு மாரீசன் முதலான ராக்ஷஸர்களோடு) யுத்தகளத்தை, மதா - அடைந்ததுமான, ரகுபதே - ரகுகுலோத்தமனை ஸ்ரீராமனுடைய, சரணாவநீ - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையானது, வநீபகை: - யாசகர்களாலும் அதாவது ராக்ஷஸபயத்திலிருந்து ரக்ஷணத்தையும் தபஸ் ஸித்தியையும் விரும்புகிற தபஸ்விகளாலும், நிரமசநோஸ்ஸ - (நிரம

வேதங்களையே (ஶ்ருதிமுகை:) முகமாக உடையவர்களாலும் அதாவது வேதாப்யாஸரதர்களான மற்றுமுள்ள கௌதமர், சதாநந்தர் முதலான மஹரிஷிகளாலும், க்ருத - செய்யப்பட்ட, பரிசரணா-சுச்ரூஷாதிகளை உடையதாக, (ஸஹிதா-ஆயிற்று).

(கருத்து) ஆச்ரிதஸம்ரக்ஷண விஷயத்தில் பாதுகை இன்னும் என்ன செய்கிறதென்றால் சரணாகதஸம்ரக்ஷணத்துக்கும் பரம ஔதார்யத்துக்கும் பெயர்பெற்றதான ரகுகுலத்துக்கு ஒரு திலகம்போல் லோகானுக்ரஹார்த்தமாக வந்தவதரித்த ஸ்ரீராமனை பகவானுடன் தானும் வந்தவதரித்து விசுவாமித்ரமஹர்ஷியை அநுஸரித்து ராக்ஷஸபயமுள்ள காடுமார்க்கங்களில் ஸஞ்சரித்து ஸித்தாச்ரமவாஸிகள் முதலிய தபோநிஷ்டர்களும் வேதத்தையே தங்களுக்கு பரமதனமாகக்கொண்டு வேதத்தையும் வேத வேதாந்தார்த்தங்களையும்எப்பொழுதும்அப்யஸிப்பவர்களுமான மஹர்ஷிகளுக்கு அவர்கள் யாசித்தபடி யுத்தகளத்தில் தாடகா ஸுபாஹு மாரீசாதிகளான ராக்ஷஸர்களைத்தொலைத்து,ராக்ஷஸ பயத்தையும் அதின் மூலமாக தபஸ் யஜ்ஞம் முதலியதுகளுக்கு ஏற்பட்டவிக்னங்களையும்போக்கி, தபஸ்ஸித்தியையும் அனுக்ரஹித்து,அஹல்யாசாபவிமோசனம் முதலிய உபகாரத்தையும்செய்து, பரம ப்ரேமையாலும் கிருதஜ்ஞதையாலும் அவர்களால் செய்யப்பட்ட சுச்ரூஷாதிகளையும் அங்கீகரித்து அவர்களைத் தன்யமாக்கிற்று.

அவதார புருஷர்களான ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யர்களும் அப்படியே லோகானுக்ரஹார்த்தமாக அர்ச்சாரூபியான பகவானை அனுஸரித்துத் தாங்களும் பகவத்பக்தி ஸர்வபூததயை நல்ல அனுஷ்டானம் ஜ்ஞானம் இவைகளால் பிரஸித்தமான ஸத்குலங்களில் வந்தவதரித்து ஒரோர் ஸாதுக்களின் கோரிக்கையின் பேரில் பகவத்த்வேஷிகளும் துர்வாதிகளும் துராசாரங்களுள்ளவர்களும் நிறைந்த தேசங்களின் வழியாய் ஸஞ்சரித்து, வாதமாகிற யுத்தத்தில் குமதிகளை ஜயித்து, ஸந்மதத்தை ஸ்தாபித்து பகவத்பரர்களும் சாஸ்த்ரோக்த ஆராதகர்களுமான ஆச்ரிதர்களை அனுக்ரஹித்து அவர்கள் ஆராதனங்களையும் பெற்று அவர்களை தன்யமாக்கிப்பெரியோர்களாலும் கொண்டாடப்படுகிறார்கள்என்பதும் இதில் த்வனிக்கிறது.

"பாதுகாபதஷட்பதாவ்ருத்திபங்க்தி" என்கிற யமகசித்ரம் இதிலுள்ளது. அதாவது இதில் பாதத்தில் ஒரு பாகமான "ரம்ஹிணாவநீ" என்கிற பதமும், அக்ஷரங்களும் நான்கு பாதங்களிலும் ஆவிருத்தியாய்வருவது. இதிலுள்ள விருத்தத்துக்கு உபஜாதி (இரண்டு ஜாதி சேர்ந்தது) என்று பெயர். முதல் பாதமும் மூன்றாம் பாதமும் த்ரைஷ்டுபச்சந்தஸ் 11-அக்ஷரங்களடங்கியது. இரண்டாம் பாதமும் நான்காம் பாதமும் ஜாகதச்சந்தஸ் 12-அக்ஷரங்களடங்கியது. (27)

**(௯௩௮) உத்கேலிம் ஜகத்ஸ்ருஷ்டிநா நாடிகா ரம்ஹிணா ரம்ஹிணா ரம்ஹிணா ரம்ஹிணா । தாத்ருசே மாயிவாஸ்த்ராய ஸ்வாம் விநா பாதுகா பாதுகா பாதுகாபாதுகா ॥**

இந்த சுலோகத்தில் பதங்களின் பிரிவு.

முதல் பாதிக்கு உத்கேலிம் ஜகத்ஸ்ருஷ்டிநா நாடிகாரம்ஹிணா, கரம்ஹிணா, ரம்ஹிணா, ரம்ஹிணா ।

2-வது பாதிக்கு தாத்ருசே, மாயிவாஸ்த்ராயஸே, ஸ்வாம் விநா, ஸபாஸ, உ, கா, பாதுகா, பாது, காபாதுகா ॥

ஹே பாது - வாராய் ஸ்ரீ ரங்கநாதனுடைய பாதுகையே! ஜகத் - சராசரங்களடங்கிய உலகத்தினுடைய, ஸ்ருஷ்டிநா ஸ்ருஷ்டியாகிற, நாடிகா - கூத்தை, * ரம்ஹிணா - அடையும்

---

* ரம்ஹி (கதௌ) என்கிற தாதுவின் பேரில் ரம்ஹிதும்-கந்தும் (அடையும்படியான) ஶீலம் (ஸ்வபாவம்) உள்ளவன் என்கிற அர்த்தத்தில் ரம்ஹிண் என்கிறபதம்வருகிறது. கதி (நடை) யைச் சொல்லுகிற தாது அடைவது என்பதையும் சொல்லுமானதால் இங்கு அடைவது என்கிற அர்த்தம் ஜகத்ஸ்ருஷ்டிநாடகத்தைப்பண்ணுகிறான் என்று சொல்லாமல் ரம்ஹிண் சப்தத்தால் அடைகிறான் என்று சொல்வதால் தானே அந்த மாதிரியை அடைகிறானென்கிற சாஸ்த்ரார்த்தம் காட்டப்படுகிறது. இந்த அர்த்தம் அடுத்த கரம்ஹிணா என்கிற பதத்தாலும் உறுதிப்படுத்தப்படுகிறது. இதைக் கருத்தில் பார்க்க.

ஸ்வபாவமுடையவரானவரும், அதாவது உலகமாகிற கூத்தை தன்னிடத்திலேயே உண்டுபண்ணுகிறவரும். * அரங்கிணா - தனக்கு ஒரு கூத்தாடி இல்லாதவரும் அதாவது தன்னை ஆட்டி வைக்கக்கூடிய ஒரு கூத்தாடி இல்லாதவரும் ரங்கிணா - ஸ்ரீ ராமனுடைய அபரரூபமான ரங்கநாத ரூபியான, ரங்கிண கூத்தாடியினுலே, தத்த-கொடுக்கப்பட்ட, (பகவானுல்தனக்கு தன்னுல் பகவானுக்கும் கொடுக்கப்பட்ட) கேலிம் - ஸஞ்சார விளையாட்டையுடைய, த்வாம் விநா - உன்னைத் தவிர, கா உ பாதுகா - வேறு எந்த பாதுகையே தான், காபாதுகா (கஸ்ய - ஸுகத்தினுடைய, ஆபாதுகா ஸம்பாதிக்கிறதாய்) ஸுகத்தை ஸாதித்துக்கொடுக்கும் ஸ்வபாவமுள்ளதாய்க் கொண்டு, அல்லது காபாதுகா - உன்னைக் காட்டிலும் ஸ்வல்பகாரியத்தை மட்டும் ஸாதிக்கக் கூடிய, கா உ பாதுகா - வேறு எந்த பாதுகைதான், தாத்ருசே - அப்படிப்பட்ட, அதாவது யாகத்தை நடத்துகிற எஜமானனுடைய பெருமையினுலும், யாகம் நடக்கிற ஸ்தலத்தின் பெருமையினுலும், யாகத்தின் பெருமையினுலும், அதற்குப் பலதடவை ராக்ஷஸர்களால் விக்னம் நேர்ந்ததாலும் அது ஸ்ரீ ராமனுல் நிறைவேற்றி வைக்கப்பட்டதினுலும் பிரஸித்தி அடைந்ததான, காதிஸுநோ - காதி என்கிற ராஜாவின் புத்ரரான விசுவாமித்ர மகருஷியினுடைய, அத்வரே - யாகத்தில், அவாஸ - ரக்ஷித்தது, அதாவது ராமனுக்கு ஸஹாயமாக இருந்து ராக்ஷஸர்களைத் தொலைத்து யஜமானனை விசுவாமித்ரமகருஷியையும், யாகத்தையும், யாகோபகரணங்களையும், யாகத்தை நடத்துகிற அத்வர்யு முதலானவர்களையும், அங்கு வந்திருந்தவர்களையும் காப்பாற்றி யாகத்தையும் பூர்த்தி செய்வித்து ஸர்வப்ரகாரத்தாலும் ரக்ஷித்தது.

---

* (ரங்கம் - என்றால் கூத்துப்போடும் இடம் அதையுடையவன் 'ரங்கீ' நடன். எவனுக்கு நடன் இல்லையோ அவன் அரங்கீ அபூர்வமான கூத்தாடியான, இன்னெருவரால் இப்படி முடியாதபடி ஆச்சர்யமான கூத்தைப் போடுகிறவனுனஎன்று பலிதார்த்தம்.)

உ - என்கிற பதம் வா என்கிற அர்த்தத்தில் உபயோகப்பட்டு நிரபேக்ஷத்தை (இதர ஸஹாயமன்னியில் என்கிற அர்த்தத்தை)க் காட்டுகிறது.

(கருத்து) ஸ்ரீ ராமாவதாரத்தில் நடந்த விசுவாமித்ரருடைய யாகஸம்ரக்ஷணப்ரஸ்தாபம் வந்தவாறே, அந்த ரக்ஷணப்ரகாரத்தின் ஆச்சரியத்தை நினைத்தும் ஸாதுபுத்தியாலே அப்படி விசுவாமித்திரருக்குச் செய்த உபகாரத்தையே தனக்கு ஒரு லாபமாக நினைத்தும் ஸந்தோஷித்து அந்த ஸ்ரீராமனேதான் ஸ்ரீரங்கநாதன், அந்த ஸ்ரீராமபாதுகையேதான் ஸ்ரீரங்கநாதபாதுகை என்கிற ஐக்யபுத்தியால் ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையைப் பார்த்து புகழ்ந்து பேசுகிறார். ஓ பாதுகையே! ஸமஸ்த சேதனாசேதனங்களையும் சரீரமாக உடைய யாதொரு பகவான் லோகானுக்ரஹார்த்தமாகத் தான் ஜகத்ஸ்ருஷ்டி பண்ணத்திருவுள்ளம் பற்றினவாறே, தனக்கு வெளிப்படையானவஸ்துவின் உதவியில்லாமலே 'பஹுஸ்யாம்' (நாம் அநேகமாக ஆகவேணும்) என்கிறதன்னுடைய ஸங்கல்பமாத்திரத்தினாலேயே ப்ரளயதசையில் ஸூக்ஷ்மசிதசித்வஸ்துசரீரகனாயிருந்தான்; அவன் ஸ்தூலசிதசித்வஸ்துசரீரகனாகி மாறி பற்பலவாகவும் பற்பலவகையாகவும் பற்பல ஸ்வபாவாதிகளுள்ளதாகவுமிருக்கிற இந்த ஆச்சரியகரமாயிருக்கிற ஜகத்தைத் தன் உடம்பைக்கொண்டே தனக்குள்ளே உண்டுபண்ணுகிறானே; அதிலுள்ள சேதனாசேதனங்களையும் கர்மமாகிற ஸூத்திரத்தினால் பொம்மலாட்டம்போல் ஆட்டிவைத்து இந்த உலகமாகிற ஆச்சரியக் கூத்தை நடத்துகிறானே, அப்படிப்பட்ட கூத்தை ஆட்டிவைக்கக் கூடிய மற்றொரு கூத்தாடி இல்லாதபடி அத்விதீயனாக இருக்கிறானே, (அல்லது உலகத்தை தான் ஆட்டிவைப்பதுபோல் தன்னை ஆட்டிவைக்கக்கூடிய மற்றொரு கூத்தாடி இல்லாதவனாக இருக்கிறானே) அப்படிப்பட்ட ஆச்சரிய சக்தியும் வ்யாபாரமுமுடைய ஸ்ரீரங்கநாதனாலே உனக்கு திருப்தியாம்படி கொடுக்கப்பட்ட ஸஞ்சாரலீலையாட்டை உடையவளான உன்னைத் தவிர மற்ற யாரால் மஹாஸித்தியைக் கொடுக்கக்கூடிய ஸித்தாச்ரமத்தில் மிகவும் தபோமஹிமையுள்ள விசுவாமித்ரமஹரிஷியாலே ஆரம்பிக்கப்பட்டும் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவர்

களான ஸுபாஹு மாரீச ப்ரப்ருதிகளான துஷ்டராக்ஷஸர் களாலே பல தடவைகள் விக்னம் பண்ணப்பட்டுப் பூர்த்தி அடையாத மஹாயாகத்தை அப்படிப்பட்ட ராக்ஷஸர்களைத் துலைத்து, ஸர்வப்ரகாரமாகவும் ரக்ஷித்து பூர்த்தி செய்விக்க முடியும். அல்ப சக்தியுள்ளவர்களாய் அல்பகாரியத்தை மட்டும் ஸாதித்து உலகத்துக்கு அல்பஸுகத்தை மட்டும் கொடுக்கக் கூடிய மற்ற தேவர்களாலாவது மனுஷ்யர்களாலாவது அப்படிச் செய்யமுடியுமோ. நீ ஒருத்தியேதானே இதர ஸஹாய நிரபேக்ஷமாக பகவானுக்கு உதவியாகஇருந்து அப்படி ரக்ஷித்தாய். அந்தக் காலத்தில் பகவானுக்கு உன்னைத்தவிர மற்ற எந்த ஸாதநம்தான் அமையும். ஆச்சரியசாலியான பகவானுக்கு அனுரூபமான ஆச்சரியகுணவ்யாபாராதிகளை உடைய உன் பெருமையை என்னவென்று சொல்லுகிறது -- என்று இப்படி பாதுகையினுடைய பகவானுக்கு அநுரூபமான ரக்ஷணஸாமர்த்தியத்தை நினைத்து ஆச்சரியப்படுகிறார்.

ஸதாசார்யர்களும், அப்படியே தயையினால் ஜீவராசிகளுக்கு ஆத்மக்ஷேமத்தைத் தேடும்பொருட்டு கரணகளேபராதிகளைக் கொடுத்து விசித்ரமான உலகத்தை ஸ்ருஷ்டித்து ரக்ஷிக்கிற விசித்திரசக்தியுள்ள பகவானால் ஏவப்பட்டும் அவனுக்கு அனுரூபமாக ரக்ஷணவியாபாரத்தைநடத்தியும் விசித்திர கர்மவிபாகங்களையுடைய ஜீவன்களுக்கு, அவர்களாலும் மற்றவர்களாலும் போக்கமுடியாத ஆத்மாவிலுள்ளதும் வெளிப்படையாக உள்ளதுமான (காமக்ரோதாதிகளும் ஸ்வகர்மங்களும் மற்ற ஜீவர்களுமான) ஆத்மசத்ருக்களைப்போக்கி, பல ஜன்மங்களில் நஷ்டமாய்ப்போன ஆத்மயாகமாகிற மஹாயாகத்தை நிறைவேற்றி வைக்கிறார்கள். தத்வவித்துக்களும் அவதாரபுருஷர்களுமான ஸதாசார்யர்களால்தான் இந்தக்காரியத்தை அப்படி நிறைவேற்றி வைக்கமுடியும். இதுவிஷயத்தில்பகவானும் அவர்களும்தான்பரஸ்பரம் அனுரூபமான ஸஹகாரிகள். அல்பஜ்ஞர்களும் அல்ப புருஷார்த்தங்களில் ருசியுள்ளவர்களும் அல்பபுருஷார்த்தங்களுக்கு வழி காட்டுகிறவர்களும் அல்ப சக்தர்களுமான மற்ற தேவ மனுஷ்யாதி ஸம்ஸாரிகள் யாராலும் இந்த ஆத்மயாகத்தை (ஆத்மாவாகிற ஹவிஸ்ஸை பகவானாகிற அக்னியில் ஹோமம் பண்ணுவதை) பூர்த்தி செய்வித்து ஜீவராசிகளுக்கு சாசுவத

மான க்ஷேமத்தை உண்டுபண்ண முடியாது. அப்படிச் செய்யக் கூடியவர்கள்தான் ஸதாசாரியர்கள், பகவானுக்கும் அவனுக்கு உடந்தையாக நடக்கிற ஸதாசார்யர்களுக்கும் இந்த உலகமாகிற கூத்தை நடத்திவைப்பதினால் ஏற்படும் லாபம் ஜீவர்களுடைய க்ஷேமம். இப்படி ஸதாசார்யர்களுடைய அன்யாத்ருசமான ரக்ஷணஸாமர்த்யமும் இதில் த்வனிக்கிறது.

இந்த சுலோகத்தில் 2-வது 4-வது பாதங்களில் பாதத்தின் ஒரு பாகத்தினுடைய 4-தடவை ஆவர்த்தியுள்ள வாதஹாமவதாவராவ்ருத்தியமகம் என்கிற யமகம் அடங்கியிருக்கிறது. இதிலுள்ள வ்ருத்தத்துக்கு ஸ்ரக்விணீவ்ருத்தம் என்று பெயர். ஒவ்வொரு பாதத்திற்கும் 12 அக்ஷரங்களுள்ளது. (28)

(௯௱௯) வாதவாவாதவா வாதவா வாதவா
வாதவா வாதவா வாதவா வாதவா ।
வாதவா வாதவா வாதவா வாதவா
வாதவா வாதவா வாதவா வாதவா ॥ (௨௯)

இதற்கு பதம் வாதவாவாதவாவாதவாவாதவா,[1] வாதவா,[2] வாதவாவாதவா,[3] ஸவாதவா ।[4] வாதவாவாதவாவாதவா[5] வாதவாவாஸ,[6] ஸவாவாதவாவா,[7] சூதவா வாதவா ॥

(ப-ரை) 3 வாத-* ஆதிகாரிகபுருஷர்களை, வா-காப்பாற்றுகிற, ஸ - பெருமாளுடைய, வாதவா - திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையானது, 1 வாதவா - (வாத - காலால் அதாவது வேரால், வா - குடிப்பது) ஸ்தாவரங்களென்ன, ஸவாதவா - (அப்படி காலால் குடிக்காதது ஸ்தாவரங்களாக இல்லாதது) ஜங்கமங்களென்ன இவைகளை, சூவாத - அடைந்

* வத என்றால் பிரம்மப்பட்டம், ருத்ரப்பட்டம், இந்திரப்பட்டம் முதலான அதிகாரஸ்தானங்கள். அந்த ஸ்தானங்களுக்கு ஸம்பந்தப்பட்டவர்கள் வாதாः இந்திராதிகளான பகவானால் ஏற்படுத்தப்பட்ட அதிகார புருஷர்கள்,

இருக்கிற, பாபங்களை, - சாப்பிடுகிற, - ஜலத்தை உடையதாகவும் (அதாவது ஸ்தாவர ஜங்கமங்களுடைய ஸமஸ்த பாபங்களையும் போக்கடிக்கத்தக்க தன்னுடைய அபிஷேக ஜலத்தை உடையதாகவும்), 2 - பகவானுடைய ஸொத்தில் நாலில் ஒரு அம்சமான இந்த ப்ரகிருதி மண்டலத்தை, - காப்பாற்றுகிறதாகவும், 4 - நாலில் ஒரு அம்சமாக இல்லாததை, அதாவது பகவானுடைய ஸொத்தில் முக்கால் பங்கான மற்றொரு பாகமாகிற நித்யவிபூதியை (அப்ராகிருத லோகமாகிய வைகுண்டத்தை), - காப்பாற்றுகிறதாகவும் (அதாவது பகவானுடைய பர, வ்யூஹ, விபவ, அர்ச்சாவதாரங்களில் ஸஞ்சாரம் முதலிய காலங்களில் பகவானாலே பரிக்ரஹிக்கப்பட்டு உபயவிபூதியையும் காப்பாற்றுகிறதான என்று 2, 4 பதங்களுடைய அர்த்தம். 5 * - ரக்ஷிக்கத்தகுந்தவர்களான மாதாபிதாக்கள் முதலானவர்களை - மிகவும் ரக்ஷிக்கிறவர்கள் விஷயத்திலும் ( - ரக்ஷிக்கிறது என்கிற தாதுவின்பேரில் வருகிறது), - அப்படி இல்லாதவர்கள் விஷயத்திலும் அதாவது ரக்ஷிக்காதவர்கள் விஷயத்திலும், - அசுபஸங்கல்பத்தை அடையாததாகவும் ('பாபத்தை' அதாவது அசுபஸங்கல்பத்தை, '' - எப்போதும் அடைகிறது என்பதால், '' '' என்பது அப்படி இல்லை என்பதைக் காட்டுகிறது), - ஸுக்ருதத்தைத் துலைப்பதாகவும் இருப்பதும் ( - பாபமில்லாதது அதாவது ஸுக்ருதம் அதை - நாசம் பண்ணுகிறது என்கிற அர்த்தம்) அதாவது ரக்ஷிக்கப்படத்தகுந்த மாதா பிதாக்களை நன்றாய் ரக்ஷிக்கிறவர்களுக்கு அசுபத்தைக் கொடுக்காமல் சுபத்தையே கொடுக்கும்

---

* என்றால் ரக்ஷணமென்று ஒரு அர்த்தம். ரக்ஷணத்துக்கு ஸம்பந்தப்பட்டவர்கள் அதாவது ரக்ஷிக்கத் தகுந்தவர்கள் .

ஸ்வபாவமுள்ளதாகவும், அப்படி ரக்ஷிக்காதவர்களுக்கு அந்த பாபத்தின் பலமாக ஏற்கனவே அவர்களுக்குள்ள ஸம்பத்துக்களையும் நாசம் செய்கிறதுமாக இருப்பதும் என்று அர்த்தம். 6 ௯-பகவானை, * பாபா-விசேஷமாகக்குடிக்கிறவர்களை அதாவது பகவானையே எப்போதும் அநுபவிக்கும் ஸ்வபாவமுள்ளவர்களை, ௨ - சுத்தம் பண்ணுகிறவைகளை ஸவாவாநாந அதாவது பகவதனுபவத்தில்ஈடுபடுகிறவர்களுடைய மனதைசுத்தம் பண்ணி அந்த அநுபவஸித்தியை உண்டுபண்ணுகிறவைகளான ஶமம்-மனதை அடக்குவது, தமம்-வெளி இந்திரியங்களை அடக்குவதுமுதலான குணங்களை, பாபா-மேலும் மேலும் ரக்ஷிக்கிறதாகவும்(பா என்பது ரக்ஷிப்பதைச்சொல்லுகிறது,இரட்டித்துப்போடுவது மறுபடியும் மறுபடியும் ரக்ஷிப்பது என்பதைச் சொல்லுகிறது) 7 ௬௨ - கண்டிக்கிறவர்களை அதாவது ஆச்ரிதர்களுடைய சத்துருக்களை, பா - உலர்த்துகிறதாக இருக்கிற, பாது - (தன்னுடைய) கிரணங்களை, பா - காப்பாற்றுகிறதாகவும் (அதாவது தன்னுடைய கிரணப்ரபாவத்தினாலேயே ஆச்ரித விரோதிகளான ஜலத்தை சோஷித்துப் போகும்படி செய்கிறதுமான என்று அர்த்தம். முந்திய 919-வது சுலோகத்தில் ஸஹஸ்ரகாலஹஸ்ர ஸூர்யனையும் கொளுத்தக்கூடிய தேஜஸ்ஸுள்ளதுஎன்று சொல்லப்பட்டது) (அஸ்தி-இருக்கிறது) என்று 1, 2, 4, 5, 6, 7 பதங்கள் 3-வது பதத்தில் சொன்ன பாதுகைக்கு விதேய விசேஷணமாகிறது. அதாவது 3-வது பதத்தில் சொல்லப்பட்ட குணமுடைய பகவானுடைய பாதுகையாக இருப்பது மற்ற பதங்களால் சொல்லப்பட்ட பாதுகையின் பெருமைகளுக்குக் காரணம் என்பதைக் காட்டுகிறது.

(கருத்து) முன் சுலோகத்தில் பாதுகையினுடைய ரக்ஷண ஸாமர்த்யத்தைக் கொண்டாடினவரே அப்படிப்பட்ட ரக்ஷண

* பா என்றால் குடிப்பது என்று அர்த்தம். பாபா என்று இரட்டித்துப்போடுவதால் ரொம்பக் குடிப்பது என்கிற அர்த்தம் ஏற்படுகிறது.

ஸாமர்த்யம் அதற்கு எப்படி எதின்மூலம் உண்டாயிற்று என்கிற யோஜனை பிறந்து அதை விமர்சித்ததின்பேரில் முன் சுலோகத்தில் விஸ்தரித்தபடி ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணின தும் அதினுடைய நித்யநைமித்திக யோகக்ஷேமங்களை தனக்குக் கீழிருந்து நடத்துவதற்காக பிர்ம்மா முதற்கொண்டுள்ள ஆதி காரிக புருஷர்களை ஏற்படுத்தி அவர்கள் தன்னை மீறுமலும் அவர்களுக்கு அந்தந்த ஸ்தானங்களும் அதிகாரங்களும் மற்ற வர்களுடைய ஆக்ரமணத்தால் நழுவாதிருக்கும்படிக்கும் கார்த்து மனுஷ்யர்கள் யக்ஞம் முதலானதால் தேவர்களை ஆராதிக்க வேண்டியது, தேவர்கள் அவர்களுடைய ஆராதனத்தைப் பெற்று அவர்களை மழை முதலியதால் காப்பாற்றவேண்டியது என்கிற * ஜகத்வியாபார சக்ரத்தை அங்யாத்ருசமான ஸாமர்த் யம் சக்தி முதலானதுகளுடன் நடத்துகிற ஸர்வேசுவரனுடைய திருவடிகளை அநந்யபரையாக ஆச்ரயித்து சுச்ரூஷாதிகளைப் பண் ணிக்கொண்டு அவனிடம் ஸர்வத்தையும் க்ரஹித்ததாலல்லவோ இதற்கு இப்படிப்பட்ட ஸாமர்த்யாதிகள் வந்தது என்று கண்டு அந்த சிக்ஷாதீனமாகவும் அனுக்ரஹாதீனமாகவும் ஆச்ரயா தீனமாகவும் அதற்கேற்பட்ட அவனைப்போலொத்த ப்ரபாவங் களை விஸ்மயத்துடன் பேசுகிறார். பகவத்பாதாரவிந்த ஸமாச் ரயணத்தாலே ஏற்பட்ட ப்ரபாவத்தாலே (இந்த க்ரந்தத்தில் 'ஸஹ:—' என்கிற முதல் சுலோகத்தின் ரீதியில்) தன்னு டைய அபிஷேகஜலத்தாலேயே ஜங்கமஸ்தாவரரூபமான ஸகல ஜீவராசிகளுடைய ஸமஸ்த பாபங்களையும் போக்குகிறது. ப்ர கிருதிமண்டலமும் அதைப்போல் மூன்று பங்கு பெரிதாகச் சொல்லப்படுகிற அப்ராகிருத லோகமுமாகிய பகவானுடைய உபயவிபூதிகளிலுமுள்ளவர்களால் ஆராதிக்கப்பட்டு அவர்களைக் காப்பாற்றுகிறது "மாதாவை தெய்வமாகக் கொண்டாடு, பிதாவை தெய்வமாகக் கொண்டாடு, ஆசாரியனை தெய்வமாகக் கொண்டாடு, அதிதியை தெய்வமாகக் கொண்டாடு" என்று இப்படி வேதத்தில் விதிக்கப்பட்டபடி ஆதரிக்கவேண்டியவர் களை நன்றாக ஆதரிக்கிறவர்கள் விஷயத்திலும் அப்படிப்பட்ட

---

* பகவத்கீதை 3-வது அத்யாயம் 11-முதல் 16-வரையிலுள்ள சுலோகவிஷயத்தைப் பார்க்க.

வேதத்தின் கட்டளையை மீறி ஆதரிக்கவேண்டியவர்களை ஆத ரிக்காதவர்கள் விஷயத்திலும் அடைவே மேல்மேலும் சுபங் களைக் கொடுத்தும், ஏற்கனவேயுள்ள ஸுக்ருதங்களையுங்கூட நாசம் செய்தும், அவரவர்களுடைய நடத்தைக்குத் தக்கபடி அனுக்ரஹநிக்ரஹங்களைப் பண்ணுகிறது. பகவத்யானத்திலும் அனுபவத்திலும் ஈடுபடுகிறவர்களுக்கு தன்னை த்யானிப்பதால் ஶமம், தமம் முதலிய குணங்களை அனுக்ரஹித்து மனதி லுள்ள கல்மஷங்களைப்போக்கி, ஸமாதி(த்யான) பூர்த்தியும்அனு பவபூர்த்தியும் ஸித்திக்கும்படி செய்கிறது தன்னைச் சரணமடை கிற ஆச்ரிதர்களுடைய விரோதிகளையெல்லாம் தன்னுடைய தேஜஸ்ஸினாலேயே போக்கிவிடுகிறது.

ஸதாசார்யர்களும் அநந்யபரர்களாக பகவானுடைய திரு வடிகளை ஆச்ரயித்திருப்பதாலுண்டான மஹிமையால் அப்ப

---

குறிப்பு— பகவானை தான் அநந்யபரமாக ஆச்ரயித்த ப்ரபாவத் தால் தன்னுடைய தீர்த்தம் ஸம்பந்தம் த்யானம், கீர்த்தனம், ப்ர பத்தி, தேஜஸ் இவைகளால் ஆச்ரிதர்களுக்கு எல்லா நன்மைகளையும் விளைவிக்கிறது என்று பலிதார்த்தம். கெட்டவர்களுக்குள்ள ஸுக்ரு தத்தையும் நாசம் பண்ணுவதாகச் சொன்னதும் அனுக்ரஹமே. இல்லாவிட்டால் அவர்கள் ஸுக்ருதவசத்தால் நல்ல ஸ்திதியிலேயே இருந்தால் அதனால் மதம் பிடித்து மேல்மேலும் கெடுதலையே செய்து இன்னும் கெட்டுப்போவார்கள். அப்படிக்கில்லாமல் அவ களுக்கு துர்தசையைக் கொடுத்தால் அதனால் பயந்து நம்முடைய கெட்ட கர்மங்களால்தான் இந்தக் கஷ்டங்கள் சேர்ந்தனென்று நிர் வேதமடைந்து பின்னிட்டு நல்ல வழிக்குத் திரும்புவார்கள். புண்ய மும் பாபமும் பலன் கொடுக்காமல் நசிப்பதில்லையாகையால் ஸுக்ரு தத்தை (புண்யத்தை) அழிப்பதாவது, இப்போது அதில் நல்ல பலன் உண்டாகாதபடி தடுத்துவிடுகிறது. அப்படியே அசுபஸங்கல்பத்தைப் பண்ணாமலிருப்பதும் பாபபலனை இப்போது கொடுக்காமல் ஒதுக்கி விடுகிறது. ஆகையால் “அத்யுத்கடை: புண்யபாபை ரிஹைவ ஃபலமச்நுதே” என்கிற ப்ரமாணத்துக்கும் அந் தந்த பெரிய புண்யபாபங்களின் பலன்களை உடனே இவ்விடத்தில் கொடுப்பதற்குத் தடங்கலான முன்னுள்ள பாபபுண்யங்களின் பலன் களை நிறுத்தி அவைகளுக்கே ஈச்வரன் மூர்த்தி பலனைக் கொடுக்கிறான். இன்னொரு ஜன்மம் வரையில் காப்பதில்லை என்று அர்த்தம்.

டியே தங்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தால் ஜீவராசிகளுடைய பாபங்களைப் போக்கும்படியான பாவனத்வசாலிகளாக இருக்கிறார்கள். எல்லா உலகத்தாலும் ஆராதிக்கப்பட்டு அவர்களை ரக்ஷிக்கக்கூடியவர்களாக இருக்கிறார்கள். பகவதாஜ்ஞைப்படி நடக்கிற ஸாதுக்களுக்கு மேல்மேலும் க்ஷேமத்தை அனுக்ரஹிக்கிறார்கள். துஷ்டர்களுக்கு மதத்தை உண்டுபண்ணி தௌஷ்ட்யத்தைக் கொடுக்கும் ஐசுவர்யம் முதலியவைகளுக்கு காரணமான ஸுக்ருதத்தை பகவானைக்கொண்டு நசிப்பித்து கஷ்டங்களால் நிர்வேதத்தை உண்டுபண்ணி அனுக்ரஹிக்கிறார்கள். தங்களை த்யானிக்கிற ஆச்ரிதர்களுக்கு மனதிலுள்ள கல்மஷங்களைப் போக்கி பகவத் த்யானத்துக்கும் குணானுபவத்துக்கும் ஸாதனமான ஶமதமாதி நற்குணங்களை அனுக்ரஹிக்கிறார்கள். அவர்களுக்குள்ள விரோதிகளையும் பகவத்ப்ரபத்தியாலும் தங்களுடைய தேஜஸ்ஸாலும் போக்குகிறார்கள் என்பதும் இந்த சுலோகத்தால் த்வனிக்கிறது.

இம்படி இந்த சுலோகத்தால் ஸ்ரீபாதுகைகளுக்கும் ஸதாசார்யர்களுக்கும் பகவத்ஸம்பந்தத்தால் ஏற்பட்டிருக்கிற பாவநத்வம், ஶுபாஶ்ரயத்வம், நிரதிஶயாநந்தஸந்தோஹமயத்வம், த்யாநபோஷத்வம், ஶரண்யத்வம், தேஜோவத்த்வம் முதலான பகவத்ப்ரபாவங்கள் சொல்லப்படுகின்றன. (29)

இந்த சுலோகத்திலுள்ள சித்ரங்களாவன—

(1) ஷோடஶபதாவ்ருத்தியமகம்— இதில் பாதபா என்கிற பதத்தை 16-தடவை ஆவர்த்தி பண்ணுவது.

(2) இரண்டே உயிரெழுத்தும் (அ, ஆ) இரண்டே மெய்யெழுத்தும் (ப, த) உள்ளதாக இருப்பது.

(3) ஶ்லோக, ஶ்லோகார்த்த, ஶ்லோகபாத, அநுலோமப்ரதிலோம யமகம்.

(4) பத்மபந்தம்— ஷோடஶதளம், அஷ்டதளம், சதுர்தளம்

(௯௩௰) ஸாகேதத்ராணவேஹாஜநிததநிஜஸ்தாங்கணா
ஶ்ரீஸ்தாஸா ஸாஹாஸ்த்ரீ ப்ரவ்ருத்திர்யதி யதி
த்ராவதாபாதுகாஸா | ஸாஶ்ராத்தி பாதுகாஸா

ஸாரா ராரா ராவஹ ஸ்ரீ காரவஹ் ராஜராஸா ஸாரா
ஜஸ்ராவி ஜஹ்ராஜ திருருருதிஜஹூ ருயுஜா ஸாரா
தகே ஸா ॥ (௯௦)

இந்த சுலோகத்தில் ஒவ்வொரு தளத்திலும் சுலோகத்தின் பாதங்களின் ஒரு பாதி (½ பாதம்) அடங்கியதும், மூலைகள் ஸம்பந்தப்படாத கர்ணிகையுள்ளதும், தளங்களின் நுனிகளிலுள்ள அக்ஷரங்களால் 'வேங்கடபதிகவி' என்று கவியினுடைய பெயரைக் காட்டுவதுமான 'அஷ்டதள பத்மபந்தம்' அடங்கியது.

இப்படி இந்த சுலோகமானது அஷ்டதளபத்மத்தினுடைய கோடுகளுக்குள் எழுதக்கூடியதாக இருப்பதால் இந்த சுலோக ரூபமான பத்மமானது பாதுகையினிடத்தில் இந்த கவியாகிற ஆசார்யரால் ஸமர்ப்பிக்கப்படுகிறது (அர்ச்சிக்கப்படுகிறது) என்கிற அர்த்தத்தை உட்கொண்டிருக்கிறது. இது தளங்களினுடைய நுனிகளிலுள்ள அக்ஷரங்களால் ஏற்படுகிற 'வேங்கடபதிகவி' என்கிற பதத்தின் தாத்பர்யம்.

இந்த சுலோகத்தை இந்த பந்தத்தில் வாசிக்கும் க்ரமம். ஒவ்வொரு பாதத்தையும் கர்ணிகையிலுள்ள 'ஸா' என்கிற பொது அக்ஷரத்திலிருந்து ஆரம்பித்து, தளங்களில் ப்ரதக்ஷண க்ரமமாக மேலேறி இறங்கியும் தளங்களில் அடியிலுள்ள 'த' 'ர' 'ரா' 'ரு' என்கிற அக்ஷரங்கள் வரும்போது கீழே கர்ணிகைக்கு இறங்காமல் அவ்வக்ஷரங்களையே மூன்று தடவை உச்சரித்து ப்ரதக்ஷிணமாக மேலேஏறி இறங்கி கர்ணிகையிலுள்ள 'ஸா' என்கிற அக்ஷரத்துடன் முடிப்பது. இப்படி இரண்டு தளங்களுக்கு ஒரு பாதம் முடியும். பாதங்களை நான்கு திக்கிலுள்ள தளங்களிலே ஆரம்பித்து பக்கத்து விதிக்கு (குருக்கு மூலை) தளங்களில் முடிக்கவேண்டியது.

இந்த சுலோகத்திலுள்ள வ்ருத்தத்துக்கு 'ஸ்ரக்தரா' என்று பெயர். ஒவ்வொரு பாதங்களும் 21-அக்ஷரங்களடங்கியது.

இந்த சுலோகத்துக்கு பதப் பிரிவு.

1. ஸாகேதத்ராணவேஷா ஜீததததிஜஹ்ராக்ஷண ஸ்ரீ வஹா ஸா, 2. ஸா ஹா, 3. த்ரூர்ரீ, 4. கடவ்ரா, 5. ஜபம்,

6. ஜடியதிவ்யாபதுச்சேதலீலா, 7. ஸாகேதத்ராணவேலாஜநிததத நிஜப்ராங்கணஸ்ரீர்பூமஸ்ரீ, 8. ஜடராவக்ஷமா, 9. ராமஸ்ய, 10. ஸம்வித், 11. ஜஹ்யாஜ்ஜதி, 12. ந, 13. ந, 14. நதிஜஸ்பர்சம், 15. உத்க்ராந்தமே, 16. ஸா.

(ப-ரை) 1. ஸாகேத - அயோத்தியினுடைய, த்ராண- காப்பாற்றுகிற, வேலா - ஸமயத்திலே, ஜநித - உண்டுபண்ணப்பட்ட, தத - விஸ்தாரமான, அதாவது அநேக ஜ்ஞாதாக்களால் நிறைந்த, நிஜ- தன்னுடைய, ப்ராங்கண-ஆஸ்தான ஸபாமண்டபத்திலே அதாவது நியாய ஸதஸ்ஸிலே, ஸ்ரீ - ஸம்பத்தினுடைய அதாவது ஜ்ஞான ஸம்பத்தினுடைய, அல்லது தங்கம் ரத்னங்கள்முதலிய உயர்ந்த வஸ்துக்களினால்உண்டான ஸம்பத்தினுடைய, பூமா-ப்ரகாசத்தையுடைத்தானதும், 2ஸா ஸா-காந்தியோடுகூடினதும், அதாவது கீர்த்தியோடுகூடினதும் (காந்தியைச் சொல்லும் சப்தம் இவ்விடம் லக்ஷணயா கீர்த்தியைக்காட்டுகிறது.) 3 பூஸ்ரீ:*-உத்க்ருஷ்டமான வேதஸம்பத்துள்ளதும் அதாவது, ஸகல வேதங்களினுடையவும் ஸாமான்ய ஜ்ஞானம்மட்டுமல்லாமல் ஸூக்ஷ்ம அர்த்தஜ்ஞானமுடையதும், 4. அடவ்யாம்-காட்டிலே, அதாவது தாடகா வனத்திலே அல்லது ஸம்ஸாரமாகிற காட்டிலே, 6. ஜடி - அஹங்கார மமகாரங்களில்லாமலிருக்கிற, யதி - ருஷிகளுடைய அல்லது யதனசிலர்களுடைய, வ்யாபத் - விசேஷமான ஆபத்துக்களை, அதாவது தாடகையால் ஏற்பட்ட ஆபத்துக்களை அல்லது உள் சத்துருக்களாலும் வெளிச் சத்துருக்களாலும் ஏற்படுகிற ஆபத்துக்களை, உச்சேதி - அடியோடு வெட்டுகிறதான, அதாவது போக்குகிறதான, லீலா - விளையாட்டைஉடையதும், (8) ஜடி பக்வத்தையடையாத, அதாவது புத்திக்குறைவினால் அசடாக உண்டாகிற, ராவ - சப்தத்தை, அதாவது வார்த்தைகளை, க்ஷமா - போக்கடிக்கிறதுமான, அதாவது கெட்ட புத்தியையும்

---

* வேதத்தில் ருக், யஜுஸ், ஸாமம் என்பதுதான் பெரியோர்களுக்கு அழியாத ஸம்பத்து என்று சொல்லியிருக்கிறது. அதின்படி இவ்விடம் 'ஸ்ரீ:' என்பது வேதஸம்பத்தைக் காட்டுகிறது.

அதினால் ஏற்படுகிற தப்பு வார்த்தைகளையும் போக்கி, நல்ல ஜ்ஞானத்தையும் அதற்கு அனுரூபமான நல்ல வாக்கையும் கொடுக்கிறதுமான, 16. ஸா - அப்படிப்பட்ட அதாவது மேற்சொன்ன ஆத்மகுணங்களால் பிரஸித்தமான, இயம் - இந்த (ராமரூபியான ஸ்ரீரங்கநாதனுடைய) பாதுகையானது, 7. ஸாலாளி அதாவது ஸாராளி ('ர' காரத்தும் "ல" காரத்துக்கும் அபேதம் வழக்கமானதால் இவ்விடம் மூலத்தில் "ர" வுக்குப் பதிலாக "ல" என்பது ஸெள கரியத்திற்காகப் போடப்பட்டிருக்கிறது) பலம் முதலானதுகளுடைய (இவிடம் முதலானது என்பதில் வில்லும் அடங்கியது) வெஷ்டி - வெட்டு வதிலே அதாவது துலைப்பதிலே, தீவ்ர - தீக்ஷணமான, ருஷய - யுத்தத்திலுள்ளதான, ரவ - சப்தத்திலே (அதாவது இவ்விடம் பகவானால் செய்யப்பட்ட 'ஹுங்காரம்' என்கிற சப்தத்தைச் சொல்கிறது) ரமாரம - மானே, வஹ - வஹிக்கிறவனை ருத்ர னுக்கு, ஹ்ரீ - வெட்கத்தை, கரஸு - உண்டுபண்ணுகிறவராயிருக்கிற * 9. ராமஸு - விஷ்ணுரூபியான ராமனுடைய, 15. * உதாதகெ - வணக்கத்தைக்கண்டு அப்போ பாவம் என்கிற அனுக்ரோசத்தினால் விசேஷமாக ரக்ஷிக்கத் தகுந்தவர்கள் விஷயத்திலே, 14. நதி - வணக்கத்திலே, (அதாவது வணக்கத்தைக்கண்டு இந்த மட்டும் வணங்கிற்றே என்கிற ஸந்தோஷத்தாலே, அல்லது எதிரியை ஜெயித்து வணங்கப் பண்ண ஸந்தோஷத்தாலே என்று தாத்பர்யம், ஆனால் இவ்விடம் முதல் சொன்ன அர்த்தமே விசேஷம்.) ஜ - உண்டாயிருக்கிற, ஷுபிஜம் - பெருத்தலை உடைத்தாயிருக்கிற,

* ஸ்ரீமத்ராமாயணத்தில் ஸ்ரீராமனுக்கு பரசுராமனால் சொல்லப்பட்ட ருத்ரகர்வபங்கம் இவ்விடம் காட்டப்படுகிறது. இதுவிஷயம் ப்ரகீர்ண பத்ததி 72வது (902வது) சுலோக வ்யாக்யானத்தில் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது.

*இந்த பதத்தில் 'க' என்கிற 'கு' வ்யுத்பத்தி கஷ்டகம் தெவயைக்காட்டுகிறது. 'உக' என்பது உத்கர்ஷத்தைச் சொல்லுகிறது. ஆகையால் இப்படி அர்த்தமாகிறது.

(10) ஸம்ஸ்ரீம் - திருவடியை, (11, 12, 13) நாஹ்யாஜதிந - (ரக்ஷணத்தின் பொருட்டு) ஏவுகிறதில்லை என்பதில்லை. அதாவது ரக்ஷிக்கவேணுமென்று அவசியம் ஏவவே ஏவுகிறது என்று இந்த சுலோகத்துக்கு 934-வது சுலோகத்தோடு தாத்பர்யத்தினால் ஸம்பந்தம்.

(கருத்து) மூந்திய 934-வது சுலோகத்தில் பாதுகையானது பகவானுடைய பரம நிக்ரஹத்துக்குப்பாத்ரனான எப்படிப்பட்ட பாபியையும் ஒரு வ்யாஜமாத்திரத்தைக்கொண்டு தன்னுடைய புருஷகாரபலத்தாலே பகவதனுக்ரஹத்தை ஸம்பாதித்துக் காப்பாற்றிவிடுகிறது என்று சொல்லப்பட்டது. அதின்மேல் ஆனுஷங்கிகமாக வந்த அதினுடைய வாத்ஸல்யத்தையும், பகவானோடு ஸததயோகத்தையும், ஆச்ரித ஸம்ரக்ஷணத்துக்கு உதாஹரணமாக பூர்வம் நடந்த விசுவாமித்ர யாக ஸம்ரக்ஷணம் முதலான உபகாரங்களையும், அப்படிப்பட்ட ரக்ஷண விஷயத்தில் அதற்குள்ள ஸாமர்த்யம் முதலானதுகளையும், அதற்கேற்பட்ட அப்படிப்பட்ட பிரபாவத்துக்குக் காரணம் பகவத் ஸம்பந்தம் என்பதையும், அந்த ஸம்பந்தத்தால் அது அடைந்திருக்கிற பகவத்குணங்களையும் சொல்லி மறுபடியும் பூர்வம் ப்ரஸ்துதமான மகா பாபிகளுடைய ஸம்ரக்ஷண விஷயத்தையே தொடர்ந்து பேசுகிறார். ஸ்ரீபாதுகைக்கு அதுமாதிரி எப்படிப்பட்ட மஹாபாபிகளையும் ரக்ஷிப்பதேதான் ஸ்வபாவமோ. அப்படிப்பட்ட ஸ்வபாவம் அதற்கு உண்மையிலுண்டானால் உலகத்தில் எவ்வளவோ பாபிகள் ரக்ஷிக்கப்படாமல் இருக்கிறார்களே. சிலரை மட்டும் ரக்ஷிப்பது சிலரை ரக்ஷிக்காமலிருப்பதுஎன்றால்வைஷம்யம்(பக்ஷபாதம்)நைர்க்ருண்யம்(தயையில்லாமை)இவைகளாகிற தோஷங்கள் அதற்கு ஏற்படாதோவென்றால் சொல்கிறேன். அதற்கு யாரையும் ரக்ஷிப்பதேதான் ஸ்வபாவம். ஆனால் வைஷம்ய நைர்க்ருண்யதோஷங்களும் ஸர்வ முக்தி ப்ரஸங்கமும் (ஒரே காலத்தில் உலகத்துக்கெல்லாம் முக்தி கொடுத்து லீலா விபூதியை அழிப்பது) வாராமைக்காக பூர்வம் எவ்வளவு மஹாபாபியாக இருந்தாலும் ஒரு ஸமயம் வணங்கி நான் புத்தியில்லாமல் அநாதி காலமாகக் கெட்டுப்போய்விட்டேன்; தயவு பண்ணி இப்போது என்னை மன்னித்து ரக்ஷிக்க வேணுமென்று கெஞ்சிக்

கேட்கிறவர்களை முன் குற்றங்களைப் பாராமல் ரக்ஷிப்பது என்கிற ஏற்பாட்டை வைத்துக்கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட வ்யாஜம்யாரிடத்தில் சேர்ந்தாலும் ரக்ஷித்துவிடும். இல்லாவிட்டால் இல்லை. ஆகையால் ப்ரக்ருதமான ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதியில் வந்த மஹா பாபி விஷயத்தில்போல் பகவானோடு சேர்ந்திருக்கும் காலத்திலும், பகவானைப் பிரிந்திருக்கும் காலத்திலும் தானும் அப்படியே அனுஷ்டித்து பகவானையும் அப்படியே அனுஷ்டிக்கும்படி ஏவுகிறது. பகவானோடு சேர்ந்திருக்கும்போது முன்னொரு காலத்தில் ருத்ரன் தான் பகவானுக்கு ஸமன் என்கிற அஹங்காரத்தினால் பகவானை எதிர்த்து சண்டை போட்டான். அப்போது யுத்தகளத்தில் பகவான் ஒரு பயங்கரமான 'ஹூம்' என்கிற சப்தத்தினாலேயே அவனுடைய தேகபலம் அஹங்காரபலம் வில்பலம் முதலியவற்றை எல்லாம்தொலைத்து எல்லாவற்றையும் கலைத்துப் போம்படி செய்து விட்டார். அப்படித் தோல்வியடைந்த பிறகும் அஹங்காரத்தினால் ஆக்ரஹத்தையே கைக்கொள்ளாமல் வணங்கி மன்னிப்பை ப்ரார்த்தித்தான். அப்படி அவனுக்கு நற்புத்தி உண்டாய் வணக்கம் வந்ததைக் கண்டு இந்த மட்டும் இப்போதாவது வணக்கம் உண்டாச்சுதே என்று பகவானுக்கு ஸந்தோஷமுண்டாய் அதனால் திருமேனியெல்லாம் பூரித்து விட்டது. அவனுடைய பூர்வாபராதத்தை கவனியாமல் பூர்ண க்ருபை பண்ணி ரக்ஷித்து விட்டார். (ஸ்ரீராமாவதாரகாலத்தில் பரசுராமன் பகவானை த்வந்த்வ யுத்தத்துக்கு அழைத்து பகவானால் தன்னுடைய பலமெல்லாம் ஆகர்ஷிக்கப்பட்டு பராஜயத்தை அடைந்து மேற்சொன்ன வ்ருத்தாந்தத்தை அவரிடம் சொல்லி "நீ அப்படிப்பட்ட ஸர்வேச்வரன் என்று அறிந்தேன் என்னை ரக்ஷிக்கவேணு"மென்று வணங்கினவாறே அவரை ரக்ஷித்தார்.) இப்படிப்பட்ட ரக்ஷண ஸந்தர்ப்பங்களிலெல்லாம் பாதுகையே அவரை ரக்ஷண விஷயத்தில் ஏவிற்று. பகவானைப் பிரிந்திருக்கும் ஸமயத்தில் செய்ததாவது: ஸ்ரீராகவன் காட்டுக்குச் சென்றபோது ப்ரஜைகளுடையவும் ஸ்ரீபரதாழ்வானுடையவும் கஷ்டத்தையும் பிரார்த்தனையையும் பார்த்து ராஜ்யத்திலிருந்து ரக்ஷிக்கவேண்டியதாயிற்று. தன்னுடைய பித்ரு வசன பரிபாலனமாகிற ஸத்ய வ்ருதத்தை யோஜித்து 14 வருஷ காலம் ஆரண்ய வாஸம் பண்ணுவதே

அவச்யமாயிற்று. ஸ்ரீராமனுக்கு இப்படிப்பட்ட தர்ம ஸங்கடம் நேர்ந்த ஸமயத்தில் ஸ்ரீ பாதுகையானது காட்டிலிருந்து சரணாகதஸம்ரக்ஷண தர்மத்தை அனுஷ்டிப்பதை ஸ்ரீராமனுக்கும், நாட்டிலிருந்து சரணாகத ஸம்ரக்ஷணம் பண்ணுவதை தனக்குமாக விபாகம் பண்ணிக்கொண்டதுபோல் சரணாகத ரக்ஷணத்துக்காக பகவானை காட்டிற்கே அனுப்பி தான் பரதாழ்வானுடன் நாட்டிற்குத் திரும்பிற்று ஸ்ரீ பகவானும் பாதுகையினுடைய ஏவுதல்படியே * காட்டிலிருந்துகொண்டு வணங்காத அபராதிகளான கரதூஷண ராவண கும்பகர்ண ப்ரப்ருதிகளான துஷ்ட ராக்ஷஸர்களையும் வாலி என்கிற வானர ராஜனையும் நிரஸித்து, வணங்கினவர்களான காகாஸுரனையும், ஸுக்ரீவ மகாராஜனையும், ஸ்ரீவிபீஷணாழ்வானையும், ஸமுத்ர ராஜனையும், மஹர்ஷிகளையும், காப்பாற்றி, சரணாகத ஸம்ரக்ஷண தர்மத்தை பரிபாலித்தார். பாதுகையானது ராஜராஜேச்வரியாய் அயோத்யா நகரத்தில் தன்னுடைய திவ்ய ஆஸ்தான ஸபா மண்டபத்தில் ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்து, மிகவும் ஜ்ஞானவான்களான அநேகம் மகர்ஷிகளாலும் மந்திரிமார்களாலும் சூழப்பட்டு, ஜ்ஞானத்தினாலும் குணத்தினாலும் விசேஷ கீர்த்தியுள்ளதாய், ஸகல வேதங்களுடையவும் ஸூக்ஷ்ம தத்வார்த்த ஜ்ஞானப்ரகாச விசேஷமுடையதாய், பலவிதமாய் மிகவும் அபராதிகளானவர்கள் தன்னிடத்தில் ரக்ஷணத்தை வந்து வேண்டும்போது, ஸ்ரீபகவான் வானர முதலிகள் மத்தியில் ஸாமான்ய ந்யாய புத்தியால் ஏற்பட்ட ஆக்ஷேபங்களை விலக்கி ஸர்வசாஸ்திரஸாரமான சரணாகத ஸம்ரக்ஷணமான ஸூக்ஷ்ம தர்மத்தை வெளியிட்டு ஸ்ரீவிபீஷணாழ்வானைக் காப்பாற்றினது போல், தன் ஸபையிலுள்ள சில சாஸ்திரவித்துக்கள் இந்த பாபத்துக்கு பிராயச்சித்தம் கிடையாது என்று தர்மசாஸ்திரங்களைப் படித்து அபராதியை நிக்ரஹிக்க இச்சிக்கும்போது, எல்லாவற்றிலும் ஸூக்ஷ்மமாய் ஸர்வசாஸ்திர ஸாரமான சரணாகதஸம்ரக்ஷண தர்மத்தை தத்வவித்துக்களான வஸிஷ்

* கிஷ்கிந்தாகாண்டத்தில் வாலியுடன் ஸம்வாதத்தில் ஸ்ரீராமன் பூமியெல்லாம் பரதனுடைய ஆஜ்ஞைக்குள்பட்டதென்றும் பரதனுடைய ஆஜ்ஞையால்தான் வனப்ரதேசத்தை ரக்ஷிப்பதாகவும் சொல்கிறார். பரதனுக்கும் ராஜா பாதுகையானதால் பரதாஜ்ஞை பாதுகாஜ்ஞையாக ஆகிறது.

டாதிகள் உகக்கும்படி உலகத்துக்கு வெளியிட்டு ஆச்ரிதர்களை ரக்ஷித்துக்கொண்டும், ஸம்ஸாரமாகிற காட்டிலே பாஹ்யசத்ருக்களும் ஆந்தரசத்ருக்களுமாகிற பல சத்ருக்கள் மத்தியில் மனோஜயம் முதலியதை அப்யஸித்துக்கொண்டு ஆத்ம க்ஷேமத்தைத் தேடுகிற யத்னவான்களுக்கு நேரிடுகிற பலவித ஆபத்துக்களை அனாயாஸமாய்ப் போக்கிக்கொண்டும், ஜனங்களுக்கு அஜ்ஞானத்தால் ஏற்படுகிற தப்பு வார்த்தைகள் முதலானவைகளைப் போக்கி நல்ல ஜ்ஞானத்தையும் அதற்கு அநுரூபமான நல்வாக்கு முதலானதுகளையும் கொடுத்துக் கொண்டும் ஸ்ரீபராசர்வாரைக் கொண்டு எல்லா காரியங்களையும் நடத்திற்று. இப்படி ஸர்வாவஸ்தைகளிலும் இந்த ஸம்ஸாரத்திலுள்ள ஸகல பாபிகளையும் அல்ப வ்யாஜமாத்திரத்தைக்கொண்டு ரக்ஷிக்கிற விஷயத்தில் ஸ்ரீபகவானுடைய திருவடிகளை ஏவிக்கொண்டே இருந்து ரக்ஷணத்தை நடத்துகிறது. இப்படிப்பட்ட ஸ்வபாவமுடையதாய் தன்னுடைய புருஷகாரத்வகாஷ்டையையும் (எப்படிப்பட்ட பாபிகள் விஷயத்திலும் அல்ப வ்யாஜத்தைக்கொண்டு ரக்ஷிக்கும்படி சிபார்சு செய்வது) ரக்ஷ்ய வஸ்துக்களுடைய அதிகார காஷ்டையையும் (தத்வவித்துக்களாய் ஸாங்கபரஸமர்ப்பணம் பண்ணத் தகுந்த அதிகாரிகளாக இல்லாமல் போனாலும் வலுவில் ரக்ஷிக்க யத்தனிக்கும்போதாவது என்னை ரக்ஷிக்கவேண்டியதில்லை என்று தடுக்காமல் ரக்ஷணத்தை ஒப்புக்கொள்ளும்படியாவது இருப்பது) ப்ரக்ருதமான காஷ்டா ப்ராப்த அதிகாரி விஷயத்தில் ஸ்ரீரங்கநாதனை ரக்ஷிக்கும்படி ஏவுவதால் உலகத்துக்கு வெளியிடுகிறது. இந்த ஆச்சரியமான உண்மையையறிந்து ஸம்ஸாரிகள் அதை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்க வேண்டாமோ என்று அதினுடைய புருஷகாரத்வகாஷ்டையை ஆச்சரியத்துடன் கொண்டாடுகிறார்.

ஸதாசார்யர்களும் அப்படியே பாபிகளுடைய ரக்ஷண விஷயத்தில் பகவானை ஏவாமலிருப்பதில்லை. அவர்களேதான் தர்ம ஸூக்ஷ்மஜ்ஞானமுடையவர்கள்; ஸர்வ வேதங்களுடையவும் உட்கருத்தை அறிந்தவர்கள். ஜ்ஞானவான்களுடைய மத்தியில் விசேஷமாக ப்ரகாசிக்கிறவர்கள்; எப்படிப்பட்ட பாபிகளானாலும் அனுதாபத்துடன் காலில் வந்து விழுந்து ரக்ஷிக்கவேணுமென்று

பிரார்த்தித்துவிட்டால் ஸாமான்ய சாஸ்திர ஜ்ஞானமுடையவர்கள் அவர்களுக்கு ப்ராயச்சித்தம் தர்ம சாஸ்திரப்படி கிடையாதென்று விதித்து 'ப்ராயச்சித்தம் நஸம்ஸ்ரிஷ்டே' என்றால் நதஸ்ய ஸந்த்யஜ்யதே என்று சொல்லி சரணாகத சாஸ்திர ஸூக்ஷ்ம தத்வார்த்தத்தை வெளியிட்டு சாஸ்திரவிதியைக்கொண்டும் பகவத்ப்ரபத்தியினாலும் அவர்களுடைய ஸ்வாத்ம சுத்திக்கும், ஆத்மக்ஷேமத்துக்கும் குறைவில்லாமல் படி ரக்ஷித்து விடுகிறவர்கள். இந்த ஸம்ஸாரமாகிற காட்டிலே பாஹ்யாந்தர சத்துருக்களாலே பிடிக்கப்பட்டு முமுக்ஷுக்களாய் யத்தனிப்பவர்களுக்கு அவர்களுடைய ஆபத்துக்களையெல்லாம் பகவானைக்கொண்டு அநாயாஸமாகப் போக்கிக்காப்பாற்றுகிறவர்கள். அஜ்ஞானத்தையும் அதின் மூலமான ஸம்ஸார ஸம்பந்தமான தப்பு வார்த்தைகள் முதலானவைகளை ஆச்ரிதர்களுக்குப் போக்கி ஜ்ஞானத்தையும் ஆத்ம பரமாத்பரமான வாக்கு முதலானதுகளையும் உண்டுபண்ணுகிறவர்கள். இப்படி தங்களுடைய புருஷகாரத்வ காஷ்டையினுடையவும் ரக்ஷபர்களான ஜீவராசிகளுடைய அதிகாரகாஷ்டையினுடையவும் உண்மையை உலகத்துக்கு வெளியிட்டு ரக்ஷித்து அதனால் விசேஷ கீர்த்தியுள்ளவர்களாக இருப்பவர்கள் என்பதும் ஸூசிதம்.

இப்படிப் பிரித்து வ்யக்தமாகக் காட்டிய விசேஷார்த்தங்களெல்லாம் பாதுகையின் ஆத்மகுணங்களைப்புகழுகிறதும் சரணாகதி சாஸ்திரத்தின் உண்மைகளைப் பேசுகிறதுமாகிற ஸந்தர்ப்பத்துக்கும்தீர்மானமான சாஸ்திரார்த்தங்களுக்கும் ஒத்தனவாய் சுலோகபதங்களால் ஸூக்ஷ்மமாகக் காட்டப்பட்டிருக்கின்றன.

(௨௪௧) ரத்னேஷ்வபி ப்ரபராக்ஷஸஹிதாஸ்வாஸத்த்வயீ
நாயிகா நந்தம் கஹ்ஜஜஹஹாயுஸயியாம் ஸா
ஸம்ஸே நாயீக்ருதா । ஸஞ்சாரஸ்ஸிகாஸு தா
பஸதபொவிஷ்டம் ஹஹ ஸ்யந்தி கா காவிச
வேஷ்ர மகேந கேஹிஸஸயே காஸ்யதா பா
துகா ॥

(௩௧)

இதில் 6 குத்துக்கால்கள் உள்ள சக்ரபந்தம் என்றும் கவியினுடையவும் காவ்யத்தினுடையவும் பெயரை உட்கொண்டிருக்கிற மஹாசக்ரபந்தம் என்றும் பெயருள்ள பந்தம் உள்ளது. இதில் 2 குத்துக்கால்களால் ஏற்படுகிற ஒவ்வொரு வீதியிலும் ஒவ்வொரு பாதமாக ப்ரதக்ஷிணக்ரமத்தில் 3 பாதங்களும் 3-வது பாதத்தின் கடைசி அக்ஷரத்திலிருந்து ஆரம்பித்து ப்ரதக்ஷிணமாக (வட்டையாகிற) கடைசியான வெளிமண்டலத்தில் 4-வது பாதமும் எழுதப்பட்டிருக்கிறது. குடத்திலுள்ள 'ஸ' என்கிற அக்ஷரம் முதல் 3 பாதங்களிலும் 10-வது அக்ஷரமாய் 3-க்கும் பொதுவாயுள்ளது. 3 பாதங்களினுடையவும் ஆத்யந்தாக்ஷரங்கள் 4-வது பாதத்திலுமுள்ளதாய் 1,2,3 பாதங்களுக்கும் 4-வது பாதத்திற்கும் பொதுவானது. இந்த சக்ரத்திலுள்ள 9 மண்டலாகாரமான வீதிகளில் வெளிமுதல் 3 வது 6-வது வீதிகளிலிருந்து 'வேங்கடநாதீய பாதுகாஸஹஸ்ரம்' என்கிற கவியினுடையவும் காவ்யத்தினுடையவும் பெயர்களை எடுத்து வாசிக்கலாம்.

இதிலுள்ள விருத்தத்துக்கு 'ஶார்தூலவிக்ரீடிதம்' என்று பெயர். ஒவ்வொரு பாதத்திற்கும் 19 அக்ஷரங்கள் உள்ளது.

(பதவுரை) கேலிஸமயே - விளையாட்டுஸமயத்திலே அதாவது விளையாட்டுக்காக வெளியில் ஸஞ்சரிக்கிற காலங்களிலே, ஸ்வைரம் ஸதா - தன்னிஷ்டப்படி எங்கும் எந்தஸமயத்திலும் எத்தனை தடவையானாலும் ஸஞ்சரிப்பதனாலே, காம்யம் - தனக்கு மிகவும் இஷ்டமான * வ்ரதத்தை, அதாவது லோகரக்ஷணமாகிற த்ருடவ்ரதத்தை உடையதும், பாடம் - மிகவும் பாபிகளான, ரக்ஷஸாம்-ராக்ஷஸர்களுடைய, ஹிம்ஸா-நாசவிஷயத்தில்,

---

* தனக்கு மிகவும் அபிமதமான லோகரக்ஷணமாகிற விருதத்தை நிறைவேற்றுவதற்காகவே விளையாட்டு என்கிற வியாஜத்தை வைத்து ஆச்ரிதர்களைத் தேடியும், அவர்களுடைய விரோதிகளைத் துலைப்பதற்காகவும், பகவானை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு தன் இஷ்டப்படிக்கெல்லாம் எங்கும் ஸஞ்சரிக்கும் ஸ்வபாவமுள்ளதும் என்று பலிதார்த்தம்.

ஸோத்ஸாஹ - மிகவும் ஊக்கமுள்ள, தீ-புத்தியையுடையவரை அதாவது பகவானை, நாயிகா-*அழைத்துப்போவதும், ஸாது-ஸாதுக்களான ருஷிகளுடைய, வாட-ஆச்ரமங்கள் நிறைந்த பிரதேசங்களில், ஸந்திகாஸு - சுற்றும் காலங்களில், தாபஸ-தபஸ்விகளுடைய, தபோவிஸ்ரம்ஸ - தபஸ்ஸில் ஏகாக்ரசித்தத்தை, ஸூதே - உண்டுபண்ணுகிற, யந்த்ரிகா - (பூமியில் படிந்த) தன் ரேகைகளை * உடைத்தானதுமான ஸா - அந்த, காபி - மனதுக்கும் வாக்குக்கும் எட்டாத ஆச்சரியஸ்வபாவமுள்ள, அதாவது ஆச்சரியமான லோக ரக்ஷணவ்ரதத்தையும் யதேச்சாஸஞ்சாரத்தையும் ஸ்வபாவமாக உள்ள, பாதுகா - பாதுகையானது, கர்ம - துஷ்கர்மங்களாலே, ஜ - உண்டாயிருக்கிற, துர்மத - கெட்ட மதத்தினாலே, அதாவது தனமதம் வித்யாமதம் ஆபிஜாத்யமதம் (நான் உயர்ந்த குலத்தில் பிறந்தவன் என்று உண்டாகும் கொழுப்பு) முதலிய கெட்ட திமிரினாலே, அலஸ-நினைக்கவேண்டியவிஷயத்திலும் செய்யவேண்டிய காரியத்திலும் சோம்பலால் செல்லாததான, தியாம் - புத்தியையுடையவர்களுக்கு, நதாம் - ஸேவிப்பதற்காக, அதாவது எவ்விதமாகவாவது கண்ணால் பார்த்து

---

* அதாவது மேற்சொன்ன காரணத்தால் துஷ்டராக்ஷஸர்களைத் துலைப்பதற்காக அதுவிஷயத்தில் ஊக்கமுள்ள ஸ்ரீராமனை ராக்ஷஸர்களை ஸந்திக்கக்கூடிய ஸித்தாசிரமம் முதலிய இடங்களுக்கு அழைத்துப்போவதான என்று அர்த்தம்.

* அதாவது பூமியில் படிந்த பாதுகாரேகைகளைக் கண்டு ராக்ஷஸர்கள் இவ்விடம் ராமஸஞ்சாரமுடைய இடமென்று அறிந்து பயந்து அண்டமாட்டார்கள் என்கிற நம்பிக்கையால் தபஸ் ஒன்றிலேயே முழுமனதையும் செலுத்தும்படி ஆசிரமப்ரதேசங்களில் தன்னுடைய யதேச்சாஸஞ்சாரத்தாலுண்டான தன் அடையாளங்களை விசேஷமாக உண்டுபண்ணுகிறதான என்று அர்த்தம்.

வணங்கி க்ஷேமத்தையடையும்பொருட்டு, ரம்யே - அழகான, வேஶ்மநி - ஸ்ரீரங்கவிமானத்தில், நாயிக்ருதா - எஜமானியாகப் பண்ணப்பட்டிருக்கிறது,* ஹந்த - இது என்ன ஆச்சரியம், அதாவது இது என்ன பாதுகைக்குள்ள ஸ்வாதந்தரியம்; இது என்ன பகவத்குணம்; இது என்ன மஹாபாபிகளுக்கு நேர்ந்த பாக்யம் என்பது.

(கருத்து) ஆனால் முன்சொன்னபடி பாதுகைக்கு காஷ்டா ப்ராப்த புருஷகாரஸ்வபாவம் உண்டானாலும், பெரிய பாபிகள் விஷயத்தில் புருஷகாரத்தை மட்டும் செய்யலாமே ஒழிய அப்படியே எல்லாரையும் நிச்சயமாகக் காப்பாற்றிவிடமுடியுமோ? அது பகவானுக்கு பாதந்திரமான வஸ்துவன்றோ ? பகவானும் இசைந்தால்தானே ரக்ஷணம் ஸித்திக்கும் என்றால் சொல்லுகிறார். எந்தப் பாதுகையானது தன்னை ஆச்ரயித்த யாரையும் அவசியம் ரக்ஷிப்பது என்பதை தனக்கு மிகவும் அபிமதமான விருதமாகக் கைக்கொண்டு அதை நிறைவேற்றும்பொருட்டு லீலாஸஞ்சாரம் என்கிற வியாஜத்தினால் ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்கும் அவர்களுடைய விரோதிகளைப் போக்குவதற்கும் யதேச்சமாக எங்கும் ஸஞ்சரிக்கும் ஸ்வபாவமுள்ளதாக இருக்கிறதோ, அப்படியே ஆச்ரிதவிரோதிநிரஸனைக ஸ்வபாவனான ஸ்ரீராமனை ஸித்தாசிரமம் முதலிய இடங்களுக்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோய் தாடகா, ஸுபாஹு, மாரீசப்ரப்ருதிகளைத் துலைத்ததோ, சித்ரகூடம் முதலிய இடங்களில் ராக்ஷஸர்களுக்கு பயங்கரமான தன்னுடைய அடையாளங்களை ருஷிகளுடைய ஆச்ரமப்ரதேசங்களில் தன்னுடைய ஸஞ்சாரத்தால் பதியவைத்து அவ்வடையாளங்களால்

---

* அதாவது ஸ்ரீரங்கநாதன் ஸ்வபாவத்தில் எப்படிப்பட்ட பாபிகளையும் ரக்ஷிப்பதிலேயே ஊக்கமுள்ள பாதுகையை அந்த ரக்ஷணவிஷயத்தில் இன்னொருவருடைய கைபார்த்திராமல் ஸ்வதந்திரமாக தானே ரக்ஷிக்கும்படியான யஜமானித்வமுள்ளதாகச் செய்து தானும் இதுவிஷயத்தில் அதின் இஷ்டத்தையெல்லாம் அங்கீகரிக்கும்படி அதற்கு பாதந்திரமாகவே எழுந்தருளியிருக்கிறார், என்று தாத்பர்யம்.

அந்த ருஷிகளுக்கும் ராக்ஷஸர்கள் இதைக் கண்டு அண்டமாட்டார்கள் என்கிற நம்பிக்கையை உண்டுபண்ணி தபஸ்ஸில் ஏகாக்ரசித்தமுள்ளவர்களாகச் செய்ததோ, அப்படிப்பட்ட துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனஸ்வபாவமுள்ள பாதுகையை பகவான் ஜன்மாந்திரதுஷ்கர்மங்களால் தனமதம் வித்யாமதம் ஆபிஜாத்யமதம் முதலிய மதங்கள் பிடித்து ஆத்மக்ஷேமார்த்தமாகச் செய்யவேண்டியவற்றிலும் நினைக்கவேண்டியவற்றிலும் புத்தியைச் செலுத்தாமல் திமிரினால் விபரீதமாக நடப்பவர்களுங்கூட ஏதாவது ஒரு ஸமயத்தில் எவ்விதமாகவாவது பாதுகையை ஸேவித்து எப்படியாவது க்ஷேமத்தை அடைந்து விடட்டுமென்று பரம தயையால் அது நினைத்தபடி ஆச்ரிதர்களை ரக்ஷிக்கும்பொருட்டு தனக்குங்கூட பாதந்திரமில்லாமல் ஸர்வஸ்வதந்திரத்துடன் அழகியதான ஸ்ரீரங்கவிமானத்தில் யஜமானியாக்கி தானும் அதற்கு அதீநமாகவே இருந்துவருகிறார். இது என்ன பகவத்குணம்; பாதுகைக்கு எவ்வளவு ஸ்வாதந்த்ரியம். பரம பாபிகளுக்குங்கூட நேர்ந்த இதென்ன பாக்யம் என்று நினைத்து ஆச்சரியப்படுகிறார்.

ஸதாசார்யர்களும் அப்படியே ஆச்ரித ரக்ஷணவிஷயத்தில் திருடவ்ரதர்களாய் அதுவிஷயமான ப்ரவிருத்திகளையே தங்களுக்கு போக்யமான வ்யாபாரமாகக்கொண்டு ஸம்ஸாரிகளுடைய பாபங்களாகிற ராக்ஷஸர்களைத் துலைப்பதின்பொருட்டு அதில் தானே ஊக்கமுடைய பகவானைத் தூண்டுகிறார்கள். ஸாதுக்களான ஆச்ரிதர்கள் வஸிக்கும் அக்ரஹாரங்களுக்கு அடிக்கடிச் சென்று, தங்களுடைய ஸாந்நித்யத்தாலும் உபதேசத்தாலும் தங்களால் ஏற்படுத்தப்பட்ட அனுஷ்டானம் முதலியதிலுள்ள சீர்திருத்தங்களினாலும் அஜ்ஞானமும் அதனால் உண்டாகிற காமக்ரோதாதிகளுமான உள் சத்துருக்களையும் துலைத்து, புத்தியைக் கெடுத்து அஸந்மார்க்கத்தில் மூட்டுகிற குமதிகள் இனி இவ்விடம் நம்முடைய பிரயத்தனம் பலிக்காது நமக்கும் ஆபத்து வரும் என்று அஞ்சி ஓடிப்போகும்படிக்கும் செய்கிறார்கள். அப்படிப்பட்ட சீலமுடைய ஸதாசார்யர்களை ஜன்மாந்திரகர்மவசத்தால் துர்மதம் பிடித்து ஸன்மார்க்கத்தில் ப்ரவிருத்தியில்லாத பாபிகளும் எவ்விதமாகவாவது ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கட்டும் என்கிற பரமதயையால் பகவான் ஸ்ரீரங்காதி

திவ்ய தேசங்களில் ஸர்வ ஸ்வாதந்தர்யத்துடன் தனக்கும் எஜமானனைப்போல் ஏற்படுத்தி அவர்களிடத்தில் தான் பாரதந்திரியத்தை வஹித்துக்கொண்டு அவர்களுடைய புருஷகாரத்தை எந்த பாபிகள் விஷயத்திலும் அங்கீகரிக்கிறார். இப்படிப்பட்ட பாக்கியம் நேர்ந்திருப்பதால் எந்தப் பாபிகளும் அவர்களையாச்ரயித்து உஜ்ஜீவித்துவிடலாம் என்கிற ஆசார்யர்களுடைய ரக்ஷணஸ்வாதந்திரியமும் இதில் ஸூசிதம். (31)

(௯௪௨) ஸ்ரீஸம்வேதநகம்ஸக்ருத்ஸம்ஸ்தவஸத்யாத்மஜயே
யஸ்ய ஸம்பத் ஸ்ரீபாதுகாவநி விஸ்ருதாஹிஸம்விநீ
க்ஷம் தேயயாதாயதா । வேதாந்தாம்ஸாவாதி
வாதிஸம்தநஸம்ஸேஹ்யா ஹாவத்ஸவேதஜ்ஞ
ஸ்யாவாவ்யத்விப்யாஸ்யஸம்ததி:ப்ராணஸ்ய ஸீ
தாயதா ॥ (௩௨)

இதற்கு 'சதுரங்கஷோடசாரசக்ரம்' அதாவது எட்டு குத்துக்கால்கள் உடையதாய் கவியினுடைய நான்கு பிருதுகளை (அடையாளங்களை ஸம்ஜ்ஞம்)க் காட்டக்கூடியதான சக்ரம் என்று பெயர். இதில் சுலோகத்தினுடைய 4-பாதங்களையும் சக்ரத்தின் இரண்டு இரண்டு குத்துக்கால்களால் ஏற்படுகிற 4 வீதிகளில் ப்ரதக்ஷிணக்ரமமாக எழுதியிருக்கிறது. இந்த சக்ரத்திலிருந்து சுலோகத்தின் 4-பாதங்களையும் சேர்ந்த 1வது மண்டலவீதியிலுள்ள 8-அக்ஷரங்களால் கீழ்க்கண்ட சுலோகத்தின் முதல் பாதமும், 3-வது மண்டலவீதியிலுள்ள 8-அக்ஷரங்களால் இரண்டாவது பாதமும், 6-வது மண்டலவீதியிலுள்ள 8-அக்ஷரங்களால் மூன்றாவது பாதமும், 8-வது வீதியிலுள்ள 8-அக்ஷரங்களால் நான்காவது பாதமும் எடுக்கக்கூடியதாக இருக்கிறது. இப்படி இந்த பந்தத்திலிருந்து எடுக்கப்பட்ட சுலோகம் என்னவென்றால்:—

ஸ்ரீஸ்ரீவேங்கடநாதேந வேதாந்தாசார்யதாவதா ।
கவிதார்கிகஸிம்ஹேந க்ருதா பாதாவநீ ஸ்துதி: ॥

இந்த சுலோகத்தால் கவியைப் பற்றின நான்கு பிருதுகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அதாவது

(1) ஸ்ரீஸ்ரீவேங்கடநாதேந — ஸ்ரீவேங்கடநாதன் என்கிற பெயருடையவரான

(2) வேதாந்தாசார்யதயா — வேதாந்தவிஷயங்களுக்கு ஆசார்யராக இருப்பதை ஸ்வரூபமாக உடையவரான

(3) கவிவாதிஸிம்ஹேந — கவிகளுக்குள்ளும் வாதிக்கிறவர்களுக்குள்ளும் ஸிம்மம்போலிருக்கும் குணமுடையவரான கவியினாலே

(4) க்ருதா பாதுகா நுதி:—பாதுகையினுடைய ஸ்தோத்திரம் செய்யப்பட்டது; செய்யப்பட்ட ஸ்தோத்திரம் உடையவர்(அதாவது பாதுகையைப்பற்றினென்கிற அவருடைய வேலை.)

இப்படி கவியைப்பற்றின நாம, ஸ்வரூப, குண, க்ருத்யங்களை இந்த பந்தம் ப்ரகாசப்படுத்துகிறது.

முன் சுலோகத்தைப்போல இதிலும் 'சார்தூலவிக்ரீடிதம்' என்கிற விருத்தம்.

(ப-ரை) ஸ்ரீ - ஸாதுக்களுக்கு ஸம்பத்தாக இருக்கிற வேதத்தினுடைய, ஸம்வேத - அறிவை உடைத்தாயிருக்கிற அதாவது வேதங்களில் சொல்லியதான, கர்ம - ஸத்கர்மங்களை, க்ருத் - செய்கிறவர்களுக்கு, வஸு - தனமாக இருப்பவளே! ஸாத்ரு - அதிகமாக, ஸம்ஸ்துத - ஸ்துதிக்கப்படும் தன்மையை உடைத்தாயிருப்பதினாலே, ஸ்ரீ - பிரஸித்தியை உடைத்தாயிருப்பவளே !, ப்ராணஸு - பிராணன்போலிருக்கிற, அதாவது ஸ்ரீராமனுக்கு உயிர்நிலையாக இருக்கிற, ஸீதா-ஸீதாப்பிராட்டிக்கு, த்ந - தனமாக (அதாவது பெரிய தனம் போல் விரும்பி அடையத்தகுந்ததாக அதாவது ஸர்வஸ்வமாக) இருப்பவளே ! ஹே ஸ்ரீபாதுகே - ஓ பெருமாளுடைய பாதுகையே ! த்வம் - நீ, ஜய - பாடத்தகுந்ததான, யாதாயநா - (யாத) ஸஞ்சார (அயந) மார்க்கங்களை உடைத்தானவளாகவும், வேதாந்த - வேதங்களின் கடைசிபாகமான உபநிஷத்துக்களுடைய அதாவது அவைகளின் அர்த்தங்களுடைய,

அல்லது வேதாந்தங்களால் அறியத்தகுந்த பகவானுடைய, ஈநூவ - அனுபவத்தை, ஈதிவாதி - அதிக்ரமிக்கிற, அதாவது அதைக்காட்டிலும் மேலான இன்பமுள்ளதாக இருக்கிற, ஸாதநா - திருமேனியை அல்லது திவ்யஸ்வரூபத்தை உடைத்தானவளாக இருப்பவளும், ஈஜஸா - பிருதா (அடையாளமா) கவும் அதாவது பகவானுடைய சத்ரசாமரங்கள் முதலிய பரிச்சதங்களுக்குள் முக்யமானதாகவும், ஈவ்ருத - ஆச்ரிதர்களை ஒருக்காலும் நழுவவிடாதவனான பகவானுடைய, திவ் - உயர்ந்ததான, ஏாஸ் - தாஸகிருத்யத்திலே அதாவது சுச்ரூஷைகளிலே, ஸாஉதிஃ - நல்ல புத்தியுள்ளவளாகவும் அதாவது ஈடுபாடுள்ளவளாகவும், ஸாவிநீ - எல்லையில்லாத ஆநந்தத்தை அனுபவிப்பவளாகவும், விஸதா - விரிவுள்ளவளாகவும், அதாவது பகவானுடைய கணக்கில்லாத அவதாரங்களுக்குத் தக்கபடி கணக்கில்லாத ரூபங்களையுடையவளாகவும், ஈஸி - இருக்கிறாய். (ஆகையால்) ஊஃ - விருத்தியடைந்த, அதாவது பூர்ணமான, ஸெய-தைர்யத்தினாலே அதாவது நம்பிக்கையினாலே, ஸாபுஃ - தெளிவுள்ளவனான நான், தவ - உனக்கு, ஸ்ராம - ஆகவேணும், அதாவது சேஷபூதனாக வேணும்.

(கருத்து) இப்படி முந்திய சுலோகங்களில் சொல்லியபடி ஆச்ரிதரக்ஷணத்துக்கு உபயுக்தமான புருஷகாரஸ்வபாவமும், ஒரு வ்யாஜமாத்திரத்தை எதிர்பார்க்கும் ஸ்வபாவமும், ஸ்வாதந்திரியமும் இருப்பதுடன், இன்னும் பாதுகையினிடத்தில் ரக்ஷணஸாதனமாகவும் ரக்ஷணபலமாகவுமுள்ள மற்ற ஸங்கதிகளையெல்லாம் சேர்த்து அனுஸந்தித்துக்கொண்டு மஹாவிசுவாஸபூர்வகமான பாதுகாவிஷய சேஷத்வத்தை இதில் பிரார்த்திக்கிறார்:— ஓ பாதுகையே! நீ வேதங்களில் சொல்லிய ஸத்கர்மங்களால் பகவானை ஆராதிப்பவர்களுக்கு அந்த கர்மங்களை குறைவற நடத்தி பலபர்யந்தமாக நிறைவேற்றிவைக்கிறவளாகவும் முமுக்ஷுக்கள்விஷயத்தில் அவ்வாராதனங்களுடைய பரமபலமாகவும் இருக்கிறாய். உன்னுடைய தயை முதலிய அபாரகுணங்களால் விசேஷமாக ஸ்துதிக்கதகுந்தவளென்று உலகத்

தில் ப்ரஸித்தியுள்ளவளாக இருக்கிறாய். உலகத்துக்கெல்லாம் உயிர்நிலையாயிருக்கிற பகவானுக்கும் உயிர்நிலையாய், லோகமாதாவாய், உயர்ந்தபுருஷகாரபூதையாயிருக்கிற ஸீதாப்பிராட்டியாலும் உன்னுடைய ஸ்வரூப ரூப குணாதிகளால் தனக்கு ஸர்வஸ்வமாக விரும்பி அடையத்தகுந்த வஸ்துவாக இருப்பதால், அவளையும் உன்னதீனமாகவுடையவளாயிருக்கிறாய். நீ ஸஞ்சரிக்கிற மார்க்கங்களிலெல்லாம் ஸகல ஸம்பத்துக்களையும் உண்டுபண்ணி ஸர்வாநிஷ்டங்களையும் போக்குவதால் உன்னுடைய மனோஹரமான யாத்திரைகளைப் பற்றி உலகம் ஸ்துதி பாடுகிறது. உன்னுடைய திவ்ய திருமேனியினுடைய அனுபவமே உபநிஷத்துக்களுடைய தத்வார்த்தங்களின் அனுபவத்தைக் காட்டிலும் அல்லது உபநிஷத்பிரதிபாத்யமான பகவானுடைய அனுபவத்தைக் காட்டிலும் விசேஷாநந்தகரமாக இருந்து அதுவே உபாஸிக்கத்தகுந்ததாகவும் உபாஸநபலமாகவும் இருக்கிறது. ஆச்ரிதர்களிடத்தில் உன்னைக் கண்டமாத்திரத்தில் அவர்களுடைய ஸகல சத்துருக்களும் பயந்து ஓடிப்போகும்படிக்கும் அவ்வாச்ரிதர்களாலேயே எப்போதும் வஹிக்கத்தகுந்ததுமான முக்யமான வைஷ்ணவ லக்ஷணமாக இருக்கிறாய். பகவானுடைய ஒப்பில்லாத தாஸக்ருத்யத்தில் ஈடுபட்டவளாய் ஆச்ரிதர்களுக்கும் தன் ப்ரயோஜனமாக அந்த புத்தியை விளைவித்து அவர்களுக்கு ஸேவ்யமாகவும் இருக்கிறாய். பகவதனுபவத்தாலும் சரணாகதஸம்ரக்ஷணத்தாலும் எல்லையில்லாத ஸுகம் அனுபவிப்பவளாக இருந்து ஆச்ரிதர்களுக்கும் நிரதிசயஸுகத்தைக் கொடுக்கிறாய். இப்படிக்கெல்லாமுள்ள உன் ஸங்கதிகளை வெளிக்காட்டுவதற்கும் வாத்ஸல்யாதிசயத்தாலும் பகவானுடைய அவதாரங்களுக்குத் தக்கபடி எல்லையில்லாத ரூபங்களை எடுத்துக்கொண்டு உலகத்தில் ஸஞ்சரிக்கிறாய். இப்படி ரக்ஷணத்துக்கு ஸாதனமாயும் ரக்ஷணபலமாயுமுள்ள உன்னுடைய ஸங்கதிகளை எல்லாம் கவனித்து உன்னிடத்தில் மஹாவிசுவாஸத்துடன் உனக்கே நான் ஆளாகவேணும்.

ஸதாசார்யர்களும் அப்படியே ஸர்வஸத்கர்மங்களையும் நிறைவேற்றிவைக்கிறவர்களாகவும், குணத்தினால் விசேஷமாகப் புகழத்தகுந்தவர்களாகவும், பெரிய பிராட்டியாருக்கும் மிகவும் அந்தரங்கர்களாகவும், மனோஹரமான ஸஞ்சாரங்களால் ஸர்வ

நன்மைகளையும் விளைவித்து தீமைகளையும் விலக்குகிறவர்களாகவும், ஆச்ரிதர்களுக்குத் தங்களுடைய அனுபவத்தால் பகவதநுபவத்தைக் காட்டிலும் மிகவும் போக்யமானவர்களாகவும், உபாஸிக்கத்தகுந்தவர்களாகவும், பகவானுக்கு ஒரு சின்னம்போல் இருந்து ஆச்ரிதர்களுக்கு தங்களுடைய தாஸநாமம் சூட்டியதால் (அதாவது ஆச்ரிதர்கள் இன்ன ஆசாரியருடைய தாஸன் என்கிற பெயரை வைத்துக்கொள்வது முதலியதால்) ஸகல துரித(பாப)ங்களையும் போக்குகிறவர்களாகவும் பகவத்தாஸ்யத்தில் ஈடுபட்டவர்களாகவும், அப்படிப்பட்ட ருசியை ஆச்ரிதர்களுக்கு விளைவிப்பவர்களாகவும், ஸுகஸ்வரூபிகளாய் இருந்து ஆச்ரிதர்களுக்கு ஸுகத்தை விளைவிப்பவர்களாகவும், ஆச்ரிதர்களுடைய க்ஷேமார்த்தமாக விஸ்தாரமான ஸஞ்சாரமுடையவர்களாகவும் இருந்து அவர்களை ரக்ஷணஸாதநமாகவும் ரக்ஷணபலமான பரமப்ராப்யமாகவும் இருப்பதால், அவர்களிடத்திலுள்ள இப்படிப்பட்ட பகவத்குணங்களையெல்லாம் கண்டு அவர்களிடத்தில் மனுஷ்யத்வபுத்தி பண்ணாமல் அவர்களைத்தெய்வமென்று எண்ணி மஹாவிசுவாஸத்துடன் அவர்களுக்கே நாம் ஆளாகவேணும் என்பதும்இத்தால் த்வனிக்கிறது.

இப்படி இந்த சுலோகத்தால் ஸ்ரீபாதுகையினுடையவும் ஸதாசார்யர்களுடையவும் மஹாவிசுவாஸபோக்யத்வமும் பரமப்ராப்யத்வமும் சொல்லப்படுகின்றன. (32)

(௯௪௩) கநகநீம் நிவிஷ்டநநஷ்டஹா ஸநஜநாயநி
ஜாநநஹவ ஹ்ருதா | விபிநிவஸ் ஜநவேநஹி
வநிதா விஜயதே நவநவாம்கவநாநநா ||

௯௪௪) தீநமோசந நிக்ஷிப்த ஸ்நநக்ஷா நாஜநாஜாவநி
ஸ்வாநநாஸ்வநீதா | வாயிநேஜவஸ்ரேஜநா தூநா
ஸாநவஸ்ரிதா தேஜஸாதேநவநஷ்டம்ஹதாநா
ஸிகா ||

தனித்தனி விருத்தத்திலுள்ள இந்த இரண்டு சுலோகங்களும் (முதல் சுலோகம் த்ருதவிலம்பிதவ்ருத்தம், இரண்டாவது சுலோகம் ஸ்ரக்விணீவ்ருத்தம்) இரட்டைப்படையான அக்ஷரங்களெல்லாம் ஒரேமாதிரியாயிருப்பதால் முதல்பாதி

முதல் பாதியோடும் இரண்டாவது பாதி இரண்டாவது பாதியோடும் சேர்த்து மொழிக்கு காரீதியில் கிரமமாக வாசிக்கத் தகுந்தது.

(943 படரை) ததா - அந்த அதிகாரகாலத்திலே, அதாவது கோஸலதேசத்தில் தனியாக அரசாக்ஷி செய்த காலத்திலே, கநகபீடெ - தங்கஸிம்மாஸநத்திலே, நிவிஷ் - பதிய வைக்கப்பட்ட, தநு: - திருமேனியையுடையதும், ஸுமதி தாயி - நல்ல புத்தியைக் கொடுக்கத்தகுந்த, நிஜ-தன்னுடைய, அநுபவ - அனுபவத்தையும் (அதாவது தியானத்தில் ஸாக்ஷாத்கரிப்பதையும்), ஸ்ம்ருதா - நினைவையும் (அதாவது ஸாமான்ய ஸ்மரணத்தையும்) உடையதும், விதிஶிவமுகை: - ப்ரம்மா சிவன் முதலியவர்களாலே, நமஸ்க்ருதா - நமஸ்காரம் பண்ணப்பட்டதுமான, ரகுபுங்கவபாதுகா - ரகுகுலோத்தமனை ஸ்ரீராமனுடைய பாதுகையானது, விஜயதெ - ஜயிக்கிறது, அதாவது எப்போதும் ஜயசீலமுடையதாகவே இருக்கிறது.

(கருத்து) முன் சுலோகத்தில் ஸ்ரீபாதுகையினிடத்தில் மஹாவிசுவாஸபூர்வகமாக தடைகஶேஷவ்ருத்தியை (அதற்கே அடிமைத்தொழில் செய்வதை) பிரார்த்தித்தவாறே அதுவும் அப்படியே திருவுள்ளம் பற்றி அனுக்ரஹிக்கக்கண்டு இந்த இரண்டு சுலோகத்தில் அதிக ஸந்தோஷத்தால் ஸ்துதித்துக் கூத்தாடிக் கூச்சலிட்டுக்கொண்டு அதற்கு மேல்மேலும் ஜயத்தைக் கோரி இப்படியே தன்னை எப்போதும் அனுக்ரஹித்துக் காப்பாற்றவேண்டுமென்றும் பிரார்த்திக்கிறார். அத்தோடு ஸ்ரீபாதுகானுக்ரஹத்தால் முந்திய ராமகிருஷ்ணவதாரங்களிலுள்ள அதினுடைய ஸந்நிவேசங்களை மனதால் ப்ரத்யக்ஷீகரித்துப் பேசுகிறதாகவும் தோன்றுகிறது. இந்த முதல் சுலோகத்தில் ஸ்ரீரங்கவிமானத்திலுள்ள அதின் ஸந்நிவேசங்களையும் முந்தி கோஸலநாட்டை அது ஏகசக்ராதிபதியாய் ஆண்ட போதுள்ள ஸந்நிவேசங்களையும் ஒற்றுப்பார்த்துப் பேசுவதாகவும் தோன்றுகிறது. இது 'ததா' என்கிற பதத்தால் ஸூசிதமாகிறது. அதாவது— யாதொரு பாதுகையானது

இப்போது ஸ்ரீரங்கவிமானத்தில் ஸர்வலோகேச்வரியாய் திவ்ய கநகபீடத்தில் பிரதிஷ்டிதமாயிருப்பதுபோல் அப்போதும் ஸ்வர்ணமயமான திவ்ய ஸிம்மாஸநத்தில் வீற்றிருந்து ஸர்வ லோகராஜ்யாதிபத்யத்தை நடத்திற்ரு அந்தப் பாதுகைக்கு எப்போதும் ஜயமுண்டாகக்கடவது. யாதொரு பாதுகை யானது இப்போது ஸ்ரீரங்கவிமானத்தில் எழுந்தருளியிருக்கும் ஸந்நிவேசத்தோடு தன்னை த்யானத்தில் ப்ரத்யக்ஷீகரிப்பவர்களை யும் ஸாமான்யமாய் ஸ்மரிப்பவர்களையும் அனுக்ரஹித்து பார மார்த்திக புத்தியைக் கொடுப்பதுபோல் அக்காலத்திலும் அந்த ஸந்நிவேசத்தோடு நினைப்பவர்களையும் செய்ததோ அந்த பாது கைக்கு ஜயம் உண்டாகக்கடவது. யாதொரு பாதுகையானது ஸ்ரீரங்கவிமானத்தில் ப்ரம்ம ருத்ராதிகளால் வந்து நமஸ்கரிக்கப் படுவதுபோல் அக்காலத்திலும் திவ்யாஸ்தானமண்டபத்தில் வந்து நமஸ்கரிக்கப்பட்டதோ அந்த ரகுகுலோத்தமனுடைய பாதுகைக்கு ஜயம் உண்டாகக்கடவது. யாதொரு பாதுகை யானது அக்காலத்தில் துஷ்ட ராக்ஷஸர்களைத் துலைத்ததுபோல் அடியேனுடைய துஷ்டமனதையும் ஜயித்து ஸ்வாதீனம் செய்து கொண்டு விஜயஸ்ரீயோடு எழுந்தருளியிருக்கிறதோ அதற்கு இப்படிப்பட்ட ஜயம் மேல்மேலும் உண்டாகக்கடவது என்று இப்படி சிறியதிருவடி லங்கையில் ராக்ஷஸகோடிகள் மத்தியில் ஸ்ரீராமனுக்கு ஜயம் பாடினதுபோல் இந்த ஸம்ஸாரமண்ட லத்தில் ஸ்ரீபாதுகைக்கு ஜயம் பாடி அதின் ஜயசீலத்தைக் கொண்டாடுகிறார்.

ஸ்ரீபாதுகையை பகவான் திவ்யஸிம்மாஸநத்தில் ஏற்றி வைத்ததுபோல் எந்த மஹான்கள் பகவானுல் உத்தமமான ஆசார்யபதத்தில் ஏற்படுத்தப்பட்டு உன்னதமான ஆஸனத் தில் உத்கர்ஷத்துடன் திவ்யதேசங்களில் எழுந்தருளியிருந்து ஆச்ரிதர்களுக்கு மேல்மேலும் ஸத்புத்திப்ரதானம் பண்ணிக் கொண்டும் பாபிகளுடைய துஷ்டமனதுகளை ஜயித்து ஸ்வா தினம் பண்ணிக்கொண்டும் நிவிருத்திமார்க்கத்தை உலகத்தில் பரவச்செய்கிறார்களோ, அதனுல் ப்ரம்மருத்ராதிகளாலும் கொண்டாடத்தக்க பெருமையுள்ளவர்களாக இருக்கிறார்களோ, அவர்களுக்கு ஜயம் உண்டாகக்கடவது என்று ஸதாசார்யர்கள் விஷயத்திலும் ஜயாசீர்வாதம் இதனுல் ஸூசிதம்,

(944 ப-ரை) ஹே ராகவபாதுகே - ஸ்ரீராமபாதுகையே !, தீந - அகிஞ்சனர்களான, கோபீ - கோபஸ்திரீகளுடைய, ஜநி - மறுஜன்மத்தையும், க்லேஶ - கஷ்டத்தையும் அதாவது கம்ஸனால் உண்டான பீடை முதலான கஷ்டத்தையும் அல்லது விரஹகஷ்டத்தையும், பீ - இந்திரனிடத்திலிருந்து உண்டான பயம் முதலானதையும், நாஶ - போக்கடிக்கிறதும், ஸதா - எப்பொழுதும், ஸ்வாநாவ - தன்னுடைய மஹிமையில், ஸ்தி்தா - பிரதிஷ்டிதமாக இருப்பதும், அதாவது தன்னுடைய மஹிமையை மற்றெவராலும் குறைக்கமுடியாதபடி தன்னுடைய தேஜஸ்ஸால் அதை நிலைநிறுத்திக்கொண்டிருப்பதும். உத்தாரஸாவ - ஸம்ஸாரத்திலிருந்து ஆச்ரிதர்களை கரையேற்றும் தன்மையை, ஶ்ரிதா - அடைந்ததாகவும், தெந - அந்த, அதாவது பிறரையும் தன்னையும் ஸர்வவிதமாகவும் காப்பாற்றிக்கொள்ளத் தகுந்ததாய் பிரஸித்தமான, தெஜஸா - தன் தேஜஸ்ஸினாலே அதாவது பிறரால் அவமதிக்கப்படமுடியாத தன் ஸாமர்த்யத்தினாலே, வாஷிம் - கோஷத்தை அதாவது பிரஸித்தமாக கோஷிக்கப்படுவதை, மதா - அடைந்ததுமான, மெ - எனக்கு, (ஸ்வம் - நீ) வாஷிகா - காப்பாற்றுகிறவளாக அதாவது என்னுடைய ஸர்வபயங்களையும் போக்கி உன்னுடைய சேஷவிருத்தியிலே இப்படியே நிலைநிறுத்திக் காப்பாற்றுகிறவளாக, ஷயி-இருக்க வேணும்.

(கருத்து) ஓ ராமபாதுகையே ! நீ கிருஷ்ணவதாரத்தில் எந்த உன்னுடைய அபாரமான தேஜஸ்ஸால் அகிஞ்சனர்களான கோபஸ்திரீகளுக்கு 'இஹபரங்களிலுள்ள ஸர்வ பயங்களையும் போக்கினாயோ, எப்படி உன் மஹிமையை ப்ரம்மேந்திராதி தேவர்களாலும் துஷ்டராஜாக்களாலும் துளிக்கூட அசைக்கமுடியாதபடி நிலைநிறுத்திக்கொண்டாயோ, எந்த உன்னுடைய தேஜஸ்ஸினால் ஸர்வலோகத்தையும் ஸம்ஸாரத்திலிருந்து உத்தாரம் பண்ணத்தகுந்த தன்மையை அடைந்திருக்கிறாயோ, எந்த உன்னுடைய தேஜஸ்ஸின் பிரபாவம் உலகம் முழுவதும் பிரஸித்தமாக கோஷிக்கப்படுகிறதோ, அப்படிப்

பட்ட உன்னுடைய தேஜஸ்ஸைக்கொண்டு அடியேனை உன்னுடைய சேஷவிருத்தியிலிருந்து நழுவாதபடி காத்தருள வேணும் என்று பிரார்த்தித்து அதினுடைய ஆச்சரிய தேஜஸ்ஸைக் கொண்டாடுகிறார்.

ஸதாசார்யர்களும் அப்படியே பரம அகிஞ்சனர்களான ஜனங்களை ஸர்வ பயத்திலிருந்தும் காப்பாற்றத்தகுந்ததும் துர்வாதிகளாலும் மற்ற பாபிஜனங்களாலும் அவமதிக்கப்படமுடியாதபடி தங்களுடைய மஹிமையைக் காப்பாற்றிக்கொள்ளத் தகுந்ததும், ஸர்வ ஜனங்களையும் இந்த மீட்கமுடியாத ஸம்ஸாரத்திலிருந்து உத்தாரம் பண்ணக்கூடியதும், எங்கும் பிரஸித்தமாக கோஷிக்கப்படுவதுமான ஆச்சரிய தேஜஸ்ஸுள்ளவர்கள் என்பதும் இதனால் ஸூசிதம்.

(௩௪௫) யாஜ்ஞாஸ்ராஜ்ய த்ராஜ்வஜெ ஜராக்ஷா யாத்ருஜ்ஞெ வித்ருநதா நிஜஜ்ஞாஜெஷெஃ। வாவஜ்ஜெஷ உவாக்ஷ ஜ்ஷெஜ வாஜ்ஞவிஹஷித ஜாவவவாஜ்ஞா ॥

(௩௪௬) க்ஷவா நவஷ்ரா தவஜ்ஹஜ்ஞாஷ்ரா ஜெஜ்யாஜ வாவாஜிஷஜஜஜஹவா। வாஜ்ஞாவநிஷ்ட்யா ந ஹஜெவெ நத்ருஷ்ணா காஷ்யாவஜெதாயிக்ஷதா ஜிஜெராயா ॥ (௱௬)

இந்த இரண்டு சுலோகங்களும் ஜிஹவிருத்தங்களாய் (முதல் சுலோகம் ஷொயகவ்ருத்தம், இரண்டாவது சுலோகம் உவஜாதிவ்ருத்தம்) ஒரு சுலோகத்தை கிரமமாக எழுதி மற்றொரு சுலோகத்தை தலைகீழாக முதலில் எழுதப்பட்ட சுலோகத்தின்கீழ் முதல் பாதியின்கீழ் முதல் பாதியாகவும் இரண்டாவது பாதியின்கீழ் இரண்டாவது பாதியாகவும் ஒத்தைப்படையான அக்ஷரங்களுக்குக்கீழ் ஒத்தைப்படையான அக்ஷரங்களும் இரட்டைப்படை அக்ஷரங்களுக்குக்கீழ் இரட்டைப்படை அக்ஷரங்களுமாக நேருக்கு நேர் இருக்கும்படி எழுதி மொஜ்ஞத்ரிகாரீதியில் கிரமமாக வாசித்தால் முதல் எழுதப்பட்ட சுலோகமும் அதே ரீதியில் தலைகீழாக வாசித்தால் இரண்டாவது சுலோகமும் வரும்படி இருப்பதால்

“𑌨𑌿𑌜𑌵𑍃𑌤𑍍𑌤𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌿𑌯𑍋𑌗𑌗𑍋𑌮𑍂𑌤𑍍𑌰𑌿𑌕𑌾” ஶ்லோகங்கள் உள்ள 𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 இவ்விரண்டு ஶ்லோகங்களிலுமுள்ளது. இந்த கோமூத்ரிகா ரீதியானது கீழ்க்காட்டப்பட்டிருக்கிறது.

இப்படி 945-வது ஶ்லோகத்தை முதலில் கிரமமாக எழுதி 946-வதை தலைகீழாக அதின்கீழ் சேர்த்து எழுதி கிரமமாக கோமூத்ரிகாரீதியில் வாசித்தால் முதல் ஶ்லோகம் வருவதை முதல் பாதியாலும் தலைகீழாக வாசித்தால் 2-வது ஶ்லோகம் ஏற்படுவதை பின்பாதியாலும் கோடுகளால் காட்டப்பட்டிருக்கிறது. 946-வது ஶ்லோகத்தை முதலில் கிரமமாக எழுதி 945-வதை அதின்கீழ் தலைகீழாக எழுதினாலும் இப்படியே ஆகும்.

(945 ப-ரை) 𑌹𑍇 𑌪𑌾𑌦𑍁𑌕𑍇 - ஓ பாதுகையே !, 𑌧𑌾𑌮𑍍𑌨𑌾 - உன்னுடைய தேஜஸ்ஸினாலே, 𑌨𑌿𑌰𑌾𑌕𑍃𑌤 - நாசம் செய்யப்பட்ட, 𑌤𑌾𑌮𑌸 - தமோகுணப்ரகிருதிகளான அதாவது ஆஸுரப்ரகிருதிகளான, 𑌲𑍋𑌕𑌾 - ஜனங்களை உடையவளாகவும், 𑌧𑌾𑌤𑍃𑌮𑍁𑌖𑍈𑌃 - ப்ரம்மா முதலானவர்களான, 𑌨𑌿𑌜 - தன்னுடைய, 𑌦𑌾𑌸𑍈𑌃 - தாஸர்களாலே, 𑌵𑌿𑌨𑌤𑌾 - நமஸ்கரிக்கப்பட்டவளாகவும், 𑌵𑌿𑌭𑍂𑌷𑌿𑌤 - அலங்கரிக்கப்பட்ட அதாவது தன்னால் அலங்கரிக்கப்பட்ட, 𑌰𑌾𑌘𑌵𑌪𑌾𑌦𑌾 - ஸ்ரீராமனுடைய திருவடியை உடையவளாகவும் இருக்கிற, (𑌤𑍍𑌵𑌂 - நீ) 𑌮𑍇 - எனக்கு, 𑌪𑌾𑌪𑌂 - பாபத்தை, 𑌅𑌶𑍇𑌷𑌂 - பாக்கியில்லாதபடி, 𑌅𑌪𑌾𑌕𑌰𑍋𑌷𑌿 - போக்குகிறாய்.

(கருத்து) தன் பிரார்த்தனைப்படி ஸ்ரீபாதுகை தனக்குத் தன்னை அநந்யார்ஹசேஷபூதவஸ்துவாகப் பண்ணிக்கொண்ட ஸந்தோஷத்தால் அதற்கு ஜயாசீர்வாதம் பாடுவதையும் அப்படிப்பட்ட சேஷவிருத்தி தனக்கு ஒரு நாளும் நழுவாமலிருக்க வேணும் என்கிற பிரார்த்தனையையும் முந்திய இரண்டு ஶ்லோகங்களால் சொல்லி இந்த இரண்டு ஶ்லோகங்களால் தன் பிரார்த்தனைப்படி தச்சேஷவ்ருத்திக்கு ப்ரதிபந்தகமாக உள்ள ஸமஸ்த பாபங்களையும் ஸ்ரீபாதுகை போக்குவதையும், இப்படி ஸர்வவிதமாகவும் தன் பிரார்த்தனைகளையெல்லாம் நிறை

வேற்றித் தன்னைக் காப்பாற்றுவதால் உண்டான க்ருதஜ்ஞதை யால் தான் செய்யும் கிஞ்சித்காரங்களை (சுச்ரூஷாதிகளை) அங் கீகரிக்கும்பொருட்டு தன் பூஜாகாலங்களிலெல்லாம் பாதுகை யானது ஸாந்நித்யம் பண்ணவேணுமென்று அதனிடத்தில் ப்ரார்த்திப்பதையும் சொல்லுகிறார்.

ஓ பாதுகையே! எந்த உன்னுடைய சத்ருசமன (சத் ருக்களை அடக்கக்கூடிய) தேஜஸ்ஸால் ஸகல ஆஸுர ப்ர க்ருதிகளையும் த்வம்ஸம் செய்கிறாயோ, எந்த உன்னுடைய ரக்ஷணஸமர்த்தமான தேஜஸ்ஸினால் ப்ரம்மருத்ராதி தேவர்கள் எல்லாரும் ஸத்வகுணவிருத்தியையடைந்து உன்னை எப்போ தும் வணங்கி உனக்கு தாஸபூதர்களாகவே இருக்கிறார்களோ, எந்த உன்னுடைய பாவநத்வ (பரிசுத்தம் பண்ணத் தகுந்த) தேஜஸ்ஸால் உலகத்தையெல்லாம் பரிசுத்தம் பண்ணத் தகுந்த ஸ்ரீராமனுடைய திருவடிக்கும் சோபையைக் கொடுக்கத்தக்க அலங்காரமாக இருக்கிறாயோ அப்படிப்பட்ட உன்னுடைய தேஜஸ்ஸின் ஆகாரங்களை (மாதிரிகளை) யெல்லாம் என் விஷ யத்தில் உபயோகப்படுத்தி நான் ப்ரார்த்திக்கும்படி எனக்கு உன் விஷயத்தில் ஸததசேஷவிருத்தியை (எப்போதுமுள்ள சேஷவிருத்தியை)க் கொடுப்பதற்காக உடனே அதற்கு ப்ரதி பந்தகமாக உள்ள என்னுடைய ஸகல பாபங்களையும் போக்கி தமோகுணத்தை அழித்து ஸத்வத்தை விருத்திசெய்து பாரி சுத்யத்தைக் கொடுத்து ஸதத கைங்கர்யயோக்யமாக்குகிறாயே. இதென்ன ஆச்சரியம் என்று அதின் பாபவிமோசன சக்தியை யும் தன்னுடைய பாபங்கள் அதனால் தன்னை விட்டு விலக்கப் படுவதையும் ஸாக்ஷாத்கரித்து ஆச்சரியப்படுகிறார்.

இதனால் ஸதாசார்யர்களும் அப்படியே தங்களுடைய தேஜஸ்ஸால் ஜனங்களிடத்திலுள்ள ஆஸுரஸ்வபாவத்தைப் போக்கடிக்கத்தகுந்தவர்கள் என்பதும், ஸாத்விக ப்ரக்ருதி களுக்கு விரோதிகளைப் போக்கி ஸத்வகுணத்தை மேல்மேலும் விருத்தி பண்ணி சேஷத்வகாஷ்டைக்கு யோக்யமாம்படி அனுக்ரஹிக்கத்தகுந்தவர்கள் என்பதும் பகவானுடைய திரு வடியைப்போல் உலகத்தையெல்லாம் பரிசுத்தம் பண்ணத் தகுந்தவர்களாக இருந்து ஆச்ரிதர்களுடைய ஸகல அசுத்தங்

களையும் போக்கத்தகுந்தவர்கள் என்பதும், ஆகையால் அவர்கள் ஆச்ரிதர்களுடைய ஆஸுரஸ்வபாவத்துக்கும் ஸத்வநாசத்துக்கும் அபரிசுத்தத்துக்கும் காரணமான ஸகல சேஷவிருத்தி ப்ரதிபந்தக பாபங்களையும் போக்கி ஸததசேஷத்வத்தை அனுக்ரஹிக்கத்தக்கவர்கள் என்பதும் ஸூசிதமாகிறது.

(946 பதவுரை) ஹே பாதுகே - ஓ பாதுகையே ! (த்வம் - நீ), க்ருபயா - கிருபையினாலே, அநகா - துக்கமில்லாதபடி, த்ராதா - ரக்ஷிக்கப்பட்ட, ஸுதேசா - * ஆர்யாவர்த்தம் முதலிய புண்யபூமியையுடையவள், அதோஷா - தோஷமில்லாதவள், ருசா - காந்தியினாலே, சுத்தா - பரிசுத்தமானவள், 1 பாரிஷதா - ஸாதுஜனங்களுடைய கோஷ்டியில் ஸாதுவானவள் க்ஷமாவா - பூமியைக் காப்பாற்றுகிறவள், ஸ்பீதாந - அதிகமான, ஸுகை: - ஸுகங்களாலே அதாவது பகவானுடைய திருவடி ஸ்பர்சம் முதலியதால் ஏற்படுகிற ஸுகங்களாலே, ந த்ருப்தா - திருப்தியடையாதவள், * காம்யா - இச்சையோடு, ஸங்கதா - கூடினவள், அதிக்ருதா - அதிகாரத்தை அடைந்தவள், அநிரோதா - தனக்கு ஒரு தடையும் இல்லாதவள், (இப்படிப்பட்ட த்வம் - நீ) ஏதி - வரவேணும்.

(கருத்து) ஓ பாதுகையே! நீ ஸ்ரீராமக்ருஷ்ணாத்யவதாரங்களில் ஆர்யாவர்த்தம் முதலிய பூமிகளிலுள்ளவர்களால் ஆரா

---

* ஆர்யாவர்த்தமாவது விந்த்யமலைக்கும் ஹிமயமலைக்கும் மத்தியிலுள்ள பிரதேசம்.

1 அதாவது அப்படிப்பட்ட கோஷ்டிக்கே பெரிய அலங்காரமானவள் என்று அர்த்தம். பரிஷத் என்றால் ஸாதுக்களுடைய கூட்டம்; அதாவது ஸபை. பரிஷத் என்கிற சப்தத்தின்பேரில் 'ஸாது—நல்லது, உயர்ந்தது' என்கிற அர்த்தத்தில் 'அண்'என்கிற ப்ரத்யயம் சேர்ந்து பாரிஷதா-பரிஷத்தில் நல்லதானது என்கிற அர்த்தத்தைக் கொடுக்கிறது.

* காமி என்கிற பதத்திற்கு பல அர்த்தங்களில் இச்சை என்பது ஒன்று.

திக்கப்பட்டு கிருபையினுல் அவர்களுக்கு ஒருவித துக்கங்களுமில்லாதபடி காத்தவளன்ரே. உன்னுடைய ரத்னகிரணங்களாலே உலகங்களையெல்லாம் பரிசுத்தம் பண்ணத்தகுந்தவளன்ரே. தத்வவித்துக்களாய் ஸர்வபூதஸுஹ்ருத்துக்களாய் ஸதா ரக்ஷண சீலர்களான ஸாதுக்களுடைய கோஷ்டியில் நீ உத்தமமானவளன்ரே. அர்ச்சாவதாரங்களில் இந்த பூமியைக் காப்பாற்றுவதற்கே நிலையாக ஏற்பட்டவளன்ரே. உனக்கு பகவானுடைய திருவடியின் நித்யஸம்பந்தத்தால் ஏற்படுகிற ஸுகங்களாலும் ஆச்ரிதர்களுக்கும் அப்படியே திருவடிஸம்பந்தத்தை ஏற்படுத்துவதால் உனக்குண்டாகிற ஸுகங்களாலும் ஒருபோதும் திருப்தியடையாதவளன்ரே. நீ பகவானேடு சேருவதிலும் ஆச்ரிதர்களை பகவானேடு சேர்ப்பிப்பதிலும் எப்போதும் விசேஷ ஆவலுள்ளவளன்ரே. உலக ரக்ஷணவிஷயத்தில் ஸர்வாதிகாரமும் பகவானுல் உன்னிடமே வைக்கப்பட்டிருக்கிறதன்ரே. உன்னிஷ்டப்படி உலகத்தை ரக்ஷிப்பதற்கும் அதற்காக உன்னிஷ்டப்படி உலகத்தில் எங்கும் ஸஞ்சரிப்பதற்கும் ஒருவராலும் ஒரு விதமான தடங்கலுமில்லாதவளன்ரே. நீ இப்படிப்பட்ட குணவிசேஷங்களுள்ளவளாகையால் எனக்கு ஸதத சேஷவிருத்திக்கு ப்ரதிபந்தகமான பாபங்களைப் போக்கினது மட்டுமல்லாமல் என்னிடம் இன்னும் விசேஷ தயவு பண்ணி, உன்னுடைய பரமோபகாரங்களை நினைத்து க்ருதஜ்ஞதையடியாக, நான் உனக்குச் செய்ய இச்சிக்கும் கிஞ்சித்காரங்களைப் பெற்று என்னை அனுக்ரஹிப்பதற்காக என்னுடைய பூஜா காலங்களிலெல்லாம் நீ வந்து ஸாந்நித்யம் பண்ணவேணும். அப்படிச் செய்வதற்கு வேண்டிய குணம், பாத்யதை, அதிகாரம், தடங்கலில்லாமை முதலிய ஸங்கதிகளெல்லாம் உன்னிடம் இருக்கின்றன. நீ அப்படி வந்து என்னுல் செய்யப்படும் ஆராதனங்களை அங்கீகரித்தால்தான் என்னுடைய ஸம்ஸார துக்கங்கள் போம்; தோஷங்கள் அழியும்; அசுத்திகள் நீங்கும். ஸாதுக்களுக்கு நல்லவனுவேன். ஸததசேஷத்வகார்ஷ்டையும் எனக்கு ஸித்திக்கும். ஆகையால் நீ அவசியம் எழுந்தருள வேணும் என்று ஆச்ரிதர்களுடைய ஆராதனத்திற்கு ஸுலபமாவதற்கு வேண்டிய அதினிடத்திலுள்ள ஆச்சரிய ஸங்கதிகளைக் கண்டு நம்பிக்கையுள்ளவராய் அதினுடைய வரவைப் ப்ரார்த்திக்கிருர்.

ஸதாசார்யர்களும் அப்படியே ஆச்ரிதர்களுடைய ஆரா தனத்துக்கு ஸுலபமாவதற்கு வேண்டிய குணம், ப்ராப்தி, அதிகாரம், தடங்கலில்லாமை முதலிய ஸங்கதிகளுள்ளவர்கள். அவர்களுடைய ஆராதனமானது துக்கங்களை நீக்கி தோஷங் களைக் கழித்து, பாரிசுத்யத்தைக் கொடுத்து, ஸாதுத்வத்தைப் பண்ணி சேஷத்வகாஷ்டையை ஸித்திக்க செய்யத்தக்கது. ஆகையால் அவர்களுடைய வரவானது எல்லாராலும் ப்ரார்த் திக்கத்தக்கது என்பதும் இதில் ஸூசிதம். (36)

(௯௪௭) ஸாரஸ ஸௌக்யஸம்ஸ்தா பாதுகா
க்ஷேமாஜ்ஞா । ஸாஹஸகார்யவநாஸா தீரா
ஸம்பதா நவந்யாஸா ॥ (௫௭)

(௯௪௮) ஸாந்யாஸவநதா ஸம்பராதீஸாநாவயர்காஸ
ஹஸா । ஜ்ஞாக்ஷேமா காதுபாஸ்தா
ம்ஸஸ்யௌ ஸஸரஸா ॥ (௫௮)

இந்த இரண்டு சுலோகங்களிலும் ப்ரதிலோம அநு லோமயமகம் உள்ளது. இந்த இரண்டு சுலோ கங்களிலும் ஆர்யாவ்ருத்தத்தின் ப்ரபேதங்கள் உள்ளன. முதல் சுலோகத்தை கடைசி அக்ஷரத்திலிருந்து முதல் அக்ஷரம் வரை யில் தலைகீழாக வாசித்தால் இரண்டாவது சுலோகமாகிறது. அப்படியே இரண்டாவதையும் தலைகீழாக வாசித்தால் முதல் சுலோகமாகிறது.

(947 ப-ரை) ஸாரஸ - தாமரைப்பூவினாலே (அதா வது பூஜையில் ஸமர்ப்பிக்கப்பட்ட தாமரைப்புஷ்பத் தாலே), ஸௌக்யஸம்ஸ்தா - ஸௌக்யத்தை அடைந்தவளும், க்ஷேமாஜ்ஞா - க்ஷேமகரங்களான ஆஜ்ஞைகளைப்பண்ணுகிறவளும், ஸாஹஸ - ஸாஹஸமான, காரி - கார்யத்தை உடையவ னான பரதனுடைய, அவந - ரக்ஷணத்தில், ஆஸா - ஆவலுள்ளவளும், தீரா - உறுதியுள்ளவளும், ஸம்பதா - ஸகல ஸம்பத்துக்களையும்கொடுப்பவளும், நவ - புதிது புதிதான, ந்யா ஸா - ஸந்நிவேசங்களையுடையவளுமான, பாதுகா - பாதுகை

யானது, ஹுவி - உலகத்தில், வ்ராதா - ஆச்ரிதர்களுக்கு மிகவும் ஸுலபமானவளென்று பிரஸித்தி பெற்றவள்.

(கருத்து) முந்திய இரண்டு சுலோகங்களில் பாதுகையானது தன்னுடைய சேஷவிருத்தி விரோதி பாபங்களைப்போக்குவதையும் அதனடியாகத் தனக்குப் பிறந்த க்ருதஜ்ஞதையாலே அதை யதாசக்தி ஆராதிப்பதற்கு அது நேரில் வரவேண்டுமென்று அதைப் பிரார்த்திப்பதையும் சொல்லி, இந்த இரண்டு சுலோகங்களில் தன் பிரார்த்தனைப்படி ஸ்ரீ பாதுகையானது ஸுலபமாக வந்து தன் ஆராதனத்தை அங்கீகரிப்பதையும், அப்படி ஸுலபமாக இருப்பதுடன் அதின் பெருமையைக் காட்டாமல் தன்னோடு ஒரு ஸ்நேகிதியைப்போல் மிகவும் ஸரஸமாக (அதாவது இருவரும் ஸமானமான யோக்யதை அந்தஸ்துக்களுள்ளவர்கள்போல் பாவித்து) பழகுவதைப் பேசுகிறார்.

மிகவும் எளியவனான என்னுடைய ஆராதனத்தை நேரில் வந்து அங்கீகரித்து என்னை அனுக்ரஹிக்கவேணுமென்று பிரார்த்தித்தவாறே ஸ்ரீ பாதுகையானது உடனே வந்து என்னுடைய கிஞ்சித்காரங்களை (ஏதோ ஸ்வல்பம் செய்ததை) திருவுள்ளம் பற்றி "வத்ரம் வாஷ்வம் ஸமம் தோயம் யோஜஸஹஸ்ரா வ்யயவதி । தஃஸம் ஹஸ்த்ராவஹாதஸ்ராஜி வ்யதாதநஃ" என்கிறபடி என்னால் ஒரு சிரமமும் செலவுமில்லாமல் குளத்திலிருந்து பறித்து ஸமர்ப்பிக்கப்பட்ட ஒரு தாமரைப்பூ மாத்திரத்தைக்கொண்டு ரொம்ப உயர்ந்த உபஹாரம் ஸமர்ப்பிக்கப்பட்டுவிட்டதுபோல் பாவித்து ரொம்ப திருப்தி அடைகிறது. "அப்பா நீ இதைச் செய், இதுமாதிரி நட" என்றிப்படி மிகவும் க்ஷேமகரமான ஆஜ்ஞைகளைப் பண்ணுகிறது. முன் காலத்தில் பித்ருவாக்யபரிபாலனத்தில் உறுதியுள்ள ஸ்ரீராமனால் நிறைவேற்றக்கூடாத கார்யத்தை (அதாவது காட்டுக்குப் போகாமல் அயோத்திக்குத் திரும்பி பட்டாபிஷேகம் பண்ணிக்கொள்வதை) நிர்ப்பந்தித்து ஸாஹஸமாக பர்ணசாலை வாசலில் தப்பாக ப்ராயோபவேசத்தை ஸங்கல்பித்துக்கொண்டவனான பரதன்விஷயத்திலுங்கூட அவனுடைய ப்ரதிஜ்ஞை வீணாகாமல்படி ராமனுக்குப் பதிலாகத்தான்

திருப்பி வந்து ராஜ்யபட்டாபிஷேகம் பண்ணிக்கொள்ளும்படி ஆசை வைத்ததுபோல் என்னுடைய யோக்யதையையும் அதினுடைய பெருமையையும் கவனியாமல் என்னுடைய ஆராதனத்தை நேரில் வந்து பெற்றுக்கொள்ளவேணும் என்று ஸாஹஸமாகப் பிரார்த்தித்த என்னிடத்திலும் அப்படியே அன்பே பாராட்டி பிரார்த்தனைப்படி தலைக்கட்டிற்று. ஆச்ரித ரக்ஷண விஷயத்தில் இதற்கு எவ்வளவு உறுதி. பகவானுடைய பிரிவையுங்கூட ஸஹித்துக்கொண்டன்றோ அப்படிச் செய்கிறது. ஆச்ரிதர்களிடத்திலிருந்து மிகவும் ஸ்வல்பத்தைத் திருவுள்ளம் பற்றி அதற்கு பதிலாக குசேலருக்குக் கொடுத்தது போல் மஹா ஸம்பத்தையன்றோ கொடுக்கிறது. தன்னுடைய ஸேவகர்களுக்கு திருப்தி வராத நேத்ராநந்தத்தைக் கொடுக்கும்பொருட்டு ப்ரதிக்ஷணமும் புதிதுபுதிதாகவன்றோ தன்னுடைய ஸந்நிவேசங்களை மாற்றிக்கொண்டு ஸேவை ஸாதிக்கிறது. இப்படிப்பட்ட ஸௌலப்ய கார்யமான தன் வியாபாரங்களாலே ஸ்ரீ பாதுகைக்கு உலகத்தில் எவ்வளவு பிரஸித்தி ஏற்பட்டிருக்கிறது என்று அதினுடைய ஸௌலப்யவியாபாரங்களைப் பேசுகிறார்.

ஸதாசார்யர்களும் அப்படியே ஸுலபமாக ஆராத்யமாக வந்து ஸ்வல்பத்தைக் கொண்டு பரம திருப்தியை அடைகிறவர்கள். மிகவும் க்ஷேமகரமான நியமனங்களைப் பண்ணுகிறவர்கள். பல அஸௌகர்யங்களுக்கு நடுவில் ஆச்ரிதர்கள் தங்களைப் பிடிவாதமாக ஒரு இடத்திற்கு வரவேணுமென்று பிரார்த்தித்தாலும், ஒரு காரியத்தைச் செய்யவேணுமென்று பிரார்த்தித்தாலும், அப்படியே தங்களுக்கு அதிலுள்ள பாதகங்களைக் கவனியாமல் அவர்களுடைய பிரார்த்தனையைத் தலைக்கட்டி வைக்கும்படியான ப்ரீதி அவர்களிடத்தில் வைப்பவர்கள். இப்படிப்பட்ட ரக்ஷணவிஷயங்களில் மற்றவர்களால் புத்தி கலையாதபடி உறுதியான மனதுடையவர்கள். தங்கள் விஷயத்தில் ஸ்வல்பம் செய்தாலும் அதை மிகவும் பெரிதாகப் பாராட்டி அதற்குப் பதிலாக விசேஷ ஸம்பத்தை அனுக்ரஹித்தும் திருப்தியடையாதவர்கள். அவர்களுடைய திருமேனிஸேவை, ஸாமான்ய வார்த்தைகள், காலக்ஷேபாதிகள் முதலிய ஸந்நிவேசங்கள் எப்போதும் பழகுகிறவர்களுக்குங்கூட புதிதுபுதிதாக

இருக்கும்படி காட்டி திருப்தி வராத ஆநந்தத்தைக் கொடுத்து அவர்களுடைய மனதை வச்யம் பண்ணுபவர்கள். இப்படிப்பட்ட ஸௌலப்யகார்யங்களான வியாபாரங்களால் அவர்கள் உலகத்தில் கீர்த்தி பெற்றவர்கள் என்பதும் இதில் ஸூசிதம்.

(948 ப-ரை) ஸமாநந்ரா - நன்றாக எல்லாராலும் பக்தி பண்ணத்தகுந்தவளும், ஸவநதா - ஸர்வர்களுக்கும் ரக்ஷணத்தைக் கொடுப்பவளும், ஸமீஶாநா - ஸர்வ லோகத்துக்கும் எஜமானியானவளும், வயஜ் - உயர்ந்ததான, கா - ஸுகமுடையவளும், ஜ்ஞா - ஜ்ஞானமுடையவளும் அதாவது ஸர்வஜ்ஞையும், ஸ்ம - தன்னுடையவராக இருக்கிற, ஸ - பெருமாளை உடையவளும், விஷ்ணோ - ஸ்ரீரங்கநாதனுடைய, பாதுவதா - திருவடியைக் காப்பாற்றுகிறவளாக, வ்ரதா - உலகத்தில் ப்ரஸித்தி பெற்றவளுமான, ஸஸா - இந்த பாதுகையானது, மே - எனக்கு, ஸஹஸா - வெகுசீக்கிரத்தில், ஸுலபா - ஸுலபமாக வரிக்கத்தகுந்தவளும், ஸரஸா - ஸரஸமாகப் பழகத்தகுந்த (ஸ்நேகமுள்ள), ஸகீ - தோழியாக இருக்கிறது.

(கருத்து) பாதுகையானது எனக்கு இப்படி வெகுஸுலபமாக ஆராதிக்கத்தகுந்ததாக ஆகிறதினால் அது ஸாமான்யமானதோவென்றால் இல்லை. அதினுடைய பெருமைக்கும் என்னுடைய இளப்பத்துக்கும் உபமானமே கிடையாது. அதுவோவென்றால் எல்லா உலகத்தாலும் மிகவும் உபாஸிக்கத்தகுந்தது. நான் அதை மனதால் நினைக்கக்கூட யோக்யமல்லாதவன். அது ஸர்வ லோகத்துக்கும் ரக்ஷணத்தைக் கொடுக்கத் தகுந்தது. நான் என் ரக்ஷணத்துக்கு அதின் கை பார்த்திருக்கவேண்டியவன். அது ஸர்வலோகத்திற்கும் எஜமானியானது; எவராலும் வெகு சீக்கிரத்தில் வெகுஸுலபமாக ஆச்ரயிக்கப்படத்தகுந்ததான ஆபிமுக்யமுள்ளது. நானோ ஒரு கணக்கிலும் சேராதவன். அது பரமஸுகமுள்ளதாய் அவாப்த ஸமஸ்த காமையானது; நானோ துக்கஸ்வரூபியானவன்; அதுவோ ஸர்வஜ்ஞமானது; நான் ஜ்ஞானஹீனர்களில் முதல்வனானவன், அது ஸர்வேசுவரனை தனக்கு ஸ்வாதீனமாக உள்

ளது. நானோ அவனை அடியோடு இழந்திருப்பவன். அது பெருமாளுடைய திருவடிக்கும் ரக்ஷகமானதென்று ப்ரஸித்தி பெற்றது. நானோ பகவானுக்கும் க்லேசத்தைக் கொடுப்பவன். இப்படி ஸ்வரூபத்தினாலும் குணத்தினாலும் வ்யாபாரத்தினாலும் அந்தஸ்தினாலும் அது அளவில்லாத பெருமையுள்ளதாயிருந்தும் எல்லா விஷயத்திலும் எல்லையில்லாத இளப்பமுடைய என் விஷயத்தில் கேவலம் தன்னுடைய ஸௌசீல்யகுணத்தினாலேயே வெகுசீக்கிரத்தில் ஸுகமாக வரிக்கத்தகுந்ததாய் ஸமானமான அந்தஸ்து முதலியதுள்ள ஒரு ஸகியைப்போல் ஸ்நேகத்துடன் பழகிக்கொண்டு ஹிதாஹிதங்களை உபதேசித்து, ஸமான ஸுகதுக்கையாக பாவித்து மிகவும் எளிதாக ஆராதிக்கப்பட்டு அதின் பெருமையை நான் அடியோடு மறக்கும்படி செய்கிறது. இது என்ன ஆச்சரியமான ஸௌசீல்ய குணம் என்று இப்படி அதின் * ஸௌசீல்யகுணத்தைப் புகழுகிறார்.

ஸதாசார்யர்களும் எல்லாராலும் பக்தி பண்ணத் தகுந்தவர்களாகவும், எல்லாருக்கும் ரக்ஷணத்தைக் கொடுப்பவர்களாகவும், தங்களுடைய பதவியால் எல்லாருக்கும் மேலான எஜமானர்களாகவும் பகவதனுபவத்தாலும் ஆத்மானுபவத்தாலும் பரம ஸுகத்தில் ப்ரதிஷ்டிதமானவர்களாகவும் ஸர்வஜ்ஞர்களாகவும் ஸர்வேசுவரனையும் தங்களுக்கு அதீனமாகவுள்ளவர்களாகவும் பகவானுக்கே ரக்ஷகர்களாகவும் இருக்கச் செய்தேயும் சீக்கிரத்தில் ஸுலபமாக ஆச்ரயிக்கப்படத்தகுந்த குணவிசேஷ

* ஸௌலப்யமாவது எவ்வளவு பெருந்தன்மை இருந்தும் அதைப் பாராட்டாமல் கூப்பிட்டவுடன் வரும்படி இருப்பது. ஸௌசீல்யமாவது அப்படி வந்தும் தன் பெருந்தன்மையைப் பாராட்டிக்கொண்டு உபசரிப்பதற்கு கஷ்டமாகாமல் ஸமானமானவனும் கீழ்ப்பட்டவனுமான மனுஷ்யனைப்போல் ஸரஸமாய்ப் பழகுவதற்கும் எளிதாக உபசரிக்கப்படுவதற்கும் வேலையிடப்படும்படிக்கும் தகுந்தபடி இருப்பது. ஸமானமானவர்களுக்குள் பரஸ்பரம் இருக்கப்பட்ட அன்புக்கு ஸ்நேகம் என்றும், மேல்பட்ட இடத்தில் வைக்கும் அன்புக்கு பக்தி என்றும், கீழ்ப்பட்ட இடத்தில் வைக்கும் அன்புக்கு ப்ரீதி என்றும் பெயர். மிகுந்த பக்தியோடு இடைவிடாமல் நினைப்பதை உபாஸநம் என்று சொல்லுகிறது.

முள்ளவர்களாகவும் எவ்விதத்திலும் பரம இளப்பமான ஆச்ரிதர்களிடத்திலும் அவர்களுக்கு ஸமானமான ஸ்நேகிதர்களைப்போல் பழகி நன்மை தீமைகளைச் சொல்லி, ஸமானமான ஸுகதுக்கங்களைப் பாவித்து வெகு எளிதாக ஆராதிக்கப்படும் ஸௌசீல்யகுணமுடையவர்கள் என்பதும் இதனால் ஸூசிதம்.

(௯௪௧) தாரஸ்யாரதாரஸ்ய ரவஸாரராஸாவஷா
வஙீஸாரரா । யீரவெஸ்ர வரஸ்ரீர ரவஸ்வ
ரவாஸரகிராஉஸவா ॥ (௩௧)

இந்த பந்தத்துக்கு இரண்டு பாதுகைகளையும் கர்ணிகையில் உள்ளதாய் 8 தளங்களுள்ள பத்மபந்தம் என்று பெயர். இதில் முன்புறத்து மத்யதளத்திலிருந்து ஆரம்பித்து பிரதக்ஷிணமாக 4 தளங்களிலுள்ள அக்ஷரங்களை கர்ணிகாமத்தியிலுள்ள 'ர' என்கிற பொதுஎழுத்துடன் சேர்த்து வாசித்து அப்படியே வலது பாதுகையின் அடியிலும், மத்தியிலுமுள்ள 2 அக்ஷரங்களை ஷை 'ரேப'த்துடன் அதிலிருந்து அப்ரதக்ஷிணமாகச் சேர்த்து வாசித்தும், பிறகு அந்த பாதுகையின் மேல்பாகத்திலுள்ள 'ரா' என்கிற அக்ஷரத்தை விரல்களிலுள்ள அக்ஷரங்களுடன் சேர்த்து ராஸாவஷாவஙீஸாரரா என்று வாசித்தும் சுலோகத்தின் முதல் பாதியை முடிக்கிறது. இதே ரீதியில் மற்ற தளங்களிலுள்ள அக்ஷரங்களை கர்ணிகையிலுள்ள ரேபத்துடன் சேர்த்து வாசித்தும் இடது பாதுகையின் அடியிலும் மத்தியிலுமுள்ள 2 அக்ஷரங்களை அதே ரேபத்துடன் அதிலிருந்து ப்ரதக்ஷிணகதியாகச் சேர்த்து வாசித்தும் பிறகு அந்த பாதுகையின் மேல்பாகத்திலுள்ள 'வா' என்கிற அக்ஷரத்தை அந்த விரல்களிலுள்ள அக்ஷரங்களோடு சேர்த்து வாஸரகிராஉஸவா என்று வாசித்தும் சுலோகத்தின் பின்பாதியை முடிக்கிறது. இந்த பாதுகாபத்மபந்தத்தின் அபிப்ராயம் முன் 947-வது சுலோகத்தின் 'ஸாரஸ ஸௌவ்ருஸ்ஜேதா' என்கிற முதல் பதத்தால் சொல்லியபடி ஸ்ரீ ஆசாரியர் (தேசிகன்) ஒரு தாமரைப்புஷ்பத்தை பாதுகைக்கு ஸமர்ப்பித்து அதின்பேரில் எழுந்தருளப்பண்ணவாறே ஸ்ரீபாதுகை அந்த ஸுகத்தை அனுபவிப்பதைக் காட்டு

கிறது. அல்லது ஸ்ரீ பாதுகையை ஹ்ருதயமாகிற பத்மத்தின் மத்தியில் த்யானிப்பதைக் காட்டுகிறது. அல்லது 941-வது சுலோகத்தில் 'ஸஞ்சார — யந்த்ரிகா' என்கிற பதத்தால் சொல்லியபடி ஸ்ரீபாதுகை ஸஞ்சரிக்கும் இடமெல்லாம் பத்ம ரேகை முதலிய அடையாளங்களைச் செய்துகொண்டுபோவதைக் காட்டுகிறது; அல்லது இந்த சுலோகத்தில் சொல்லியபடி ஸ்ரீராமனைத் தனக்கு அதீனமாக வைத்துக்கொண்டு ஆச்ரிதர்களிடத்தில் நடத்திப்போய் அவர் அந்த ஹ்ருதயங்களில் வஸிப்பதற்கு யோக்யமாக கடினமான ஹ்ருதயங்களை தான் நடுவிலிருந்து தாமரைப்புஷ்பம்போல மிருதுவாகச் செய்வதைக் காட்டுகிறது. விரல்களிலுள்ள அக்ஷரங்களால் ஏற்படும் 'ஸாரதி ராமே பாதுகா ஸா' என்கிற வாக்யத்தால் இப்படிப்பட்ட பந்தசித்ரம் முதல்முதலில் ஸ்ரீ ஆசார்யரால் பாதுகாவிஷயமாக ஸமர்ப்பிக்கப்பட்டது என்பதையும் காட்டுகிறது.

இதிலுள்ள வ்ருத்தம் "ஸ்ரக்தரா".

(பதவுரை) தீர - த்ருடமான புத்தியுள்ளவளும் அதாவது ஆரம்பித்த ஒரு நல்ல காரியத்துக்கு எவ்வளவு தடைகள் வந்தாலும் லக்ஷ்யம் செய்யாமல் அதை நிறைவேற்றும் ஸ்வபாவமுள்ளவரும், ஸ்வைர - ஸ்வச்சந்தமாகத் தன்னால் உபயோகிக்கத் தகுந்த, ஸாரஸ்ர-அசையும் பொருள் அசையாப் பொருள் இவைகளையுடையவரும் அதாவது ஸர்வேசுவரனாக இருப்பவரும் அல்லது ஸ்வைரஸார - தன் இஷ்டப்படி ஸஞ்சரிக்கத்தகுந்தவரும், ஸ்திர - ஸ்திரமானவரும் அதாவது மாறுத ஸ்வபாவமுடையவரும் (அவருடைய நற்குணங்கள் மாறுகிறதில்லை என்று தாத்பர்யம்), ரகுராஜதாநீவாஸ - ரகுக்களுக்கு ராஜதானியான அயோத்தியில் வஸிப்பவர்களிடத்தில், ரதி - ஆசையுடையவருமான, ராமே - ஸ்ரீராமனை, ஸ்வவாச்யே - தன்னால் ஏவத்தகுந்தவராக உடையவளும், தார - உச்சஸ்வரமாயும், ஸாரதார - அடிக்கடி அதிகமாக உண்டாகிறதுமான, ஸ்வர - தன்னுடைய சப்தங்களாலே, ரஸ - ப்ரீதியின், ஹார - பாரத்தை அதாவது மிகுதியை, ரா - கொடுக்கிறதுமான, அதாவது உண்டுபண்ணுகிறதுமான, ஸா - அந்த அதாவது

முன் சுலோகங்கள்படி ஸௌலப்ய ஸௌசீல்யங்களால் ப்ரஸித்தமான, வஹாவஹீ - பாதுகையானது, ஸாரா - ஸஞ்சார சீலமுள்ளது, அதாவது தான் செல்லுமிடமெல்லாம் தனக்கு ஸ்வாதீனமான பெருமாளையும் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு போகும் ஸ்வபாவமுள்ளது என்று சுலோக தாத்பர்யம்.

(கருத்து) முன் 2 சுலோகங்கள்படி ஸ்ரீ பாதுகையானது தன் ஸௌலப்ய ஸௌசீல்ய குணங்களைக் காட்டிக்கொண்டு தான் ஆச்ரிதர்களுக்கு எளிதாக ஆராத்யமாவதுடன் தான் ஆச்ரிதர்களிடம் செல்லும்போதெல்லாம் தனக்கு ஸ்வாதீனமான பகவானையும்கூட எழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோகும்ஸ்வபாவமுள்ளது என்பதை கடைசி இரண்டு சுலோகத்தால் சொல்லுகிறார். இதில் தான் செல்லும்போதெல்லாம் தனக்கு வச்யமான பகவானையும் அழைத்துப்போகிறது என்பதைமட்டும் சொல்லுகிறார். அடுத்த சுலோகத்தில் ஸாதுக்களுடைய வீடுகள்தோறும் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு போகிறதென்பதைச் சொல்லுகிறார்.

யாதொரு பாதுகையானது மஹாதீரனும் ஸர்வேசுவரனும் (அல்லது ஸ்வேச்சாஸஞ்சாரமுடையவனும் ஸ்திரமான ஸ்வபாவமுடையவனும்) அயோத்தியாவாஸிகளான ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுள்ளவனுமான ஸ்ரீராமனைத் தன்னால் ஏவத்தகுந்தபடி வச்யனாக வைத்துக்கொண்டிருக்கோ, யாதொரு பாதுகையானது தன்னுடைய ஸஞ்சார காலத்தில் கம்பீரமானதும் அடிக்கடி விசேஷமாக உண்டாவதுமான தன்னுடைய நாதத்தால் தன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கும் ஆச்ரிதர்களுக்கு முந்தியே தெரிவித்து அவர்களுக்கு விசேஷ ப்ரீதியையும் நம்பிக்கையையும் உண்டுபண்ணுகிறதோ, அந்த ஆச்ரிதஸௌலப்யஸௌசீல்யகுணங்களையுடையபாதுகையானது தான் செல்லுமிடமெல்லாம் ஸ்ரீ பகவானையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோகும் ஸ்வபாவமுள்ளதாகவன்றோ இருக்கிறது. இப்படி பாதுகையானது எங்கும் பகவானையுங்கூட்டிக்கொண்டே சென்று தன்னைப்போல் அவனையும் ஸுலபனாகவும் ஸுசீலனாகவும் பழகும்படி செய்கிறதைப் பார்த்து விஸ்மயப்படுகிறார்.

ஸதாசார்யர்களும் அப்படியே தாங்கள் ஸௌலப்ய ஸௌசீல்யங்களைக் காட்டுமிடமெல்லாம் தங்களுக்கு வச்யனான பகவானையும் ஸுலபனாகவும் ஸுசீலனாகவும் இருக்கும்படி செய்கிறார்கள். எங்கே ஆசார்யகடாக்ஷம் விழுகிறதோ, அங்கெல்லாம் பகவத்கடாக்ஷமும் உண்டாகிறது என்பதும் ஸூசிதம்.

(௯௰) சராசராணி நியந்துஸ்த்ராணாவநி அநிதம்பரதாரா
ஶௌரே: । சரமபுருஷார்த்தஸ்ய வித்யாஸ்த்ராண சர
ணாவநி பிபர்ஷி வேஶ்மஸு ஸதாம் ॥ (௪௦)

இதி ஸ்ரீ கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய
க்ருதிஷு ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
விதாநபத்ததி: த்ரிம்ஶீ ॥

(பதவுரை) ஹே த்ராணாவநி - ஓ பகவானுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே !, (த்வம் - நீ) * அநிதம்பரதாரா(ஸதீ)-இந்தக்காரியத்தில் முக்ய கவனிப்பு இல்லாதவளாக இராதவளாய்க்கொண்டு, அதாவது மிகவும் முக்ய கவனிப்புள்ளவளாய்க்கொண்டு, சராம்-ஜங்கமவஸ்துக்களையும், அசராணி-ஸ்தாவரவஸ்துக்களையும், நியந்து:-ஏவுகிறவராகஇருக்கிற, ஶௌரே: - ஸ்ரீரங்கநாதனுடைய, சரம - கடைசியான, புருஷார்த்தஸ்ய - புருஷார்த்தத்தினுடைய, வித்ய - ஜ்ஞானத்தை, த்ராண - காப்பாற்றுகிறதாக இருக்கிற, சரணௌ - திருவடிகளை, ஸதாம் - ஸாதுக்களுடைய, அதாவது ஜீவாத்ம பரமாத்ம விஷயமான உண்மையான ஜ்ஞானமுடையவர்களாய் முமுக்ஷுக்களான பெரியோர்களுடைய, வேஶ்மஸு - வீட்டு உள் ப்ரதேசங்களில், அதாவது வீட்டிலுள்ள பூஜாப்ரதேசங்

* இதம்பரா என்றால் இதில் முக்ய அபிஸந்தியுள்ளவள், அதோடு நதரா என்று சேர்த்தால் அப்படி கவனிப்பு இல்லாத என்றாகும். அதோடு 'அ' என்கிற நிஷேதத்தையும் சேர்த்து அநிதம்பரதரா என்றால் கவனிப்பில்லாததாக இல்லாதது அதாவது விசேஷநோக்குள்ளது என்று தாத்பர்யம்.

களில், திஸஸி - கொடுக்கிருய், அதாவது அவ்விடம் ஸ்ரீரங்க நாதனை ஆராதனுர்த்தமாக அழைத்துப்போகிருய்.

(கருத்து) ஓ பாதுகையே! நீ ஸர்வலோகநியந்தாவான ஸ்ரீரங்கநாதனையும் மிகவும் அகிஞ்சனர்களான ஸாதுக்களுடைய வீட்டிலுள்ள பூஜாகிருகத்திற்குள் அவர்களால் ஆராதிக்கப் படும்படி பரமஸுலபமாக எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்து விடுகிருய். அந்த திருவடிகளுடைய ஸேவையும் ஆராதனமும் அவர்களுக்கு என்ன பண்ணுகிறதென்ருல், தர்மார்த்த காம மோக்ஷங்கள் என்கிற நாலு புருஷார்த்தங்களில் மூன்றில் புத்தி செல்லவிடாமல் பண்ணி, கடைசியான புருஷார்த்தமாகிய மோக்ஷ விஷயத்திலேயே ஜ்ஞாநத்தையும் விருப்பத்தையும் கொடுத்து அவர்களைக் காப்பாற்றிவிடுகிறது. இதுவிஷயத்தில் உனக்குள்ள அபிஸந்தியானது மிகவும் ஆச்சரியகரமானது என்று இப்படி பாதுகையானது ஸாதுக்களுடைய ஆராதனத்துக்குத் தான்மட்டும் எழுந்தருளாமல் பகவானுடைய திருவடிகளையுங்கூட ஸம்பாதித்துக்கொடுப்பதை நினைத்துப் புகழுகிருர். (அதாவது பகவானும் பாதுகையும் ஸாதுக்களுடைய வீடுகளில் அர்ச்சாரூபமாக ஆராதிக்கப்படுகிருர்கள் என்பதும், அது பாதுகாநுக்ரஹத்தால்தான் ஏற்படுகிறது என்றும் தாத்பர்யம்)

ஸதாசார்யர்களும் அப்படியே தாங்களும் ஆச்ரிதர்களுடைய ஆராதனங்களை ஸுலபமாக அங்கீகரித்து, அவர்களுடைய தத்துவோபதேசத்தால் எல்லா ஆச்ரிதர்களையும் அவர்கள் வீடுகளில் தவராமல் ஸர்வேசுவரனை பகவானை ஆராதிக்கும்படிக்கும் செய்கிருர்கள் என்பதும் அப்படி பகவான் அவர்களுக்கு ஆராத்யமாவதும் ஸ்ரீ ஆசார்யர்களுக்காகத்தான் என்பதும், இல்லாவிட்டால் அப்படிக் கிடைக்கமாட்டார் என்பதும் இதனுல் ஸூசிதங்கள்.

இப்படி இந்த பத்ததியால் ஸ்ரீதேசிகன் முன் ப்ரகீர்ண பத்ததிப்படி அறியவேண்டிய ஸங்கதிகளை அறிந்த முமுக்ஷுக்கள் ஆத்மோஜ்ஜீவனத்திற்காகச் செய்யவேண்டிய உபாயத்தை (சரணுகதி பண்ணுவதை) தன் அனுஷ்டானத்தாலும், உபதேசத்தாலும் தெரிவிக்கிருர். அதிலும் அப்படிச் செய்யவேண்டிய சரணுகதியின் மாதிரிகளுக்குள் அகிஞ்சனர்களுக்கு மிக

வும் எளிதாகச் செய்யக்கூடியதும் நிச்சயமாக மோக்ஷத்தை ஸாதிக்கக்கூடியதுமான ஆசார்யநிஷ்டையே ஸர்வாதிகாரிகளுக்கும் க்ராஹ்யம் என்று திருவுள்ளம் பற்றி அதையே இதில் அனுஷ்டித்துக் காட்டுகிறார். மேலும் சரணாகதியைத்தான்நேரில் அனுஷ்டிக்கத்தகுந்த யோக்யதை இல்லாதவன் அப்படி அனுஷ்டித்தால் சரணாகதி எப்படி நிறைவேறாதோ, அப்படியே ஆசாரியன் அதற்கு வேண்டிய குணபூர்த்தியில்லாதவனாக இருந்தால் ஆசாரியனை அடைக்கலமாக அடைவதும் கார்யகரமாகாதாகையால், ஸதாசார்யர்களை அறிவதற்காக அவர்களிடத்திலிருக்கவேண்டிய உபாயதைக்கு உபயுக்தமான குணங்கள் முதலானதுகளையும் இதில் பாதுகாமுகத்தாலே வெளியிடுகிறார். இன்னும், அநாதிகாலமாக அநந்தமான பாபங்களால் ஏற்பட்ட பகவந்நிக்ரஹத்தால் ஒருவராலும் நீக்கமுடியாத இந்த ஸம்ஸாரபந்தத்தில் கட்டுண்டு துக்கத்திலேயே மூழ்கியிருக்கிற ஜீவராசிகளை மீட்க பகவானைப்போன்ற ஆச்சர்யசக்தி முதலானதுகளுள்ள உன்னாலல்லது மற்ற யாராலும் ஸாத்யமில்லையாகையால், நீயே எனக்கு ரக்ஷகியாகவேணுமென்று இந்த பத்ததியின் முதல் ச்லோகத்தால் ஸ்ரீ ஆசாரியர் ப்ரார்த்தித்தவாறே முன் 29 பத்ததிகளால் அந்தரங்க பக்தியுடன் தன்னை ஸ்துதிக்கக்கண்ட பாதுகையானது அவரிடத்தில் பரம ப்ரீதையாய் பரிபூர்ண கிருபையுடன், முன் ஸ்ரீ கிருஷ்ணபகவான் கலங்கின அர்ஜுனனை தன்னுடைய ஸர்வஜகத்சரீரகத்வ ஸர்வநியந்த்ருத்வ ஜகத்ஸம்ஹாரகர்த்ருத்வாதி வேஷங்களைத் தெரிவிக்கும்படியான தன் விச்வரூபத்தைக் காட்டித் தெளிவித்ததற்கும் மேலாக, ஸம்ஸாரத்திலிருந்து பீதரான இவருக்கு ரக்ஷணத்துக்கே ஏற்பட்டதும் அத்யந்த ப்ரீதி விசுவாஸங்களை உண்டுபண்ணக்கூடியதும் ஸர்வ பயங்களையும் போக்கக்கூடியதுமான தன்னுடைய ஸ்வரூப ரூப குண விபவ வ்யாபாராதிகளுடைய ஆச்சரியங்களை மானஸஸாக்ஷாத்காரத்தில் ப்ரத்யக்ஷமாகக் காட்டி மஹாவிசுவாஸத்தை உண்டுபண்ண, அவரும் அதையே அநந்ய சரணமாகப்பற்றி அதின் ஆச்சரியப்ரகாரங்களை சப்தாச்சர்யங்களும் அர்த்தாச்சரியங்களும் நிறைந்த பத்யங்களால் இரண்டாவது ச்லோகம் துடங்கி பாதுகையினிடத்தில் நேரில் விஜ்ஞாபிக்கிற மாதிரியிலும் அயலாருக்கு அதின் ஸங்கதிகளைக்

காட்டிச் சொல்கிற மாதிரியிலும் தான் ப்ரத்யக்ஷீகரித்தபடியே பேசுகிறார். 2-வது சுலோகத்தில் ப்ரத்யக்ஷத்திலும் 3,4 சுலோகங்களில் பரோக்ஷமாகவும் அதினுடைய ஆச்சரிய ரக்ஷணசக்தியைக் கொண்டாடி 5-வது சுலோகத்தில் தன்னுடைய ஆகிஞ்சின்யத்தை வெளியிட்டுக்கொண்டு சரணாகதி பண்ணி, 6,7,8 சுலோகங்களில் இங்கிருக்கும் காலத்தில் ஸ்வரூப உபாய புருஷார்த்தங்களில் நிஷ்டை, பாபங்களுக்கு பிராயச்சித்தம், கடைசி காலத்தில் அந்திமஸ்ம்ருதி முதலிய இஷ்டங்களைப் பிரார்த்தித்து 9 முதல் 13 சுலோகங்களால் ரக்ஷணோபயுக்தமாய் அதின் பரத்வ ஸௌலப்யஸூசகங்களான குணங்களை அனுஸந்தித்து அவைகளில் க்ருபையின் ப்ராதான்யத்தைக் கொண்டாடி அதனிடத்தில் பரமபக்தியை ப்ரார்த்தித்து 14 முதல் 16 சுலோகங்களால் அதின் உபகாரங்களைச் சொல்லி, 17-வதில் அது ஸ்வரூப குண வ்யாபாராதிகளால் பகவானைப்போன்றது என்று புகழ்ந்து 18-ல் க்ருபாரூபியாக இருந்து தன்னை உபாய விரோதி பாபங்களிலிருந்து ரக்ஷித்ததைக் கொண்டாடி, 19,20ல் தன்னை நிரஸ்த ஸமஸ்த பிரதிபந்தகபூர்வகமாக பகவானுடைய திருவடிகளில் சேர்க்கவேணுமென்று நேரில் பிரார்த்தித்து, 21-ல் வாத்ஸல்யகார்யமான காமசாராதிகளால் பகவானைப் போலளவில்லாத மஹிமையுள்ளதென்று கொண்டாடி, 22-ல் அதே வாத்ஸல்யகார்யமான தன் உத்ஸவாதிகளில் ஸர்வருக்கும் ஸர்வவரப்ரதானம் பண்ணும்படியான அதின் ஆபிமுக்யத்தை வெளியிட்டு, 23-ல் அது பகவானுடைய திருவடியை அவலம்பித்திருக்கிறதாலுண்டான அதின் ப்ரபாவத்தாலே அதின் அபிஷேகஜலம் முதலியதால் தன்னுடைய ஊஹிமஹே வ்ருதா (பகவானைக் கிட்டும்படி இருப்பதற்கு) விரோதிபாபங்களைத் துலைத்ததைச் சொல்லி, 24-வதில் ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதியில் வந்த மஹாபாபியான ஒரு ஆச்ரிதன் விஷயத்தில் அதின் புருஷகாரப்ரகாரத்தின் ஆச்சரியத்தைப் புகழ்ந்து, 25-முதல் 27-வரையிலுள்ள சுலோகங்களால் அந்த புருஷகாரத்தைப்பற்றி ப்ரஸக்தானுப்ரஸக்தியாக வந்த புருஷகாரத்துக்குக் காரணமான ஆச்ரிதவாத்ஸல்யத்தையும் வாத்ஸல்ய கார்யமான மற்ற வியாபாரங்களையும் சொல்லி விச்வாமித்ர யாகஸம்ரக்ஷணம் முதலான உதாரணங்களைக் காட்டி, 28-ல்

அதின் ரக்ஷணஸாமர்த்யத்தை நேரில் புகழ்ந்து, 29-ல் அதற்கு அப்படிப்பட்ட ரக்ஷணஸாமர்த்யமும் இன்னும் மற்றுமுள்ள பகவத்குணங்களும் பகவதாச்ரயணத்தால் வந்ததென்று கண்டு, 30-ல் மறுபடியும் பூர்வம் சொல்லப்பட்ட புருஷகாரவிஷயத்தையே அனுஸரித்து ரக்ஷணவிஷயத்தில் அதற்குள்ள தர்மஸூக்ஷ்மஜ்ஞானத்தையும், பக்ஷபாதமில்லாமையையும் பாபிகள் விஷயத்தில் வணக்கமாகிற ஒரு வ்யாஜத்தை மட்டும் அது எதிர்பார்ப்பதையும் வெளியிட்டு பாபிகளுடைய ரக்ஷணத்தை பற்றின ஆக்ஷேபங்களை விலக்கி, 31-ல் அது ரக்ஷணவிஷயத்தில் பரதந்த்ரையாக இராமல் எஜமானியாக இருப்பதைக்கண்டு ஸந்தோஷித்து, 32-ல் அது மஹாவிச்வாஸயோக்யமென்பதை வெளியிட்டு அதனிடத்தில் தஷைகசேஷத்வத்தை (அதற்கே ஆளாயிருப்பதை) நேரில் ப்ரார்த்தித்து, 33ல் அப்படியே அனுக்ரஹிக்கக்கண்டு ஸந்தோஷித்து அதற்கு ஜயம்பாடி, 34ல் அந்த தஷைகசேஷவ்ருத்தியை. தனக்கு நிலையாகக் காப்பாற்றிக்கொடுக்கவேணுமென்று நேரில் ப்ரார்த்தித்து, 35-ல் அப்படியே அந்த ஸதத (எப்போதுமுள்ள) சேஷவ்ருத்திக்கு ப்ரதிபந்தகமாகவுள்ள தன் பாபங்களைப் போக்குவதைக்கண்டு ஸந்தோஷத்துடன் விஜ்ஞாபித்து, 36-ல் க்ருதஜ்ஞதையடியாகத் தான் செய்யவிரும்பும் கிஞ்சித்காரங்களை அங்கீகரிப்பதற்கு தன் பூஜாகாலாதிகளில் நேரில் வரவேணுமென்று அதனிடத்தில் ப்ரார்த்தித்து, 37, 38-ல் அது அப்படியே அனுக்ரஹித்து அதிஸௌலப்ய ஸௌசீல்யங்களுடன் வந்து பழகி சேஷவிருத்திகளை அங்கீகரித்து பத்ரபுஷ்பாதிகளால் பரமஸந்துஷ்டையாம் ஒரு ஸகியைப்போல் ஸமானமாகப் பழகுவதைப் பேசி, 39, 40-ல் அது ஆச்ரிதரக்ஷணார்த்தமாக தனக்கு வச்யமான ஸர்வேச்வரனையுங்கூட நடத்திக்கொண்டு எங்கும் ஸஞ்சரித்து மற்ற ஸாதுக்களுடைய க்ருஹந்தோறும் பூஜாக்ருஹங்களில் பகவானையும் அழைத்துப்போய் தன்னைப்போல் அதிஸௌலப்ய ஸௌசீல்யத்துடன் பழகும்படி செய்து எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டு பகவானும் தானுமாக அர்ச்சாரூபத்துடன் எழுந்தருளியிருப்பதையும் காட்டக்கண்டு பேசுகிறார்.

இந்த பத்ததியில் பாதுகாமுகத்தால் காட்டப்பட்டபடி ஸதாசார்யர்களிடத்தில் உபாயத்துக்கு வேண்டிய குணங்களும் அவைகளின் விரிவும் கார்யங்களுமாவன— (1) விஶிஷ்டாசாரஶிக்ஷகத்வம், (2) ஸர்வகாமாநந்தந ஸர்வாதிகாரி யோக்ய ஸர்வஸமர்த்தஸாதக ஶ்ரேஷ்டோபாயப்ரகாஶகத்வம், ஆஶ்ரயார்த்தவாக்ப்ரதாநாநுக்ரஹஶீலத்வம், (3) ஸர்வலோகஶரண்யத்வம் (உத்க்ருஷ்டஜந்மவர்ணநீயத்வம், தந்யத்வம், உத்க்ருஷ்டஶ்ரேயஸ்ஸாதநத்வம், ஸர்வாபேக்ஷிதஸாதநப்ரௌத்க்ருஷ்ட்யவத்த்வம்). (4) ஸர்வஜ்ஞஸ்வபாவத்வம் (ஸம்ஸாரபாரஹர்த்ருத்வம், ஸம்ஸாரதீர்க்கதிமிரநாஶகத்வம்) (5) அநந்யஶரணஶரணத்வம் (அநந்தக்லேஶாபஹத்வம்) (6) அஞ்ஜலிஸ்துதியோக்யத்வம் (பாதகஹர்த்ருத்வேந ஸேவநீயத்வம்) (7) பகவத்தாத்பர்யாவதாரகத்வம் (தத்த்வ ஹிதஸ்வரூப ஸம்வ்ருத்த்யாதிகத்வம் (தயா விஷயவிஷயீஜநகத்வம்) (8) ஸர்வப்ராயஶ்சித்தப்ரதத்வம் (அகர்மஶோதநத்வம்), (9) பகவத்பதப்ரதாபகத்வம் (தைவப்ரக்ருதிநாஶகத்வம், தேஜஸ்விநாஸேவ்யஸஹ்ய தேஜஸ்விகத்வம்) (10) ஆஶ்ரிதஸம்ரக்ஷணஶீலத்வம் (உபாய ஸாதநஹேதுகத்வம், உபாயஸமஹேதுகத்வம்), (11) க்ருபாப்ரயாநத்வம் (ஹேயாபாவத்வம், பகவத்கடாக்ஷஸஹகாரித்வம், உபாயகாஷ்டாஸ்திதத்வம், ஸமகாஷ்டாஸ்திதத்வம், காந்திஹேது பகவத்கடாக்ஷகத்வம், தோஷவாரணஶீலத்வம்), (12) பாதஸேவாஸக்தி அஜ்ஞாநஜந்யஜநாஹிதாபஹத்வம் (ஸர்வப்ரவ்ருத்திநியந்த்ருத்வம் ஜ்ஞாநயோக்யத்வம், ஆஶ்ரிதஸமாஶ்ரயணாவஹத்வம்), (13) பக்தியோக்யத்வம் (பகவத்ஸம்பந்தத்வம், ப்ரீதிப்ரதிபாத்யத்வம், ஆஶ்ரிதபாலநத்வம், ஸஜ்ஜநஸாமீப்யத்வம், ஸாயுஜ்யஸம்பந்தஶீலத்வம், ஸர்வபாவ்யத்வம்), (14) லோகாநுக்ரஹைகரதத்வம் (ஸர்வஸம்பத்ஸஜ்ஜநஸேவகத்வம், அபீஷ்டதாயகத்வம்) (15) ஸர்வகாலப்ரதத்வம் (ஸாயுஜ்யதாயகத்வம், பராத்பரத்வம், ஶாஸ்த்ரப்ரவர்த்தகத்வம், ஸந்மார்க்கநிஷ்டத்வம்), (16) ஸகலஜநாராத்யத்வம் (ஸாயுஜ்யப்ரதப்ரகாஶித ஔத்க்ருஷ்ட்யவத்த்வம்), ஸர்வபீடிதஸேவ்யத்வம் (தாபத்ரயஶோஷ

வ்யாவாரஸாமெய்ராதிகவம் (உக) ஸமவதாஶ்ரயணஸ்ய தத்ஸ் ணவதம் (ஜஜூமெஸாவரவாவஹரவாஜொதகக்வம், உஸயவிஸஞ திரக்ஷகக்வ, ஶ்ரீ தஸ்ஸஸ்ஸாநரக்ஷகக்வம், ரக்ஷ்ய ஜநாரக்ஷகர க்ஷ்யஜநரக்ஷகவிஷயநிரூஹாநரூஹஸமெய்க்வம், ஸமவத நாஸவாநாகஞம ஶமெதமெதிவிவயுக்கவம், ஸமவதநாஸவ வ்யதிகஞமாஷம்காராதி விரோயிநிராஸகக்வம்) (30) ரக்ஷா விஷய தக்வஜூக்வம் (யமெஸஞக்ஷ்ஜூாநவக்வம், வெதாயு தக்வஜூக்வம், யத்நவதாமெவஷிவொவக்கவம், நதஜநவ்யஸாயக க்வம், நதிமெத்ருஸாவெக்ஷக்வம், ஸமவகவ்யரக்கவம்) (31) ரக்ஷண ஸூதத்வக்வ (ரக்ஷணொநாவஸமவகவ்யரக்கவம், கமெஜ தாமெதாமஸயீநமெநயொஶ்யக்வம், ஸூவிஹூாதித்ராஸிதத ஜநவக்வம், ரக்ஷாதஸ்யவ தக்வம், ரக்ஷாயுஸ்ஸூஸாஸஷாரவ க்வம்) (32) வரமெவ்யாவ்யக்வம், (மெஹாவிஶாஸயொஶ்யக்வம், ஸூ ஶெஷஷெதகரதிதாயகக்வம், கமெஸாயநமெமரஞவக்வம், உத்க்ருஷ்டமணவக்வம், ஸ்ரீஸஹாயாகணிதவரஷகார ஸஞதக்வம், மாநயொஶ்யஸவஶ்ரயஸாயந ஸஷாரவக்வம், ஸமவதநாஸவாதிஶாயிஸூஸொஶ்யதாவக்வம், ஸவரஞஷி க்வம், ஸவயுவ்யகாராநாஸாவ்யக்வம்,) (33) ஜயஶீமக்வம் (ஶிவ்யர ஸாநவக்வம், நிஜாநஸவஸூத்ர்யர ஸமெதிதாயிக்வம், மெஹஸூரஷி வஞஜி தக்வம், ஜயாஶீவரதயொஶ்யக்வம்) (34) கவரிமிதமெத ஜொவக்வம், (வநஜநநஸயவிமெரவக்கவம், தஜநவீஶா வஹக்வம், வெதவஸயாவஹக்வம், ஸூநிஷக்வம், உத்தாரஹாவஶ்ரீ தக்வம், தெஜஸாவஷிஜூதக்வம், ஶெஷக்வகாஷ்டாவாமிகா க்வம்,) (35) ஸததஶெஷவ்யதிவிரோயிவாவநிராஸகக்வம் (த மெநாஶகக்வம், ஶத்ருஶமெநதெஜொவக்வம், ஸக்வவிவ்யஷிகர க்வம், வாவநக்வம்) (36) ஶ்ரீதொதெஶ்யகாமமெநஶீமக்வம், (ஸ ஸஞரக்ஷகாவதாரவக்வம், ஶ்ரீதநொஷதஶநரஞவநொ ஷரஹிதக்வம், வாவநகிரணவக்வம், ஸாயஶ்ரெஷ்டக்வம், மொக ரக்ஷகாவதாவதாரவக்வம், கத்ருவ்த்ஸமவத்ஸ்ஜூமெஸவவக்வம், ஶ்ரீதஸமவத்ரணவ்யாவணாத்ரூவ்த்ஸவவக்வம், ஸமவத்ஸ மெ ஹிமாஷிக்வம், ஶ்ரீதஸமவத்ஸ மெஹிமாஷிக்வம், ஸமவதத்ரக்ஷ

[illegible] (37) [illegible] (38) [illegible] (39) [illegible] (40) [illegible]. இக்குணங்களின் அர்த்தங்களை தாத்பர்யார்த்தங்களிலிருந்து கண்டுகொள்வது. இப்படிப்பட்ட குணங்களையுடைய ஸதாசார்யர்கள் சாஸ்திரத்தில் சொல்லியபடி பகவத்ஸ்வரூபிகளே. பகவானால் கட்டப்பட்ட ஸம்ஸார பந்தத்தை அவிழ்க்க பகவானைப்போன்றவர்களும் பகவத்ஸ்வரூபிகளுமான அவர்களாலேதான் ஸாத்யம். அல்பஜ்ஞர்களும் அல்பசக்தர்களும், அல்பகுணமுடையவர்களும் ஸம்ஸாரருசியுள்ளவர்களுமானவர்களால் ஸாத்யமாகாதாகையால் கூடியவரையில் இக்குணவிசேஷங்களுள்ள மஹான்களையே ஆசார்யர்களாக வரிக்கவேணும் என்பது இந்த பத்ததியால் காட்டப்பட்ட ஸதாசார்யகுணங்களால் ஏற்படுகிறது.

சித்திரபத்ததி த்ரமிட வ்யாக்கியானம் முற்றிற்று.

[illegible] நம: ||

[illegible] நம: ||

[illegible] நம: ||

முப்பதாவதான

சித்ரபத்ததி

முற்றிற்று.

---



ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ||

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ||

ஸ்ரீரங்கநாததிவ்யமணிபாதுகாப்யாம் நம: ||

**ஸ்ரீ ரங்கநாதபாதுகாஸஹஸ்ரே**

**ஏகத்ரிம்ஶீ நிர்வேதபத்ததி: ||**



(௯௫௧) ஆஸேவ்ய பாதுகாம் தேவீம் பரவித்யாமிவ ஸ்வயம் | யாசேऽத்ய தீநநாதம் தயமாநோ ஜகத்த்ரயம் || (க)

அவதாரிகை.— முன் சித்திரபத்ததி நிகமனத்தில் காட்டியபடி 29 பத்ததிகளால் மிகுந்த ஆதராதிசயத்துடன் தன்னைப் பலபடியாக ஸ்துதித்துக் கொண்டாடி ஸம்ஸாரநிவர்த்தனத்தின்பொருட்டு தன்னை ப்ரபத்தி பண்ணின ஸ்ரீ தேசிகனுக்கு ஸ்ரீபாதுகையானது அவருடைய சரணாகதியைத் திருவுள்ளம் பற்றி, பரமகிருபையினால் விசேஷானுக்ரஹம் பண்ணுவதற்காக அவருக்குத் தன்னைப்பற்றின மானஸஸாக்ஷாத்காரத்தைக் கொடுத்து, அதில் தன்னுடைய ஆச்சரிய ஸ்வரூபரூபகுணவிபவவ்யாபாராதிகளை ப்ரத்யக்ஷமாகக் காட்டி, அவர் வேண்டினபடியெல்லாம் தத்வஜ்ஞானத்தையும் அநந்யார்ஹஸ்வஶேஷவ்ருத்தியையும் கொடுத்து, அவைகளுக்கு ப்ரதிபந்தகமாயுள்ள ஸகல பாபங்களையும் போக்கி, தன்னுடைய அதிவாத்ஸல்யஸௌலப்யஸௌசீல்யங்களைக் காட்டி, ஸரஸமாகப் பழகினதால் அவர் உலகத்தை மறந்து பரமபதத்தில் அனுபவிக்கக்கூடிய பரமானந்தத்தை இவ்விடத்திலேயே முக்ததுல்யமாக அனுபவித்துக்கொண்டிருக்குமளவில், அந்த மானஸ ஸாக்ஷாத்காரமானது நித்யமான அர்ச்சாரூபத்தில் வந்து முடியவே மேற்சொன்ன ஸாக்ஷாத்காரமும் அதினால் ஏற்பட்ட ஸந்தோஷானுபவமும் அதோடு முடிந்துவிட்டது. எல்லாம் ஸ்வப்னம் போலாய்விட்டது. ஸ்ரீபகவானுடன் கலந்து பாதுகையும்

தானுமாக அனுபவித்துவந்த அளவில்லாத பேரானந்தத்தி லிருந்து மாறி இந்த ப்ராக்ருதியாகிற பாழிலே குமதிகளும் பகவத்விமுகர்களும் ஸம்ஸாரரதர்களுமாகிற ஜனங்களின் மத்தி யிலும் யாரையும் தன் வசப்படுத்திக் கெடுக்கக்கூடிய பலமான இந்திரியங்களின் மத்தியிலும், காமக்ரோதாதிகளின் கோலா ஹலத்தின்மத்தியிலும்தன்னுடைய இருப்பாகிற துர்தசையைத் தூங்கி விழித்தவனைப்போல் தான் ப்ரத்யக்ஷீகரித்தவாரே பரம புருஷார்த்தத்தில் த்வரையாலும் ஸம்ஸாரத்தில் வெறுப்பாலும் திருவாய்மொழியில் ஸ்ரீ ஆழ்வாருக்குண்டான நிர்வேதத்தைப் போலொத்த நிர்வேதப்ராசுர்யத்தை (வருத்தத்தின்மிகுதியை) அடைந்துதன்னுடையதுர்தசையை பாதுகையினிடத்தில் முறை யிட்டுக்கொண்டு அலற்றுகிறார். அல்லது ஸம்ஸாரிகள் பாபத்தால் புத்தி இழந்து ஸம்ஸாரதுக்கத்தையும் இளப்பத்தையும் துக்க மாகவும் இளப்பமாகவும் அறியாமல் அதிலேயே போக்யதா புத்தியுடன் உழன்றுகொண்டு பகவான் விஷயத்தில் அடியோடு புத்தியைச் செலுத்தாமல் இருப்பதைப் பார்த்து அவர்களுக்கு உண்மையைத் தெரிவிக்கும்பொருட்டு இந்த பத்ததியில் ஸம்ஸா ரிகளுடைய இருப்பைத் தன்னிடத்தில் ஏறிட்டுக்கொண்டு புலம்பி ஸம்ஸாரருசியின் இளப்பத்தைத் தெரிவிக்கிறாராகவுமாம்.

இந்த முதல் சுலோகத்தில், சற்றுமுன் தன்னை ஸர்வ ப்ர காரமாகவும் காப்பாற்றுவதுபோல் நடித்து உடனே ஸம்ஸா ரத்தில் தவிக்கவிட்டு வேடிக்கை பார்க்கலாமாவென்று பாதுகை யினிடத்தில் வருத்தத்துடன் சொல்லி சீக்கிரத்தில் அதிலி ருந்து தன்னைக் கரையேற்றவேணுமென்று, அதனிடத்தில் சர ணாகதி பண்ணுகிறார்.

(ப-ரை) தெவீம் - விளங்காநிற்கிற (அதாவது குணத் தினால் விளங்காநிற்கிற) அல்லது விளையாட்டில் ப்ரியமுள்ளவ ளான, பாதுகாம் - பாதுகையை, ஃபவெஷ் - உபாயமாக நம்புகிறேன் (அதாவது இப்போது அனுபவித்துக்கொண்டி ருக்கிற ஸம்ஸாரதுக்கம் நீங்குவதற்கு உபாயமாக நம்புகிறேன்), யாம் - யாதொரு துகையை, வராவிஷ்ாஇவ - பாவித்யையைப் போல, அதாவது மோக்ஷஸாதநமான 'பக்தி, ப்ரபத்தி' என் கிற உயர்ந்ததான இரண்டுவித அறிவைப்போல, ஜமக - உல

கங்களுக்கு, * ப்ரதம: - ஆசார்யராக இருக்கிற, அதாவது முதல் ஆசார்யராக இருக்கிற பெருமாளானவர், தயாவாந: - தயவுள்ளவராய்க்கொண்டு, ஸ்வயம் - தானாகவே, தீநாநாம் - ஸம்ஸாரத்தில் வருத்தப்பட்டுக்கொண்டு இருப்பவர்களுக்கு, ப்ரயச்சதி - கொடுக்கிறாரோ.

(கருத்து) ஓ பாதுகையே! பகவான் அநாதிகாலமாக ஸம்ஸாரத்திலிருந்து வெளிக்கிளம்பமுடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற ஜீவராசிகளிடத்தில் பரம கருணையால் அவர்கள் ஸம்ஸாரத்திலிருந்து கடைத்தேறுவதற்கு உபாயமாக ஸ்ருஷ்டிகாலம் முதற்கொண்டே தானாகவே 'பக்தி ப்ரபத்தி' என்கிற இரண்டு வித்யைகளை வேதமூலமாக ஏற்படுத்திக் கொடுத்திருப்பதுபோல்,உன்னையும் ஒன்றாக ஏற்படுத்திக்கொடுத்திருக்கிறார். 1 அப்படிக் காப்பாற்றுவதற்கு ஏற்பட்ட நீ, ஆச்ரிதனை என்னை இன்னும் ஸம்ஸாரத்தில் தவிக்கவிட்டு வேடிக்கை பார்க்கிறாயே; நான் என்ன செய்வேன். அப்படிச் செய்வது உன் குணத்துக்குத்தான் அழகா? இல்லையே. ஆகை

---

* ஸ்ரீபகவான் முதலில் பிரம்மாவை ஸ்ருஷ்டித்தவுடனே ஸர்வ சாஸ்திரங்களுக்கும் மூலமாய் உத்தமசாஸ்திரமான வேதத்தை அவருக்கு உபதேசித்ததாகச் சொல்லியிருக்கிறது. பிரம்மா மற்றவர்களுக்கு உபதேசிக்கார். அப்படியே பரம்பரையாக நாளதுவரையில் வேத ஸம்ப்ரதாயமானது உபதேசக்ரமமாக வருகிறது. பக்திப்ரபத்திகள் வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கிறதுகள். ஆகையால் பகவான் எல்லாருக்கும் முதல் ஆசாரியன். ஸ்ரீ ஆழ்வாருடைய ஜ்ஞானஸந்ததியைச் சேர்ந்த நமக்கும் ஸ்ரீ பகவான் முதல் ஆசார்யன்.

1 ஆசார்யனிடத்திலிருந்து க்ரஹிக்கப்பட்ட பராவித்யையானது மோக்ஷஸாதனமாவதுபோல், பகவானிடத்திலிருந்து அடையப்பட்ட பாதுகையும் மோக்ஷஸாதனமாவதால், பாதுகை பராவித்யைபோல் ஆகிறது என்று உபமானம். பகவத்ஸங்கல்பத்தாலும் அனுக்ரஹத்தாலும் ஏற்படுகிற ஸதாசார்யர்களே நமக்கு மோக்ஷஸாதனமாகிறபடியால் அவர்களும் பராவித்யைபோலாகிறார்கள். பெருமாளிடத்திலிருந்து பாதுகையை அடைவதாவது பகவத்ஸந்நிதியில் ஸேவார்த்திகள் தலையில் ஸ்ரீசடாரியை ஸாதிப்பது. ஸ்ரீசடாரியை ஸாதித்துக்கொள்வது ஸம்ஸாரம் நீங்குவதற்குக் காரணமாகிறது என்று தாத்பர்யம்.

யால் உன்னை மறுபடியும் சரணமாக அடைகிறேன். என்னுடைய ஸம்ஸாரஸம்பந்தத்தை சீக்கிரத்தில் அடியோடு நீக்கி, முன் மானஸஸாக்ஷாத்காரத்தில் கொடுத்து மறைத்ததுபோலல்லாமல் சாச்வதமான பரமபுருஷார்த்தத்தைக்கொடுக்கவேணும்—என்று பிரார்த்திக்கிறார்.

ஜனங்கள் கடைத்தேறுவதற்காக பகவான் பக்தி ப்ரபத்திகளை ஏற்படுத்தியிருப்பதுபோல், ஸதாசார்யர்களையும் ஏற்படுத்தி இருக்கும்போது, ஜனங்கள் அதையறிந்து அவர்களை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கவில்லையே என்கிற உலகத்தைப் பற்றின நிர்வேதமும் இதில் அடங்கியது. ஒரு முமுக்ஷுவானவன் மோக்ஷார்த்தமான சரணாகதி அனுஷ்டிக்கப்பட்டபிறகு பகவத்ப்ராப்தியில் த்வரையுண்டாய் ஸம்ஸாரம் பிடிக்காமல் தபித்து நிர்வேத ப்ராசுர்யத்தை அடைந்தால் ஸ்ரீ ஆசார்யாளைக்கொண்டு சீக்கிரத்தில் * பரமபுருஷார்த்தத்தை ஸாதித்துக்கொள்ளலாம் என்பதும் இத்தால் ஏற்படுகிறது. (1)

அவ:— இப்படி முதல் சுலோகத்தில் பரமபுருஷார்த்த ருசியாலே த்வரித்து அதற்கு ப்ரதிபந்தகமான ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் சீக்கிரத்தில் போக்குவதற்கு பிரார்த்தித்தும் பாது

* உடனே மோக்ஷம் கிடைக்கும்படி ஏன் சரணாகதி பண்ணக்கூடாது; அப்படி ஏன் ஒருவருக்கும் கிடைக்கவில்லை? அப்படிக்காட்டினலன்றோ சரணாகதியை நம்பலாம் என்றால், அதின் உண்மை; ஸரியாக அனுஷ்டிக்கப்பட்ட பிரபத்திக்கு எந்த பலனையும் எம்மாதிரியும் கேட்டபோது ஸாதித்துக்கொடுக்கக்கூடிய சக்தி உண்டானாலும் சரணாகதி முடிந்தவுடன் மோக்ஷம் கொடுக்கவேணுமென்று ஒருவருக்கும் ஸ்ரீ ஆசாரியாள் பிரார்த்திக்கிற வழக்கமில்லை. ஏனென்றால் ஒருவருக்கும் ஆர்த்தப்ரபத்திக்கு அதிகாரமான தத்வஜ்ஞானத்தால் ஏற்படுகிற சரீராபிமான நிச்சேஷ நிவிருத்தியும் பகவான் விஷயத்திலுள்ள ஆவலால் அவனையடைவதற்கு ப்ரதிபந்தகமான சரீரஸம்பந்தத்தை க்ஷணங்கூட ஸஹிக்கமுடியாதபடி பரிபூர்ண பகவத்ப்ராப்தியிலுள்ள துடிப்பும் ஏற்படுகிறதில்லை. அப்படிப்பட்ட அதிகாரிகளை பழைய கதைகளில்தான் அபூர்வமாகக் கேட்டிருக்கிறோம். (ஸ்ரீபாகவதத்தில் சிந்தயந்தீ என்கிற ஒரு கோபஸ்திரீ முதலிய சிலர்; திருவாய்மொழியில் ஸ்ரீநம்மாழ்வார்.) அப்படிப்பட்ட அதிகாரி இப்போது உண்டானாலும் சரணாகதியால் உடனே மோக்ஷம் அடையலாம். ஆனால் சிலர் தங்கள் உண்மையைத்

கையானது ஒரு பதிலும் சொல்லாமலும் முன் பத்ததியில் தான் ப்ரார்த்தித்ததையெல்லாம் உடனே உடனே நிறைவேற்றினதுபோல் இப்பவும் செய்யாமலுமிருப்பதால், தன்னை இன்னும் வெகுகாலம் இந்த பூமியிலேயே வைக்க ஸங்கல்பித்திருப்பதாக நினைத்து, அக்காலமும் இவ்வளவென்று தெரியாத

---

தெரிந்துகொள்ளாமல் ஸம்ஸாரத்தில் கஷ்டத்தாலும் இஷ்டங்கள் நிறைவேறாததாலும் மட்டும் உண்டான மனக்லேசத்தால் ஸம்ஸாரத்திலடியோடு அலுப்பு வந்துவிட்டதாகவும், மோக்ஷத்துக்குத் துடிப்பதாகவும் தங்களுக்கு ஆர்த்தப்ரபத்தி பண்ணவேணுமென்றும் சொல்லுகிறார்கள். அவர்கள் ஸம்ஸாரத்தில் கஷ்டம், அவமானம், இஷ்டம் நிறைவேறாமை முதலியதால் ஆக்ரஹத்தாலோ, வெறுப்பாலோ ப்ராணனை விடத் துணிகிறவர்களைப்போலொத்தவர்களே தவிர தத்வஜ்ஞான பரமபக்தி பூர்த்தியுள்ள ஆர்த்தப்ரபத்தி அதிகாரிகளல்ல. அவர்களுக்குப் ப்ராணபயம் ஸம்ஸாரஸௌகர்யம் முதலியதைக் காட்டினால் அவர்களுடைய ஆர்த்தி புரிந்து விடும். ஆர்த்தப்ரபத்தி அதிகாரத்துக்கு வேண்டிய ஆர்த்தியதிசயம் (மிகுந்த வருத்தம்) இல்லாதவர்களுக்கு அவ்வித ப்ரபத்தி செய்துவைக்க நியாயமுமில்லை. அவர்களுக்கு இந்த சரீரத்திற்குக் காரணமான ப்ராரப்த கர்மமும் அதின் பலனான ஸுகதுக்கங்களும் உடனே நீங்கவும் நீங்காது. ஆனால், இதில்போல், ஸ்ரீதேசிகன் ஏன் உடனே ஆர்த்தப்ரபத்தி பண்ணாமல் கஷ்டப்படவேணுமென்றால்— ஸ்ரீதேசிகனைப்போன்ற அவதாரபுருஷர்களான ஸதாசார்யர்களுக்கு அப்படிப்பட்ட ஜ்ஞானபக்திகளின் பூர்த்தியினால் அதிகாரம் உண்டானாலும் உலகத்தின் நன்மைக்காக அவர்களை பகவான் இவ்விடம் வைக்க ஸங்கல்பித்திருக்கிறவரையில் இருக்கவேண்டியவர்களாகையால் மற்ற ஸம்ஸாரிகளைப்போல் பாப பாவனையும் துக்கபாவனையும் பண்ணி பரிபூர்ண ஜ்ஞானபக்திகளில்லாதவர்களைப்போல் தங்கள் நடத்தையால் ஸம்ஸாரிகள் இருக்கவேண்டிய மாதிரியைக் காட்டிக்கொடுத்துக்கொண்டு ஆர்த்தப்ரபத்தி பண்ணாமல் சிலகாலம் இங்கு வஸிக்கிறார்கள். ஸ்ரீராமாவதாரம் முதலியதில்போல் பகவானும் இங்கு அவதரிக்கும்போது அப்படியே ஸாமான்யமனுஷ்ய பாவனை செய்கிறான். அவர்களுடைய சரித்திரத்திலிருந்து நாம் நினைக்கவேண்டியதையும் செய்யவேண்டியதையும் மட்டும் அறிந்து கொள்ளவேணுமேதவிர அவர்களை நம்மைப்போலவே கர்மபத்தர்களாக நினைக்கலாகாது. ஆகையால் ப்ரபத்தியால் இந்த சரீரம் முடிந்ததும் மோக்ஷம் அடைவதற்கும் அதிக நிர்வேதம் உண்டானால் இந்த சரீரம் சீக்கிரம் முடியவேணுமென்று கேட்பதற்கும் குறையில்லை.

தால் அந்த புருஷார்த்த நினைவால் இவ்விடத்தில் அனுபவிக்கக் கூடிய புருஷார்த்தத்தில் ஈடுபட்டு அதின் ஆகர்ஷத்தில் அகப்பட்டு அத்தனையே விரும்பிப் பிரார்த்திக்கிறார்—

(௯௫௨) அபி ஜந்மநி பாதுகே பரஸ்மிந் அநகை: கர்மபி-
ரீத்ருசோ பவேயம் । ய இமே விநயேந ரங்க
பர்த்து: ஸமயே த்வாம் பதயோ: ஸமர்ப்பயந்தி ॥

(ப-ரை) பாதுகே - வாராய் பாதுகையே !, யே-யார் தொரு, இமே - இந்த உன் அர்ச்சகர்கள், விநயேந - வணக்கத்துடன், ஸமயே - அந்தந்த உசிதஸமயங்களில் (அதாவது ஆராதனத்தில் ஆறு ஆஸநகாலங்கள், வெளிஸஞ்சாரங்கள் இவைகளில்), ரங்கபர்த்து: - ஸ்ரீரங்கநாதனுடைய, பதயோ: - திருவடிகளிலே, த்வாம் - உன்னை, ஸமர்ப்பயந்தி - ஸமர்ப்பிக்கிறார்களோ, அநகை: - குற்றமில்லாதிருக்கிற அதாவது பாபத்தால் தடங்கலில்லாமலிருக்கிற, கர்மபி: - காரியங்களாலே அதாவது உன்னைபகவானுடைய திருவடிகளில்ஸமர்ப்பிப்பது முதலிய காரியங்களாலே, ஈத்ருச: - இவர்களைப் போன்றவனாக, பரஸ்மிந் ஜந்மநி - அடுத்த ஜன்மத்தில், அபி பவேயம் - ஆவேனா, அதாவது அடுத்த ஜன்மத்திலாவது அர்ச்சகனாகப்பிறந்து இங்கு உனக்கு கைங்கர்யம் பண்ணும்படியான பாக்யம் எனக்குக்கிடைக்குமா என்று தாத்பர்யம். 'அபி' என்கிற சப்தத்தின் தாத்பர்யத்தை 'பரஸ்மிந்ஜந்மநி' 'பவேயம்' என்கிற இரண்டு இடங்களிலும் சேர்த்துக்கொள்ளலாம்.

(கருத்து) ஓ பாதுகையே ! நான் பிரார்த்தித்தபடி எனக்கு நீ சீக்கிரத்தில் தேஹஸம்பந்தத்தைக் கழித்து பரம புருஷார்த்தத்தைக் கொடுக்காமல்போனால் போ. இவிடத்திலேயே இந்த அர்ச்சகர்களைப்போல மிகுந்த ப்ரீதியுடனும் வணக்கத்துடனும் உன்னை ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளில் தடங்கலில்லாமல் அந்தந்த உசிதகாலங்களில் ஸமர்ப்பிக்கிறது முதலிய உன்னுடைய கைங்கர்யங்கள் கிடைத்தால் அதுவே எனக்கு மோக்ஷம். தேசாந்திரத்தில் கிடைக்கத்தக்க வேறு மோக்ஷம் வேண்டியதுகூட இல்லை. அதற்கும் நான் கொடுத்து

வைக்கவில்லேயே, * அர்ச்சகனுகப் பிறக்கவில்லேயே. இன்னொரு ஜன்மமாவது கொடுத்து அர்ச்சகனுகப் பிறப்பித்து உனக்கு இவிடத்தில் நிரந்தரகைங்கர்யம் பண்ணும்படி செய்கிருயா? அந்த பாக்யமாவது எனக்குக் கிடைக்குமா? எங்கிருந்தாலும் உனக்கு இடைவிடாத கைங்கர்யம் பண்ணுவதுதானே மோக்ஷம் அதற்காகத்தானே அங்கு போகிறது. அது இங்கு கிடைத்து விட்டால் என்ன குறை—என்று மோக்ஷம் தாமதித்தவாறே அதற்கு பதிலாக இவிடத்திலுள்ள பகவத்பாதுகாகைங்கர்யத் தின் போக்யதாதிசயத்தில் ஈடுபடுகிருர். 1

ஸ்ரீ நம்மாழ்வாருடைய ப்ரபாவத்தை நினைக்கிறபோது ஸ்ரீமதுரகவிகளைப்போல அவருக்கு கைங்கர்யம் பண்ணவேணு மென்று ஸ்ரீ தேசிகனுக்குத் தோன்றி அப்படிச் செய்ய காலா தீதமாய்விட்டபடியால், மறுபடி ஆழ்வார் அவதரித்து தான் அப்போது மதுரகவியாக அவதரித்து கைங்கர்யம் பண்ணும் படியான பாக்யம் தனக்குக் கிடைக்குமா என்று அவர் அபி லாஷைப்படுகிறதுபோலும் ஸூசிதமாகிறது.

---

* ஸ்ரீரங்கத்திற்கு ரங்கநாதனை ஆராதிப்பதற்கு ஐந்து கோத்ரத் தார்கள் பெருமாளோடு கூடவே வந்ததாக ஸம்ஹிதையிலிருக்காம். ஆகையால் அவர்களைத்தவிர மற்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் ரங்கநாதனை ஆராதிக்கக்கூடாதாம்.

1 நினைத்ததையெல்லாம் தன் ஸங்கல்பத்தாலேயே ஸாதித்துக் கொண்டும் இச்சித்தமாத்திரத்தில் வேண்டினபடியெல்லாம் ரூபங்களை எடுத்துக்கொண்டும், வேண்டினதையெல்லாம் அடைந்துகொண்டும், காமசாரத்துடனும் எல்லேயில்லாத ஜ்ஞானசக்திகளுடனும் உபயவிபூதி களுடன் சேர்ந்த எல்லேயில்லாத இன்பமான பகவானை நேரில் பரி பூர்ணமாக அனுபவிக்கிறதாகச் சொல்லுகிற மோக்ஷபுருஷார்த்தமும், இவிடத்தில் அர்ச்சாரூபியான ஸ்ரீரங்கநாதனுக்கு பாதுகையை ஸமர்ப் பிக்கிறதாகிற கைங்கர்யமும் எங்கேயாவது ஸமமாகுமா? இது என்ன வெரும் ஸ்தோத்ரமா? கவியின் வர்ணனையா என்று நம்முடைய பாமரபுத்திக்கு ஸம்சயம் தோன்றலாம். நமக்கு உண்மையான ஜ்ஞா நமும் பக்தியும் சாஸ்திரவிச்வாஸமுமில்லாததால் அப்படி ஸம்சயம் எற்படக்கூடும். தத்வத்தை உள்ளபடி அறிந்தவர்களும் சாஸ்திரத் தில் பூர்ணநம்பிக்கையுள்ளவர்களும் பகவானிடத்தில் எல்லேயில்லாத பக்தியுள்ளவர்களுமான ஸ்ரீதேசிகனைப்போன்ற மஹான்களுக்கு உபய

விபூதிக்கும் எஜமானனாய் அளவில்லாத ஜ்ஞான, பல, ஐச்வர்ய, வீர்யம், சக்தி, தேஜஸ்ஸுக்கள் என்கிற பரத்வத்தைக் காட்டுகிற ப்ரதானமான ஆறு குணங்களுடையவராய், ஸர்வஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணுகிறவராய், மோக்ஷத்தைக் கொடுக்கிறவராய், பரம தயாமூர்த்தியான சேஷியாய் ஸர்வஸுக்ருத்தாயுமிருக்கிற அந்த பர வாஸுதேவனுக்கும் இப்போது ஆலயங்களில் ஒரு பேச்சும் பேசாத தாய், ஒரு ஜ்ஞானத்தையும் சக்தியையும் ப்ரத்யக்ஷமாகக் காட்டாத தாய் அசேதனத்தைப்போல் ஸர்வருக்கும் பராதீனமாய் எல்லாக் குற்றங்களையும் அவமானத்தையும் பொறுக்துக்கொண்டிருக்கிறதுமான இந்த அர்ச்சாரூபத்துக்கும் ஒரு வித்தியாஸமும் தோன்றுகிறதில்லை. சாஸ்திரங்களும் அப்படியே அந்த பரவாஸுதேவனேதான் தன்னுடைய சுத்தஸத்வமயமான திவ்யதிருமேனியோடும் பூர்ணமான ஜ்ஞாந சக்தி முதலிய குணங்களோடும் இந்த அர்ச்சாரூபத்தில் மந்திரமூலமாக வந்து எழுந்தருளியிருப்பதாகவும், இந்த அர்ச்சாரூபியான பகவானே ஸர்வஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் முதலிய காரியங்களையும் மோக்ஷப்ரதானத்தையும் செய்யக்கூடியவரென்றும், பிர்ம்மாதிகளாலும் அளவிடமுடியாத ப்ரபாவமுடையவரென்றும், முக்தர்களுக்கும் போக்யமானவரென்றும், பரம தயையினால் மற்றவிதமாகத் தன் ஸ்வரூபத்தைக் கண்டுபிடிக்கமுடியாத ஸம்ஸாரிகளால் ஸேவித்து ஆராதிக்கப்பட்டு அவர்களுக்கு க்ஷேமத்தைக் கொடுப்பதற்காக இப்படி ஒரு ரூபம் எடுத்துக்கொண்டிருப்பதாகவும் சொல்லுகிறது. ஸ்ரீ ஆழ்வார் தேசிகன் முதலான மஹான்கள் இந்த ஸங்கதிகளை சாஸ்திரத்தினாலேயே ப்ரத்யக்ஷம்போலறிவதோடு பகவதனுக்ரஹத்தால் இவைகளை நேரில் ப்ரத்யக்ஷிப்பதுமுண்டு. அப்படியே சித்ரபத்ததியில் ஸ்ரீபாதுகையானது எல்லா உண்மைகளையும் ஸ்ரீதேசிகனுக்கு நேரில் காட்டினதாகவும் ஏற்படுகிறது. ஆகையால் விசேஷ பகவத்பக்தியுள்ளவர்களும் பரிபூர்ண பகவதனுக்ரஹம் பெற்றவர்களுமான ஸ்ரீதேசிகனைப் போன்ற மஹான்கள் பரமபதத்தில் கிடைக்கும் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தையும் ஆநந்தானுபவத்தையும் இங்கு அர்ச்சாரூபியான எம்பெருமானிடத்தில் கிடைக்கும் கைங்கர்யங்களையும் அனுபவங்களையும் ஸமமாக பாவிக்கக் குறையில்லை.

ஆனாலும் பரமபதத்திலுள்ள எல்லையில்லாத ஒரு தடங்கலுமில்லாத பரிபூர்ண கைங்கர்யங்களுக்கும் அனுபவங்களுக்கும் இவிடத்தில் கால, தேச, அவஸ்தா, புருஷ, ஸுக்ருத பேதங்களால் ஏற்றச் சுருக்கமுள்ளதாய், ஸ்வல்பமாய், வெகு விக்னங்களோடு கூடியதாய்' அல்பமான ஜ்ஞான சக்தி முதலியதால் தடைபட்டதான கைங்கர்யாதி

அவ'— இப்படி இவிடத்திலுள்ள பகவத்பாதுகாகைங்கர்யத்தின் போக்யதாதிசயத்தை நினைத்தவாறே ஸ்ரீபாதுகானுக்ரஹத்தால் அப்படிப்பட்ட போக்யதாதிசயத்தைக் கண்டும் மனதானது அது ஒன்றிலேயே லயித்துப்போய் சுற்றுப்பட்டுள்ள மற்ற ஸம்ஸாரஸங்கதிகளையும் வியாபாரங்களையும் அடியோடு மறக்கவில்லையே, அவைகளிலும் செல்கின்றதே என்று மேல் சுலோகத்தால் வருத்தப்படுகிறார்—

(௯௫௩) ஸுரபதமஹிதா விதாநஹாரீ
ஸ்வபிதாநதாஸஸ வஹாதநஹா ।
ஸமாநாவி நமணி வாஸாகேஸா
ஸநவாருமபந ஸஹாலேவதீவிதுழ ॥ (௩)

களுக்கும் வித்யாஸமில்லையாவென்றால் இவிடத்திலுள்ளவைகள் அப்படி ஸங்கோச(குறைவு)விச்சேதங் (தடங்கல்) களுள்ளனவாக இருந்தாலும் பகவானைப்பற்றின ஒவ்வொரு ஸங்கதியை அனுபவிக்கிறமாதிரியிலும் அனுபவிக்கும்போதும் பரமபதத்திலுள்ளவர்களுக்கும் இவிடத்திலுள்ள தத்வவித்துக்களும் பரமபக்திமான்களுமான மஹான்களுக்கும் ஆநந்தத்தில் வித்யாஸமில்லை. பகவானிடத்திலுள்ள ஸ்வரூபரூபகுணாதிகளைப்பற்றின ஒவ்வொரு ஸங்கதியுமே பரமபதத்திலுள்ளவர்களாலும் அனுபவித்து மாளாதது. ஒரே ஸமயத்தில் பகவானுடைய எல்லா விசேஷங்களையும் முற்றிலும் அனுபவிக்கக்கூடியவர்கள் பரமபதத்திலும் கிடையாது. ஒவ்வொரு ஸங்கதியை நினைப்பவர்களுக்கு மனது அதிலேயே ஈடுபட்டு அதையும் முற்றிலும் அனுபவித்து முடிக்க முடியாமல் மற்ற ஸங்கதிகளையும் கவனிக்கமுடியாமல்போய்விடுகிறது. அப்படியே இவ்வுலகத்திலும் ஸ்ரீநம்மாழ்வார் ஸர்வேசுவரனும் ஸர்வநியந்தாவான (எல்லா உலகத்தை ஏவி நடத்துகிறவனை) பகவான் யசோதைப்பிராட்டியாகிற ஒரு இடைச்சியினால் உரலில் கட்டுண்டு அவள் ஒரு கழியை எடுத்து ஓங்க, அதற்கு பயந்து திருமேனி ஒடுங்கி ஏங்கி விம்மிவிம்மி அழுகிறதாகிற ஸௌசீல்யத்தைக் கண்டு அனுபவித்துத்தாளமாட்டாமல் 'எத்திறம்' 'எத்திறம்' என்று அதிலேயே ப்ரமித்து ஆறு மாதகாலம் மோஹித்துக்கிடந்ததாகச் சொல்லுகிறார்கள். ஆகையால் அப்படிப்பட்ட போராநந்தம் மஹான்களுக்கு இங்குமுண்டாகையால் இங்கு அர்ச்சாரூபவிஷயமான புருஷார்த்தத்தில் அப்படி ஈடுபட்டு "வேகுண்டவாஸேபி நமேபிலாஷ:" "ஏரார்முயல் விட்டு காக்கைபின்போவதே" என்னும்படி அதின் ஆகர்ஷகத்தில் அகப்படக்குறையில்லை. (2)

(ப-ரை) ஹே ஶௌரிபாதுகே - வாராய் ஶௌரி என்கிற பெருமாளுடைய பாதுகையே அதாவது ஆச்ரிதவாத்ஸல்யத்தால் சூரன் (வஸுதேவர்) என்கிற ராஜாவின் குலத்தில் வந்து அவதரித்த ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய பாதுகையே, பிதாமஹாதீந் - நம்முடைய பாட்டன், அவனுக்குப் பாட்டன், அவனுக்குப் பாட்டன் என்று பிர்ம்மா வரையிலுள்ள ஸர்வ ஜீவராசிகளையும் (பாதுகாபக்ஷத்தில் - அநேகம் பிர்ம்மாக்கள் முதலானவர்களையும்), பரிவர்த்தயிதா - சுற்றப்பண்ணுகிறதாக இருக்கிற (அதாவது க்ரமேண தொலைத்து வேறு வேறு மனுஷ்யர்களைப் புதிதுபுதிதாக உண்டுபண்ணுகிறதாயிருக்கிற), அஸௌ - இந்த, அநேஹா - காலமானது (காலம் என்கிற வஸ்துவானது), த்வமிவ - நீபோல, அநந்தம் - முடிவில்லாதபடி (பாதுகாபக்ஷத்தில்-பெருமாளை), வஹதி - ப்ரவஹிக்கிறது அதாவது நதீப்ரவாஹம்போல் ஓடிக்கொண்டேயிருக்கிறது (பாதுகாபக்ஷத்தில் - தூக்குகிறது), அத்யாபி - இன்னும் கூட, சித்தம் - என்னுடைய மனதானது, அநகம் - குற்றமில்லாத (அதாவது தன்னிடத்தில் ஒரு குற்றமும் இல்லாமல் போக்யமானதும், இதரர்களுடைய தோஷங்களைப் போக்கக் கூடியதுமான), த்யேயம் - த்யானம் பண்ண மனதுக்கு அகப்படும்படியான வஸ்துவாக இருக்கிற, த்வாம் - உன்னை, நாஸாதயதி - நன்றாக அடைகிறதில்லை; அதாவது மற்ற வஸ்துக்கள் தோன்றாதபடி உன்னை ஒன்றையே எப்போதும் விடாமல் நினைக்கிறதில்லை. இது என்ன என் பாபம் என்கிற வருத்தம்.

(கருத்து) ஜீவராசிகள் விஷயத்தில் எல்லையில்லாத வாத்ஸல்யமுடைய ஓ பாதுகையே! நீ கணக்கில்லாத * பிர்ம்மகல்பங்களாக ஜீவராசிகளை மறுபடியும் மறுபடியும் ஸ்ருஷ்டித்துக்கொண்டு (அதாவது ப்ரளயதசைக்குப்பின் அவைகளுக்கு புதிதாக சரீரங்களைக் கொடுத்துக்கொண்டு) இந்தத்தடவை ஸ்ருஷ்டியிலாவது ஜீவராசிகள் நம்மையும் பகவானையும் அறிந்து ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கலாகாதா என்னும் ஆசையினால் பகவானை எப்போதும் தூக்கிக்கொண்டு ஜீவன்களுக்குக் காட்டி ஸேவை ஸாதிப்

பதற்காக ஆவலுடன் காத்திருக்கிறாய். ஆனால் மிகவும் பாபிகளான இந்த ஜீவராசிகள் ஜந்மமரணங்களை மேல்மேலும் கொடுத்துக்கொண்டு ஒரு முடிவில்லாமல் சுற்றிக்கொண்டேயிருக்கிற காலசக்ரப்ரவாஹத்தில் அகப்பட்டு அடித்துக்கொண்டு போகப்பட்டு உன்னையறியாமலும் ஆச்ரயிக்காமலுமே ஸம்ஸாரத்தில் நஷ்டமாய்விடுகிறதுகள். அப்படிப்பட்ட பாபிகளுக்குள் ஒருவனான நானும் அநாதிகாலமாக இதுவரையில் உன்னை இழந்துவிட்டேன். இப்போது ஏதோ ஒரு ஸுக்ருதத்தை வ்யாஜமாகக்கொண்டு உன்னால் அநுக்ரஹிக்கப்பட்டு உன்னை

---

* குறிப்பு— ஆயிரம் சதுர்யுகம் (ஒரு சதுர்யுகமாவது க்ருத, த்ரேதா, த்வாபர, கலி என்று நான்கு யுகங்களாக நம்முடைய வருஷக்கணக்கில் 43-லக்ஷத்துச்சொச்சமுள்ளது) பிர்ம்மாவுக்கு ஒரு பகல். இந்தப் பகலில் உலகங்கள் இருக்கின்றன (அப்போது ஸ்ருஷ்டி ஸ்திதி). அப்படியே ஆயிரம் சதுர்யுகம் பிர்ம்மாவுக்கு ஒரு இரவு. இந்த இரவில் உலகங்கள் அழிந்துபோய்விடுகின்றன (ப்ரளயம்). இந்த நாள்கணக்குப்படி பிர்ம்மாவுக்கு நம்மைப்போல் வருஷக்கணக்கும் ஆயுஸ்ஸும். பிர்ம்மாவின் ஆயுஸ்ஸு முடிந்துவிட்டால் அப்போ மஹாப்ரளயம். அப்போது எல்லா ஜீவராசிகளும் ப்ரக்ருதியும் பகவானிடத்தில் ஸூக்ஷ்மாவஸ்தையோடு லயித்துப்போய்விடுகின்றன. அந்த தசையில் ஜீவன்கள் அசேதனத்துக்கு ஸமமாக ஒரு யோக்யதையும் ஸுகதுக்கானுபவமும் அற்று ஆத்மக்ஷேமத்தைத் தேட வழி இல்லாமல் மங்கிப்போயிருக்கிறதுகள். அப்படியே வெகுகாலம் ப்ரளயமாகவே இருக்கிறது. பிறகு பகவான் ஜீவராசிகள் க்ஷேமத்தையடைய வேணுமே என்று பரமக்ருபையால் மறுபடியும் ஒரு பிர்ம்மாவையும் உலகத்தையும் ஸ்ருஷ்டிக்கிறார். இந்த ப்ரக்ருதிமண்டலத்தில் ஒரு பிர்ம்மாவின் ஆளுகைக்குட்பட்ட ப்ரதேசத்துக்கு 'பிர்ம்மஅண்டம்' என்று பெயர். அப்படியே ஒரு பிர்ம்மாவின் காலத்துக்கும் பிர்ம்மகல்பம் என்று பெயர். இப்படிக் கணக்கில்லாத பிர்ம்மாண்டங்கள் இந்த ப்ரக்ருதிமண்டலத்தில் இருக்கின்றன. ஒவ்வொரு பிர்ம்மாண்டத்திலும் அநாதிகாலமாகக் கணக்கில்லாத பிர்ம்மாக்களும் ஸ்ருஷ்டிகளும் ஏற்பட்டிருக்கின்றன. ஒரு பிர்ம்மாவின் பகலுக்குள்ளேயே ஒவ்வொரு ஜீவன்களும் கணக்கில்லாத ஜந்மங்களை எடுக்கிறார்கள். ஆகையால் நாம் எவ்வளவு காலமாக பகவானையடையாமல் ஸம்ஸாரத்தில் கஷ்டப்படுகிறோம் என்பதை யோஜித்துப் பார்க்க வேணும்.

அறிந்தேன். உன்னிடத்தில் போக்யதாபுத்தியும் உண்டாச்சுது. இப்போதாவது ஸம்ஸாரஸங்கதிகளையும் வியாபாரங்களையும் அடியோடு நினையாமல், உன்னை ஒருத்தியையே ஸர்வகாலமும் இடைவிடாமல் த்யானித்து அநுபவித்துக்கொண்டு இருக்கக்கூடாதா ? ஜந்மாந்திரபாபவாஸனையால் இன்னும் என்னுடைய மனதானது உன்னிடத்திலேயே நிலைகொள்ளாமல் ஸம்ஸாரஸங்கதிகளிலும் பிரவர்த்திக்கிறதே. இது என்ன என் பாபம் என்று வருத்தப்படுகிறார்.

ஒரு ஜீவன் ஸதாசார்யாளையும் பகவானையும் அறிந்து சரணமடைந்தால்தான் மோக்ஷம் பெறலாம். நாம் அநாதிகாலமாக அவர்களையறியாமல் இந்த ஸம்ஸாரத்தில் கஷ்டப்படுகிறோம். ஏதோ ஒரு மஹாஸுக்ருதத்தால் இப்போது அவர்களைக் கொஞ்சம் அறிந்தாலும் அவர்களிடத்தில் எங்கே ப்ரீதி வருகிறது. ஒவ்வொருவரும் தங்களுக்குப் பிள்ளைபெண்டாட்டி ஸொத்து முதலிய ஸம்ஸாரஸங்கதிகளில் எவ்வளவு ப்ரீதி இருக்கிறதோ, அவ்வளவு ப்ரீதி பகவானிடத்திலும் ஆசார்யாளிடத்திலும் இருக்கிறதா என்பதை உள்ளபடி யோஜித்துப் பார்க்கவேணும். உண்மையான ஸங்கதியை தனக்கும் அயலாருக்கும் ஒளிக்காமல் கவனித்தால் பகவானும் ஆசார்யாளும் நமக்கு ஒரு கணக்கிலேயே சேர்ந்தவர்களில்லை. நாம் நமக்கு ப்ரியமான பந்துஜனங்களை எவ்வளவு நாள் பார்க்காமல் பிரிந்திருப்போம், அவர்கள் விஷயத்தில் எவ்வளவு பணம் செலவழிப்போம், எவ்வளவு ஸொத்து சேர்ப்போம், எவ்வளவு கஷ்டங்களை ஸஹித்துக்கொண்டு பாடுபடுவோம், எவ்வளவு ஸுகம் அநுபவிப்போம் என்பதையும் அதே ஸங்கதிகளில் ஆசார்யாள் விஷயத்திலும் பகவான் விஷயத்திலும் எப்படி நடக்கிறோம் என்பதையும் கவனித்தால் நமக்கு உண்மை வெட்டவெளிச்சமாகும். பந்துஜனங்கள் நம்மை ஸம்ஸாரத்தில் அழுத்துகிறவர்கள்; ஆசார்யாள் நம்மை ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றுகிறவர்கள். அப்படியிருக்க ஆசார்யாளிடத்தில் நமக்கு உண்மையானதும் பூர்ணமானதுமான பக்தி வரவில்லையே என்று இந்த சலோகத்தால் தான் வருத்தப்பட்டு நமக்குக் காட்டிக்கொடுக்கிறார். (3)

அவ:— அப்படி ஸம்ஸாரஸங்கதிகளை அடியோடு விட்டு அது ஒன்றையேபற்றி நினைத்து ஸுகப்படும்படியான ஸங்கதி பகவானிடத்திலும் பாதுகையினிடத்திலும் என்ன இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொண்டு அப்படிப்பட்ட விஷயத்தைவிட்டு மற்ற ஸம்ஸாரஸங்கதிகளிலும் மனது நாடுகிறதே என்று மேலும் வருத்தப்படுகிறார்.

(கூ௱ச) கமலாத்யுஷிதே நிதௌ நிரீஹே
ஸுலபே திஷ்டதி ரங்ககோஶமத்யே |
த்வயி தஸ்ய ப்ரதிஶம்ஸநே ஸ்திதாயாம்
பரமநிர்வ்ருதி பாதுகே மநோ மே || (ச)

(ப-ரை) ஹே பாதுகே - வாராய் பாதுகையே! கமலாத்யுஷிதே - மஹாலக்ஷ்மியால் வஸிக்கப்பட்டதும் (புதயல் விஷயத்தில்—தாம்ரபாத்திரத்தில் இருக்கப்பட்டதும் ‘கமலம்’ என்பதற்கு தாம்ரம் என்று ஒரு அர்த்தமுண்டு), நிரீஹே - ஆசையில்லாததும் (பகவானுடைய அவாப்த ஸமஸ்தகாமத்வத்தைச் சொல்லுகிறது), அல்லது ஆசையைப் போக்கடிக்கிறதும் அதாவது ஆசைக்கும் மேலானதாக இருப்பதால் ஸ்வல்பத்தை ஆசைப்படுவதைப் போக்கடிக்கிறதான என்று தாத்பர்யம். (புதயல் விஷயத்தில்—ஆசைப்பட்டதற்கும் மேலானதான), ஸுலபே - ஸுலபமானதுமான, அதாவது உயர்ந்தவர்களுக்கோ தாழ்ந்தவர்களுக்கோ ப்ரீதி ஒன்றினாலேயே எளிதாக அடையப்படக்கூடியதான (புதயல்விஷயத்தில்—ரொம்ப சிரமப்பட்டுத் தேடி வெட்டியெடுக்கவேண்டாதபடி ஸுலபமாய் கிடைக்கக்கூடியதான), நிதௌ - ஸ்ரீரங்கநாதனுகிற புதயலானது, ரங்க - ரங்கவிமானமாகிற, கோஶ - க்ருஹத்தின் (புதயல் விஷயத்தில்—ரஹஸ்யமான இடத்தின்) மத்யே - நடுவிலே (புதயல்விஷயத்தில்—பந்தோபஸ்தான இடத்திலே) திஷ்டதி (ஸதி) - இருக்கும்போதும், தஸ்ய - அந்த ஸ்ரீரங்கநாதனுகிற புதயலினுடைய, ப்ரதிஶம்ஸநே - காட்டிக்கொடுக்கிற விஷயத்தில், த்வயி - நீ (புதயல் விஷயத்தில்—ஒரு மந்திரவாதி என்று வைத்துக்கொள்ளவேணும்), ஸ்திதாயாம் - இருக்

கும்போதும், மே - என்னுடைய, மந: - மனதானது, அந்யம் - வேறொன்றை அதாவது உங்களிருவரைத்தவிர வேறொன்றை, அந்விச்சதி - தேடுகிறது, அதாவது தேடுகிறதே என்கிற வருத்தத்தைச் சொல்லுகிறது.

(கருத்து) ஓ பாதுகையே! உலகத்தில் ஒரு பரம தரித்ரனுக்கு அவன் இருக்கும் இடத்திலேயே ஏராளமான புதயல் ஸுலபமாக எடுக்கும்படி மறைந்திருப்பது தெரிந்து அந்தப் புதயலைக் காட்டி எடுத்துக்கொடுக்கக்கூடிய மந்திரவாதியும் அகப்பட்டால், அதை விட்டுவிட்டு தன் ஸௌக்யத்திற்காக வேறு சிரமப்பட்டு ஸ்வல்பபணம் ஸம்பாதிக்கிற வியாபாரத்துக்குப் போவானா? அப்படி அவன் போவனானால் அவனைக் காட்டிலும் பரமதரித்ரனும் பாபியும் துர்பாக்யசாலியும் உண்டா. இந்த லோகந்யாயம் ஆத்ம பரமாத்ம விஷயத்தில் தோன்றவில்லையே. ஸம்பத்துக்கு அதிஷ்டானதேவதை ஸ்ரீமஹாலக்ஷ்மி. பகவான் அந்த மஹாலக்ஷ்மிக்கும் ஸம்பத்தாயிருக்கிறான். இப்படிப்பட்ட மஹாலக்ஷ்மியோடு சேர்ந்த பகவானாகிற மஹா ஸம்பத்து எனக்குக் கிட்டினதான இந்த ஸ்ரீரங்கவிமானத்திலேயே குடிகொண்டிருக்கிறது. அதை எனக்குக்காட்டி எடுத்துக்கொடுப்பதற்கு நீயும் ஸ்வயம்ப்ரயோஜனமாகக் கார்த்திருக்காய். * அந்த ஸம்பத்து ஒன்றை மட்டும் அடைந்துவிட்டால் என் ஆத்மாவைப்பிடித்த தாரித்ரியமெல்லாம் இருந்தவிடம் தெரியாமல் போய்விடும். குணத்தினாலும் அழகினாலும் இன்பமாக அனுபவிக்கக்கூடியதில் அதற்குமேல்பட்டதில்லை. அதற்குமேல் அடையவேண்டியது வேறொன்றும் கிடையாது. அப்படிப்பட்ட பகவானோ என்னிடத்தில் வருவதற்கு ஒரு ப்ரதி ப்ரயோஜனமும் எதிர்பார்க்கவில்லை. என் க்ஷேமமேதான் அவருக்கு ப்ரயோஜனம். அந்த பகவானை அடைந்துவிட்டால் மற்ற அல்பபுருஷார்த்தங்கள் தோன்றவே தோன்றாது. அப்படிப்பட்ட எல்லையில்லாத உயர்ந்த வஸ்துவான பகவானும்

---

* பாதுகை பகவானை நமக்குக் கொடுப்பதாவது— ஸ்ரீசடாரி மூலமாக நமக்கு பகவத்ஸம்பந்தம் கிடைப்பது; நாம் பெருமாளை ஸேவிக்க கோவிலுக்குப் போகாவிட்டாலும் வீதிகளில் நம்மாத்து வாசலில் பெருமாளை எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்து காட்டுவது.

அதைக் கொடுப்பதற்கு நீயும் ஸுலபமாக இருக்கும்போது உங்களிரண்டு பேரையும் விட்டு அல்பமானதும் ப்ரதிப்ரயோஜனத்தை எதிர்பார்க்கிறதும், ஆத்மாவுக்கு ஸுகத்தை உண்டு பண்ணுமல் துக்கத்தையே விளைவிக்கக்கூடியதும், ரூபத்தாலும் குணத்தாலும் வேலையாலும் மிகவும் இளப்பமானதும், வெகு சிரமப்பட்டு உபசரித்து திருப்தி பண்ணவேண்டியதுமான ஸம்ஸாரத்திலுள்ள பிள்ளை பெண்டாட்டி முதலிய வஸ்துக்களிடத்திலும் என் மனது செல்கின்றதே. ஐயோ! என் பாபத்தை என்னவென்று சொல்கிறது—என்று வருத்தப்படுகிறார்.

நாமாக பகவானைத் தேடாவிட்டாலும், நமக்கு பகவானைப் பற்றி ஒன்றும் தெரியாவிட்டாலும், ஸ்ரீ ஆசார்யாள் நமக்கு பரம ப்ராப்யமான பகவானுடையவும், பகவானைப் பற்றின ஸங்கதிகளினுடையவும் உயர்த்தியையும், நமக்கு த்யாஜ்யமான ஸம்ஸாரத்தைப்பற்றின இளப்பத்தையும், கிருபையினுல் ப்ரதிப்ரயோஜனத்தை எதிர்பாராமல் வலுவில் காட்டிக்கொடுக்கும் போதும், நாம் பகவானையும் ஆசார்யாளையுமே பற்றுமல் அல்பமாய் ஸ்வார்த்தபரதையாய் (தன் ப்ரயோஜனத்தையே தேடும் ஸ்வபாவமுள்ளதாய்) நமக்கு நாசகரமுமான ஸம்ஸாரத்திலேயே ஈடுபடுகிறோம். ஸம்ஸாரத்திலிருந்து நம்மைக் கரையேற்றுகிற பகவானிடத்திலும் ஆசார்யாளிடத்திலும் அப்படிப்பட்ட அபிநிவேசம் வருகிறதில்லை. இதைக்காட்டிலும் மேலான பாபமும் கஷ்டமும் தாரித்ரியமும் ஆத்மாவுக்கு என்ன இருக்கிறது என்கிற உலகத்தைப் பற்றின வருத்தத்தையும் காட்டுகிறது. இன்னும் புதையல் திருஷ்டாந்தத்தால், புதையலானது பூமியை வெட்டும் காலத்தில் அதையடைய ப்ராப்தியில்லாதவர்களுக்கு கண்ணில் தென்பட்டாலும் புதையலாகக்காணப் படாமல் மற்ற உபயோகமில்லாத வஸ்துவாகத் தென்படும் என்று சொல்வதுபோல் ஸ்ரீபகவானும் ஸதாசார்யர்களும் சில ஸுக்ருதிகளுக்கு உள்ளபடியே தென்பட்டாலும் மஹாபாபிகளான அநேகம் ஸம்ஸாரிகளுக்கு அவர்களுடைய ப்ரபாவம் காணப்படுகிறதில்லை. ஆகையால் அவர்கள் விஷயத்தில் பாபிகள் ஆச்ரயிக்காமலிருப்பதுதவிர உதாஸீநபரத்வேஷாதிகளையும் பண்ணி இன்னும் கெட்டுப்போகிறார்கள். இப்படி ஒரு

பாபத்தின் கொடுமை இருக்கிறதே என்கிற வருத்தமும் காட்டப்படுகிறது. (௪)

அவ:— இப்படி தான் அநேக ஜந்மாந்திரபாபவாஸனை யால் விஷயங்களில் ருசியால் மனோஜயமடையாமல், பகவா னுடையவும் பாதுகையினுடையவும் போக்யதையைக் கண்டும் அவைதன்னையே நினைக்கமுடியாமல் ஸம்ஸாரஸங்கதிகளிலே ஓடி னாலும் மிகவும் ஹிதபரையாய் ஆச்ரிதவாத்ஸல்யமுடைய பாது கையானது தன்னை அவைகளிலிருந்து திருப்பாமல், உபேக்ஷிக் கலாமாவென்று மேல்சுலோகத்தால் முறையிடுகிறார்—

(௯௫௫) யத்யப்யஹம் தரலதீர்ந ஸ்மரேயம்
ந ஸ்மர்த்தும் அர்ஹஸி கதம் பவதீ ஸ்வயம் மே ।
வத்ஸே விஹாரகுதுகம் கலயத்யவஸ்தா
கா நாம கேஶவபதாவநி வத்ஸலாயா: ॥ (௫)

(ப-ரை) ஹே கேஶவபதாவநி - வாராய் கேசவன் என்கிற திருநாமமுடைய பகவானுடைய பாதுகையே (அதா வது வாத்ஸல்யாதிசயத்தாலே தன்னுடைய புத்ரனான பிர்ம் மாவையும் (க:) பேரனான சிவனையும் (ஶர்வம்) தன்னுடைய நாபிஸ்தானத்திலும் பார்சுவத்திலும் வைத்துக்கொண்டு காப்பாற்றுகிற பகவானுடைய பாதுகையாகையால் அவரைப் போல் மிகவும் வாத்ஸல்யமுடையவளே என்று தாத்பர்யம்) தரலதீ: - சபலபுத்தியுடையவனான, அஹம் - நான், தவ - உன்னை, ந ஸ்மரேயம் யத்யபி - நினைக்காமலிருக்கலாம், பவதீ - நீயானவள், ஸ்வயம் - தானாகவே, மே - என்னை, ந ஸ்மர்த்தும் - நினைக்காமலிருப்பதற்கு, கதம் - எப்படி, அர்ஹஸி - தகுந்த வளாகிறாய், வத்ஸே - கன்றுக்குட்டியானது, விஹார - விளை யாட்டிலே, குதுகம் - ஆசையை, கலயதி (ஸதி) - பண் ணுகிறபோது, வத்ஸலாயா: - கன்றினிடத்தில் ஆசையுள்ள பசுவினுடைய, அவஸ்தா - இருப்பானது, கா நாம - என்ன மாதிரியாக உள்ளது; அதாவது அந்தப் பசு கன்றைப்பற்றி எப்படித் தபிக்கிறதோ அப்படி நீ என் விஷயத்தில் இருக்க வேண்டாமா என்று கருத்து.

(கருத்து) பகவானைப்போல் ஆச்ரிதர்கள் விஷயத்தில் மிகுந்த வாத்ஸல்யமுடைய ஓ பாதுகையே! புதிதாகக் கன்று போட்ட ஒரு பசுவானது தன்னுடைய இளங்கன்று தன்னை ஊட்டிவிட்டு விளையாட்டில் குதூஹலத்தால் துள்ளிக்கொண்டு தன்னைப் பிரிந்து ஓடிப்போய்விட்டால், அது என்ன பாடு படுகிறது, உறுமுகிறது. கன்றைத்தொடர்ந்து ஓடுகிறது. கன்றுக்கு என்ன ஆபத்து வந்துவிடுமோவென்று பயந்து யாராவது அதின் கிட்டே போனால் அவர்களை முட்டப்போய்த் துரத்திக் கன்றைக் காப்பாற்றுகிறது. ஒரு மிருகஜாதி அப்படிப்பட்ட வாத்ஸல்யம் பாராட்டும்போது எல்லையில்லாத ஜ்ஞானம், தயை, வாத்ஸல்யம் முதலிய குணங்களையுடைய நீ என் விஷயத்தில் எப்படியிருக்க வேணும். என்னுடைய ஜந்மாந்தர பாபவாஸனையால் விஷயங்களில் ஒழிவு வாராமல் உன் அனுபவத்தை விட்டு என்மனதானது உன்னை மறந்து மிகவும் பாந்தமாக ஆத்மாவுக்கு மிகவும் ஆபத்கரமான ஸம்ஸாரஸங்கதிகளில் போக்யதாபுத்தியால் ஈடுபட்டு * ஓடினால் நீ பரபரப்புடன் என்னைத் தொடர்ந்து, உன் அனுபவத்துக்கு விரோதியான என் பாபங்களைப் போக்கி, விஷயவைராக்யத்தை உண்டுபண்ணி, என் மனதை உன்னிடத்திலேயே நிறுத்திக்கொள்ள வேண்டாமா. அப்படிச் செய்யாமல் உபேக்ஷை பண்ணுவது உனக்கு அழகா என்று தன் வருத்தத்தால் பாதுகையினிடத்தில் நிஷ்டுரத்துடன் முறையிடுகிறார்.

ஸதாசார்யாளும் அப்படியே ஒரு ஆச்ரிதன் தப்பிக் கெட்ட வழியில் போய்விட்டால் அவனுக்கு அது ஸஹஜமாக இருந்தாலும், அவர்கள் அப்போது இப்படிக் கெட்டுப்போய் விட்டானே என்று தபித்து, வாத்ஸல்யாதிசயத்தால் அவனை மீட்க ஸர்வ ப்ரயத்னமும் செய்கிறார்கள் என்பதும் இதினால் ஸூசிதம்.

---

* ஸம்ஸாரத்தின் இளப்பத்தை நன்றாய் உணர்ந்தவர்களுக்கு ஸம்ஸாரஸங்கதிகளில் ருசியும் ஈடுபாடும் எப்படி உண்டாகும் என்று ஸம்சயம் ஏற்படலாம். அதற்குப் பரிஹாரம்— ஸம்ஸாரருசி அநேகபூர்வஜந்மாந்திரவாஸனை (பழக்க) பலத்தால் ஏற்படுகிறது. அப்படிப்பட்ட ருசியும் அதற்குத் தகுந்த வெளிப்பிரயத்நமும் ஜ்ஞானத்தால் போகாது. பகவதநுக்ரஹத்தினாலேயேதான் நீங்கவேணும். அதற்காக பகவானையும் அவனைச் சேர்ந்தவர்களையுமேதான் ப்ரார்த்திக்கவேணும். இது விஷயத்தை ஸ்ரீஆசார்யர் இங்கு அநுஷ்டித்துக்காட்டுகிறார்.

ஸ்ரீபாதுகை (ஸதாசார்யாள்) ஆச்ரிதர்கள் விஷயத்திலுள்ள வாத்ஸல்யாதிசயத்தால் உபேக்ஷையாக இருக்கக்கூடிய ஸ்வபாவமுள்ளதல்லாததால் காப்பாற்றுவதற்கு அத்தால் (ஸதாசார்யாளால்) செய்யக்கூடியதைச் செய்துகொண்டேயிருக்கும்போதும் நம்முடைய புத்திக்குறைவால் அவர்கள் நம் விஷயத்தில் உபேக்ஷையாக இருப்பதுபோல் தோன்றுகிறது. நம்முடைய பாபம் அவர்கள் விஷயத்தில் அப்படி விபரீதமாகத் தோன்றுகிறதே என்கிற நிர்வேதமும் இதற்குள் அடங்கியது. (5)

அவ:— இப்படி பாதுகையினிடத்தில் நிஷ்டுரம் சொல்லிப் பின்னிட்டு யோஜித்துப் பார்த்தபோது பாதுகையினிடத்தில் தோஷமில்லை; தன் பாபம்தான் அவ்வளவு பலமாக இருக்கிறதென்று உணர்ந்து அபராதக்ஷாபணபூர்வகமாகத் தன் பாபத்தையே நினைத்து மேல்சுலோகத்தால் வருத்தப்படுகிறார்—

(௩௬௯) மாத꞉ கைகாது꞉ கருணாஶலி நிஹ்நுவாநா꞉
கிம் வா பாதம் கிமுத கிஸ்லிஷ்டதா ஶீயா꞉ ।
காடம் க்ருஹீதசரணா ஸஞ்சாரவேளாஸு
தஸ்ய ப்ரேரணப்ரணயிநீ தவ நசேல் லீலா ॥ (௯)

(பதவுரை) மாத꞉ - என் அம்மா, ஸஞ்சாரவேளாஸு - நடக்கிறது (அதாவது பகவான் வெளியில் ஸஞ்சாரத்துக்கு எழுந்தருளுகிறது) என்கிற வ்யாஜத்திலே, காடம் - கெட்டியாக, க்ருஹீத - பிடிக்கப்பட்டிருக்கிற, சரணா - திருவடிகளையுடையவளும், தஸ்ய - அந்த பெருமாளுடைய, ப்ரேரண - ஏவுகிறதிலே (அதாவது ஆச்ரிதர்களுடைய ரக்ஷணவிஷயத்தில் தூண்டுகிறதிலே), ப்ரணயிநீ - ஆசையுள்ளவளுமாயிருக்கிற, தவ - உன்னுடைய, லீலா - விளையாட்டானது, அதாவது பகவானோடு விளையாட்டாக ஸஞ்சரிப்பதானது, ந சேத் - இல்லாவிட்டால், கைகாது - பெருமாளுடைய, அதாவது ஆச்ரிதர்களுக்கு போக மோக்ஷங்களைக் கொடுப்பதில் தானே உத்யுக்தராக இருக்கிற பெருமாளுடைய, (கை - மோக்ஷம், கா - ஸம்ஸாரத்தில் ஸுகம், அதாவது தர்மார்த்தகாமங்கள் இவைகளை, ததாதி - கொடுக்கிறார் என்பதால் கைகாது꞉ -

போகமோக்ஷங்களைக் கொடுப்பவர் என்கிற பெயர்), கருணா
ஃவி - (ஸ்வபாவமான) தயையைக்கூட, நிஹ்நுவாநாஃ -
மறைக்கிறதாக இருக்கிற, ஃதீயாஃ - என்னுடையதான, கிலி
ஷித: - பாபத்தைக் காட்டிலும், வரம் - உயர்ந்ததானது,
கிஃவி - ஏதாவது ஒருவஸ்து, கிம் வா - இருக்கிறதா? (அதா
வது உன் தயையின் வியாபாரமில்லாவிட்டால் என் பாபத்
தைத் தடுக்கக்கூடியது வேறொன்றுமில்லை என்று கருத்து.)

(கருத்து) என்னிடத்தில் எல்லையில்லாத வாத்ஸல்யமுடைய என் தாயே! பாதுகையே! என்னுடைய அல்பபுத்தியாலும் என்னுடைய கஷ்டத்தாலும் நீ என் விஷயத்தில் அநாதரவாக இருப்பதுபோல் நினைத்து உன்னிடம் நிஷ்டூரம் சொன்னேன். மன்னிக்கவேணும். பகவானும் ஜீவராசிகளிடத்தில் வாத்ஸல்யத்தால் தானே போகமோக்ஷங்களைக் கொடுக்கத் தயாராக இருக்கிறார். அப்படி எப்படிப்பட்ட பாபிகளையும் தரம் பாராமல் ரக்ஷிக்கும்படியான எல்லையில்லாத காருண்யமும் அவருக்கு ஸ்வபாவமாகவே இருக்கிறது. ஆனாலும் என் பாபமோ அதற்கு மேல் பலீயஸ்ஸாக இருந்து அந்த பகவானுடைய ஸஹஜக்ருபையையும் அடியோடு என்னிடம் செல்லவிட்டாமல் தடுத்துவிடும் போலிருக்கிறது. அதைப் பார்த்து நீ என்ன பண்ணுகிறாய் என்றால், பெருமாளை வெளியில் எழுந்தருளப்பண்ணுகிறது என்கிற ஒரு வெளிவ்யாஜத்தை வைத்து பகவானுடைய திருவடிகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு எனக்காகப் பிரார்த்தித்தும் கோவிலுக்குள் நுழையாத பாபியான என் எதிரே பகவானை வெளியில் வீதியில் கொண்டுவந்து என்னைக் கடாக்ஷிக்கும்படி செய்தும், நானும் தற்செயலாகவாவது அவரை ஸேவிக்கும்படி செய்தும், என் பாபத்தைக் குறைத்துவிடுகிறாய். அதனால்தான் நான் இந்தமட்டும் பகவானிடத்திலும் உன்னிடத்திலும் அடியோடு விமுகனாகாமலிருக்கிறேன். நீ அப்படிச் செய்யாவிட்டால் எனக்கும் பகவானுக்கும் ஒரு ஸம்பந்தமுமில்லாமல் என் பாபத்தால் பகவானும் என்னை உதாஸீநம் செய்து நான் அடியோடு அதோகதிக்குப் போய்விடுவேன். என் பாபம் முற்றிலும் ஜயத்தை அடைந்துவிடும். அப்படிப்பட்ட பாபம் என்னுடையது என்று வருத்தப்படுகிறார்.

ஸதாசார்யாள் ஜீவராசிகள் விஷயமாக ஒரு அல்பவ்யா ஜத்தை முன்னிட்டு பகவானிடத்தில் மன்றாடி ப்ரார்த்தித்தும், அவர்களுக்கு வலுவிலே சிரமப்பட்டு தெய்வத்தைக் காட்டிக் கொடுத்தும், தெய்வத்தை நினைக்கும்படி செய்தும் உபகாரம் செய்யாவிட்டால், பகவானும் அவர்களுடைய எல்லையில்லாத பாபங்களை நினைத்து அவர்களை ரக்ஷிக்காமல் விட்டுவிடுவார். அவர்கள் அடியோடு அதோகதிக்குப் போய்விடுவார்கள். ஸம் ஸாரிகளுடைய பாபம் அப்படி பகவானுடைய அபாரமான ஸஹஜக்ருபையையும்கூட அமுக்கத்தக்கது. ஏதோ ஆசார்ய க்ருபையால் இந்தமட்டும் நாம் ஆசார்யாள் பெருமாள் என்று ஸ்வல்பம் நினைத்துச் சொல்லும்படியான நிலைமையிலாவது வைக் கப்பட்டிருக்கிறோம்—என்பது இதனால் ஏற்படுகிறது. (6)

அவ:— இப்படி பாதுகையைப் பற்றி முதலில் புகார் சொல்லி, பின்னிட்டு அதற்கு க்ஷாபணம் பண்ணிக்கொண்டு, தன்னுடைய பாபத்தையே வெறுத்து, வருத்தத்துடன் அத னிடத்தில் முறையிடும்போதும் பாதுகையானது ஒரு ஆச்வாஸ கரமான வார்த்தையும் அருளிச்செய்யாதிருந்தவாறே, அது பகவ தனுபவத்தில் மோஹித்துப்போய் தன்னுடைய ஆர்த்த த்வநி யைக் காதில் வாங்கக்கூடவில்லையென்று நினைத்து மறுபடி யும் முறையிடுகிறார்—

(௯௫௭) க்ஷீவாஸி காஞ்சநபதாவநி கைடபாரே:
பாதாரவிந்தமகரந்தநிஷேவணேந |
தேவி (தேவாஸ்) த்வதேகசரணஸ்ய கதமந்யதா ஹி
தீநாக்ஷராணி ந ச்ருணோஷி தயாளுகா த்வம் ||

(ப-ரை) * கைடபாரே: - அண்டாதிபதியான பிர்ம்மா வுக்கும் பெரிய சத்ருவான கைடபன் என்கிற மஹாஸுர னைத் தொலைத்தவரான பகவானுடைய, தேவி - விளங்காநிற்கிற, அதாவது அப்படிப்பட்ட பகவானுக்கு அனுரூபமான உன் பிரபாவத்தால் விளங்காநிற்கிற, காஞ்சநபதாவநீ - தங்கமய மான பாதுகையே!, பாதாரவிந்த - பகவானுடைய திருவடி

* 'கைடபாரே:' என்பதை காகாக்ஷிந்யாயமாக 'பதா வநி' 'பாதாரவிந்த' என்கிற இரண்டிலும் அந்வயிக்கலாம்.

யாகிற தாமரைப்பூவினுடைய, ஜனநீ - தேனே, ஸ்ரீவேங்க டேசஸ்ய - குடிப்பதனாலே, க்ஷீபா - மதம் பிடித்தவளாக, அஸி - இருக்கிறாய், அந்யதா - இல்லாவிட்டால், தயாளுதா - ஸ்வபாவத்தில் ரொம்பதயையுள்ளவளாயிருக்கிற, த்வம் - நீ, * தைவாத் - ஏதோ தெய்வவசத்தாலே, அதாவது என்னு டைய புத்திபூர்வகபிரயத்தினமில்லாமல் ஏதோ ஒரு ஸுக்ருத மூலமான பகவத்கடாக்ஷத்தாலே, த்வதந்திகஜுஷ: - உன்னு டைய ஸமீபத்தை அடைந்திருக்கிற, அதாவது உன்னை ஆச்ர யித்திருக்கிற, மே - என்னுடைய, * தீநாக்ஷராணி - மிகவும் துர்தசையை அடைந்து வருத்தத்தோடு கதறுகிற வார்த்தை களை, கதம் - ஏன், ந ச்ருணோஷி - நீ கேட்கவில்லை ?

(கருத்து) ஓ பாதுகையே! நான் உன்னை நெருங்கத் தகாத மஹாபாபி. ஆனாலும் ஏதோ ஸுக்ருதமூலமாக தெய்வ வசத்தால் உன்னைக் கிட்டி ஆச்ரயித்துவிட்டேன். உன்னை ஆச்ரயித்தபிறகும் என் பாபங்கள் நீங்கவில்லையே. இந்த ஸம்ஸா ரத்தில் இருப்பதாகிய என் கஷ்டம் தாங்காமல் அதை உன்னி டம் விண்ணப்பம் செய்யக்கூடமுடியாதபடி கத்கதஸ்வரத்துடன் உன்னுடைய ஸமீபத்தில் வந்து பலவாறாகக் கதறுகிறேனே. அது ஏன் உன் காதில்கூட விழவில்லை. தயையில்லாத்தால் நீ என் விஷயத்தில் அப்படி உதாஸீநமாக இருக்கிறாய் என்ப தற்கில்லை. ஏனென்றால் நீ பரமதயாஸ்வரூபமே. என் பாபத் தைப் போக்க ஸாமர்த்தியமில்லாத்தால் அப்படியிருக்கிறாய்

---

* தைவாத் என்கிற பாடத்தை வைத்துக்கொண்டால் முன் சொன்ன தேவி என்கிற பதத்தை பதவுரையில் விட்டு விடவேணும்; தேவி என்பதை வைத்துக்கொண்டால் இந்த பதத்தை விட்டுவிடவேணும். இரண்டு பாடத்திலும் ஸ்வாரஸ்யமுண்டு. கருத்தில் இரண்டும் சேர்த்துக் காட்டப்பட்டிருக்கிறது.

* தீநவசநாநி என்று போடாமல் தீநாக்ஷராணி என்று போட்டதின் அபிப்ராயம், அதிகமான கஷ்டத்தால் முழு வார்த்தையையும் சொல்லமுடியாமல், ஒரு பதத்திலுள்ள எல்லா அக்ஷ ரங்களையும் உச்சரிக்காமல், சில அக்ஷரங்களோடு அரைகுறையாய் நிறுத்திவிடுவதைக் காட்டுகிறது.

என்பதற்குமில்லை. ஏனென்றால் * அண்டாதிபதியான பிரம்மாவின் பரம சத்ருவான கைடபன் என்கிற மஹாஸுரனையும் அநாயாஸமாக ஸம்ஹரித்து பிரபாவசாலியாக விளங்குகிற உனக்கு என் பாபத்தைப் போக்குவது ஒருலக்ஷ்யமில்லை. ஆகையால் ரக்ஷணத்துக்கு உறுப்பான ஜ்ஞாநம், தயை, சக்தி என்கிற மூன்று ஸங்கதிகளுக்குள் தயையும் சக்தியும் ஸித்தமாக இருப்பதால் என் கஷ்டத்தைப் பற்றின ஜ்ஞாநம்தான் உனக்கு இல்லாமலிருக்கவேணும். இல்லாவிட்டால் நீ இப்படியிருக்க மாட்டாய். ஆகையால் நீ உன் புத்திபூர்வகமாக என்னை அநாதரிக்கவில்லை. ஆநந்தாதிசயத்தில் இதற்கு மேலானது ஒன்று உண்டு என்று சொல்லமுடியாதபடி பரமாநந்தகரமான ஆச்ரிதவிரோதி நிரஸநஸ்வபாவனான பகவானுடைய திருவடித்தாமரைகளின் அனுபவமாகிற மதுபானத்தாலுண்டான மதத்தால் புத்தி மயங்கி என்னையும் என் கஷ்டங்களையும் என்னுடைய ஆர்த்தத்வனியையும் நீ அறியவே இல்லையென்றுதான் தோன்றுகிறது. அப்படிப்பட்ட மதுபானத்தைக் காட்டும்படியான வெளியடையாளங்களும் தெரிகிறது. அதாவது அப்படி பகவானுடைய பதகமலங்களில் தேனைக் குடிக்கும்போது

* பகவானுக்கு ஒரு குணம், சக்தி, வ்யாபாரம் முதலானதைக் காட்டும்படியான பதத்தால் பகவானைச் சொல்லி அந்த பகவானுடைய பாதுகை என்று ஸம்போதனமாகவோ, ஸாமான்யமாகவோ சொன்னால், அப்படிப்பட்ட குணம் முதலானதுகளில் ஸ்ரீபாதுகைக்கும் அந்வயம் உண்டு என்பதைக் காட்டுவதற்காகவே அப்படி பதங்களை ஸ்ரீதேசிகன் ப்ரயோகித்திருக்கிறார். ஒவ்வொரு ஸம்போதனமும் விசேஷ பாவத்துடன் உபயோகித்திருக்கிறதே தவிர ஒரேமாதிரியாகச் சொன்னால் ரஸிக்காது என்பதற்காகமட்டும் ஸம்போதனபதங்களை மாற்றிமாற்றிப் போடவில்லை. அப்படியே இந்த க்ரந்தத்தில் ஒவ்வொரு பதமும் மிகவும் பாவகர்பிதமானது. உதாரணம்— கைடபாரியின் திருவடிகமலத்தில் மதுபானம் பண்ணி மோஹித்தது என்பதால், பாதுகையானது இந்த ஆச்ரிதர் (தேசிகன்) விஷயமாக பகவானிடத்தில் அவனுடைய ஆச்ரிதவிரோதி த்வம்ஸன ஸ்வபாவத்தை ஞாபகப்படுத்தி சிபார்சு பண்ண யத்தனிக்கும்போது அவனுடைய அந்த ஸ்வபாவத்திலேயே ஈடுபட்டு மயங்கி யத்தனித்த காரியத்தையும் ஆச்ரிதனையும் மறந்துவிட்டபடியால் ஒரு பதிலும் சொல்லவில்லை என்பதும் த்வனிக்கிறது.

அதிலுள்ள ரேணுக்கள் (புஷ்பத்தின் உள்ளே இருக்கப்பட்ட தூள்கள்) உன்மேல் படிந்து உனக்குத் தங்கநிறத்தையும் காந்தியையும் கொடுத்திருக்கிறது. (இதின் தாத்பர்யம் பகவதனுபவானந்தத்தால் சரீரசோபையும் மயிர்கூச்சமும் ஏற்படுகிறதென்று) இப்படி ஒரு ஆச்ரிதன் ஸமீபத்தில் வந்து கதறும்போது அவனுடைய கஷ்டத்தை உடனே நீக்கி நீ அநுபவிப்பதுபோலொத்த ஆநந்தத்தை அவனுக்கும் கொடுக்கும்படி ஜாகரூகமாக இருக்கும் ஸ்வபாவமுள்ளவள். அந்த ஆர்த்தத்வனியானது காதில்கூட படாதபடி மனோன்மத்தையாய் உன் ஆநந்தத்திலேயே மூழ்கியிருக்கிறாயே. இதுவும் என் பாபம்தான்—என்று முறையிடுகிறார்.

ஸதாசார்யாளும் பகவதனுபவத்தில் ஸ்ரீபாதுகைக்குச் சொல்லப்பட்டதுபோலுள்ள உலகத்தை மறக்கும்படியான ஈடுபாடுள்ளவர்கள். அப்படிப்பட்ட அனுபவகாலங்களில் சிஷ்யர்களோ மற்றவர்களோ தங்களுடைய கஷ்டம் முதலானதுகளை அவர்களிடத்தில் விஜ்ஞாபித்துக்கொண்டால் அது அவர்கள் காதில்கூட படாது. இப்படி அவர்களுடைய மனதானது அந்யபரமாக லயித்துப்போயிருக்கிறதென்று அறியாத சிலர் அவர்கள் தங்கள் விஷயத்தில் உதாஸீநமாக இருப்பதாக ப்ரமித்து புகார் சொல்லுவதுண்டு. இப்படி அவர்கள் பகவத்குணாதிகளில் மனதைச் செலுத்தியிருப்பது சிலஸமயம் வெளிப்படையாகத் தெரியும்; சில ஸமயம் தெரியாது. எல்லாருக்கும் இப்படிப்பட்ட மனதின் அந்யபரதையை உலகவ்யாபாரங்களில் விசேஷமாகக் காணலாம். (7)

அவ— இப்படி நிஷ்டுரத்துடன் முறையிட்டும் ஒரு ஆச்வாஸகரமான வார்த்தையும் அருளிச்செய்யாதிருந்ததின் பேரில் தன்னை ரக்ஷிக்காவிட்டால் வரும் நஷ்டம் தன்னைக் காட்டிலும் பாதுகைக்குத்தான் அதிகம் என்று அதனிடத்தில் மேல் சுலோகத்தால் விண்ணப்பம் செய்கிறார்.

(கூருஅ) உாதஷூஷவிஃத ஷாஷ, உாகாஜவாஷெ
ஷஜெ௱தாாணி யஜிநாஉ ஷவஜிஷஞயஃ ।
கீதிஃ ஓவஷ வாிாக்ஷண ஜீக்ஷிதாயாஃ
கிஷ ஜுவெத தவ காஜுநவாஉாகெஷ॥ (அ)

(ப-ரை) மாத: - எனக்குத் தாயாயிருக்கிற, காஞ்சந பாதுகே - வாராய் தங்கமயமான பாதுகையே!, போகமோக்ஷத - சரணாகதர்களுக்கு போகமோக்ஷங்களைக்கொடுப்பவராயிருக்கிற பெருமாளுடைய, பாதே - திருவடியிலே, த்வயி - உன்னுமேலே, அர்ப்பித - ஸமர்ப்பிக்கப்பட்டிருக்கிற, * பாரஸ்ய - சுமையை உடைத்தானவனுக்கு அதாவது, மோக்ஷத்துக்கு உபாயமாக விதிக்கப்பட்ட பக்தியாகிற வேலையை முறைப்படி செய்யவேண்டிய பொறுப்பை உடைத்தானவனுக்கு, பூய:- மறுபடியும், அதாவது அப்படி பரஸமர்ப்பணம் பண்ணப் பட்டபிறகும், க்ஷேமேதராணி - க்ஷேமங்களைக் காட்டிலும் வேறானவைகள், அதாவது க்ஷேமக்குறைவுகள், ஸந்தி யதி நாம - உண்டாகுமேயானால், த்ராண - காப்பாற்றவேணுமென்று தன்னை அடைந்தவர்களுடைய, ஸர்வாவந-ஸர்வப்ரகாரமான ரக்ஷணவிஷயத்தில், தீக்ஷிதாயா: - தீக்ஷை எடுத்துக்கொண்டிருக்கிற, அதாவது உறுதியான விரதம் எடுத்துக்கொண்டிருக்கிற, தவ - உன்னுடைய, கீர்த்தி: - கீர்த்தியானது அதாவது பிரஸித்தமான நல்ல பெயரானது, ந த்ரபதே கிம் - வெட்கப் படாதா, அதாவது உன்னுடைய கீர்த்திக்குக் குறைவில்லையா என்று அர்த்தம்.

(கருத்து) தன்னிடத்தில் சரணாகதி பண்ணுகிற ஸர்வ ஜனங்களுக்கும் * போகமோக்ஷங்களைக் கொடுக்கிறதாகிற த்ருட விரதமுள்ள பகவானுடைய தங்கப்பாதுகையே! உயர்ந்த பொர்

* கையாலாகாத முமுக்ஷு விஷயத்தில் "இவனால் ஸாங்கமான பக்தியோகத்தைச் செய்து மோக்ஷத்தையடைய ஸாத்யமில்லையாகையால், அந்தப் பொறுப்பை இவன் தலையில் சுமத்தாமல் தயைபண்ணி அந்த வேலையில்லாமலே இவனுக்கு மோக்ஷம் கொடுக்கவேணும்" என்று ஸ்ரீ ஆசார்யாள் பகவானிடத்தில் பிரார்த்திப்பது.

* போகமாவது— ஸம்ஸாரிகள் விஷயத்தில் ஸம்ஸாரஸுகமும் அதற்கு ஸாதனமான தர்மார்த்தகாமங்களும். தத்துவஜ்ஞானபூர்த்தியுள்ள முமுக்ஷு விஷயத்தில் இங்குள்ள பகவத்போகமும் அதற்கு ஸாதனமான ஸத்கர்மங்களும் ஸத்திரவியங்களும் பகவானிடத்தில் ஆசை ஸத்ஸங்கம் முதலியதும்.

சான நீ பகவானுடைய திருவடிகளில் என்னுடைய ரக்ஷண பரத்தை ஸமர்ப்பித்துவிட்டாய். இப்படி உங்களிருவருடைய வஸ்துவாகவும் ரக்ஷணத்துக்குட்பட்டவனாகவுமிருக்கிற எனக்கு உங்களுடைய கடாக்ஷத்துக்கு விஷயமானபிறகும் அசுபங்கள் நேர்ந்தால் சரணாகதர்களை எவ்விதத்திலும் நன்றாகக் காப்பாற்றுகிறதையே தனக்கு முக்யமான விரதமாக கைக்கொண்டு அப்படியே ஸர்வ லோகங்களிலும் பிரஸித்தி பெற்றிருக்கிற உன்னுடைய கீர்த்திக்கு அது ரொம்ப குறைவில்லையா? பாபமும் துக்கமும் ஸஹஜமாய் அநாதிகாலமாக ஸம்ஸாரவழியில் உழன்றுகொண்டிருக்கிற எனக்கு இன்னும் முன்போல் அப்படியே இருப்பது அவ்வளவு பெரிதல்ல; ஸஹித்துக்கொள்கிறேன். அநாதிகாலமாக நல்ல பெயரெடுத்த உனக்கு இப்போது என் விஷயமாய் சரணாகதனை நன்றாய்க் காப்பாற்றாமல் கெட்ட வழியில் அலையும்படி விட்டுவிட்டாய் என்கிற கெட்ட பெயர் வந்துவிடுகிறதே என்றுதான் துக்கப்படுகிறேன். நீ அப்படி உன்னுடைய கீர்த்திஹாநியைக்கூட கவனிக்காமல் என்னை உபேக்ஷிப்பதும் என்னுடைய பாபத்தின் பலன்தான் என்று வருத்தப்படுகிறார்.

ஸதாசார்யானையும் பகவானையும் உள்ளபடி ஆச்ரயித்தவர்களுக்கு ஒருபோதும் ஒருவித கெடுதலும் நேராது. ஆனால் இவிடத்தில் க்ஷேமக்குறைவுகள் நேர்ந்து அதற்காகத் துக்கப்படுவதாகவும் தெரிகிறதேயென்றால், அவசியமாக அனுபவித்துத் தீர்க்கவேண்டிய சில ப்ராரப்தகர்மங்களுக்கு ஸ்வல்ப பலன்களைக் கொடுத்துக் கழிப்பதற்கும், ஆச்ரிதர்களுக்கு அநாதிகாலமாக ருசித்த இந்த ஸம்ஸாரத்தில் அலுப்பையும் பகவத்ப்ராப்தியில் த்வரையையும் விருத்திபண்ணுவதற்கும், கர்மபலனை ஹிதைஷியானபகவானும் அவனைச்சேர்ந்தவர்களும் அவர்களுக்கு பலவிதமான துக்க காரணங்களைக் கொடுப்பதுண்டு. அதனால் ஸம்ஸாரத்தில் அலுப்பும் பகவானிடத்தில் ஆசையும் விருத்தி அடைந்து தபிப்பார்கள். இப்படி ஸம்ஸாரத்தில் ஒழிவும் பகவானிடத்தில் ஆசையும் எல்லோருக்கும் நாளுக்குநாள் விருத்தியடையவேண்டியது ரொம்ப அவசியம். இப்படிப்பட்ட தவிப்பைப் பார்த்து பகவானுக்கு அதிக ஸந்தோஷம் உண்டாகி சீக்ரத்தில் இவர்களைத் தன்னிடம் அழைத்துக்கொண்டு

விடுவன். இவர்களுக்கும் இங்கு பகவானை நினைத்துத் தவிப்பதே ஒருவித ஆநந்தம். ஒன்று பகவானை அனுபவித்தாவது ஸந்தோஷப்படவேணும்; அல்லது பகவானைப் பிரிந்திருப்பதை நினைத்தாவது துக்கப்படவேணும். இதுதான் உண்மையான புருஷார்த்தம். ஸம்ஸாரிகள் எந்த விஷயங்களைப் பாந்தமாகவும் ப்ரியமாகவும் செய்து ஸுகிக்கிறார்களோ, அதே விஷயங்களில் அலுப்பையும் துக்கத்தையும் பகவான் தான் ரக்ஷிப்பதற்கு ஸங்கல்பித்திருப்பவர்களுக்குத்தான் கொடுக்கிறான். இப்படி இருக்கவேணுமென்பதை உலகத்துக்குக் காட்டிக்கொடுப்பதற்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு இந்த அவஸ்தையை உண்டுபண்ணிக் காட்டுகிறான். ஆகையால் யாருக்கு பகவானை மறக்கும்படி இந்த ஸம்ஸாரவிஷயங்கள் ருசியாகவே இருக்கிறதோ, அவர்கள் பகவானால் மேல்மேலும் துக்கமயமான இந்தஸம்ஸாரத்திலேயே தள்ளப்படுகிறவர்கள் என்றும், யாருக்கு பகவானுடைய நினைவு வரும்படி துக்ககாரணமாகவே தென்படுகிறதோ அவர்கள் பகவானால் ஸம்ஸாரத்திலிருந்து மீட்டு ரக்ஷிக்கப்படுகிறவர்கள் என்றும் அறியவேணும். இந்த அடையாளத்தைக்கொண்டு ஒவ்வொருவரும் நாம் பகவானுடைய கணக்கில் எந்த வகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறோம் என்பதை அவச்யம் கவனிக்கவேணும். ஆனால் ஸதாசார்யாள் மூலமாக ஸரியானபடி மோக்ஷார்த்த சரணாகதி அநுஷ்டிக்கப்பட்டவர்கள் விஷயத்தில் மட்டும் எப்படியிருந்தாலும் பகவான் தயையினால் ஸம்ஸாரருசிக்கும் பந்தத்திற்கும் காரணமான ஸர்வபாபங்களையும் ஏதேனும் ஒரு ப்ரகாரமாக இந்த ஜந்மத்திற்குள்ளேயே கழித்து அவர்களை முடிவில் மோக்ஷத்துக்குக் கொண்டுபோய்விடுகிறான் என்பது அவர்களுக்கு ஒரு தேறுதல். மற்ற ஸம்ஸாரஸக்தர்களுக்கு அப்படிக்கில்லை. ஸம்ஸாரமே வளரும்.

அவ:— கீழ்ச்சொன்ன அசுபங்கள் இன்னது என்பதை அதாவது பெருமாளைத்தவிர மற்ற அல்ப பிரயோஜனங்களை இச்சிப்பது, அதற்காக பகவானுடைய கைங்கர்யாதிகளைத்தவிர மற்ற வேலைகள் முதலானதைச் செய்வது, பரமசேஷியான பகவானை விட்டு அல்பர்களான மற்ற ஜீவர்களையாச்ரயிப்பது, அவர்களுக்கு இளப்பமான வேலைகளைச் செய்வது முதலியது என்பதை மேல் சுலோகங்களால் காட்டுகிறார்—

(௬௫௬) தௌ3வாரிகத்3விரஸந ப்ரப3லாந்தராயை
கி2த்3யே பதா3வநி து3ரீஶ்வர ஸத்3மபி3லப்ரவேஶை:
தத்3ரங்க3ஶயாத் நிரபாய த4நோத்தராயாம்
த்வய்யேவ விஶ்ரமய ஸங்க்ஷு மநோரத2ம் மே ॥ (௬)

(பதவுரை) ஹே பதா3வநி - வாராய் பகவானுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே !, தௌ3வாரிக - வாசல் காப்பாளனுகிற, த்3விரஸந - பாம்பை (பொய் சொல்லுகிறவன் என்றும் ஒரு அர்த்தமுண்டு), ப்ரப3லாந்தராயை: - பெரிய இடஞ்சலாக உடைத்தாயிருக்கிற, து3ரீஶ்வரஸ்ய - கெட்ட பணக்காரனுடைய, ஸத்3ம-வீடாகிற புத்திலே, ப்ரவேஶை: - பல தடவைகள் நுழைகிறதினாலே, அஹம்-நான், கி2த்3யே-துக்கப்படுகிறேன், தத் - ஆகையினாலே, ரங்க3ஶயாத்-ஸ்ரீரங்கவிமானத்தை இருப்பிடமாகவுடைத்தாயிருக்கிற ஸ்ரீரங்கநாதனுகிற, நிரபாய - அழிவில்லாமலிருக்கிற, த4ந - பணத்தை, உத்தராயாம் - மேலே உடைத்தாயிருக்கிற, அதாவது தூக்கிக் கொண்டிருக்கிற (அல்லது த4நோத்தராயாம் - அப்படிப்பட்ட த4நத்தை உடைத்தாயிருப்பதினாலே உத்கிருஷ்டமாக விளங்குகிற), த்வய்யேவ - உன்னிடத்திலேயே, மே - என்னுடைய, மநோரத2ம் - எண்ணமாகிற தேரை, ஸங்க்ஷு - சீக்கிரமாக, விஶ்ரமய - நிற்கும்படி செய்யவேணும்.

(கருத்து) ஓ பாதுகையே ! உலகத்தில் சில பணக்காரர்கள் (தங்களிடத்திலிருக்கும் பணம் ஸ்வல்பம் என்பதையும், அதுவும் அவர்களிடம் இருப்பது நிலையில்லை என்பதையும், அதை அனுபவிக்கிற தாங்களும் நிலையில்லையென்பதையும், அறியாமல்) எல்லை இல்லாத கர்வத்தை அடைந்திருக்கிறார்கள். அவர்கள்வீட்டுவாசல்களில் இருக்கும் வாசக்காப்பானே (யஜமானனைப்போன்ற குணமுடையவனும்) வருகிறவர்களைப் பாம்பாய் பிடுங்குகிறான். அவர்கள் வீட்டை நினைத்தால் பாம்புப்புத்துப்போலவே இருக்கிறது. நல்லபடியாய் உள்ளே நுழைந்து வெளிக்கிளம்பவேணுமே என்று மனது நடுங்கும்படி இருக்கிறது. அப்படியிருந்தும் நம்முடைய தாரித்ரியத்தின் கொடுமையும், பணத்தில் சபலமும்

கிருபணசிரோமணிகளான அவர்கள் வீட்டுக்குள்ளும் நுழைந்து பரிபவப்படும்படி செய்கிறது. அது ரொம்ப துக்கமாக இருக்கிறது. அப்படிக்கில்லாமல் அளவில்லாததும், அழிவில்லாததும், எல்லா நற்குணங்கள் நிறைந்ததும் ஸர்வஸுலபமாக ஸ்ரீரங்கவிமானத்தில் குடிகொண்டதுமான ஸ்ரீரங்கநாதனுகிற மஹாதனத்தை வைத்துக்கொண்டிருக்கிற உன்னையே விரும்பி, உன்னிடத்திலேயே ஸர்வ சிரமமும் நீங்கி, ஸர்வ ஸுகமும் அநுபவித்துக்கொண்டு நிலைத்திருக்கும்படி என் சபலமான மனதை நிறுத்துவாயா? அந்த அல்ப பணக்காரர்கள் வீட்டில் நுழையாமல் உன்னைத்தேடி இந்த ரங்கவிமானத்தில்மட்டும் நுழையும்படி செய்வாயா? என்று சபலர்களான ஸாமான்ய ஜனங்களுடைய நடத்தையைப் பார்த்து வருத்தத்தாலும் இந்த ப்ரக்ருதியிலிருப்பதால் எந்த ஸமயம் தனக்கும் புத்தி கெட்டுப் போமோ என்று பயந்தும் துக்கத்தினுல் இப்படிமுறையிடுகிறார் அப்படிக்கில்லாமல் பரம வைராக்யநிதியான இவர் அர்த்த சபலத்தால் அல்பமனுஷ்யர்களை யாசித்து பரிபவப்பட்டு துக்கம் அடைந்து இப்படிச் சொல்லவில்லை. தனக்கு பால்யஸ்நேஹிதனுய் விஜயநகரம் ராஜாவினிடத்தில் பெரிய பதவியிலிருந்த வித்யாரண்யர் என்கிற வித்வான் தன்னை தாரித்ரியத்தால் கஷ்டப்படுவதாக நினைத்து, அந்த ராஜாவிடம் வந்து விசேஷ ஸம்பத்தையடையலாமென்று அழைத்தபோது, அவனுக்குப் பதிலாக வைராக்ய பஞ்சகம் என்கிற கிரந்தத்தைப்பண்ணி அனுப்பியதும் கடைசிவரையிலுள்ள இவருடைய சரித்ரமும் இதற்கு நிதர்சனம். பகவானையே பரம தனமாகவுடைய ஸ்ரீஆழ்வார் ஆசார்யாளையே நினைத்துக்கொண்டிருந்தால் இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஒரு குறைவுமில்லை. ஆனுல் நம்முடைய பாபம் அல்ப புருஷார்த்தத்தில் ருசியைக்கொடுத்து அதற்காக அல்ப மனுஷ்யர்களைத்தேடி பரிபவப்படும்படி செய்கிறதே என்று வருத்தப்படுகிறார். (9)

அவ:— இப்படி பிரார்த்தித்துக்கொண்டு பாதுகையை ஸேவிக்கும்போது அது பகவானுடைய திருவடியைத் தொட்டுக்கொண்டிருப்பதுபோல் சேர்ந்திருப்பதைப் பார்த்து அது தான் பிரார்த்தித்த விஷயத்தை நிறைவேற்றிக்கொள்வதற்குத் தனக்கு ஒரு உபாயத்தைக் காட்டிக்கொடுப்பதுபோல் எண்ணிச்

சொல்கிறார்; அல்லது பகவானையாச்ரயித்து இப்படி அந்யபுருஷார்த்தத்தில் ருசியும் அந்யர்களை ஆச்ரயிப்பதில் ப்ரவிருத்தியுமுடைய ஸம்ஸாரிகளை பகவான் காப்பாற்றுவனா, அவர்களுக்கு மோக்ஷம்கொடுப்பனா என்று உண்டாகிற ஸம்சயத்தை பாதுகை தீர்ப்பதாக எண்ணிச் சொல்லுகிறாராகவுமாம்—

(௯௯௦) வ்யாமுஹ்யதாம் த்ரிவிததாபமயே நிதாகே
மாயாவிசேஷஜநிதாஸு மரீசிகாஸு ।
ஸம்ஸ்ப்ருஷ்டசௌரிசரணா சரணாவநி த்வம்
ஸ்தேயா ஸ்வயம் பவஸி நச்சரமே புமர்த்தே ॥

(ப-ரை) சரணாவநி - வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே!, த்வம் - நீ, ஸம்ஸ்ப்ருஷ்ட - தொடப்பட்டிருக்கிற, சௌரி - சூரன் என்கிற ராஜாவின் குலத்தில் அவதரித்த பெருமானுடைய, சரணா - திருவடியை உடைத்தானவளாய்க்கொண்டு, த்ரிவிததாபமயே - ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என்கிற மூன்றுவிதமான தாபங்களாலே ரொம்பியிருக்கிற, நிதாகே - ஸம்ஸாரமாகிற கோடையிலே, மாயா - பிரகிருதியினுடைய, விசேஷ - ஸத்வம் முதலிய பல வஸ்துக்களாலே, ஜநிதாஸு - உண்டுபண்ணப்பட்டிருக்கிற, மரீசிகாஸு - கானலாறுகளிலே, வ்யாமுஹ்யதாம் - மயங்கி இருக்கிற, ந: - எங்களுக்கு, சரமே - கடைசியாக இருக்கிற, புமர்த்தே - புருஷார்த்தமான மோக்ஷத்திலே (மரீசிகா பக்ஷத்தில் குடிக்கத்தகுந்த ஜலவிஷயத்திலே), ஸ்வயம் - தானாகவே, ஸ்தேயா - ஸந்தேஹத்தைத் தீர்க்கிறவளாக, பவஸி - ஆகிறாய்.

(கருத்து) ஓ பாதுகையே! நாங்கள் அநாதிகர்மவசத்தால் இந்த ப்ரகிருதியிலுள்ள ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற குணங்களால் கட்டுப்பட்டு உண்மையான புருஷார்த்தமல்லாதவற்றில் புருஷார்த்தபுத்தியாலும் ஸரியான உபாயமல்லாதவற்றில் உபாயபுத்தியாலும் ப்ரமித்து, பிள்ளை பெண்டாட்டி பேரன் பேத்தி பணம் முதலிய எல்லையில்லாத ஸம்ஸாரவிஷயங்களில் மேல்மேலும் அல்லாடிக்கொண்டே இருக்கிறோம். முதலில்

பொம்மநாட்டி வேணுமென்று ஆசை; அது கிடைத்தால் பிறகு பிள்ளை, பெண்களில், பிறகு அவைகளுக்கு கல்யாணம், அவைகளுக்குப் பெண்பிள்ளைகள், அப்படியே ஸொத்து முதலிய எல்லா விஷயங்களிலும் மேல்மேலும் ஆசை. கடைசியில் பார்க்கப்போனால் ஒன்றிலாவது லாபத்தையும் ஸுகத்தையும் காணோம். அல்லாட்டமும் தூக்கமும்தான் மீதியாகிறது. அப்படியிருந்தும் இதில்தான் ஸுகம் உண்டு என்கிற நிச்சய புத்தியும் ஓய்வும் ஒரு விஷயத்திலும் ஏற்படுகிறதில்லை. இந்த அல்லாட்டம் எப்படியிருக்கென்றால், நல்ல கோடையில் மரம் முதலியது ஒன்றுமில்லாத வெரும் பொட்டவெளியில் தூரத்திலிருந்து பார்க்கும்போது ஜலமில்லாத இடத்தில் ஜலம் காணுவதுபோல் தென்படும். அதைப் பார்த்து மான்கள் தாகத்தினால் தண்ணீர் குடிப்பதற்கு அவிடம் ஆவலோடு ஓடும். கிட்டப்போனால் அங்கே ஜலம் ஏது? அவிடமிருந்து பார்த்தால் இன்னும் கொஞ்ச தூரத்தில் ஜலம்போல் தென்படும். மறுபடி அங்கு ஓடும் அங்கேயும் அம்மாதிரியே. அதுபோல ஸம்ஸாரத்தில் வீணாக அல்லாடிக்கொண்டிருக்கிற எங்களுக்கு பகவானுடைய திருவடியைத் தொட்டுக்கொண்டிருக்கிற உன்னைப் பார்த்தால் நீ பகவானுடைய திருவடியைத்தொட்டுக் காட்டி இதுதான் அப்பா பரமபுருஷார்த்தம், ஆச்ரிதவத்ஸலனை இந்த பகவானுடைய திருவடியை ஆச்ரயித்துத்தான் 'மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே' என்று ஸ்ரீகீதையில் பகவான் சொல்லியிருக்கிறபடி உன்னுடைய வீணான ஸம்ஸாரருசியையும் அல்லாட்டத்தையும் நீக்கிக்கொள்ள வேணும்; உன்னுடைய பிரயத்தனத்தினால்மட்டும் முடியாது என்று சொல்வதுபோலிருக்கிறது அப்படிக்காட்டிக்கொடுத்தும் எங்களுக்கு புத்தி வராமல் இந்த ஸம்ஸாரத்தில் இன்னும் அல்லாடுகிறோமே என்று வருத்தப்படுகிறார்.

அல்லது இப்படி ஸம்ஸாரத்தில் ருசியோடு அல்லாடிக் கொண்டிருக்கிற எங்களுக்கும் மோக்ஷம் எப்படிக் கிடைக்கும்? எங்களுக்கு பாதுகைகள்மூலமாக சரணாகதியாகிவிட்டது என்று சொல்லிவிட்டால் கிடைக்குமோ என்று எங்கள் இருப்பை நினைத்து ஸஹஜமாக ஒரு பெரிய ஸந்தேஹம் ஏற்படுகிறது. அந்த ஸந்தேஹத்தைப் போக்குவதற்கு நீ பகவானுடைய

திருவடியைத் தொட்டுக்காட்டிக்கொண்டு அப்பா இவனுடைய ஆச்ரிதவாத்ஸல்யம் உனக்குத் தெரியாது. இந்தத் திருவடிகளில் சரணாகதி பண்ணுவது என்கிற ஒரு வ்யாஜம் அகப்பட்டால் அவனுக்குப் போதும். நான் அப்படி உனக்காக சரணாகதி பண்ணியிருக்கிறேன். ஆகையால் நீ ஸம்சயப்படவேண்டாம்; உனக்குக் கட்டாயம் மோக்ஷம் உண்டு என்று எங்கள் ஸந்தேஹத்தைத் தீர்க்கிறாய். இப்படி எவ்விதமான தோஷங்களையும் பாராமல் பரம தயையோடு காப்பாற்றுகிற உங்களை விட்டு மனதானது மிகவும் இளப்பமான ஸம்ஸாரவிஷயங்களில் ருசியோடு போகிறதே என்று வருத்தப்படுகிறாராகவுமாம்.

ஸதாசார்யாள் நமக்கு பகவானுடைய திருவடியைக் காட்டிக்கொடுத்து அதை அடைவதேதான் உயர்ந்த புருஷார்த்தம்; ஸம்ஸாரம் அப்படியல்லாது பகவானுடைய திருவடிபலத்தால்தான் இந்த ஸம்ஸாரருசியையும் கஷ்டங்களையும் போக்கவேணுமென்று தெளிவாகச் சொல்லிக்கொடுக்கிறார்கள். அவர்கள் அப்படிச் செய்தும் நம்முடைய பாபத்தால் பகவானிடத்தில் ப்ரீதி உண்டாகிறதில்லை; ஸம்ஸாரத்திலுள்ள ருசியும் ப்ரவிருத்திகளும் குறைகிறதுமில்லை.

ஸதாசார்யாளை ஆச்ரயித்தும் நம்முடைய ப்ராரப்தகர்ம வசத்தால் நம்முடைய புத்தியும் பிரவிருத்திகளும் ஸம்ஸார விஷயத்திலேயே செல்லுவதால் நமக்கு எப்படி மோக்ஷம் கிடைக்கும் என்று நமக்கும் பிறருக்கும் ஸஹஜமாக ஒரு பெரிய ஸந்தேஹம் ஏற்படுகிறது. அதற்கு ஸமாதானமாக நல்ல ஆசார்யாள் பகவானுடைய வாத்ஸல்யம், ஒரு வ்யாஜமாத்திரத்தை எதிர்பார்ப்பது முதலிய குணங்களைக் காட்டி, அப்பா அவன் பரமசேஷியாய் பரமஸ்வாமியாய் பரமதயையுள்ளவனானதால் நான் உன்னை அவன் திருவடிகளில் ஸமர்ப்பித்திருப்பதைக்கொண்டே உன் குற்றங்களையும் என் குற்றங்களையும் பாராமல் உனக்குக் கட்டாயம் மோக்ஷம் கொடுப்பன்; நீ ஸந்தேஹப்படவேண்டாம் என்று சொல்லுகிறார்கள். நம்முடைய பாபம் அப்படிப்பட்ட தயையுள்ளவர்களிடத்தில் ப்ரீதியும் சத்ருதுல்யமான ஸம்ஸாரத்தில் அருவருப்பும் வருகிறதில்லை. இப்போது நமக்கு வருத்தமும் கிடையாது; பகவானை ஸ்வாதீனமாகவுடைய ஆசார்யாள் அகப்படுவதும் அரிதாக இருக்

கிறது. ஸ்வல்பவியாஜத்தைக்கொண்டு பகவான் காப்பாற்றினால் உண்டு. (10)

அவ:— இப்படி பகவதநுபவவிரோதியான ஸம்ஸார பாசங்களை நீக்கிக்கொள்ள வழி காட்டிக்கொடுத்தும், அந்த வழியைக்கொண்டு ஜனங்கள் தாங்களாக நீக்கிக்கொள்ள சக்தியில்லாமலிருப்பதைப் பார்த்து, பாதுகையானது தானே நேரில் வந்து அந்த பாசங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக விடுவித்து பகவதநுபவத்துக்கு உதவி செய்வதை மேல் சுலோகத்தால் சொல்லுகிறார்—

(௫௮௧) அச்சேத்யயா விஷய வாகுரயா நிபத்தாந்
தீநாந் ஜநார்த்தந பதாவநி ஸத்பதஸ்தா |
ஆத்யந்திகேந பவதீ பரிக்ருஹ்ய ஸௌஸம்
காலேந மோசயதி ந: க்ருபயா ஸநாதா ||

(ப-ரை) ஹே * ஜநார்த்தந பதாவநி - வாராய் ஜநங்களால் வேண்டப்படுகிற பெருமாளுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே !, ஸத்பதஸ்தா - நல்வழியிலிருக்கிற அதாவது நிவிருத்திமார்க்கத்திலிருக்கிற (ஆகாசத்தில் இருக்கிற என்றும் ஒரு அர்த்தம் கொடுக்கும்) பவதீ - நீயானவள், க்ருபயா ஸநாதா - கிருபையோடு கூடினவளாய்க்கொண்டு, அச்சேத்யயா - அறுக்கமுடியாமலிருக்கிற (அதாவது நம்மால் தள்ளமுடியாமலிருக்கிற), விஷய - சப்தம், ஸபர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்கிற ஐந்து இந்திரிய விஷயங்கள் மூலமாக

* ஜநார்த்தந என்பதற்கு மூன்றுவித அர்த்தங்கள் உண்டு. (1) 'அர்த்த ஹிம்ஸாயாம்' என்கிற தாது அர்த்தத்தின் பேரில் ஜநங்களைப் பிடிக்கிறவன், அதாவது ஸம்ஹாரம் பண்ணுகிறவன்; (2) 'அர்த்த கதௌ' என்கிற தாது அர்த்தத்தின் பேரில் ஜநங்களை நடத்துகிறவன், ஜநங்களால் அடையப்படுகிறவன்; (3) 'அர்த்த யாசநே' என்கிற தாது அர்த்தத்தின் பேரில் ஜநங்களால் யாசிக்கப்படுகிறவன்— என்று. 2, 3 அர்த்தங்கள் இவிடம் கூட்டும்.

அனுபவிக்கக்கூடிய பிள்ளை பெண்டாட்டி முதலிய ஸகல ஸம்ஸாரஸங்கதிகளாகிற, வாகுரயா - வலையினாலே, நிபத்தா:- கட்டப்பட்டவர்களும், தீநா:-அதனால்வருத்தத்தை அடைந்தவர்களுமான, ந:-எங்களை, ஸிரஸி-தலையிலே, ஸமாருஹ்ய-பிடித்துக்கொண்டு, க்ரமேண - படிப்படியாக, காலேந - கொஞ்சகாலத்தினாலே, மோசயஸி த்வம் - அந்த வலையிலிருந்து விடுவிக்கிறாய்போலும்.

(கருத்து) ஏ ஜநார்த்தனனுடைய பாதுகையே ! நாங்கள் எங்களால் ஒருபடியாலும் விலக்கமுடியாத பிள்ளை,பெண்டாட்டி, சொத்து முதலிய பல ஸம்ஸார விஷயங்களாகிற கெட்டியான வலையில் அகப்பட்டு, அதையறியாமலே இந்த உலகவாழ்க்கையையே மேல்மேலும் விரும்பி, துக்கத்தையே வளர்த்து அனுபவித்துக்கொண்டு வலையில் அகப்பட்ட மீன்போல் துடிக்கிறோம். அப்படித் துடிக்கும்போதும் இந்த ஸம்ஸார ஸம்பந்தம் துக்கத்துக்கே காரணமாகையால் அது போகவேணுமென்று கேட்க புத்தி வராமல் அதை ஸஹித்துக்கொண்டே மேல்மேலும் எங்களுக்கு அந்த ஸுகம் வேணும் இந்த கஷ்டம் நீங்கவேணுமென்று, பகவானை மறந்து, ஸம்ஸாரவிஷயமான பல யாசனைகளையே உன்னிடத்தில் நச்சு நச்சென்று பண்ணுகிறோம். இதைப்பார்த்து நிவிருத்திமார்க்கத்திலேயே இருப்பவளான உனக்கு இந்த ஓய்வில்லாத யாசனத்தில் அலுப்பும் இப்படி புத்தியில்லாத எங்களிடத்தில் தயையும் உண்டாகி, இனி நாமாகத்தான் இவைகளுக்கு ஸம்ஸார பாசத்தைக் கழற்றவேணுமென்று யோஜித்து அதற்கு பிரயத்னப்படுகிறாய். அது எப்படி என்றால் - நாங்கள் அடிக்கடி உன்னை ஸந்நிதியில் வந்து வேறு பிரயோஜனங்களை வேண்டி ஸேவிக்கும்போது அர்ச்சகாள் உன்னை எங்கள் தலையில் ஸாதிக்கிற வியாஜமாக எங்கள் தலையின்பேரில் நன்றாய் ஏறி உட்கார்ந்துகொண்டு, நாளடைவிலே கொஞ்சம் கொஞ்சமாக எங்கள் கெட்டபுத்தியை விலக்கி, நாங்களறியாமலே எங்கள் ஸம்ஸார பாசத்தை அறுப்பதற்குப் பிரயத்னப்படுகிறாய். இல்லாவிட்டால் ஸம்ஸார ருசியால் அர்த்தகாமாதிகளின் பொருட்டே உன்னை யாச்ரயிக்கிற சிலருக்கு நாளடைவில் நிவி

ருத்தி மார்க்கம் எப்படித் தோன்றுகிறது. ஆகையால் அது உன் காரியம்தான். நீ இவ்வளவு தயையோடு பாடுபடும்போது உன்னையும் பகவானையும்விட்டு எங்களுக்கு இந்த ஸம்ஸாரம்ருசிக் கிறதேஎன்று வருத்தப்படுகிறார்.

ஸதாசார்யாள் நிவ்ருத்தி மார்க்கத்திலேயே (ஆத்ம பரமாத்ம விஷயமான வழியிலேயே) நோக்குள்ளவர்கள். அவர்களுக்கு பிர விருத்தி மார்க்கம் (ஸம்ஸாரவழி) அடியோடு பிடிக்காது. பக்வ புத்தியையடையாத முமுக்ஷுக்களுக்கு பகவான் வேணுமென்று தோன்றுவதோடு ஸம்ஸார ஸங்கதிகள் எல்லாமே கூடவேண்டித் தானிருக்கிறது. அவைகளை அவர்களால் ஒழிக்கமுடிகிறதில்லை. ஆகையால் அவர்கள் ஸம்ஸாரத்தில் தர்மார்த்த காமவிஷயங் களைப்பற்றின இஷ்டாநிஷ்டங்களும் ஸுக துக்காதிகளும் ப்ரா ரப்த கர்மவசத்தால் எப்படி நேர்ந்தாலும்நேரட்டும்; நாம் இச்சித் தாலும் இச்சிக்காவிட்டாலும் ப்ரயத்னம் செய்தாலும் செய்யா விட்டாலும் கர்மாதீனமாக வரவேண்டியது விலகப்போகிற தில்லை; விலகக்கூடியது வரப்போகிறதுமில்லை என்கிற தெளிவை யடைந்து ஒழிந்திருக்கமுடியாமல் ஸதாசார்யாளிடத்தில் வந்து கணக்கில்லாத ஸம்ஸார ஸம்பந்தமான பிரார்த்தனைகளையே பண்ணுகிறார்களே ஒழிய விஷயவைராக்யம், தத்வஜ்ஞானம், பகவத்பாகவதாசார்ய பக்தியின் விருத்தி, அவர்களிடத்தில் அப சாரம் நேராமை, யாவஜ்ஜீவம் நிரபராத கைங்கர்யங்கள், சீக்கிரத் தில் பகவத்ப்ராப்தி முதலிய (அவர்களுக்கும் பகவானுக்கும் பிரி யமாய் குதூஹலத்துடன் நிறைவேற்றி வைக்கக்கூடியதும் ஆத்ம க்ஷேமகரமானதுமான) ஸங்கதிகளைக் கேட்கத்தோன்றுகிறதே இல்லை. அப்படி அவர்கள் ஸம்ஸாரவிஷயங்களையே அபேக்ஷிக் கும்போது ஸதாசார்யாளுக்கு அதில் அலுப்புண்டானாலும் நம்மைச்சேர்ந்த வஸ்துவாச்சுதே என்று அவர்களிடத்தில் வாத் ஸல்யத்தாலும், தாக்ஷிண்யத்தாலும், தயையினாலும், பகவா னிடத்தில் போய் என்னமோ அப்பா அதுகளின் புத்திக்குறை வுக்குத் தக்கபடி அபேக்ஷிக்கிறது; இந்த விஷயங்களை அவை களுக்கு கொடுக்க ப்ராப்தியுமிருந்து ஹிதமாகவுமிருந்தால்கொடு; திருவுள்ளப்படிச் செய் என்று விஜ்ஞாபித்து இவர்களிடத்திலும் அலுத்துக்கொள்ளாமல் பொறுமையோடு பலதடவைகளில் பலவிதமாக தங்களுடைய உபதேசத்தாலும், ஸொந்தவிஷயத்

தில் தங்களுடைய நடவடிக்கையாலும், அனுக்ரஹத்தாலும், தீர்த்தப்ரஸாதாதிகளாலும், பகவானைக்கொண்டும் நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாக அநாதிகாலமாக இவர்களுடைய ஆத்மாவில் ஊறிப்போயிருக்கிற ஸம்ஸாரவாஸனையைப்போக்கி, புத்தியைத்தெளிவித்து, இவர்களைநிவிருத்திமார்க்கத்திலேயே திருப்ப ப்ரயத்தனப்படுகிறார்கள். ஹிதைஷிகளாய் அவ்வளவு பாடுபடுகிறவர்கள் விஷயத்தில் ருசியுண்டாவதில்லை; ஆத்மநாசகரமான ஸம்ஸாரமே ருசிக்கிறது. இப்படி ஒரு மஹாபாபம் இருக்கிறது.

ஸத்வ்யஸ்யா என்பதின் தாத்பர்யம்—

(1) ஜநங்களை பிள்ளை, பெண்டாட்டி, பந்துக்கள் முதலிய ஸம்ஸார விஷயங்கள் நான்கு புறமும் சூழ்ந்துகொண்டிருப்பதால் அப்பக்கங்கள் வழியாய் அவர்களைக்கிட்டி விரோதியான ஸம்ஸார ருசியை நீக்கமுடியாதென்று (ஒரு ஏகாந்த ஸமயம் பார்த்து ஒருவனுக்கு நல்ல புத்தி சொல்வதுபோல்) பாதுகை மேலே இருந்து, அதாவது ஆகாசத்திலிருந்து, தலையில்வந்து உட்கார்ந்தது என்று ஸூசிப்பிக்கிறது.

(2) ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா:, மத்யே திஷ்டந்தி ராஜஸா:, அதோ கச்சந்தி தாமஸா: என்று மூவகையாகப் பிரிக்கப்பட்ட ஜனங்களுக்குள் முதல் பிரிவில் சேர்ந்த ஸத்வகுணம் நிறைந்த நிவிருத்தி மார்க்கபரர்களில் உத்க்ருஷ்டர்களான ஸதாசார்யாளால்தான் மற்ற ஜனங்களுக்கு ஆத்மக்ஷேமத்தை விளைவிக்கமுடியும் என்பதையும் காட்டுகிறது. ஸத்வஸ்தர்கள்தான் ஸத்வ்யஸ்யர்கள். மற்ற வகுப்பைச்சேர்ந்த ராஜஸ, தாமஸ ப்ரகிருதிகளால் அயலாரை ஸம்ஸாரத்தில் சுற்றடிக்கவும் நரகத்தில் அழுத்தவும்தான் முடியும், அதிலிருந்து கறையேற்ற முடியாது. (11)

அவ:— முன் சுலோகத்தில் பாதுகையானது ஜநங்களுடைய த்ருடமான ஸம்ஸார ருசியை சிரமப்பட்டு நாளடைவிலே கொஞ்சம் கொஞ்சமாகப் போக்குவதாகச் சொல்லி “அவ்வளவு சிரமம்தான் என்னத்துக்கு, ஒரே படியாய் எல்லா பந்தங்களையும் உடனே நீக்குவதற்கு உனக்கு என்ன தடங்கல்” என்று பாதுகையைக் கேட்கிறார்.

(௬௬௨) ஸம்வாஹிகா சரணயோ உபலப்ரக்லுப்தே
தேவஸ்ய ரங்கவஸதே த³யிதா ததா² த்வம் |
கஸ்தாம் நிவாரயிது மர்ஹதி யோஜயந்தீம் மாத: ஸ்வகம் தத்
(ஸ்வயம்) கு³ணக³ணேஷு மமாபராதா⁴ன் || (௧௨)

(பதவுரை) உபலப்ரக்லுப்தே - கல்லிழைத்த பாதுகையே ! த்வம் - நீ, ரங்கவஸதே: - ரங்கவிமானத்தை இருப்பிடமாக உடைய (ரங்கம் என்கிற ராஜ ஆஸ்தானத்தை அடைந்திருக்கிற என்றும் ஒரு அர்த்தம்) தேவஸ்ய - ப்ரபுவாயிருக்கிற (ராஜாவான) ரங்கநாதனுடைய, சரணயோ: - திருவடிகளை, ஸம்வாஹிகா - தூக்குகிறவளாயிருக்கிற, (பிடிக்கிறவளாயிருக்கிற) த³யிதா ததா² - ப்ரியமானவளன்று, (ப்ரியமஹிஷீயன்று) மாத: - அம்மா, ஸ்வகம் - நல்லதான, தத் - அந்த பகவானுடைய, கு³ண - குணங்களுடைய, க³ணேஷு - கூட்டங்களிலே, (அல்லது ஸ்வயம் கு³ணக³ணேஷு என்கிற பாடத்தில், ஸ்வயம் - தானுகவே, கு³ணக³ணேஷு - குணக்கூட்டங்களிலேயே அதாவது குணமாக ஆகும் படியே), மம - என்னுடைய, அபராதா⁴ன் - குற்றங்களை, யோஜயந்தீம் - சேர்க்கிறவளாயிருக்கிற, த்வாம் - உன்னை, க: - யார், நிவாரயிதும் - தடுப்பதற்கு, அர்ஹதி - தகுந்தவாள்.

(கருத்து) அம்மா! கல்லிழைத்த பாதுகையே! நீ ஏன் இப்படி என்னுடைய பாபபுத்தியைக் கொஞ்சம் கொஞ்சமாக ஒக்கப் பண்ணிக் கொடுத்து நானுக ஸரியாகவேணுமென்று எதிர் பார்த்து வெகுநாள் சிரமப்படவேணும். என்னுடைய புத்தி உன்னையும் பகவானையும் விட்டு இப்படி ஸம்ஸாரத்தில் செல்லுவதற்குக் காரணம் அநாதியான என்னுடைய அபராதங்களால் (பகவானுடைய ஆக்ஞையை மீறி நடந்ததால்) பகவானுக்குக் கோபம் உண்டாய் இவன் நம்மை விட்டு ஸம்ஸார வழியில் போகட்டும் என்று அவன் ஸங்கல்பித்திருப்பதுதானே. நீயோ எனக்கு உயர்ந்த தாயாயும் பகவானுக்கு மிகவும் பிரியமான ஆம்படையாளாகவும் இருக்காய். எப்போதும் பகவானுடைய திருவடியைப் பிடித்துக்கொண்டு அந்தரங்கமான கைங்கர்யத்தைப் பண்ணி அவனை ரொம்ப ஸந்தோஷப்படுத்துகிறுய். அவ

னே ஸ்வயமாகவே எல்லையில்லாத தயை முதலிய குணங்களு டையவன். அப்படிப்பட்ட ஸ்வயம் குணசாலி உன்னுடைய பரிசர்யையாலும் குணத்தாலும் உன்னிடத்தில் வெகு ஸந்தோஷத்துடன் இருக்கும் ஸமயத்தில் "அப்பா அதுகள் என்ன பண்ணும். எவ்வளவு ஜ்ஞானமுள்ளது; அபராதம் பண்ணுவது தானே அதுகளுக்கு ஸஹஜம். நீ அதை ஒரு பெரிதாகப் பாராட்டி கோபித்துக் கொள்ளலாமா. அபராதிகளை ரக்ஷித்தால் தானே உன்னுடைய தயை ஔதார்யம் முதலிய குணங்களுக்குப் பெருமை. நம்ம வஸ்துதானே. வேறு யார் காப்பாற்றுவாள்" என்று இப்படிச் சொல்லி அவன் குணத்தைக் காட்டி என் அபராதத்தை மறைத்து கோபத்தைத் தீர்த்துவிட்டால் நான் உடனே நல்லவனும் விடுகிறேன். அப்படிச் செய்வதற்கு உன்னிடத்தில்தான் தயை முதலிய குணங்களில்லையோ? நீ ஏன் அப்படிச்செய்யவில்லை. பகவான் உனக்கு இசையும்போது உன்னைத் தடுக்குகிறவாள்தான் வேறு யார் இருக்காள். நீ அப்படிச் செய்யாததும் என் பாபம் தான் என்று தன் ஆற்றாமையால் வருத்தப்படுகிறார்.

ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யாள் பெருமாளிடத்தில் எல்லையில்லாத ஆசையுடையவர்கள். அவர்களுடைய குணங்களாலும் பக்தியாலும் சுச்ரூஷாதிகளாலும் பகவானுக்கும் அவர்களிடத்தில் எல்லையில்லாத ப்ரீதி. எப்படிப்பட்ட பாபிகள் விஷயத்திலும் அவர்களுடைய சிபார்சை பகவான் தட்டமாட்டான். அப்படி இருந்தும் இந்த சரீரத்தைப் பற்றி ஒப்புக்கொண்ட ப்ராரப்தத்தை அவசியம் அநுபவித்தே தீர்க்கவேண்டியதாலும், ஜனங்களுக்கு ஆர்த்தி (ஸம்ஸாரத்தைப் பற்றின துக்கமும் பகவானைப் பற்றின ஆவலும்) போராத்தாலும் பகவதநுபவ விரோதியான ஸகல பாபங்களையும் உடனே போக்க முடியவில்லை. அப்படியானாலும் அவர்களால் கூடியவரையில் ஜனங்களை ஒக்கப் பண்ணுகிறார்கள். அதை அறியாத ஸ்வல்ப நிர்வேதமுள்ள சிஷ்யன் அவர்களிடத்தில் குறை சொல்லுகிறான்.

பகவானிடத்தில் இப்படிப்பட்ட ப்ரீத்யதிசயமுள்ள ஆசார்யனும் ஸம்ஸாரத்தில் நிர்வேதமுடைய சிஷ்யனும் இப்போ அரிது. கிடைத்ததைக்கொண்டு இருவரும் ஸந்தோஷப்பட வேணும். (12)

அவ:— இப்படி கீழ் சுலோகத்தில் தனக்கு பகவதனுபவ விரோதியான ஸம்ஸாரபாசம் கழியவில்லையே என்கிற நிர்வேதத்தோடு பாதுகையினிடத்தில் குறை சொல்லியும் பாதுகை உடனே அப்படி நீக்காத்தால் எல்லாம் காலக்ரமத்தில் புத்தி ஸரிப்பட்டுவிடும் என்று அது நினைத்திருப்பதாக எண்ணி பதில் சொல்லி மறுபடியும், குறை சொல்லுகிறார் மேல் சுலோகத்தால்.

(௯௯௩) கிம் வா பவிஷ்யதி பரம் கலுஷைகவ்ருத்தே:
ஏதாவதாப்யநுபஜாதமஹஸ்ஸஹஸ்ரா மே ।
ஏகம் ததஸ்தி யதி பஶ்யஸி பாதுகே தே
பத்மாஸஹாயபதபங்கஜபோகஸாம்யம் ॥

(ப-ரை) பாதுகே - வாராய் பாதுகையே! கலுஷைகவ்ருத்தே: - பாபம் செய்கிறதையே தொழிலாகவுடைய, மே - எனக்கு, ஏதாவதா - இவ்வளவு, அஹஸ்ஸஹஸ்ராபி - நாளிலேயும், அநுபஜாதம் - உண்டாகாமலிருக்கிற, பரம் - வேறு ஸங்கதி உயர்ந்ததோ இளப்பமோ, கிம் வா - எதுதான், பவிஷ்யதி - உண்டாகப்போகிறது. (ஆனால்) யதிபஶ்யஸி - நீ என்னைக் கடாக்ஷிப்பாயேயானால், தே - உன்னுடைய, பத்மாஸஹாய - மஹாலக்ஷ்மிக்குத் துணையான, அல்லது மஹாலக்ஷ்மியைத் துணையாகவுடைய, பெருமாளுடைய, பதபங்கஜ - தாமரைப்பூப் போன்ற திருவடிகளுடைய, போக - அநுபவ விஷயத்திலே, ஸாம்யம் - ஒரே மாதிரியாயிருப்பது (அதாவது உன்னைப்போல் திருவடியை அநுபவிப்பது) என்கிற, தத் - அந்த, ஏகம் - ஒன்றானது, அஸ்தி - இருக்கிறது.

(கருத்து) ஓ பாதுகையே! எனக்கு பாபத்தைப் பண்ணுவதேதான் தொழில். நான் செய்யாத பாபம் புதிதாக ஒன்றும் உலகத்தில் கிடையாது. நல்ல காரியம் என்பது துளிக்கூடப் பண்ணமாட்டேன். எனக்கு இதுவரையில் அநுபவிக்காத நரகம் முதலிய துக்கங்கள்தான் புதிதாக என்ன வரப்போகிறது? இதுவரையில் கிடைக்காதிருக்கும்போது பகவதனுபவம் முதலிய நல்லதுதான் என்ன வரப்போகிறது? ஒன்றுமில்லை. இப்போது நீ செய்வதுபோல் நாளடைவிலே

நான் திருந்தட்டும் என்று நீ எதிர்பார்த்திருந்தால் எனக்குக் கெடுதலிலேயே திருடமான பழக்கமிருப்பதாலும் நல்லதில் அது அடியோடு இல்லாத்தாலும் உன்னுடைய உதவியும் கார்யகரமாகாமல் கெட்ட காரியங்களிலேயே மீறி ப்ரவர்த்தித்து ஸம்ஸாரத்திலேயே உழன்றுகொண்டு துக்கத்தையே அநுபவிப்பேனே ஒழிய, நல்ல ஸுகத்தை தேடவேமாட்டேன். ஆகையால் நீ இப்படி உபேக்ஷயாக இராமல் உடனே பரிபூர்ணமாக என்னைக்கடாக்ஷித்துவிடுவாயேயானால், தாயார் பெருமாளுடைய பரிபூர்ணகடாக்ஷமும்கூட ஏற்பட்டு, ஸம்ஸார ருசி அறுபட்டு, எனக்கும் உடனே உன்னைப்போலவே தாயார் பெருமாளுடைய திருவடித் தாமரைகளின் பரிபூர்ணாநுபவம் வந்துவிடும். நீ அப்படி அநுக்ரஹிக்காமலிருக்காயே. நான் என்ன பண்ணுவேன். என் பாபம் உன்னையும் அப்படித் தடங்கல் பண்ணுகிறதே என்று பூர்ண பகவதநுபவத்தில் த்வரையால் வருத்தப்படுகிறார். பாபியாய் நல்லது அறியாத முட்டாளுக்கு கெட்ட விஷயத்தில் நல்ல பழக்கத்தோடு பிரவர்த்திப்பதுதான் ஸ்வபாவம். அவன் தானாக திருந்துவதை எதிர்பார்த்துமுடியாது. ஸதாசார்யாளுடைய தயையொன்றினால் தான் அவன் கடைத்தேரவேணும். ஸதாசார்யாளுடைய கடாக்ஷத்துக்குப் பிறகுதான் தாயாருடைய கடாக்ஷமும் பகவானுடைய கடாக்ஷமும் ஏற்படும். அவர்கள் எல்லாருடைய பூர்ணகடாக்ஷங்களும் ஏற்பட்டவுடன் ஸம்ஸாரருசியற்று தாயாரையும் பெருமாளையும் பரிபூர்ணமாக அனுபவிக்கிறதாகிற பரமபுருஷார்த்தம் ஆசார்யாளுக்குப்போல் நமக்கும் ஸித்திக்கும். (13)

அவ:— இப்படி கீழ் சுலோகத்தில் வருத்தத்துடன் த்வரித்து முறையிடவே "நீ வேண்டுகிறபடி ஸம்ஸார ருசியற்றுப் போகவேணுமானால் பகவதனுபவ பூர்த்தியாலேதானே அது நீங்கவேணும். ஸம்ஸார துர்வாஸனை ஏறியிருக்கிற உன் மனதில் இப்போ எப்படி அனுபவபூர்த்தி உண்டாகுமென்று அந்யோந்யாச்ரயத்தைக்காட்டி பாதுகை பதில் கேள்வி கேட்பதாக நினைத்து அதற்கு பதில் மேல்சுலோகத்தால் சொல்லுகிறார்.

(௯௩௪) விவிய விஷயவிஜ்ஞா ஸங்கதாபிஶ்சிரம் மாம்
ஜநித கலுஷிதம் ஹி தேவி துர்வாஸநாபி: ।
பதஸரஸிஜயோஸ்த்வம் பாதுகே ரங்கபர்த்து:
பரிமள பரிவாஹை: பாவநைர் வாஸ
யேதா: ॥ (௧௪)

(ப-ரை) தேவி - விளங்காநிற்கிற (பகவதநுபவத்தாலே விளங்கா நிற்கிற என்று கருத்து) அல்லது விளையாட்டில் ப்ரிய முள்ள (அதாவது ஸம்ஸாரத்தை நடத்துவதாகிற லீலையில்ப்ரிய முள்ள) பாதுகே - வாராய் பாதுகையே, விவிய - அநேக வித மான, விஷய - இந்திரியங்களால் அநுபவிக்கக் கூடிய சப்தாதி விஷயங்களுடைய, விஜ்ஞா - நினைவிலுலே, ஸங்கதாபி:- ஓச்சவில் லாமல் உண்டாகிற, துர்வாஸநாபி: - கெட்ட பழக்கங்க ளினுலே (கெட்ட நாற்றங்களாலே என்று ஒரு அர்த்தம்), * கலுஷம் - இந்தமாதிரி, சிரம் - ரொம்பநாளாக, ஜநித-உண்டு பண்ணப்பட்டிருக்கிற, கலுஷம் - பாபத்தை (அழுக்கை) உடைத்தாயிருக்கிற, மாம் - என்னை, ரங்கபர்த்து: - (எல்லா உலகத்துக்கும் யஜமானனுன) ஸ்ரீ ரங்கநாதனுடைய, பத - திருவடியாகிற, ஸரஸிஜயோ: - தாமரைப் பூக்களுடைய, பாவநை: - பரிசுத்தி பண்ணுகிறதாயிருக்கிற, பரிமள - வாஸனையினுடைய, பரிவாஹை: - அடங்காமல் வெளியில் வழிந்தோடுகிற ப்ரவாஹங்களாலே, வாஸயேதா: - நல்ல வாஸனையுள்ளவனுகப் பண்ணவேணும். ரங்கபர்த்து: என்பதை பாதுகை பதஸரஸிஜம் இரண்டிலும் அந்வயிக்கலாம்.

(கருத்து) உனக்கும் எனக்கும் எல்லா உலகங்களுக்கும் யஜமானனுன ஸ்ரீ ரங்கநாதனுடைய பாதுகையே ! நான் அநாதி காலமாக உடம்பு, பிள்ளை, பெண்டாட்டி, ஸொத்து முதலான

---

* இந்த சுலோகத்தைப் படிக்கும்போது ஒவ்வொருவரும் தங் களைத் தொட்டுப்பார்த்து தங்களுடைய நிலைமையை உள்ளபடி முற் றிலும் கவனித்து அதைப் பகவானிடத்திலும் ஆசார்யாளிடத்திலும் தெரிவித்துக்கொள்ளவேணும் என்பதற்காக இந்தப் பதம் போடப் பட்டிருக்கிறது.

கணக்கில்லாத பலவகையான விஷயங்களைப் பற்றியும் அவ்வொவ்வொன்றைப்பற்றியும் பலவிதமாகவும் நினைத்து நினைத்துப் பலவழியாகப் பாடுபட்டு "காமமாஶ்ரித்ய துஷ்பூரம்" "சிந்தாமபரிமேயாஞ்ச" (கீதை 16 அத். 10, 11.) என்கிற சுலோகங்களின்படி ஒன்றையும் பூர்த்திபண்ணி அடக்க முடியாததும் வெகுகாலம் வரையில் யோஜிக்கப்பட்டதுமான ஆசைகள் நிறைந்த பிரவிருத்தி மார்க்கத்திலேயே உழைத்து உழைத்து, ஓய்வில்லாத அநாதியான அந்தப்பழக்கத்தாலே இப்படி விஷயவாஸனையின் ஸ்வரூபமாகவே ஆய்விட்டேனே உனக்கு தெரியவில்லையா? இனி அதிலிருந்து என்னால் நிவர்த்திக்க முடியுமா? கெட்ட வாஸனை ஏறின பதார்த்தத்தை நல்ல வாஸனையுள்ள பதார்த்தத்தோடு சேர்த்து அதில் முன்னுள்ள கெட்ட வாஸனையைப் போக்குவதுபோல் இப்படி விஷயங்களிலுள்ள என் கெட்ட பழக்கத்தை நீ தானே ஆத்மபரமாத்மானுபவரூபமான உன் நல்ல பழக்கத்தைக்கொடுத்துப் போக்கவேணும். அதற்காக நீஎல்லோராலும் பொதுவாகஅனுபவிக்கத்தகுந்தஸ்ரீரங்கநாதனுடைய திருவடித் தாமரைகளின் அளவில்லாத அநுபவ பரீவாஹத்தை உன்னிடத்திலேயே அடக்கிக்கொள்ள ப்ரயத்னப் படாமல் உன் அனுபவத்தை என் வரையில் பரவும்படி செய்யவேணும். அதை உனக்குள்ளேயே அடக்கிக்கொள்ள உன்னால் ஸாத்யப்படவும் படாது. அப்படிப்பட்ட பகவத்பாதாரவிந்தாநுபவம் உன் மூலமாய் எனக்கும் உண்டாச்சுதேயானால் அதினுடைய பரிசுத்திகர ஸ்வபாவத்தால் என் மனதின் கல்மஷமெல்லாம் இருந்தவிடம்கூடத்தெரியாமல் தானே போய் விடும். அப்படிக்கில்லாமல் என் ஸம்ஸார ருசியற்றபிறகு பகவதனுபவம் வரவேணுமென்றால் ஸாத்யமோ! நீ ஏன் அப்படிச் செய்யாமலிருக்காய்?என்னுடைய ப்ராப்திவிரோதி பாபம்தானே அப்படி உன்னைச் செய்யவொட்டாமல் பண்ணுகிறது என்று வருத்தப்படுகிறார்.

ஸ்ரீ ஆழ்வார் ஆசார்யாள் பகவானை தங்கள் உள்ளத்தில் உள்ளபடி அநுபவித்து, அந்த அளவில்லாத பேராநந்தத்தை உள்ளடக்கிக் கொள்ள முடியாமல் வெளிப்படையாக பகவானை ஸ்துதித்து ஆடியும் பாடியும், கத்கதமாய் புலம்பியும், மயிர்க் கூச்சலிட்டும், மூர்ச்சித்தும், பலபடியாய் பகவதனுபவம்

கரைபுரண்டு ஓடும்படி விட்டுவிடுவார்கள். அந்த அனுபவம் எப்படிப்பட்ட பாபியையும், கல்நெஞ்சையும் பகவானை நினைத்து உருகும்படி செய்துவிடும். அது மிகவும் பரிசுத்தி பண்ணும் ஸ்வபாவமுடையதால் அநுபவிக்கிறவர்களுடைய பாபங்களை எல்லாம் அவர்களறியாமலே போக்கி ஸம்ஸார ருசியை வேரறுத்து சீக்கிரத்தில் பகவத்பரர்களாகவே பண்ணிவிடும். அது செய்கிற வேலை எப்படிப்பட்ட சாஸ்த்ரோபந்யாஸமும், உபதேசமும், அநுஷ்டானமும், நிர்பந்தமும் செய்யாது. அந்த அநுபவத்துக்கு ஒரு எல்லை கிடையாது. அப்படி பூர்ணானுபவசாலிகள் இப்போது அரிதானாலும், அது ஸ்வல்பமிருந்தாலும் ரொம்ப வேலை செய்யும். அது ஸதாசார்யாளிடத்தில் விசேஷமாக உள்ளது. அவர்களுடைய தத்வஜ்ஞானம் குணம் முதலியதைக் காட்டிலும் ஜனங்களைத் தங்களுக்கும் பகவானுக்கும் ஸ்வாதீனமாகப் பண்ணுகிற விஷயத்தில் இதுதான் அவர்களுக்குப் பெரிய பலம். ஆகையால் பகவதவதாரரூபமாய் அப்படிப்பட்ட அநுபவசாலிகளான ஸதாசார்யாளுடைய பழக்கத்தினால்தான் ஜனங்களுடைய ஸம்ஸார ருசியாகிற கெட்ட பழக்கம் போய் பகவத் விஷயத்தில் ருசியும் ஏற்படவேணும். (14)

(அவ) இப்படி ஐந்து சுலோகங்களால் (960-964) பகவானையும் ஸதாசார்யாளையும் அடைந்த முமுக்ஷுக்களான ப்ரபந்நர்களுக்கு இவ்விடத்தில் நேரும் அசுபங்களுக்கு (ஆர்த்த காமங்களாகிற ப்ரயோஜநாந்தரங்களடியாக உண்டாகிற அந்யாச்ரயணம் அந்ய ஸேவைகளுக்கு)க்காரணம் அநாதியான ப்ராரப்த கர்மவசத்தாலுண்டான ஸம்ஸார ருசியென்று காட்டி அதை வெறுத்தும் அது நீங்கவேணுமென்று பிரார்த்தித்தும், அது நீங்குவதற்கு வழியைக் கண்டு அது ஸித்திக்காத்தால் மறுபடியும் முன் (959) ல் சொன்ன அசுபத்தின் இளப்பத்தையே நினைத்து வருந்துகிறார் மேல் சுலோகத்தால்,

(௯௬௫) ஶரணமுபக³தாநாம் ஶார்ங்கி³ண: பாத³ரக்ஷே
ஸக்ருத³பி விநியோக்தும் த்வத்ஸ்வயம்ப்ராயிகாரே |
ஸ்வநபி கத²மேநம் ஸம்ஸ்பர்த⁴நீயம்
யமப⁴டதர்ஜிதாநாம் மாநவாநாம் ஸமாஜே ||

(பதவுரை) ஶார்ங்கிண: - சார்ங்கம் என்கிற வில்லையுடைய (இது மற்ற ஆயுதங்களுக்கும் உபலக்ஷணம்) பெருமாளுடைய பாதரக்ஷே - வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! த்வாம் - உன்னை, ஶரணம் - உபாயமாக (ஸ்வதந்த்ரஶேஷைகஸ்வரூபத்துக்கு உபாயமாக), * அபிமத: - நம்பியிருக்கிற, அஹம் - நான், ஸக்ருதபி - ஒருதரமாவது, த்வதர்சநா - உன்னைப் பூஜிக்கிறதாகிற, அபிகாரே - வேலையிலே, விநியுக்தம் - உபயோகப்படுத்தப்பட்டிருக்கிற, ஏதம் - இந்த, ஹஸ்தம் - கையை, புநரபி - மறுபடியும், யந்தௌ - பணக்கொழுப்பினாலே, உபஹிதாநாம் - ஸந்தோஷத்தை அடைந்திருக்கிற (நல்லது கெட்டதை விவேகித்து அறியக் கூடாதபடி மதோன்மத்தாயிருக்கிற என்று தாத்பர்யம்.) மாநவாநாம் - மனுஷ்யாளுடைய, (அதாவது ஜன்ம மாத்திரத்தினால் மனுஷ்ய ஜாதியே தவிர குணத்தினாலும் அறிவினாலும் இல்லையென்று கருத்து.) ஸமாஜே - கூட்டத்திலே, (இந்தப் பதமும் ஸாதுக்களுடைய கோஷ்டியைப் போலில்லாமல் மிருகங்களுடைய மந்தைபோல் ஒரு கூட்டத்தை மட்டும் காட்டுகிறது.) கதம் - எப்படி, உத்தாநயேயம் - ஏந்துவேன், (அதாவது யாசகத்துக்காகக் கையை ஏந்துவேன். இப்படி யாசகத்துக்காக கையை நீட்டுவதை சொன்னது அவர்கள் விஷயமான மற்ற வேலைகளுக்கும் உபலக்ஷணம்).

(கருத்து) ஆச்ரித ஸம்ரக்ஷணத்தின் பொருட்டு ஸர்வாயுதங்களையும் எப்போதும் தரித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீ பகவானுடைய திருவடிகளுக்கும் ரக்ஷகமான பாதுகையே! நான் இன்னொருவருக்கு ஆளாகாமலும், இன்னொரு பிரயோஜனத்தைஅபே

---

* முன் 942-வது (சித்ரபத்ததி 32-வது) சுலோகத்தில் மானஸ ஸாக்ஷாத்காரத்தில் அநந்யாஹர்ஹஸ்வதந்த்ர ஶேஷவிருத்தியைப் பிரார்த்தித்தார். இந்தப் பத்ததியின் முதல் சுலோகத்திலும் ஸம்ஸார நிவிருத்தி பூர்வகமாக சீக்கிர பரிபூர்ணபகவதனுபவ ப்ராப்தியைப் பிரார்த்தித்திருக்கிறார். ஆகையால் இவிடம் ஶரணம் அபிமத: என்பது முந்தியுள்ள இவ்விரண்டு ஸந்தர்ப்பங்களையும்காட்டும்.

க்ஷிக்காமலும் உன்னையும் பகவானையுமே விரும்பி உங்களுக்கே ஆளாகவேணுமென்று உன்னிடத்தில் ஏற்கனவே சரணாகதி பண்ணியிருக்கவில்லையா? அப்படிப்பட்ட என்னை அநந்யார்ஹ ஶேஷவ்ருத்திக்குப் ப்ரதிபந்தகமான பாபங்களைப்போக்கி ரக்ஷிப்பதற்கு உனக்கும் பகவானுக்கும் சக்தி இல்லையா? அது இருக்கட்டும். உங்களுடைய வஸ்துவாகவே இருந்து இதுவரையில் உங்களுக்கு ஏதாவது ஒரு தடவையாவது ஒரு கைங்கர்யத்தை செய்திருக்கிற இந்தக் கையை தாரித்திரிய வசத்தாலோ அர்த்தசபலத்தாலோ மற்ற காரணத்தாலோ நீட்டி அவிவேகிகளாய் பணக்கொழுப்புப்பிடித்து ஒரு நல்லகுணமுமில்லாமல் ஜன்மத்தினால் மட்டும் மனுஷ்யர்களாய் பிறந்த அல்பர்களிடத்தில் போய் தைன்யத்தோடு பல்லைக்காட்டிப் பணத்தை யாசிப்பது அவர்களுக்கு வேலைகளைச் செய்வது முதலியதைச் செய்யலாமா? அது என் ஸ்வரூபத்துக்குத்தான் அழகா? உன் பெருமைக்குத்தான் தகுதியா? அல்பபுத்தியுள்ள எனக்கே மிகவும் லஜ்ஜையை உண்டு பண்ணுகிறதே. மஹாப்ரபுக்களாய் மஹோதாரர்களாய் எனக்கு பரமசேஷிகளான உங்களுக்கு எப்படியிருக்காது. இதை நீங்கள் கவனிக்க வேண்டாமா? இப்படி எனக்கும் உங்களுக்கும் லஜ்ஜாவஹமான கார்யங்களைப்பண்ணும்படித் தூண்டுகிறதே என் பாபம் என்று வருத்தப்படுகிறார்.

பரமோதாரர்களாய் பரமஸ்வாமிகளாய் பரம ஸுஹ்ருத்துக்களான ஸதாசார்யானையும் பகவானையும் ஆச்ரயித்த ஒருவன் அர்த்தகாமங்களடியாக பாபிகளான அல்பமனுஷ்யர்களைப்போய் ஒன்றுக்கும் யாசிக்கவும் கூடாது; அவர்களுக்கு அடிமைத் தொழில் செய்யவுங் கூடாது. "த்வதீய பக்தி ஜ்ஞாநாப்யாம் ஸமேத்ய ஸ்வாவத | நயாசேய ஸாமந்தாந் விஷண்ணாந் யாவநாஶ்ருதியுக்தஶ" என்று ஜ்ஞானத்தையும் பக்தியையும் தவிர கர்மாதீனமாகத் தானே ஏற்படுகிற மற்ற அல்ப ப்ரயோஜனங்களை பகவானிடத்திலேயே கேட்பது இளப்பம் என்று சொல்லி இருக்க அவைகளுக்கு அவனைவிட்டு மற்ற அல்பர்களிடத்திலும் போவது எவ்வளவு இளப்பமென்று சொல்லவேணுமோ. நம்முடைய ஸ்வரூபத்துக்கும் அவனுடைய பெருமைக்கும் அது எவ்வளவு குறைவு. நாம் அப்படிச் செய்வது அவிசாரிமுண்மையின் நடத்தைப் போலொத்ததாகின. ஆகைக் கஷ்டு

பகவானுடைய திருவுள்ளமும் ஸதாசார்யாளுடைய திருவுள்ளமும் எவ்வளவு நோவுபடும் என்பதைக் கவனிக்கவேணும். அதை துளிக்கூட யோஜியாமலே நாம் பாபிகளான அல்பப் பணக்காரர்கள் முதலிய இளப்பமான மனுஷ்யர்களை ரக்ஷகர்களாக எண்ணி நாடுகிறோம். அப்படி நாடும்படி செய்கிறதே நம்முடைய பாபம் என்று நம் பாபத்தை நினைக்கவாவது நினைக்கிறோமா. ஆகையால் நம்மைக் காட்டிலும் மேலான பாபிகள் உண்டா. (15)

(அவ) 958-வது (இதில் 8-வது) ச்லோகம் முதல் இது வரையில் நம்முடைய ஸ்வரூபத்துக்குத் தகாத ஸங்கதிகளாகிற அசுபங்களுக்குக் காரணமான பாபங்களை நினைத்து வருத்தப் பட்டார். மேல் ச்லோகத்தில் ஸ்வரூபத்துக்கு உசிதமான ஸங்கதிகளுக்குத் தடையாயிருக்கிற பாபங்களை நினைத்து வருத்தப் படுகிறார்.

(௯௬௬) யதி க்வாபி ஸமீஹே கர்ம கர்தும் யதாவத்
ப்ரதிபதமுபஜாதை: ப்ரத்யவாயை: நிமித்தை: ।
அவஹிதமபி யத்ஸ்வம் தத்து நைமித்திகாநாம்
சரணமிஹ ந கிஞ்சித் சௌரிபாதாவநி ஸ்யாத் ॥

(ப-ரை) சௌரி - (ஆச்ரிதவாத்ஸல்யத்தால்) சூரன் என்கிற ராஜாவின் குலத்தில் வந்து க்ருஷ்ணனாக அவதரித்த பகவானுடைய, பாதாவநி - திருவடியைக்காப்பாற்றுகிற பாதுகையே! க்வாபி-ஒரு, கர்ம - சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட வேலையை அதாவது பகவதாராதன ரூபமாய் பகவத் ப்ரீதியை உத்தேசித்த, நித்யம், நைமித்திகம், காம்யம் என்றும் தவறுதல்களால் உண்டான பகவானுடைய கோபத்தைத் தணிப்பதற்காக ஏற்பட்ட ப்ராயச்சித்த ரூபமானதுமான சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஸத்கர்மத்தை, யதாவத் - சாஸ்திரத்தில் சொல்லிய முறைப்படி, கர்தும் - பண்ணுகிறதற்கு, ஸமீஹே யதி - ஆசைப்பட்டேனேயானால், ப்ரதிபதம்-அடிக்கடி, அதாவது அந்தக் கர்மானுஷ்டானத்தில் ஒவ்வொரு க்ஷணத்திலும், உபஜாதை:-உண்டாயிருக்கிற, நிமித்தை: - காரணங்களினால், அதாவது தப்பு வேலைகளாலே, ப்ரத்யவாயா ...

ஷத்தை அடைவேன். தத்ர-அந்த தோஷ விஷயத்தில், நைமித்திகாநாம் - பிராயச்சித்தங்களுக்கு, அதாவது அந்த தோஷங்களைப் போக்குவதற்கு ஏற்பட்ட வேலைகளுக்கு, ஸ்வா - நீ ஸ்வயமி: - எல்லையாக, அதாவது கடைசி வேலையாக, ஸ்வமியஷி, ஆகிறுயேயானல், மே - எனக்கு, ஶரணம் - உபாயமாக, அதாவது ஸத்கர்மங்களை ஸரிவரச்செய்வதற்கு விரோதியான பாபங்களைப் போக்குவதற்கு உபாயமாக கிம் - ஏன், நபவஸி: - ஆகமாட்டாய். அதாவது சரணுகதனுன என்னுடைய ஸத்கர்ம விரோதியான பாபங்களை ஏன் போக்காமலிருக்காய்?

(கருத்து) வாராய் ஆச்ரிதவத்ஸலனுன பகவானுடைய திருவடியைக் காப்பாற்றுகிறவளே! ஸம்ஸார ருசிக்கும் அதின் மூலமான ஸ்வரூப விருத்த வேலைகளுக்கும் காரணமான பாபங்கள்தான் இப்படி பகவதனுபவத்தைத் தடுத்து ஒரு பக்கம் படுத்துகிறதென்றுல் ஸ்வரூபத்துக்கு ஒத்ததானநல்ல வேலைகளைச் செய்வதிலாவது ஒரு தடங்கலுமில்லாமலிருக்கக் கூடாதா. ஐயோ! அந்த விஷயத்திலும் என் பாபம் படுத்துகிறதே; என்ன செய்வேன். சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட பகவத்ப்ரீதிகரமான நித்யம் (ஸந்த்யாவந்தனம் போல் நித்யமாகச் செய்யவேண்டியது.) நைமித்திகம் (மாதா பிதாவின் ச்ராத்தம்போல் ஒரு காரணத்தைப் பற்றிச் செய்வது), காம்யம் (ஆலயஸமிருத்தி, ஒரு பாகவதானுடைய க்ஷேமம் ஜ்ஞாந பக்திகளின் விருத்தி முதலியதை உத்தேசித்த நல்ல இஷ்டத்தைப் பற்றிச் செய்வது) ப்ராயஶ்சித்தம் (புத்திபூர்வகமாகவோ, முதலில் புத்திபூர்வகமாக இல்லாமலோ நேர்ந்த பாபங்களைப் போக்குவதற்குச் செய்வது) என்கிற எந்த வேலைகளை சாஸ்திரப்படி ஸரிவரச் செய்ய வேணுமென்று ஆசைப்பட்டாலும் அவைகள் மந்திரலோபம், தந்திரலோபம், திரவ்யலோபம் கிரியாலோபம் சிரத்தாலோபம், முதலிய குற்றங்களில்லாமல் முடிகிறதில்லையே. அப்படி நடுவில் ஏற்படுகிற குற்றங்கள் நீங்குவதற்கு ஒரு வேலையிருந்தாலும் அந்த வேலையிலும் அதேமாதிரிக் குற்றங்கள் நேறுகிறதே. இதற்கு முடிவே இல்லையே. இதற்கெல்லாம் காரணம் என் பாபம் தானே. ஆனல் எந்த வேலைக

ளையும் ஸம்ஸாரிகளால் குற்றமில்லாமல் நிறைவேற்ற ஸாத்யமில்லாத்தாலும் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட வேலைகள் அவசியம் செய்யவேண்டியதாயிருப்பதாலும் சாஸ்திரத்தில் கர்மங்கள் நிறைவேறுவதற்கு ஒரு வழியும் கூட காட்டி இருக்கிறது; அதாவது கர்மங்களில் நேரும் குற்றங்கள் நீங்கி அவைகள் பூர்த்தியாவதின் பொருட்டு உன்னை நினைப்பது உன்னை சரணாகதி பண்ணுவது என்பது. ஆகையால் இப்படி சாஸ்திரீய கர்மாக்கள் பூர்த்தியாவதற்கு நீயே பரம உபாயமாக இருப்பதால் சரணாகதனை என்னுடைய ஸத்கர்ம விரோதியான பாபங்களை ஆச்ரித வத்ஸலையான நீ என் முதலிலேயே போக்கி இங்கிருக்கும் காலம் நான் நிர்விக்னமான ஸத்கர்மாக்களால் பகவானை ஆராதித்து ஸந்தோஷப்படும்படியாவது செய்யக்கூடாது? என் பாபம்தானே உன்னை அப்படிச் செய்யவொட்டாமல் தடுக்கிறது— என்று வருத்தப்படுகிறார்.

பாபிகளாய், அல்பபுத்தியுள்ளவர்களாய், அல்பசக்தர்களான ஜனங்களால் ஒரு ஸங்கதியை உள்ளபடி அறியவும், ஒரு நல்ல காரியத்தைக் குற்றமில்லாமல் செய்யவும் ஸாத்யமில்லை. அவர்களை ஸதாசார்யாள்தான் காப்பாற்றவேணும். அவர்களால் தான் எல்லாம் நல்லதாகவேணும். அப்படியேதான் சாஸ்திரமும் சொல்லுகிறது. (16)

(அவ) இப்படி இந்த பத்ததியின் மூன்றாவது சுலோகம் துடங்கி கீழ் சுலோகம் முடிய இந்த ஸம்ஸாரத்தில் உள்ள கஷ்டங்களையும் அவைகளுக்குக் காரணமான பாபங்களையும் நினைத்து வருத்தப்பட்டு, மேல் சுலோகத்தில் அவைகளை ஸங்கிரஹித்து முதல் சுலோகத்தில் பிரார்த்தித்தபடியே ஸ்ரீ பாதுகைதான் தன்னை இந்த ஸம்ஸாரமாகிற துக்க ஸமுத்திரத்திலிருந்து கரை ஏற்றவேணும்; அது தவிர வேறு உபாயமில்லை என்று அதனிடத்தில் மிகுந்த வருத்தத்துடன் முறையிடுகிறார்.

௯௩௭) [illegible] (கஎ)

(ப-ரை) விஷ்ணோ: - எங்கும் வ்யாபரித்தவராயிருக்கிற பகவானுடைய, பாத - திருவடியிலே, ப்ரணயிநீ-ஆசையுள்ள வளான பாதுகையே, (அல்லது பாதப்ரணயிநீ - திருவடியை அடைவிக்கிறவளே), மந: - மனஸுக்குள்ளே, லீநை: - லயித்துப்போயிருக்கிற, அவலிப்தை:-பாபத்தை உண்டுபண்ணுகிற வஸ்துக்களாலே, வ்ருத்தி: - மனதினுடைய வேலை யானது, அதாவது மனதாலே உண்டாகிற நினைவானது, கலுஷா-தெளிவில்லாமல் கலங்கியிருக்கிறது. அதாவது எண்ணங்களெல்லாம்தப்பாகவே(கெட்ட வழியைப்பற்றினதாகவே) இருக்கிறது, இந்த்ரியாணி - காது முதலிய ஜ்ஞானஸாதனமான இந்திரியங்கள், ஸ்வார்த்தாநாம் - சப்தம் முதலிய ஸம்ஸார விஷயங்களுக்கு, பரவஸ்யதயா - உள்பட்டிருப்பதினாலே, துர்ஜயாநி- ஜயிக்க முடியாததாக இருக்கிறது, அதாவது நாம் நினைத்தபடி அவைகளை நல்வழியிலேயே உபயோகப்படுத்த முடியவில்லை, கெட்ட வழியிலேயே அடங்காமல் போகிறது. அஸ்ய - இந்த, மே - என்னுடைய, சிராக - ரொம்பகாலமாகத் தொடர்ந்து வருகிற, துக்க-துக்கமாகிற,ஸிந்தோ:-ஸமுத்திரத்தினுடைய, பாரம் - அக்கரையானது, அதாவது மோக்ஷமானது, பராவித்யாவா - பக்தி, பிரபத்தி இவைகளினாலேயாவது, த்வயா வா - உன்னாலேயாவது, ப்ராப்யம் - அடையத் தகுந்ததாக, பவதி - இருக்கிறது.

(கருத்து) எங்கும் வியாபித்திருக்கிற பகவானுக்குத் தகுந்த பிரபாவமுள்ளவளே! அந்த பகவானிடத்தில் உனக்குள்ள எல்லை இல்லாத ப்ரீதியினால் அவனை உனக்கு ப்ரீதிவச்யனாக உடையவளே! (அவன் திருவடிகளை அடைவிக்கிற விஷயத்தில் அத்வி தீய உபாயமானவளே) என்னுடைய துர்தசையை கவனித்துப் பார். ஒருவனுக்கு நல்லதோ கெட்டதோ எல்லாம் மனதாலும் ஐந்து ஜ்ஞானேந்திரியங்களாலும் ஏற்படவேணும். என்னுடைய மனதோ அநாதிகாலமாக பாபத்துக்கு ஸாதனமான பிள்ளை பெண்டாட்டி சொத்து என்று இவை முதலான கணக்கில்லாத ஸம்ஸார விஷயங்களிலுள்ள திருடமான பழக்கத்தாலும் ருசியாலும் உள்ளூர மறுபடியும் மறுபடியும் நன்றாக ஈஷப்பட்டு மங்

கிப்போய் நல்ல பிரகாசமிழந்து, தெளிவில்லாமல் கலங்கி, நல்ல ஸங்கதி அதில் தோன்றுவதற்கு யோக்யமில்லாமல் போய்விட்டதே. இந்திரியங்களுக்கெல்லாம் ராஜாவான மனது இப்படி யோக்யதை இழந்து கெட்டுப்போகவே, அதற்குள்பட்ட காது முதலிய ஐந்து ஜ்ஞானேந்திரியங்களும் மனதை அநுஸரித்து ஆத்மநாசகமாய் கெடுதலான ஐந்து சப்தாதி விஷயங்களிலேயே ஈடுபட்டு ஸ்வாதந்திரியத்தைஅடைந்து ஒருக்கால் நல்லவர்களுடைய ஸம்ஸர்க்கம் முதலியதால் மனதில் ஸ்வல்பம் நல்ல ஸங்கதி தோன்றினாலும் நல்லதான சப்தாதி விஷயங்களில் திரும்பும்படி மனதுக்கு ஸ்வாதீனப்படுவதில்லையே. இப்படி ஆத்மக்ஷேமத்துக்குக் காரணமான என்னுடைய ஜ்ஞானஸாதநங்களை என் வசமில்லாமல் இழந்து,யோக்யதையற்று,அநாதிகாலமாகத்தொடர்ந்துவருகிற ஸம்ஸாரமாகிற கரைகாணாத இந்த துக்கஸமுத்திரத்தில் தத்தளிக்கிற எனக்கு இந்த பயங்கரமான ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு என்ன உபாயங்கள் சாஸ்திரம் காட்டுகிறது? (மற்றொன்றைப் பற்றாதபடி பகவானிடத்திலேயேயுள்ள எல்லை இல்லாதப்ரீதியைப் ப்ரதானமாகவுடைய) பக்திமார்க்கம் ஒன்று; (பகவானிடத்தில் எல்லையில்லாத நம்பிக்கையைப் பிரதானமாகவுடைய) ப்ரபத்திமார்க்கம் ஒன்று; (ஆச்ரிதவாத்ஸல்யமுடையவளாய், பரம தயாமூர்த்தியாய், ஸர்வஸுலபையாய் ஸர்வேச்வரனை ஸ்வாதீனமாகவுடையவளாய்,பகவானுக்கு ஸத்ருசமான பிரபாவமுடையவளாய்,நினைத்ததையெல்லாம் ஸாதிக்கவல்லவளான) நீ ஒருத்தி, என்ற இந்த மூன்று உபாயங்களுக்குள் நான் எதைத் தேடலாமென்று நீயே யோஜித்துப்பார். எனக்கு உன்னைத் தவிர வேறு என்ன தகுந்த உபாயமிருக்கிறது. ஆகையால் நீயாகவே என்னை இந்த ஸம்ஸாரஸமுத்திரத்திலிருந்து சீக்கிரம் கரையேற்றுவிட்டால் என் கதி என்ன? உன்னை அடைந்து இன்னும் எவ்வளவுகாலம் நான் துக்கப்படவேணும்? இனி என்னால் ஸாத்யமில்லையே என்று கூக்குரலிட்டு வருத்தப்படுகிறார்.

மிகவும் பாபிகளாய், ஜ்ஞாநஹீனர்களாய், பகவத்விமுகர்களாய், அஜிதேந்திரியர்களாய், ஸம்ஸாரத்தில் ஈடுபட்டுபோயிருக்கிற ஜனங்களுக்கு கருணாமூர்த்திகளாய், பகவானைப்போலொத்த பிரபாவமுடையவர்களாய்,பகவானிடத்தில் ஈடுபாடுள்ளவர்களாய் அவனை வச்யமாகவுடையவர்களாய், ஸர்வஸுலபர்களாய்,எத்தை

யும் ஸாதிக்க வல்லவர்களான ஸதாசார்யாளைத் தவிர இந்த விலக்க முடியாத ஸம்ஸாரத்திலிருந்து கரைஏற்ற வேறு உபாய மில்லை. (17)

(அவ:) ஒரு காரணார்த்தமாக உன்னை இந்த பூமியில் வைக்க நினைத்தால் அப்படியே அதை ஒப்பி இன்னும் கொஞ்ச காலம் உலகத்துக்கு நல்வழியைக்காட்டிக்கொண்டிருந்தால்என்ன? ஏன் இப்படி நிற்பந்தித்து த்வரிக்கிறாய்? உலகத்தில் எவ்வளவு ஜனங்கள் இந்த ஸம்ஸாரத்தை ஸஹித்துக்கொண்டும் அதில் போக்யதா புத்தியுடனும் இருக்கிறார்கள். உனக்கு மட்டும் ஏன் இந்தத் தனிவழி? இன்னும் கொஞ்சகாலம் பொரு என்று சொல்லி தன்னுடைய மனோரதத்துக்கு இன்னும் காலதாமதம் பண்ணுவதாகவும் உலகத்தைக் காட்டித் தன்னைப்பரீக்ஷிப்பதாக வும் நினைத்து அஸத்பிரகிருதிகளுக்கு ருசிக்கும் ஸம்ஸாரம் இனி தனக்கு அடியோடு து:ஸஹமென்றும், அவர்களுடைய ஸஹவா ஸமும் து:ஸஹமென்றும், தன்னைக்கொண்டு அப்படியே உத்தே சித்த ஸித்தாந்தோபகாரமும் தலைக்கட்டிவிட்டதென்றும் மேல் சுலோகத்தால் பதில் சொல்லி தேஹ ஸம்பந்தத்தில் பரிபூர்ண நிர்வேதத்துடன் த்வரிக்கிறார்.

(௩௧௮) ஶிவாகணாநாம் மலயபவநே தஸ்கராணாம் ஹி
மாம்ஶௌ துர்வ்ருத்தாநாம் ஸாதுசரிதயே ஸத்வ
யே ஸ்வஸ்தநாயே| தத்த்வஜ்ஞாநே தாமஸாநாம்
ஸாம் ஶார்ங்கிண: பாதரக்ஷே நித்யத்வேஷோ
பவதி நியதேரீத்ருஶீ துர்விநீதி: ॥ (௧௮)

(ப-ரை) ஶார்ங்கிண: - சார்ங்கம் என்கிற வில்லையுடைய (அதாவது ஆச்ரித ரக்ஷணத்தில் ரொம்பவும் ஜாகரூகனாக ஸர்வ தா ஸர்வஆயுதங்களையும் தரித்துக்கொண்டிருக்கிற) பகவானு டைய, பாதரக்ஷே-வாராய் திருவடியைக்காப்பாற்றுகிற பாது கையே ! ஶிவாகணாநாம் - நரிகளுக்கு, மலயபவநே - தென் னல் காற்றிலும், தஸ்கராணாம் - திருடர்களுக்கு, ஹிமாம்ஶௌ- குளிர்ந்த கிரணங்களுள்ள சந்திரனிடத்திலும், துர்வ்ருத்தா நாம்-கெட்ட நடத்தை உள்ளவர்களுக்கு, ஸாதுசரிதயே-நல்ல காரியங்களாலே ரொம்பி இருக்கிறதும், ஸ்வஸ்தநாயே -

உன்னோடு கூடிக்கொண்டிருக்கிறதுமான, ஸத்வே - நல் வழியிலும், தரளே - நிலையில்லாத, உதஸாம் - மனதையுடைய வர்களுக்கு, தத்வஜ்ஞானே-உண்மையை அறிவதிலும், நித்யா ஹம: - எப்பொழுதும் அறுவிருப்பானது, ஸவதி - இருக் கிறது, நியதே: - தெய்வத்தினுடைய, ஈத்ருஶீ நீதி: - அந் யாயமானது, ஶம்ஶூஸீ - இப்படியிருக்கிறது.

(கருத்து) ஆச்ரிதர்கள் விஷயத்தில் ரக்ஷிணோன்முகனாக ஸர்வதா ஸர்வ ஆயுதங்களையும் ஏந்திக்கொண்டிருக்கிற பகவானு டைய பாதுகையே! அந்த பகவானைப் போன்ற ஸ்வபாவமுள்ள நீ ஆச்ரிதனான என்னை இந்த ஸம்ஸாரத்திலிருந்து ரக்ஷிக்க ஸங்கல்பித்து விட்டபடியால் நான் உன்னுடைய மார்க்கத்தில் வந்துவிட்டேன். எனக்கு இந்த பாபியான ஸம்ஸாரமார்க்கம் அடியோடுபிடிக்கவில்லையே? ஆனால் சாஸ்திரம் படித்தவர்களோ படிக்காதவர்களோ உலகம் முழுவதுக்கும் இந்த ஸம்ஸாரம் ருசிக்கும்போது உனக்கு மட்டும் ஏன் இப்படி விபரீதமாக இருக்கிறது என்றால் எத்தனையோ பேர்களுக்கு நல்லதே பிடிக்க வில்லை. கெட்டதுதான் பிடிக்கிறது. அதற்கு நான் என்ன செய்கிறது. அநேகம் பேருக்கு ருசிப்பதைக்கொண்டு இந்த கெட்ட ஸம்ஸாரம் நல்லதாய்விடுமா? அது எனக்கும் அவர் களைப்போல் ருசிக்கவேணுமென்று நிர்பந்தமா? மிகவும் ஆரோ க்யகரமாய், ஸுககரமாய், விரும்பத் தகுந்ததாய், வஸந்தகால புஷ்ப பரிமளங்களோடுகூடிய மந்தமாருதமான தென்னல் காற்று நரிகளுக்கெல்லாம் பிடிக்கவில்லை. அவைகளுக்கு உலற்று கிறதாய், பருஷமாய், குளிரினால் எல்லாருக்கும் உபத்திரவகர மான மேல்காற்று கிழ்காற்று வடந்தை என்கிற காற்றுகள்தான் ஸுகமாகத் தோன்றுகிறது. ஜகத்துக்கெல்லாம் ஆஹ்லாதகர மாய் பகலின் வெய்யில் தாபத்தையெல்லாம் போக்கடிக்கும்படி யான ஸ்வச்சமான நிலா திருடர்களுக்குப் பிடிக்கவில்லை. அவர் களுக்கு அமாவாஸ்யை கும்பிருட்டு அதிலும் மழைகாலத்து இருட்டு மிகவும் ப்ரியமானது. பாபத்தால் புத்தியின் தெளி வை இழந்து ஒரு கொள்கையிலும் நிலையில்லாத புத்தியுடைய வர்களும் ஸம்சயாத்மாக்களுமான சபலசித்தர்களுக்கு எப்போ தும் ஒரு தெய்வத்தை விட்டு ஒரு தெய்வமாய் ஒரு மதத்தை விட்டு ஒரு மதமாய் மாறிக்கொண்டே இருப்பது பிரியமானதால்

ஒருபோதும் ஒருபடியாலும் மாராததும், உண்மையை உள்ள படியறிவதால் ஏற்படுகிறதும், ஸ்ரீய:பதியானபகவானை பரதேவதையாய் உடையதுமான வேதாந்த மதத்தின் நிச்சயார்த்தத்தில் ப்ரியம் கிடையாது. ஆஸுரப்பிரகிருதிகளான துர்மார்க்கஸ்தர்களுக்கு பிரவிருத்தி மார்க்கம் அதிலும் தர்மத்தைவிட்ட பிரவிருத்திமார்க்கம்தான் மிகவும் பிரியமானதே தவிர நல்ல (அதாவது தத்துவஜ்ஞானத்தோடு சேர்ந்த) அனுஷ்டானங்களோடு கூடியதும் அதிலும் பலாபிஸந்தி இல்லாத (பலத்தை வேண்டாத) அனுஷ்டானங்களோடு கூடியதும், எப்போதும் உன்னை முன்னிட்டுக்கொண்டே உன்னைப் பார்த்து உன் மாதிரியில் செய்யப்படுகிற மனோவாக்காயங்களின் வியாபாரங்களையுடையதுமான நிவிருத்திமார்க்கம் அவர்களுக்கு அடியோடு பிடிக்கிறதில்லை. அதில் அவர்களுக்கு அஸூயையும் த்வேஷமும் கூட உண்டாகிறது. இப்படி மிருகஜாதியோ மனுஷ்ய ஜாதியோ ஆஸுரப் பிரகிருதிகளாக இருப்பவர்களுக்கு நல்ல ஸங்கதியில் அருவருப்பும் த்வேஷமும் ஒரு ஸமயம் இருந்து ஒரு ஸமயம் இல்லை என்பது கூட இல்லை. ஜநநகாலம் முதல் மரணகாலம் வரையில் அப்படியே ஒரே மாதிரியாக இருக்கிறது. அதுகளின் பாபம் அப்படியிருக்கிறது. தெய்வமும் அவர்களை அப்படி அந்யாயமாய் படுத்துகிறது. குமதிகளாலும் மந்த புத்திகளாலும் ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்திற்கு ஏற்பட்ட தொந்திரவை நீக்குவதற்காக இருக்கவேணுமென்றால் அதற்காக நீ இது வரையில் என்னைக்கொண்டு செய்வித்த க்ரந்தம் முதலியதுகள் ஸத்வப் பிரகிருதிகள் தவராமைக்குப் போதுமானது. எவ்வளவு கிரந்தத்தினாலும் மற்றப்பிரயத்தனத்தாலும் ஆஸுரப் பிரகிருதிகளும் அவர்களுடைய துர்மதங்களும் மாரப் போகிறதில்லை; தெய்வம் அவர்களை அப்படிப் படுத்துகிறது. அவர்கள் மத்தியில் இருப்பதே எனக்கு மிகவும் துஸ்ஸஹமாக இருக்கிறது. ஆகையால் இப்படிப்பட்ட ஆஸுரப்பிரகிருதிகள் மத்தியில் என்னை இனி வைக்காமல் நீ சீக்கிரத்தில் என்னை இந்த பிரகிருதி ஸம்பந்தத்திலிருந்து நீக்க வேணும். அதற்கு உன்னையே உபாயமாக நம்பியிருக்க நீ இன்னும் அப்படிச்செய்யாமலிருக்காயே; இனி என்றால் இந்த பிரகிருதியில் இருக்கமுடியவில்லையே ஐயோ என்னசெய்வேன் என்று தன்னுடைய கஷ்டத்

தையும் உலகத்தினுடைய துர்தசையையும் நினைத்து வருத்தம் தாங்காமல் பெரிய கூப்பாடாக முறையிடுகிறார்.

உலகத்தில் சில ஆஸுரப்பிரகிருதிகள் இருக்கிறார்கள். அவர்களுக்கு ஸந்மார்க்கம், தத்வஜ்ஞாநம் முதலிய இந்த லோகத்தைப் பற்றினதோ பரலோகத்தைப்பற்றினதோ ஒரு நல்லஸங்கதியும் பிடிக்காது; அதில் அவர்களுக்கு ஜந்மஸித்தமாய் அறுவறுப்பும் த்வேஷமும்தான் ஏற்படுகிறது. அவர்களுக்கு ஆசார்யாள் என்று பேர்சொன்னாலே பொறுக்காது. எல்லாவிதத்திலும் அவர்களுக்கு நேர் எதிர் தட்டானவர்கள் தெய்வப் பிரகிருதிகள். அவர்களுக்கு ஸந்மார்க்கத்தைத்தவிர வேறொன்றும் ருசிக்காது. அவர்கள் தத்துவஜ்ஞாநத்திலேயே நோக்கு உடையவர்கள். அவர்களுக்கு ஸதாசார்யாள்தான் பரதேவதை; அவர்களுடைய மதம்தான் அவர்களுக்கு மதம்; எப்போதும் எதிலும் ஸதாசாரியாளுடைய திருநாமத்தையே சொல்லுவார்கள். இது ஆசார்யாள் நியமனம், திருவுள்ளம், அனுஷ்டானமென்று அதையே அனுஸரிப்பார்கள். அலுப்பில்லாமல் அவர்களையே கொண்டாடுவார்கள். ஸதாசார்யாள் அவர்களை ஸர்வப் பிரகாரமாகவும் ரக்ஷித்து, நெருங்காமல் த்வேஷமும் பண்ணுகிற ஆஸுரப் பிரகிருதிகள் விஷயத்தில் ஐயோ பாவம் என்கிற அனுதாபத்துடன் பகவானிடத்தில் அப்பா இந்த ஜந்துக்களை இப்படிப் படுத்துகிறாயே என்று சொல்லிக்கொண்டிருப்பார்கள். நல்ல காலம் இருந்தால் அவர்களுக்கும் ஒரு நாள் இவர்களுடைய அனுதாபத்தால் நல்லதும் வரலாம். ஸ்ரீ பாஷ்யகாரர் சரம தசையில் அருகிலிருந்த ஆர்த்தரான முதலிகளுக்கு (சிஷ்யர்களுக்கு) நியமித்ததுபோல் ஸதாசார்யாள் லோகானுக்கிரஹார்த்தமாக ஸத்சிஷ்யர்களை உலகத்தில் அதிக காலம் நிறுத்துவதும் இந்த சுலோக தாத்பர்யத்தால் ஸூசிதம். இப்படி அவதாரிகையின்படிக்கும் கருத்தின்படிக்கும் சுலோகத்துக்கு இவ்வளவு தாத்பரயம் கொள்ளாவிட்டால் இந்த ப்ரகரணத்தில் நரி, திருடர்கள், துர்விருத்தர்கள், சபலசித்தர்கள் என்று இவர்களுடைய ப்ரஸ்தாபத்துக்கு ப்ரஸக்தியில்லை.

(அவ) இப்படி முன் சுலோகத்தால் உலகத்தில் ஜனங்களுடைய "ஆஸுரஸ்ருஷ்டி" "தைவஸ்ருஷ்டி" என்கிற இரண்டு பிரிவைக் காட்டி அதில் தைவஸ்ருஷ்டியைச் சேர்ந்த தனக்கு ஸம்ஸாரத்திலுள்ள நிர்வேத ப்ராசுர்யத்தை (வருத்தத்

தின் மிகுதியைக்) காட்டி உடனே மோக்ஷத்தை அபேக்ஷித்து இங்கிதத்தால் பாதுகையின் அங்கீகாரத்தைக் கண்டு மேல் இரண்டு சுலோகங்களால் ஸம்ஸாரத்தில் நிர்வேத ப்ராசுர்யத்தை அடைந்த ஒருவனுக்கு சரீரவியோகம் ஸந்நிஹிதமான (நெருங்கினதான) படியாலும் பூர்வபாபநினைவால் தனக்குண்டானநிர்வேதாதிசயத்தால் அப்ராப்தமாக யம பயம் தோன்றினபடியாலும் அப்படி நெருங்கின மரணதசையில் தனக்கு ஆகவேண்டியதைப் பிரார்த்திக்கிறார்.

(௩௱௩) காலே ஜந்தூந் கலுஷகரணே க்ஷிப்ரமாகா
ரயந்த்யா: கோரம் நாஹம் யமபரிஷதோ கோ
ஷமாகர்ணயேயம் | ஸ்ரீஸகரங்கேஶ்வர சரணயோ
ரந்தரங்கை: வ்யாஹ்ருதம் ஸேவாஹ்வாநம் ஸபதி
ஶ்ருணுயாம் பாதுகாஸேவகேதி || (௧௧)

(பதவுரை) பாதுகே - வாராய் (ஸ்ரிய:பதியான பகவானுடைய) பாதுகையே! கலுஷ - கலங்கியிருக்கிற, கரணே - இந்திரியங்களையுடைய, காலே - செத்துப்போகிறகாலத்திலே, ஜந்தூந் - பிராணிகளை, க்ஷிப்ரம் - சீக்கிரமாக, ஆகாரயந்த்யா: - அழைக்கிறதாயிருக்கிற, யம - யமனைச் சேர்ந்த ஜனங்களுடைய, பரிஷத: - கூட்டத்தினுடைய, கோரம் - பயத்தை உண்டு பண்ணுகிறதாயிருக்கிற, கோஷம் - ஏரச்சலை, அஹம் - நான், ந ஆகர்ணயேயம் - கேட்காமலிருக்க வேணும். ஸ்ரீஸக - மஹாலக்ஷ்மியோடு கூடிக்கொண்டிருக்கிற, ரங்கேஶ்வர - ஸ்ரீ ரங்கநாதனுடைய, சரணயோ: - திருவடிகளுக்கு, அந்தரங்கை: - ரொம்ப வேண்டியவர்களாலே, வ்யாஹ்ருதம் - சொல்லப்படுகிற, பாதுகாஸேவகேதி - ஓய் பாதுகா ஸேவகரேஎன்று, ஸேவாஹ்வாநம் - ஸேவிப்பதற்கு பகவத்ஸந்நிதிக்குள் அழைப்பதை, அதாவது அருளிப் பாட்டை, ஸபதி - சீக்கிரமாக, அஹம் - நான், ஶ்ருணுயாம் - கேட்க வேணும்.

(கருத்து) மோக்ஷப்ரதர்களாய் ஸ்ரீ என்னும் நாராயணன் என்னும் பெயர்களால் பிரஸித்தர்களான அந்த திவ்ய தம்பதிகளுடைய திருவடிகளைக் காப்பாற்றிக்கொண்டு அவர்களுக்கு மிக

வும் அந்தரங்கபரிஜனமான பாதுகையே! உன்னுடைய அனுக்கிர ஹத்தால் எனக்கு இந்தசரீரஸம்பந்தம் சீக்கிரத்தில்நீங்கிவிடப் போகிறது. ஆகையால் மரணகாலத்தில் எனக்கு ஆகவேண்டி யதை விஜ்ஞாபித்துக்கொள்கிறேன். நான் அநாதிகாலமாக எல்லை இல்லாத பாபங்களைப் பண்ணினவன்; செத்துப்போகிற காலத் தில் மகாபாபிகளை நரகம் முதலிய யாதனைகளுக்குள்படுத்தி சிக்ஷிக்க ஏற்பட்ட யமதர்மராஜன் உலகத்தில் ஆயுஸ்ஸு முடிந்த பாபிகளையெல்லாம் சீக்கிரம் கொண்டுவாருங்கள் என்று தன்னு டைய அதி பயங்கரமான ஸைந்யத்திலுள்ள படர்களை அனுப்பு வன். அவர்கள் வெகு அவஸரத்துடன் என்னுடைய மரண காலத்தில் "பாபி சீக்கிரம் கிளம்படா" என்று பயங்கரமாக அதட்டுவார்கள். அந்தக் கஷ்டத்தை என்னால் ஸஹிக்க முடி யாது. ஆகையால் நீ அந்தக் காலத்தில் அவர்கள் வந்து என்னை அதட்டாமல் பண்ணவேணும். அப்படி அவர்கள் வந்தால் அந்த ஸமயத்தில் என் பெயரையும் பகவானுடைய பெயரையும் சொன்னால் அவர்கள் விலகிப் போகிறார்கள்" என்று சொல்லு கிறாயோ. அந்தக் காலத்தில் எனக்கு அப்படிச் சொல்ல யோக் யதை இராது. மரணவேதனையினாலும் மயக்கத்தினாலும் என் இந்திரியங்கள் எனக்கு ஸ்வாதீனமாக இராது. அப்போது ஸ்ரீ ரங்கநாத பாதுகையே, கிருஷ்ணா, ராமா, கோவிந்தா, ஸ்ரீமந்நாரா யணா என்று கூப்பிட முடியாது. அல்லது ஏதாவது சப்தம் சொல்லும்படியான இந்திரிய ஸ்வாதீனம் உண்டானாலும் பழய ஸம்ஸார வாஸனையால் பிள்ளை பெண்டாட்டிகளைக் கூப்பிட்டு விடுவேன். ஆகையால் என் சப்தத்தால் அந்த யமபடர்கள் என்னை வைஷ்ணவன் ப்ரபந்நன் என்று அறியமுடியாமல் அதட்டவேதான் அதட்டுவார்கள். ஆனால் உனக்கு என்ன செய்யவேணுமென்று கேட்கிறாயோ, சொல்லுகிறேன். நான் உபயவேதாந்தாசார் என்றும், ஸர்வதந்த்ர ஸ்வதந்திரர் என் றும், கவிதார்க்கிக ஸிம்மம் என்றும், ஸ்ரீ பெரிய பெருமாள் ஸ்ரீரங்கநாச்சியார் மஹான்கள் இவர்களிடமிருந்து பெற்றி ருக்கும் பிருதுகள் மரணகாலத்துக்கு உதவாது. அந்த ஸம யத்தில் நான் இன்னான் என்று யமபடர்கள் அறியும்படியான புது பிருது ஒன்று வேணும். அதாவது நான் இப்போதே ஸ்ரீ ரங்கநாதன் ஸந்நிதிக்குள் ஸேவிக்க வரும்போது ஸ்ரீரங்கநாதனு

டைய திருவடி பரிஜனங்களுக்குள் எஜமானியான நீ உன்னைச் சேர்ந்த அந்தரங்க பரிஜனங்களை (அர்ச்சகர்களை) க்கொண்டு "ஸ்ரீரங்கராஜநாயகீஸார்வபௌமகாஸேவகருக்கு அருளிப்பாடு" என்று என்னை அழைக்கும்படிச் செய்யவேணும். அந்தப் பெயர் எனக்கு உடனே உலகத்தில் வழங்கிவிட்டதேயானால் என்னுடைய அந்திமகாலத்தில் நான் என்னுடைய இந்திரியங்களின்ஸ்வாதீனத்தை இழந்திருந்தாலும் பக்கத்திலுள்ள ஜனங்கள் ஸ்ரீ ரங்க நாயகீஸார்வபௌமகாஸேவகருக்கு காலமாச்சு; பிராணன் போகிற தசையில் அவர் இருக்கார்; என்றிப்படி இந்தப்பெயரைச்சேர்த்து ஏதாவது வார்த்தை சொல்வார்கள். அதைக் கேட்ட யமபடர்கள் "பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந்" (நல்லவர்களோ கெட்டவர்களோ பகவானை ஆச்ரயித்தவர்களிடத்தில் ஸமீபத்தில் கூட போகாதேயுங்கள் அது அபாயகரம்) என்ற தங்கள் எஜமானனுடைய ஆஜ்ஞையை நினைத்து நடுங்கி ஓடிப்போய்விடுவார்கள். யமபடர்கள் கிட்ட அண்டாமலிருப்பதற்கு இதுவே உபாயம். ஆகையால் நீ அப்படிச் செய்யவேணும் என்று வேண்டுகிறார்.

உலகத்தில் எப்படிப்பட்டவர்களுக்கும் லௌகிகமாகவோ வைதிகமாகவோ எப்படிப்பட்ட அந்தஸ்தும் பெயரும் பிரஸித்தியும் இருந்தாலும் அது மரணகாலத்துக்கு உதாவது. எப்படிப்பட்ட ஆசார்யபுருஷரையும் அதிகாரியையும் யமன் விடமாட்டான். ஒரு மஹாமஹோபாத்யாயமும், வேதவேதாந்த வேதாந்தாசார்ய பாண்டித்திய பிருதுகளும், கவிதார்க்கிகலக்ஷண பிருதுகளும், யாக, தான, அனுஷ்டான பிருதுகளும், சிரோமணிகளும், ஆசார்யகுல பிருதுகளும், ஒரு ரைட் ஆனரபிளும், ஸர்பட்டமும், பஹதூர்களும், ஏ. பி முதல் எக்ஸ், ஒய், இஸெட் வரையிலும் உள்ள அக்ஷராசிக்கூட்டங்களும் ஆபத்துக் காலத்துக்கு உதவாவது. (சாஸ்திரஸித்தமான இந்தவிஷயத்தில் ஆஸ்திகர்களான ஒருவரும் அஸூயைப்படக் கூடாது.) பகவத் ஸம்பந்தமும், ஆசார்ய ஸம்பந்தமும், பகவத்ப்ரபத்தியும், ஆசார்ய ப்ரபத்தியும் இவை விஷயமான பெயரும் பிரஸித்தியும் அனுஷ்டானங்களும்தான் மரணகாலத்துக்கு உதவும். அதிலும் ஆசார்ய ஸம்பந்தமாயுள்ளதே பிரதானம்; நல்ல ஆசார்யர்களை அடைந்த பிரபன்னர்களுக்கு நரகமில்லை. அவர்களுக்கு யமலோகம் கிடையாது.

(அவ) என் அந்திமகாலத்தில் இன்னும் என்ன செய்ய வேணுமென்றால்,

(௯௭௦) பாஷாணகல்பமந்தே பரிசிதகௌதமபரிக்ரஹந்யாயாத் | பதிபதபரிசரணார்ஹம் பரிணமய போகமோக்ஷதபாதரக்ஷிணி மாம் || ||௨௦||

இதி கவிதார்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே
நிவேதநபத்ததிரேகத்ரிம்ஶீ ||

(ப-ரை) போகமோக்ஷத - போக மோக்ஷங்களைக் கொடுப்பவராயிருக்கிற பெருமாளுடைய, பாதரக்ஷிணி - வாராய் திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! (த்வம் - நீ) அந்தே - கடைசிகாலத்திலே, பாஷாணகல்பம் - கல்லுப்போலிருக்கிற அதாவது மனது வரையிலுள்ள இந்திரியங்களெல்லாம் முற்றும் அடங்கிப்போய் ஒரு ஸுகதுக்கத்தையுமறிய யோக்யதை இல்லாமல், கல்,கட்டைகளைப்போலுள்ளசரீரத்திலிருக்கிற,மாம்-என்னை, பரிசித-பழக்கப்பட்டிருக்கிற (முன் கல்லாய் கிடந்த அஹல்யை விஷயத்தில் என்று தாத்பர்யம்) கௌதம - கௌதம மஹரிஷியின், பரிக்ரஹந்யாயாத்-ஆம்படையாளான அஹல்யையின் விஷயத்தில் போல, பதி - ஸர்வலோகத்துக்கும் ஆம்படையானை பெருமாளுடைய, பத-திருவடிகளுடைய, பரிசரண - சுச்ருஷையாகிற வேலைக்கு, அர்ஹம் - தகுந்தவனாக, பரிணமய - பண்ணவேணும்.

(கருத்து) அப்படிப்பட்ட யமபடர்கள் என்னிடம் வரவொட்டாமல் பண்ணுவதோடு, மனது வரையிலுள்ள எல்லா இந்திரியங்களும் முழுவதும் அடங்கி, ஜீவனை மாத்திரம் மீதியாயுள்ளதும் ஒரு ஸுகதுக்கங்களை அறிவதற்கும் ஒரு பிரவிருத்திக்கும் யோக்யமில்லாதபடி, கல்லுக்கும்அதுக்கும் வித்யாஸமில்லாததுமான அந்திமசரீரத்தில்(முன்னொருகாலத்தில் அஹல்யை என்கிற ஜீவன் சாபத்தால் கல் சரீரத்தை அடைந்திருந்ததுபோல்)

நான் இருக்கும்போது முன் நீ அந்த அஹல்யைக்கு மறுபடி பெண் சரீரம்கொடுத்து அவளுடையபர்த்தாவான கௌதமமஹரிஷிக்கு சுச்ரூஷாதிகளைச் செய்து க்ஷேமத்தை அடையும்படி செய்தது போல், என்னையும் உன்னுடைய ஸம்பந்தத்தால் கல்லுக்குஸமான மான இந்த அந்திம சரீரத்திலிருந்து மூர்த்தன்ய நாடியால் வெளிக்கிளப்பி, அர்ச்சிராதி மார்க்கத்தால் பரமபதத்தை அடைவித்து, அப்ராக்ருத சரீரத்தையும் ஸ்வஸ்வரூபாவிர்பாவத்தையும் கொடுத்து, ஸர்வலோகத்துக்கும் பர்த்தாவான ஸ்ரீய:பதியான நாராயணனுக்கு உன்னைப்போல் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸமஸ்தவித கைங்கரியங்களையும்பண்ணிக்கொண்டு அவனுடைய எல்லா விபூதிகளோடும் அவனைப் பரிபூர்ணமாக அனுபவிக்கும்படியான யோக்யதையுள்ளவனாகச் செய்யவேணும்.

ஸதாசார்யானை அடைந்தவர்களுக்கு, இந்த ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டு யோக்யதை இழந்து தன்னுடைய பகவத் சேஷத்வமே ஸ்வரூபமான ஆத்மாவையும் ஸர்வசேஷியான ஸ்ரீய:பதியையும் உள்ளபடி அறிந்து அனுபவிக்க முடியாமலிருந்த குறை எல்லாம் தீர, இந்த ப்ரக்ருதிபந்தம் அறுபட்டு ஸ்வஸ்வரூபாவிர்பாவத்தோடு அப்ராக்ருத திவ்ய சரீரத்தை அடைந்து தன்னுடைய ஆத்மாவையும் ஸர்வப்ரகார விசிஷ்டனான பரமாத்மாவையும் ஸர்வப்ரகாரமாகவும் அனுபவிக்கும்படியான பரமபுருஷார்த்தம் அந்த ஆசார்ய ஸம்பந்த ப்ரபாவத்தாலே ஸித்திக்கும் என்பதில் ஒரு ஸந்தேஹமுமில்லை. ஆகையால் அப்படிப்பட்ட பரமோபகாரிகளான ஸதாசார்யானைக் காட்டிலும் நமக்கு உயர்ந்தவர்களும் உத்தேச்யர்களும் வேறொருவருமில்லை. பகவானும் அவர்களுக்குப் பிறகுதான். (20)

இப்படி முன் சித்ரபத்ததியில் அனுபவிக்கப்பட்ட மானஸ ஸாக்ஷாத்காரம் கலைந்து அதற்கு நேர் எதிர்த்தட்டாய் பகவதனுபவகைங்கர்யங்களுக்கு பரமவிரோதியான இந்த ஸம்ஸாரத்தில் இருப்பாகிய துர்தசையைக் கண்டு பீதராய் அதிலிருந்து உடனே மீட்கவேண்டுமென்று இந்த பத்ததி ஆரம்பத்தில் ப்ரபத்தி பண்ணியும் அந்த மனோரதம் உடனே தலைக்கட்டாததாலும், அப்படி ப்ராரப்தசேஷகர்மாதீனமாகவோ பகவத்ஸங்கல்பத்தாலோ நிர்ப்பந்தமாக இன்னும் இங்கிருந்து

கழிக்கவேண்டிய ஆயுஷ்காலத்தை இசைந்தாலும் அநேக பூர்வ ஜன்மார்ஜிதமான மனதின் துர்வாஸனுபலத்தாலும் ப்ரதிபந்தக கர்மங்களாலும் நல்ல பகவதனுபவத்துடனும் நிரபாரத கைங் கர்யங்களுடனும் தன் ஸ்வரூபத்துக்கு ஒத்தபடி காலத்தைக் கழிக்கமுடியாதிருப்பதாலும், தேஹாவஸாநத்தில் வரப்போகிற பரிபூர்ண பகவதனுபவத்தில் த்வரையால் அதற்குத் தடங்க லாக நிற்கிற இந்த ப்ராக்ருததேஹஸம்பந்தத்தில் அனுப்பா லும் மிகவும் வருத்தமுண்டாய், அந்த வருத்தமும் மேல் மேலும் எல்லையில்லாமல் விருத்தியடைய (1) இந்த ஸம்ஸா ரத்தில் அநாதிகாலம் கழிந்தபின் சாஸ்திரவச்ய (மனுஷ்ய) ஜன்மமும் பரமதுர்லபமான ஸ்வரூபஜ்ஞானமும் மோக்ஷோ பாயானுஷ்டானமும் லபித்தாலும், பழைய துர்வாஸனுபலத்தால் மனது ஸம்ஸாரஸங்கதிகளை விட்டு பகவத் விஷயத்திலேயே நிலைகொள்ளாமையைப் பற்றியும், அதற்குக் காரணமான அர்த்தகாமாதிகளில் ஆசை, அதனால் ஏற்படும் அர்யாசரயணம் இவைகளைப் பற்றியும், (3) அதனால் ஏற்படும் தோ ஷங்களைப் பற்றியும், (4) அந்த தோஷங்கள் நீங்குவதற்கு உபாயமாக ஏற்படுத்தப்பட்ட பகவத்ஸேவா ஸம்பந்தாதிகளும் கார்யகரமாகாமல்படிக்கு படுத்தும் பாபங்களின் க்ரௌர்யத் தைப்பற்றியும், (5) ஸத்கர்மங்கள் குற்றமில்லாமல் நிறைவேராத படி ப்ரதிபந்தகமாக நிற்கிற பாபங்களைப் பற்றியும், (6) ஸந் மதமும் ஸந்மார்க்கமும் அடியோடு பிடிக்காதவர்களும் அவை களுக்கு விரோதிகளுமான ஆஸுர ப்ரக்ருதிகளை நல்வழிக்குக் கொண்டுவருவதற்காக க்ரந்தரூபமாகவும் மற்றவிதமாகவும் செய்யப்படும் ப்ரயத்தனங்களெல்லாம் வீணாய்ப் போவதைப் பற்றியும், (7) அவர்களோடு அநிவார்யமாக நேருகிற ஸஹவா ஸாதிகளைப்பற்றியும், (8) அப்படிப்பட்ட ஆஸுரப்ரக்ருதிகளை உலகத்தில் தெய்வம்படுத்திவைக்கிற பாட்டைப்பற்றியும்நினைத்து நொந்து பலபடியாகத் தன்னையே வெறுத்தும் இந்த கஷ்டங் களிலிருந்து ஸ்ரீபாதுகையானது தானாகவே தன் க்ருபாமாத்தி ரத்தினால் பரமஅகிஞ்சினனாய் சரணாகதனானவனுடைய வ்யாஜத் தைமேல்மேலுமள திர்பாராமல்மீட்டுதனக்கு பகவதனுபவபூர்த்தி யையும் நிர்விக்ன கைங்கர்யங்களையும் இங்கே கொடுக்காததைப் பற்றியும் பாதுகையினிடத்தில் குற்றம் சாட்டிப் பலபடியாக

வருத்தப்பட்டும் பெரிய கூக்குரலிட்டு ஸம்ஸாரத்தில் தனக்குண்டான அடங்காத நிர்வேதாதிசயத்தை வெளியிட்டு முறையிடவே ஸ்ரீபாதுகையும் கிருபை கூர்ந்து இவருடைய மனோரதத்தை அதிசீக்கிரத்தில் தலைக்கட்டுவதாகத் திருவுள்ளம் பற்ற, அதனால் ஆச்வஸ்தராய் அந்திமதசையில் தனக்குச் செய்யவேண்டிய உபகாரத்தை விஜ்ஞாபித்து, அதற்குத்தரமான பரமபுருஷார்த்த விஷயமான தன் மனோரதத்தையும் ஒரு சுலோகத்தால் சுருங்கப் பிரார்த்தித்து இந்த பத்ததியை முடிக்கிறார்.

இந்த பத்ததி முழுவதும் நிர்வேதத்தையே சொல்லுகிற ப்ரகரணமானதால் ஒவ்வொரு சுலோகத்துக்கும் நிர்வேதத்திலேயே தாத்பர்யம் கொள்ளவேணும். அப்படிக்கே பத்ததியில் படிப்படியாக மேல்மேலும் நிர்வேதவிருத்தியிலும் தாத்பர்யம். இப்படி மோக்ஷோபாயானுஷ்டானத்துக்குப் பிறகுள்ள உத்தரகிருத்யத்தை ஸூசிப்பித்துக்கொண்டு ஸம்ஸாரநசை விடவேண்டியதற்காக அதின் தோஷதர்சனபூர்வகமான நிர்வேதஜனனுபிவிர்த்திகளைக் காட்டுவதற்காக ஏற்பட்ட இந்த பத்ததியால் ஸ்ரீ ஆசார்யர் நமக்குக் காட்டிக்கொடுக்கும் ஸங்கதிகளாவன:—

ப்ரபன்னர்களான முமுக்ஷுக்களுக்கு இந்த தேஹாவஸாநத்தில் மோக்ஷம் ஸித்தமானாலும் இங்கிருக்கும் காலத்தில் 1) ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களில் தெளிவும், (2) தோஷமற்ற பகவதனுபவத்திலும் நிரபராத கைங்கர்யங்களிலும் ருசியும் ப்ரயத்னமும், (3) இவைகளுக்கு ப்ரதிகூலமான ஸம்ஸாரத்தினுடைய இளப்பத்தையும் விரோதத்தையும் நினைத்து அதில் அலுப்பும் ஜிஹாஸை (அதை விடவேணுமென்கிற ஆசை) யும், (4) முக்திதசையில் கிடைக்கப்போகிற பரிபூர்ண பகவதனுபவ கைங்கர்யங்களில் த்வராதிசயமும், (5) அதற்கு ப்ரதிபந்தகமான தேஹஸம்பந்தத்தில் நிர்வேதமும், (6) நாளுக்கு நாள் விஷம் ஏறுவதைப்போலொத்த நிர்வேதாதிசயவ்ருத்தியும் (7) யமபயத்துக்கும் நரகயாதனைகளுக்கும் ப்ராப்தர்களான அப்ரபந்நர்களான ஸம்ஸாரிகளுக்குப்போல் பாபத்தில் பீதியும், (8) ஆஸுரப்ரகிருதிகளுடைய ஸம்ஸர்க்கத்தில் அறுவறுப்பும் (9 தெய்வ ப்ரகிருதிகளுடைய ஸம்ஸர்க்கத்தில் ஆவலும் (10)

இவைகள் எல்லாவற்றிற்கும் ஸதாசார்ய விஷயத்திலுள்ள பரமோபாயத்வ புத்தியும் அதற்கனுரூபமான அனுஷ்டானமும் நாளுக்குநாள் நடையாடவேணுமென்பதும், பாப வசத்தால் இவைகள் வராமல் விபரீதங்களே ஸ்வபாவமாக இருந்து விருத்தியடைவதை நினைத்து வருந்தவேணுமென்பதும்.

இந்த ஸம்ஸாரத்தின் தோஷங்களாவன:— (1) அர்த்த காமப்ராவண்யத்தை உண்டுபண்ணுவது, (2) அதடியாக ஸ்வபாவசேஷியான பகவானையும் அவனைச் சேர்ந்தவர்களையும் விட்டு அல்ப மனுஷ்யர்களையும் க்ஷுத்ரதெய்வங்களையும் சேஷிகளாக ஆச்ரயிக்கும்படி செய்வது, (3) நினைக்கக்கூடாத ஸம்ஸாரஸங்கதிகளையே நினைக்கும்படி செய்து பகவதனுபவருசியைக் கெடுப்பது, (4) செய்யக்கூடாததைச் செய்வித்து பகவானிடத்தில் அபராதத்தை விளைவிப்பது, (5) பகவதனுபவத்துக்கும் கைங்கர்யத்துக்கும் அனுகூலங்களை இராமல் பண்ணியும் கெடுத்தும் எல்லையில்லாத பாஹ்யமாகவும் ஆந்தரமாகவுமுள்ள ப்ரதிகூலங்களை உண்டுபண்ணுவது, (6) ஸகல தோஷாஸ்பதமான தன்னிடத்தில் போக்யதாபுத்தியை உண்டுபண்ணுவது, (7) ஸகலஹேயப்ரத்யநீக கல்யாணைகதானமான பகவானிடத்தில் அதைத் தடுப்பது, (8) துர்மதங்களைக் காட்டி புத்தியைக் கெடுப்பது, (9) துர்ஜனஸஹவாஸத்தால் விரோதத்தை விளைவிப்பது, ஸத்புத்தியை அபஹரிப்பது முதலியன.

இந்த பத்ததியால் ஏற்படும் அவதாரபுருஷர்களான ஸதாசார்யர்களின் முக்ய குணம் நிர்வேதசீலத்வம். அவற்றிற்கு உபயுக்தங்களும் விரிவுகளுமாவன:— (1) அகிஞ்சனர்களான முமுக்ஷுக்களுக்கு தேஹஸம்பந்தம் சீக்கிரம் அடியோடு நீங்குவதற்கு பக்திப்ரபத்திகளைப்போல் தாங்களே ஒரு உபாயமாக இருப்பது. அப்படிப்பட்ட தங்கள் ஆசார்யகுணத்தைக்கண்டு "அவர்களுக்கு இந்த குணமிருக்கும்போதும் நாம் இன்னும் இந்த ஸம்ஸாரத்தில் தபிக்கிறோமே" என்கிற நிர்வேதத்தை அடைவது. (2) யோக்யதையில்லாத்தால் கிடைக்கக்கூடாததும் காலாதீதமாய் இழந்துபோனதுமான தங்களுடைய கைங்கர்யங்களைப்பற்றி ஆச்ரிதர்கள் நிர்வேதப்படும்படிக்கும் பல ஜன்மங்கள் எடுத்தாவது அவைகள் லபிக்காதா என்று மனோரதிக்கும்படிக்

கும் ஆச்ரிதர்களுக்கு மிகவும் போக்யமாக இருப்பது. (3) குற்ற மற்றதும் பாபத்தைப் போக்கடிக்கக்கூடியதுமான த்யானவிஷய மாயிருந்துகொண்டு ஆச்ரிதர்களை ப்ரதீக்ஷித்து வெகுகாலம் காத்திருப்பது. அநாதிகாலம் ஸம்ஸரித்தபின் மோக்ஷப்ரதர்களாய் இப்படிப்பட்ட பரத்வ ஸௌலப்யகுணங்களுள்ள ஸதாசார்யர்களையாச்ரயித்தும் அவர்களை விட்டு இதர விஷயத்திலும் மனது போகிறதே என்கிற நிர்வேதத்தை அடைவது (4) அநாதி ஸம்ஸாரதாரித்ரியத்தால் பீடிக்கப்படுகிற ஜீவனுக்கு பரம துர்லபமாய் ஸர்வ ஐச்வர்யங்களையும் கொடுக்கக்கூடியதான மஹாநிதியாகிற ஸ்ரீய:பதியைக் காட்டிக்கொடுத்து லபிக்கும்படி செய்வது. இப்படிப்பட்ட பரமோதாரர்களையும் விட்டு மனது இதர க்ஷுத்ர விஷயங்களில் போகிறதே என்கிற நிர்வேதத்தை அடைவது (5) அந்யபரமாகச் செல்லுகிற ஆச்ரிதர்களுடைய சபல சித்தத்தை (பகவானோடு சேர்ந்த) தங்களிடத்திலேயே திருப்பிக்கொள்ளும்படியான வாத்ஸல்யகுணமுடையவர்களாக இருப்பது. அப்படிப்பட்ட தங்கள் அந்யபரதையைப் பற்றி நிர்வேதத்தை அடைவது. (6) முகுந்தனுடைய கருணையையும் அழிக்கக்கூடிய ஆச்ரிதர்களுடைய அஸஹ்யபாபங்களையெல்லாம் அநாயாஸமாக மறைக்கக்கூடிய புருஷகார ஸாமர்த்யம் உள்ளவர்களாக இருப்பது. அப்படிப்பட்ட தங்கள் ஆசார்யர்களுடையபுருஷகாரத்வத்தைப்பற்றி க்ருதஜ்ஞதையையும் தங்கள் பாபத்தின் கொடுமையைப்பற்றி நிர்வேதத்தையுமடைவது. (7) ஆச்ரிதனுக்கு நிர்வேதம் விருத்தியடைவதற்காக அவனுடைய துர்தசையை உபேக்ஷிப்பதுபோல் பாவிக்கிற ஆசார்யானுடைய பாவனையை உபேக்ஷையாகவே நினைத்து அவர்கள் விஷயத்தில் நிஷ்டூரங்களும் சொல்லும்படியான நிர்வேதாதிசயத்தை அடைவது. (8) சரணாகதர்களுடைய அசுபங்களைத் தங்களுக்கு ஹாநியாகவும் அவைகளை நீக்குவதை ஸ்வயம் ப்ரயோஜனமாகவும் எண்ணுவது. அப்படிப்பட்ட குணம் தங்கள் ஆசார்யர்களுக்கு இருக்கும்போதும் நீங்காத தங்கள் அசுபங்களை நினைத்து அவர்களிடத்தில் குற்றம் சொல்லும்படியான வ்யஸனத்தை அடைவது. (9) பூர்வ வாஸனுபலத்தால் ஏற்படுகிற அல்பாஸ்திரங்களான இதர ப்ரயோஜனுபேக்ஷையால் அல்ப பணக்காரர்களையடுப்பது முதலிய அசுபங்களை நினைத்து வருந்துவது. இப்படிப்பட்ட அசு

பங்கள் நீங்குவதற்கு உபாயம் அழிவில்லாததும் ஸர்வபுரு ஷார்த்த ஸாதனமுமான பகவானேடு சேர்ந்த தங்களிடத்தில் பண்ணும் இடைவிடாத பக்தியேதான் என்பதைக் காட்டிக் கொடுப்பது. (10) ஸம்ஸாரதாபத்ரயரூபமான கோடையில் அகப்பட்டு தபித்துக்கொண்டு விஷயங்களாகிற கானலாற்றில் தாபசாந்தியை எதிர்பார்த்து ப்ரமிக்கிற புத்திஹீநர்களுக்கு அந்த தாபத்திலிருந்தும் ப்ரமத்திலிருந்தும் விடுபடுவதற்கு சௌரியின் சரணங்களையே பற்றுவதுதான் உபாயம் என்பதைக் காட்டிக்கொடுப்பது. அப்படி இதர விஷயங்களை விட்டு அந்த திவ்யசரணங்களையே பற்றமுடியவில்லையே என்று நிர்வேதப்படுவது. அப்படிப்பட்ட நிர்வேதமுள்ள ஆச்ரிதர்களுக்கு அவர்கள் எப்படியிருந்தாலும் தங்கள் புருஷகாரஸமர்ப்பணங்களாலேயே மோக்ஷம் ஸித்திக்கும் என்கிற விச்வாஸத்தை உண்டுபண்ணி அவர்களை ஆச்வஸிப்பிப்பது. (11) அபாரமான ஸம்ஸாரஸமுத்ரத்தில் நீக்கமுடியாத விஷயவலையில் அகப்பட்டு அழுந்திப்போகிற தீனர்களுக்கு அவ்வலையிலிருந்து விடுவித்துக் கொண்டு கரையேறுவதற்கு தயையினுல் தங்கள் ப்ரயத்தனத்தால் நாளடைவில் உதவி செய்வது. அப்படிப்பட்ட தங்கள் ஆசார்யாளுடைய உதவியை அவலம்பித்துக்கொண்டு தாங்களும் யத்தனித்து விஷயங்களை அடியோடு விலக்கமுடியாததைப் பற்றி நிர்வேதப்படுவது. (12) பக்தியாலும் அந்தரங்க பரிசர்யையாலும் வச்யனுன பகவானிடத்தில் அவனுடைய தயாதி குணங்களை எடுத்துக்காட்டியும் கிளப்பியும் ஆச்ரிதர்களுடைய ஸர்வாபராதங்களையும் மறைத்து ஒரே க்ஷணத்தில் எல்லா பாபங்களையும் போக்கி அவர்களை அவனுடைய பரிபூர்ணனுக்ரஹத்துக்கே விஷயமாக்கும்படியான புருஷகார ஸாமர்த்தியமுடையவர்களாக இருப்பது. அப்படிப்பட்ட ஸாமர்த்யம் தங்கள் ஆசார்யர்களுக்கு இருந்தும் பகவானுடைய ஸம்ஸாரதந்திரத்தை தாங்கள் அதிக்ரமிக்கக்கூடாதென்கிற கட்டுப்பாட்டுக்குள்பட்டு ப்ராரப்த சேஷகர்மாதீனமான பக்வகாலத்தை எதிர்பார்த்து அவர்கள் பொறுத்திருப்பதை மறந்து உடனே தங்கள் ஸம்ஸாரபந்தத்தை நிச்சேஷமாக நீக்காமல் உபேக்ஷிப்பதாக அவர்களிடத்தில் நிஷ்டூரம் சொல்லும்படியான ஆர்த்தியையடைவது. (13) தங்களுடைய அனுக்ரஹமாத்திரத்தினுலேயே அகிஞ்சனர்களுக்கு

நினைத்தமாத்திரத்தில் தங்களுக்கு ஸமானமான பகவதனுபவத்தை உண்டுபண்ணக்கூடிய அனுக்ரஹசக்தியுள்ளவர்களாக இருப்பது. "அப்படிப்பட்ட அனுக்ரஹசக்தி இருக்கும்போதும் ஆச்ரிதன் நன்மையையடைய இன்னும் எவ்வளவு காலம் பொறுக்கவேணும்? பாபமே ஸ்வபாவமான மனதை உடையவனுக்கு எல்வளவு காலம் பொறுத்தாலும் என்ன நல்லது வரப்போகிறது? ஏன் இப்படி உபேக்ஷிக்கவேணும்?" என்று தங்கள் ஆசார்யர்களை நொந்துகொள்ளும்படியான காலதாமதத்தைப் பொறுக்காத நிர்வேதத்தை அடைவது. (14) எவ்வளவு துர்வாஸனை ஏறின மனதிலும் தங்களுடைய பரமபாவனமான பகவதனுபவரஸபரிமளபரீவாஹத்தைப் பரவவிட்டு துர்வாஸனையை அழித்து அதை ஸுவாஸனையுள்ளதாகப் பண்ணி பகவதனுபவத்திலேயே ஈடுபடும்படி பண்ணக்கூடிய அனுபவமாஹாத்ம்யம் ஆசார்யர்களுக்கு இருக்கும்போதும் மனதானது எல்லையில்லாத விஷயசிந்தைகளால் இப்படிக் கெட்ட விஷயங்களிலேயே அழுந்திக்கிடக்கிறதே; நம்முடைய பாபம் ஆசார்யாளை இன்னும் இப்படி உபேக்ஷிக்கும்படி பண்ணுகிறதே என்று நிர்வேதப்படுவது. (15) ஆத்மக்ஷேமத்தையடைவதற்கு ஆசார்யாளையே அநந்யோபாயமாகப்பற்றியும் வாஸனாபலத்தால் பூர்ணமான தெளிவுண்டாகாமல் அவர்களுக்கே சேஷமாய் அவர்கள் விஷயத்தில் உபயோகப்படுத்தப்பட்ட கரணகளேபராதிகளை அர்த்தகாமாதிகளடியாக துர்ஜனர்களான பணக்காரர்கள் விஷயத்திலும் உபயோகிக்கும்படி நேரிடுகிறதே, ஸ்ரீஆசார்யாள் இந்த அசுபத்தை நீக்கவில்லையே என்கிற நிர்வேதத்தை அடைவது. (16) ஸகல ஸத்கர்மானுஷ்டானங்களிலும் நடுவில் ஏற்படுகிற குற்றங்களுக்கு ப்ராயச்சித்த ரூபமான தங்களுடைய ஸ்மரணகீர்த்தனாதிகளையுடைத்தாயிருப்பது பகவதாராதனைகவேஷமாக யத்தனிக்கும் ஒரு ஸத்கர்மத்தையும் குற்றமில்லாமல் நிறைவேற்ற முடியாதபடி ஏற்படுகிற பாஹ்யமாகவும் ஆந்தரமாகவுமுள்ள ப்ரதி கூலங்களுக்குக் காரணமான பாபங்களைப்பற்றியும் எல்லா பாபங்களுக்கும் ப்ராயச்சித்த ஸ்தானத்தில் ஸ்ரீ ஆசார்யாளே இருக்கும்போது அவர்கள் அவைகளை முன்னமே விலக்கி நிர்விக்னமான ஸத்கர்மங்களால் இங்குள்ளகாலம் சரணாகதர்களான நாம் பகவானை ஆராதித்து க்ருதார்த்தர்களாகும்படிச்

செய்யக்கூடாதா என்றும் நிர்வேதப்படுவது. (17) அநாதியான விஷய வாஸனை ருசிகள் படிந்து அடியோடு கலங்கிப்போயிருக்கிற மனதையும் விஷயங்களுக்கே பரவசமான இந்திரியங்களையும் உடையவர்களாய் ஒருக்காலும் கரையேற முடியாதபடி ஸம்ஸார மாகிற துக்க ஸமுத்ரத்தில் அழுந்திப்போகிற தீனர்களுக்கு சீக்கிரத்தில் அதை தாண்டிவைப்பதற்கு ஒரே நல்லதான உபாயமாக இருப்பது. அப்படிப்பட்ட ஸதாசார்யானை சரணமடைந்தும் இன்னும் அதின் கஷ்டங்களும் நீங்கவில்லையே? அதிலிருந்து நிவிருத்தியும்ஏற்படவில்லையே?என்கிறநிர்வேதாதிசயத்தையடைவது. (18) நல்லதெல்லாம் ருசிக்காமல் கெட்டவைகளே ப்ரியமான ஆஸுரப்ரகிருதிகளின் ஸ்வபாவத்தையும், அவர்களோடுஅநிர்வார்யமாய் நேரும் ஸஹவாஸத்தையும்,ஸந்மதஸந்மார்க்கங்களின் அபிவிருத்திவிஷயத்தில் படும்பாடெல்லாம்ஆஸுரப்ரகிருதிகள்நிறைந்தஇவ்வுலகத்தில் வீணாய்போவதையும்,இப்படி ஆஸுரப்ரகிருதியையடைந்த ஜீவர்களை தெய்வம் படுத்திவைக்கிற பாட்டையும் பற்றி நினைத்து ஸம்ஸாரம் அடியோடுஸஹியாமல்கூக்குரலிட்டு எல்லையில்லாமல் வருந்துவது. (19) அந்திமதசையில் ஆச்ரிதர்களுக்கு யமபயத்தை நீக்கும்படியான தங்கள் தாஸநாமத்தை உடைத்தாயிருப்பது. பாபபீதியுள்ள ஸ்வபாவத்தால் அப்ரபந்நர்களான ஸம்ஸாரிகளைப்போல் அநந்தமான தங்கள் பூர்வபாபங்களை நினைத்து அந்திமதசையில் யமபயம் நேர்ந்துவிடுமோவென்று நடுங்குவது. அதற்காக ஆசார்ய ஸேவாஸம்பந்தாதிகளை ப்ரார்த்திப்பது. (20) ஸர்வயோக்யதையுமற்று கல்லுக்கு ஸமமான அந்திமசரீரத்திலிருந்து ஆச்ரிதர்களை வெளிப்படுத்தி ஸமஸ்த கல்யாணாத்மகமான அப்ராகிருத திவ்யதேஹத்தைக்கொடுத்து அவர்களை பரம சேஷியான ஸ்ரீய:பதியின் பரிபூர்ணானுபவ கைங்கர்யங்களுக்கு யோக்யமாம்படி செய்வது. சீக்கிரத்தில் அப்படிப்பட்ட பரமபலம் லபிக்கும்படி அனுக்ரஹிக்கவேணுமென்று த்வரைப்பட்டு அந்திமகாலத்தில் அதை ஆசார்யர்களிடம் பிரார்த்திப்பது. இப்படிப்பட்ட நிர்வேத மனோரத

ப்ரகாரங்களையெல்லாம் தங்களுடைய உபதேசத்தாலும் அனுஷ்டான முகத்தாலும் தங்களுடைய ஆச்ரிதர்களுக்கு கல்பித்துக் கொடுப்பது. இப்படி ஸ்ரீ பாதுகையைப் பூர்வசார்யாள் ஸ்தானத்திலும், ஸ்ரீ தேசிகனை ஆசார்ய ஸ்தானத்திலும், நம்மை சிஷ்யஸ்தானத்திலும் வைத்துக்கொண்டு மேற்கண்ட குணநிரூபணப்ரகாரங்களைத் தெளியவும்.

இப்படி முமுக்ஷுக்களுக்கு நித்யம் அனுஸந்திக்கவேண்டியதாய், அவர்களுக்கு நிர்வேதப்ரகாரங்களைக் கல்பித்துக்கொடுப்பதற்கும் ஸதாசார்யர்களுடைய நிர்வேதஸம்பந்தியான குணங்களை ப்ரகாசப்படுத்துவதற்கும் ஏற்பட்ட ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரத்தின் 31-வது பத்ததியாகிய நிர்வேதபத்ததியின் த்ராவிடவ்யாக்யானம் முற்றிற்று.

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீ ரங்கநாயகதிவ்யமணிபாதுகாப்யாம் நம: ॥

முப்பத்தோராவதான

**நிர்வேதபத்ததி**

முற்றிற்று.



ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீ ரங்கநாயகீதிவ்யமணிபாதுகாப்யாம் நம: ॥

**ஸ்ரீ ரங்கநாத பாதுகாஸஹஸ்ரே**
**த்வாத்ரிம்ஸீ பத்ததி: ॥**



(கூஎக) உபாத்யாதாம் த்யாசேவ ந வஸிஷ்டாதைத்யேஷு
ஸஹிதி: । உபாயஸம்பத்யோ: காஷ்டாப்ராப்தாபாதே
ராமபாதுகா ॥ (க)

அவதாரிகை:— ஸ்ரீஆசார்யர் அநாதிகாலமாக அனுவர்த்தித்துக்கொண்டுவருகிற இந்த ஸம்ஸார துக்கத்தின் அடிச்சூட்டால் ப்ரதப்தராய் இந்த பாபியான ப்ரக்ருதி ஸம்பந்தமும் அதனால் ஏற்படுகிற ஜன்ம,ஜரா, மரண, அஜ்ஞானாதிதுக்கங்கள் அறும்படி அர்ச்சிராதி மார்க்கத்தால் பரமபதத்தை சென்றடைந்து, ஸ்வஸ்வரூபாவிர்பாவத்துடன் ஸ்ரீபகவானை அவனுடைய எல்லா விபூதிகளுடன் பூர்ணமாக அனுபவிப்பதின் பொருட்டு, முன் சித்திரபத்ததியில் ஸ்ரீபாதுகையையே காஷ்டாப்ராப்த (அதாவது, எல்லாவற்றிலும் கடைசியானதும் ஸுகரமானதும் பல ஸாதன ஸாமர்த்தியத்தில் மேலானதுமான) உபாயமாக நம்பி உபாயோபயுக்தமான அதின் குணங்களையும் பெருமைகளையும் கொண்டாடி அதையே அநந்யோபாயமாக ப்ரபத்திபண்ண, அதனால் ப்ரஸந்நமான ஸ்ரீபாதுகையானது அவருடைய ஆர்த்தியையும் ஆத்மஸமர்ப்பணத்தையும் திருவுள்ளம்பற்றி அவரைத் தன்னடிச்சோதிக்கு (பரமபதத்துக்கு) அழைத்துப்போக ஸங்கல்பித்த காலம் வாராமையால் அதுவரையில் இங்கு அவரை ஆச்வஸிப்பிப்பதின்பொருட்டு, பகவானோடுசேர்ந்த தன்னுடைய பெருமைகளை அவருக்கு ஸாக்ஷாத்கரிப்பித்துக்கொண்டு உயர்ந்ததான மானஸானுபவத்தைக்கொடுத்து அதின் மூலம் தேஹாவஸாநத்

தில் வரப்போகிற யாதொரு ப்ரதிபந்தகமுமில்லாத பரிபூர்ண பகவதனுபவத்தையும் ஸூசிப்பித்தது. அந்த மானஸஸாக்ஷாத்காரம் கலைந்ததும் பாஹ்யமாகவும் ஆந்தரமாகவுமுள்ள சத்துருக்கள் நிறைந்த இந்த ப்ரகிருதியாகிற பாழிலே தன் இருப்பாகிய துர்தசையைக்கண்டு பீதராய், முன் மானஸ ஸாக்ஷாத்காரத்தைக் கொண்டும் இனி வரப்போகிற பரமபுருஷார்த்தஜ்ஞானத்தாலும் தேறி இருக்கமுடியாமல் முன்னிலும் அதிக நிர்வேதமுடையவராய், நிர்வேதபத்ததியில், இந்த ஸம்ஸார ஸம்பந்தம் சீக்கிரம் கழியவேணுமென்று மறுபடியும் ஆர்த்தராய் ப்ரபத்தி பண்ணி, ஸம்ஸார தோஷங்களைக் காட்டிக்கொண்டு அலற்றி ப்ரகிருதி ஸம்பந்தத்தைப் பொறுக்கமுடியாத நிர்வேதாதிசயத்தை அடையவே, அவருடைய தசையைக் கண்டு ஸ்ரீ பாதுகையானது தயாபரதந்திரையாய் அவருடைய மனோரதத்தை அதிசீக்கிரத்தில் தலைக்கட்டுவதாகத் திருவுள்ளம்பற்றினபடியைக் காட்டி ஆச்வஸிப்பித்து, பின்னும் ஸம்ஸாரத்தை அஸஹமானரான இவர் முன்போல் இங்குற்ற காலம் மறுபடியும் அவஸாதத்தை அடையாமலும் ஸம்ஸாரத்தை மறந்திருக்கும்படிக்கும் செய்வதின்பொருட்டு முமுக்ஷுக்களுக்கு இங்குமங்கும் பகவானோடு சேர்ந்த தானே காஷ்டாப்ராப்த (அதாவது, பகவதனுபவத்தைக் காட்டிலும் உயர்ந்ததான) புருஷார்த்தமாகவும் இருக்கிறபடியை ப்ரகாசிப்பித்துக்கொண்டு பரமபலானுபவதசையை இப்போது துடக்கமாகவே ஏற்படுத்தவே, முன்பத்ததியின் கடைசி சுலோகத்தில் தான் மனோரதித்தபடியே ஸ்ரீபாதுகையின் புருஷார்த்த காஷ்டாரூபமான படியைக்கண்டு அனுபவித்து ப்ரீதராய் அதின் ப்ரகாரங்களை இந்தபத்ததியில் பேசுகிறார். முன் இரண்டுபத்ததிகளும் ஸ்ரீபாதுகையின் உபாய ரூபத்வத்தை ப்ரதிபாதித்தது. இந்த பத்ததி அதின் பல ரூபத்தை ப்ரதிபாதிக்கிறது. மேலும், முன் நிர்வேதபத்ததியில் ஒவ்வொரு சுலோகத்துக்கும் எப்படி ஸ்ரீஆசார்யருடைய நிர்வேதத்தில் தாத்பர்யமோ, அப்படியே இந்த பல பத்ததியில் ஒவ்வொரு சுலோகத்துக்கும் ஸ்ரீபாதுகை பரம பலரூபமாக இருக்கிறபடியிலும் அந்த பலானுபவத்தால் உண்டான ஸ்ரீஆசார்யருடைய ஹர்ஷத்திலும் தாத்பர்யம் கொள்ளவேணும்.

(ப-ரை) வஸிஷ்டாத்யை: - வஸிஷ்டர், வால்மீகி, வ்யா ஸர் முதலான மஹர்ஷிகளாலே, தயாஸ்வநு-அம்மா திரியான ப்ரகாரத்தாலே, அதாவது, உபாயங்களுக்குள் மிகவும் உயர்ந்த உபாயமான ப்ரகாரத்தாலும், பலங்களுக்குள் மிகவும் உயர்ந்த பலமாக இருக்கிற ப்ரகாரத்தாலும், உபாவ்யாதாம் - ஸ்ரீமத் ராமாயணம் முதலான ப்ரபந்தங்களில் சொல்லப்பட்டுள்ள, உபாயஸஹயோ: - மோக்ஷோபாயங்களென்ன மோக்ஷபலன்க ளென்ன இவைகளுக்குள், காஷ்டாம் - எல்லை நிலமாக, அதா வது கடைசி உயர்ந்ததாக இருக்கிற, ராகவபாதுகாம் - ஸ்ரீராமனுடைய பாதுகையை, உபாஸே - த்யானிக்கிறேன். அதாவது அதின் ப்ரகாரங்களை நினைத்து அனுபவிக்கிறேன்.

(கருத்து) யாதொரு பகவானுடைய பாதுகையானது ஸர்வ லோகங்களினுடையவும் யோக (முன் அடையப்படாத விஷயங் களில் உபாயமாக இருந்து ப்ரதிபந்தகங்களைப் போக்கி அடைவிப் பிப்பதிலும்) க்ஷேம (அப்படி உபாயத்தால் அடையப்பட்டவை களை ரக்ஷித்துக்கொடுப்பதிலும்) ங்களை நிர்வஹிப்பதில் மிகவும் ஸமர்த்தமாய் உயர்ந்ததென்று வஸிஷ்டர் முதலான மஹர்ஷி களால் சொல்லப்பட்டிருப்பதாக சாஸ்திரங்களிலிருந்து அறிகி றோமோ, அப்படிப்பட்ட மஹிமையுள்ள பாதுகையானது ப்ரபந்நனை அடியேனுடைய ஸம்ஸாரதுக்கத்தையும் ஆர்த்தியை யும் கண்டு கிருபைகூர்ந்து அடியேனுடைய பிரார்த்தனையையும் இப்போதே ஒருவாறு தலைக்கட்டக்கோலி, யாதொருபடி தான் மோக்ஷோபாயங்களுக்குள் காஷ்டாப்ராப்த உபாயமாக இருக் கின்றதோ அப்படியே மோக்ஷபலன்களுக்குள் தான் காஷ்டா ப்ராப்தபலமாக இருக்கிறபடியையும் அடியேனுக்குப் பிரகாசிப் பித்தருளிற்று. அப்படிப்பட்ட அதின் பல ப்ரகாரத்வத்தைக் கண்டு அதையே சிந்தித்து அதில் ஈடுபடுகிறேன்—என்கிறார்.

இத்தால் மோக்ஷோபாயங்களுக்குள் எப்படி ஆசார்யப்ர பத்தியானது (ஆசார்யனையே சரணமாக அடைவது) மிகவும் உயர்ந்ததோ, அப்படியே கேவல பகவதனுபவ கைங்கர்யங்களைக் காட்டிலும் பகவானோடு அப்ருதக்ஸித்தவிசேஷணம் (விட்டுப்

பிரியாத ப்ரகாரம்) போல் சேர்ந்திருக்கிற ஸதாசார்யாளுடைய அனுபவ கைங்கர்யங்களை இவ்விடத்திலும் முக்ததசையிலும் பரமப்ராப்யம் என்பது சாஸ்திரஸித்தம் என்பதும், மஹான்களுடைய அனுபவத்திலும் அனுஷ்டானத்திலும் அப்படியே என்பதும் சொன்னதாகிறது. (1)

அவ:— அந்த பகவத்பாதுகானுபவம் எப்படிப்பட்டது என்பதை மேல் சுலோகத்தால் ஸ்ரீபாதுகையினிடத்தில் நேரில் விண்ணப்பிக்கிற முகத்தாலே சொல்லுகிறார்—

(௯௭௨) நிவிசேய நிரந்தரம் ச்ருதஸ்த்ருஹிணாநாம் விப
வம் த்ருணாய மத்வா । ஸவிதே தவ தேவி ரங்க
நாதஸ்ய பதலீலாரவிந்தம் ஸம்வஹந்த்யா: ॥ (௨)

(ப-ரை) ஹே தேவி பாதுகே - வாராய் விளங்கா நிற்கிற(அதாவது உன்னைப்பெற்று அடியேன் அடைந்திருக்கிற ஸம்ருத்தியைக்கண்டு ஸந்தோஷத்தால் விளங்குகிற) பாதுகையே! (அஹம் - நான்) ச்ருத: - ப்ரஸித்தியை அடைந்தவனாய்க்கொண்டு, அதாவது 969-வது சுலோகத்தில் பிரார்த்தித்தபடி உன்னால் கொடுக்கப்பட்ட பாதுகாஸேவகந் என்கிற ப்ரஸித்தமான பெயரை உடையவனாய்க்கொண்டு (அந்தப் பதவியை அடைந்தபிறகு அதற்கு மிகவும் கீழ்ப் பட்டுள்ள), த்ருஹிணாநாம் - பிரம்மா முதலான தேவர்களுடைய, விபவம் - ஐசுவரியங்களையெல்லாம், த்ருணாய - புல்லுக்கு ஸமானமாக, மத்வா - நினைத்து (அலக்ஷ்யம் செய்து) ரங்கநாதஸ்ய - ஸ்ரீரங்கநாதனுடைய, பத - திருவடியாகிற, லீலாரவிந்தம் - விளையாட்டுத்தாமரைப்பூவை, ஸம்வஹந்த்யா: - தூக்கிக்கொண்டிருக்கிற, தவ - உன்னுடைய, ஸவிதே - ஸமீபத்திலே, நிரந்தரம் - எப்பொழுதும், நிவிசேய - இருக்கக் கடவேன்.

(கருத்து) இப்படி அடியேனுக்கு பரமானுக்ரஹத்தைப் பண்ணி, அதனால் அடியேனுக்கு விளைந்த ஸம்ருத்தியைக் கண்டு ஹர்ஷத்தாலே உஜ்வலையாய் விளங்குகிற ஹே பாதுகையே!

நான் உன்னையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் அத்யவஸித்து உபாஸித்துக்கொண்டு "பாதுகா உபாஸகன்" என்கிறபிரஸித்தி யுடன் "யம் ப்ராப்ய ந நிவர்தந்தே நாயகம் தத:" என்று ஜீவஸாக்ஷாத்காரத்தைப்பற்றி சொன்ன க்ரமத்தில் பகவானோடு சேர்ந்த உனக்கே ஆளுடையான் என்கிற அதிலும் மேலான பதவியை அடைந்த பிறகு இனி எக்காலத்திலும் எனக்கு வேண்டுவது வேறொன்று உண்டோ? பிர்மேசாநாதிகளுடைய ஐசுவரியங்கள் மஹதைசுவரியங்களன்றோ? அவைகள் ப்ராப்யங்கள் அன்றோவென்றால், அவைகளும் உங்களுடைய கைங்கர்யானுபவங்களோடு ஒப்பிட்டால் த்ருணஸத்ருசமாம். அவ்வோ ஐசுவரியவான்களும் ஸர்வேசுவரனான ஸ்ரீரங்கநாதனுடைய திருவடி மலர்களோடு சேர்ந்த உன்னை ஈஷத் உபாஸித்து க்ஷுத்ர ப்ரயோஜநாபேக்ஷையால் அவ்வோ ஐசுவரியங்களை மட்டும் அடைந்து உன்னை இழந்தவர்களன்றோ? ஸர்வைசுவரியங்களுக்கும் அதிஷ்டான தேவதையாய் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடி மலர்களையே லீலாபத்மமாக ஸர்வதா வஹித்துக்கொண்டு அவைகளையே தாரகபோஷக போக்யங்களாகவுடைய உன்னுடைய ஸமீபத்தில் ஸர்வதா வர்த்தித்துக்கொண்டு உனக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித ஸமஸ்தவித கைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டு உனக்கே ஆள்பட்டிருப்பதன்றோ பரமப்ராப்யம். ஈதே அநந்யப்ரயோஜநனான அடியேன் எப்போதும் வேண்டுவது என்கிறார்.

இத்தால் ஸதாசார்யாளுடையஸமீபத்தில் இருந்துகொண்டு அவர்களுக்கு ஸர்வதேசஸர்வகாலஸர்வாவஸ்தோசித ஸமஸ்தவித கைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டு அவர்களுக்கே ஆள்பட்டிருப்பதுதான் பரம புருஷார்த்தம். பிர்ம்ம பட்டம் வரையிலுள்ள ஐசுவரியங்களும் அதற்கு ஸத்ருசமாகாது. இந்த கைங்கர்ய ஸாம்ராஜ்யமே முமுக்ஷு தசையிலும் முக்த தசையிலும் ப்ராப்யம் என்று சொன்னதாகிறது. (2)

அவ:— ஆனால் நீ ஸம்பூர்ணனாய் விட்டாயோ? முன்புற்ற அந்யபலாபேக்ஷை அந்யாச்ரயணங்களால் ஆவதொன்றில்லையோ? என்று பாதுகை கேட்க, மேலே சொல்லுகிறார்.

(௬௭௬) கிமஹம் மணிபாதுகே த்வயா மே
ஸுலபே ரங்கநிதௌ ஸ்ரியா ஸநாதே ।
கரணானி புந: கதர்த்தயேயம்
க்ருபணத்வார துராஸிகாதி து:கை: ॥

(ப-ரை) ஹே மணிபாதுகே - வாராய் கல்லிழைத்த பாதுகையே, த்வயா - உன்னுலே (அதாவது உன்னுடைய புருஷகாரத்தாலே), மே - எனக்கு, ஸுலபே - ஸுலபமானதும், ஸ்ரியாஸநாதே - ஸ்ரீமஹாலக்ஷ்மியோடு கூடினதுமான, ரங்கநிதௌ (ஸதி) - ரங்கவிமானத்திலிருக்கப்பட்ட மஹாநிதியானது (ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கத்தக்கதாக) இருக்கும்போது, புந: - மறுபடியும், அஹம் - நான், கரணானி - என்னுடைய வாக்கு முதலான இந்திரியங்களை, க்ருபணத்வார - அல்பர்கள் வாசலில், அதாவது அல்ப ப்ரயோஜனங்களைமட்டும் கொடுக்கக்கூடிய அல்ப ஸ்வபாவமுள்ள பணக்காரர்கள் முதலானவர்களுடைய வீட்டு வாசல்களில், துராஸிகாதி - இளப்பமாகக் காத்துக்கொண்டிருப்பது முதலான, து:கை: - கஷ்டங்களாலே, கிம்கதர்த்தயேயம்-இனி ஏன் வருத்தப்படுத்தப்போகிறேன் (அதாவது அவர்களை இனி ஒரு நாளும் அனுஸரித்து கஷ்டமடையமாட்டேன்).

(கருத்து) மஹத்தான ஸம்பத்து தோன்றும்படி திவ்ய ரத்னங்களாலே அலங்கிருதையாயிருக்கிற ஹே பாதுகையே! நான் உன்னையும் அடைந்து உனக்கு அதீனமாய் உன்னுல் எவர்க்கும் எளிதாக அடைவிப்பிக்கக்கூடியவராய் (யாதொருவளுடைய அபாங்க கடாக்ஷத்தாலே ஜீவராசிகள் மோக்ஷபர்யந்தமான ஐசுவரியங்களை அடைகிறுர்களோ அப்படிப்பட்ட லோகமாதாவான) மஹாலக்ஷ்மியோடு கூடினவராய், ஆச்ரிதர்களுக்கு ஸுலபமாம்பொருட்டு இந்த ரங்கவிமானத்தில் வந்து குடிகொண்டு ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கத்தக்க மஹாநிதிபோலிருக்கப்பட்டவருமான பகவானையும்உன்னைக்கொண்டு அடைந்த பிறகு, இனிமேலும் முன்போல்(954-வது சுலோகத்தைப்பார்க்க) அல்பசக்தர்களும் அல்பஸ்வபாவமுள்ளவர்களுமான பணக்காரர்

கள் முதலானவர்களுடைய வாசல்களில் போய் அவர்களுடைய தயவை எதிர்பார்த்து காத்திருப்பது, அவர்களையே அநுஸரிப்பது, அவர்களை ஸ்துதிப்பது, அவர்கள் இட்டபடி அடிமை தொழில்கள் செய்வது முதலான வேலைகளால் என்னுடைய வாக்கு முதலான இந்திரியங்களை அந்யபரமாக்கி வருத்தப்படுத்துவேனோ? என்னுடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் உங்களுக்கே சேஷமென்றும் எனக்கு ப்ராப்ய ப்ராபகங்கள் இரண்டும் நீங்களே என்றும் உள்ளபடி தெளிந்தேனல்லேனோ? ஆகையால் இனி அந்யபலாபேக்ஷைக்கும் அதடியான அந்யாச்ரயணத்துக்கும் ப்ரஸக்தி ஏது? (பெரும் புதையல் அகப்பட்டபின் ஒருவன் பிச்சைக்குப்போவனோ? அதுபோல) என்கிறார்.

ஸர்வேசுவரனை ஸ்வாதீனமாகவுடையவர்களும் ஸர்வஸுஹ்ருத்துக்களாய், பரம தயாளுக்களாய், அனுபவபர்யந்தமாக தத்வத்தை உணர்ந்தவர்களுமான ஸதாசார்யர்களை உள்ளபடி அறிந்து அடைந்து அவர்களால் ஜீவஸ்வரூபஜ்ஞானத்தையும் பெற்று தெளிந்து ஸர்வேச்வரனாய் பரம காருணிகனாய் ஆச்ரித ஸுலபனாய் ஸர்வபலப்ரதாதாவாய் ஸ்ரீய:பதியுமான எம்பெருமானையும் உள்ளபடி அறிந்து அடைந்தவர்களுக்கு பின்னிட்டு அந்யபலாபேக்ஷையும் ததர்த்தமான அந்யாச்ரயணமும்நேரிடாது. அப்படிக்கில்லாமல் அந்யபலாபேக்ஷகளிலும் அந்யாச்ரயணாதிகளிலும் ஸக்தரானவர்கள் எவ்வளவு பண்டிதர்களாகவும் சாஸ்திர ப்ரவர்த்தகர்களாகவும் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களாகவும் இருந்தாலும், அவர்கள் பண்டிதர்களுமல்லர்; அவர்களுடைய ஜ்ஞானம் அவர்களுக்குத் தெளிவை உண்டுபண்ணுதவரையில் அது அவர்களுக்கும் பிறர்களுக்கும் கார்யகரமுமாகாது. அவர்கள்விஷயத்தில் ஸதாசார்யகடாக்ஷமும் அவர்களால் உபதேசிக்கப்பட்ட ஜ்ஞானமும் ஸித்திக்கவில்லையென்று அறியலாம். (3)

அவ:— இப்போது நீ கோரி அடைந்த புருஷார்த்தத்துக்கு ஸாம்ஸாரிகபலன்களெல்லாம் மிகவும் இளப்பானது என்று சொன்னால், மோக்ஷத்தில்தான் அதற்குமேலான புருஷார்த்தம் கிடையாதோ; அதை நீ மேலும் கோரவேண்டாமோ என்று கேட்க, பதில் சொல்லுகிறார்—

(௯௭௪) ஸக்ருதநுபூய ரங்கபர்த்து:
த்வதாச்லேஷமநோஹரம் பதாப்ஜம் |
அபுநர்பவகௌதுகம் ததைவ
ப்ரசமம் கச்சதி பாதுகே முநீநாம் || (௪)

(ப-ரை) ஹே பாதுகே - வாராய் பாதுகையே? முநீநாம் - ருஷிகளுக்கு, அதாவது மனனசீலர்களுக்கு, உன்னையே எப்போதும் த்யானிக்கிறவர்களுக்கு, த்வதாச்லேஷ- உன்னுடைய ஆலிங்கனத்தாலே, அதாவது உன்னோடு சேர்ந்திருப்பதினாலே, மநோஹரம் - மனதைக் கவரும்படி மிகவும் அழகாக இருக்கிற, ரங்கபர்த்து: - ஸ்ரீரங்கநாதனுடைய, பதாப்ஜம் - பாதாரவிந்தத்தை, ஸக்ருத் - ஒரே தடவை கூட, அதாவது ஒரு தடவையிலேயே, அநுபூய - அனுபவித்து, அதாவது அனுபவித்த மாத்திரத்தில், (சரணாகதி பண்ணமாத்திரத்தில் என்று ஒரு அர்த்தம்), ததைவ-அப்போதே, அபுநர்பவ - மறுபடியும் ஜன்மம் எடுக்காமல் இருப்பதில், அதாவது மோக்ஷத்தில், கௌதுகம் - ஆவலானது, பரபரப்பானது, ப்ரசமம்-சாந்தியைஅதாவது அடங்கிப் போவதை, கச்சதி - அடைகிறது. (ஒரு தடவை சரணாகதி பண்ணமாத்திரத்தில் மோக்ஷம் ஸித்தித்துவிடுகிறபடியால் மறுபடியும் மோக்ஷம் எப்படிக் கிடைக்கும், இன்னும் என்ன உபாயத்தைச் செய்கிறது என்று பதரி ஆவல்படுவதற்கு அவகாசமில்லாமல் போய்விடுகிறது என்று ஒரு அர்த்தம்).

குறிப்பு— இந்த சுலோகத்துக்கு உபாயபரமாகவும் ஒரு அர்த்தம் த்வனித்தாலும் ஸ்ரீபாதுகை தானே உத்க்ருஷ்டபலமாக இருப்பதை விவரிக்கிற இந்த பலபத்ததியின் ப்ரகரணத்துக்கு அவ்வர்த்தம் அவ்வளவு ஸங்கதமுமல்ல ஸ்வாரஸ்யமுமல்ல. அவ்வர்த்தம் பதவுரையில் ( ) என்கிற அடையாளத்துக்குள் காட்டப்பட்டிருக்கிறது. அதனால் பாதுகை புருஷார்த்த ஸாதனத்தில் உயர்ந்தது என்பதுதான் ஏற்படும். ப்ரகரணத்துக்கு அனுகுணமான பலபரமான அர்த்தமே மேல்கருத்தில் விவரிக்கப்படுகிறது.

(கருத்து) ஓ பாதுகையே! மனனசிலர்களான வஸிஷ்டாதி மஹர்ஷிகள் சேதநம், அசேதநம், ஈச்வரன் என்கிற மூன்று தத்வங்களின் ஸ்வரூபம் முதலானதுகளை சாஸ்திரத்தைக் கொண்டு விசாரித்து ஸம்ஸாரத்தின் இளப்பத்தைக்கண்டு முமுக்ஷுக்களாய், மோக்ஷோபாயம், உன்னோடு சேர்ந்த பகவானுடைய திவ்ய பாதாரவிந்தங்களைத் த்யானிப்பதேதான் என்று அறிந்து பக்தியோகம் என்று சொல்லப்பட்ட அந்த த்யானத்தில் இறங்குகிறார்கள். அப்போது ஒரு தடவை உங்களுடைய த்யானம் ஸித்தித்தமாத்திரத்தில் அதின் ஆநந்தானுபவத்தின் ஆகர்ஷகத்திலகப்பட்டு முதலில் அவர்களுக்கு லக்ஷ்யமான (அபுனர்பவ) மோக்ஷத்தில் த்வரையை இழந்து வெகு காலம் வரையில் ஜன்மாந்திரங்களையும் ஸஹித்துக்கொண்டு உங்களுடைய த்யானத்திலேயே ஈடுபடுகிறார்களே ஒழிய ஸம்ஸாரம் உடனே விடவேணுமென்று ஆர்த்தர்களாய் சரணாகதி பண்ணி உடனே மோக்ஷத்துக்குப் போவதில்லை. ஏனென்றால் உங்கள் த்யானத்திற்கு ஆரம்பித்த மாத்திரத்தில் என்றைக்கும் மோக்ஷம்ஸித்தமானபடியாலும், ஸம்ஸாரத்தை மறக்கடிக்கக்கூடியதும் மோக்ஷத்திலும் இதற்குமேலானது ஒன்று இல்லாதபடி உயர்ந்ததுமான பகவானோடு சேர்ந்த உன்னை அனுபவிக்கிறதாகிற பரம புருஷார்த்தம் இங்கு இந்த சரீரத்தோடேயே கிடைத்துவிடுகிறபடியால் அதையே அனுபவித்துக்கொண்டு மோக்ஷத்தையும் மறக்கிறார்கள். அப்படியே நானும் காலாந்தரத்திலும் தேசாந்தரத்திலும் கிடைக்கக்கூடிய மற்றொரு புருஷார்த்தத்தில் ஆவலில்லாதவனாய் உன்னை இப்போதே பரமப்ராப்யமாகப்பெற்று அனுபவித்துக்கொண்டு முன்புற்ற (நிர்வேதபத்ததியில்) மோக்ஷத்வரையை இழந்தேன் — என்கிறார்.

இத்தால் பகவானையே நிரந்தரம் சிந்தித்துக்கொண்டு அவனுடைய அனுபவகைங்கர்யங்களிலேயே ஸர்வதா ஈடுபட்டிருக்கிற பாகவதோத்தமர்களான ஸதாசார்யாளுடைய அனுபவகைங்கர்யங்கள் இங்கு கிடைக்கிறவரையில் அதில் ஈடுபட்டவர்களுக்கு பரமபதமும் வேண்டுவதில்லை. ஏனென்றால் அங்கும் அதற்கு மேலான புருஷார்த்தம் கிடையாது என்று சொன்னதாகிறது.

அவ— நீ சொல்லுகிறபடி நீ அனுபவிக்கிற புருஷார்த்தமே ஸர்வோத்க்ருஷ்டமானாலும் அதை இந்த ப்ரதிபந்தகங்கள்

நிறைந்த கர்மபூமியிலிருந்தே அநுபவிக்கவேண்டுவாருமுளரோ? பரமபதத்தில் சென்றன்றே அகர்மவச்யராய் அதைத் தடங்க லில்லாமல் அநுபவிப்பது என்ன—பதில் சொல்லுகிறார்.

(கூஎரு) ஊவுாஸூாவாதிநா ஐஜிஷா
ஊநிஉம் வு௵வுுநிரு௵ஜ ஸஞ்ஞதீநாு |
ஸாுதவூஸநாதநு௵நஸீக்ஷாம்
உுூரிதாநாம் ஐஐ நிஷ்க்ருதிஷூஊாஸீ: || (ரு)

(ப-ரை) (ஹே பாதுகே - ஓ பாதுகையே!) ஊவுா ஸூா - எப்பொழுதும், வாதிநாம் - மேல்மேலும் விருத்தி யடைகிறதும், ஊநிஉம் வு௵வுு - இது முதல் என்றில்லாமல் அநாதியானதும், நிரு௵ஜ - த்ருடமானதுமான, ஸஞ்ஞதீ நாம் - வரிசைகளையுடைத்தாயிருக்கிறதும், ஸாுத - ஸ்ரீபர தாழ்வானுடைய, வூஸநாக - துக்கத்தைக் காட்டிலும் (துக் கத்துக்குக் காரணமான பாபத்தை இங்கு சொல்லுகிறது), ஊநு௵ந - குறைவில்லாத, அதாவது அதிகமான, ஸீக்ஷாம் - எல்லையை உடைத்தாயிருக்கிறதுமான, ஐஐ - என்னுடைய, உுூரிதாநாம் - பாபங்களுக்கு, நிஷ்க்ருதி: - ப்ராயச்சித்தமாக (அதாவது பாபத்தைத் துலைக்கிறவளாக), லும் - நீ, ஜூஸீ: (கிம்) - ஆகிறாயல்லையோ ?

(கருத்து) ஓ பாதுகையே ! நான் உன்னைப்பெற்று இங்கு அநுபவிக்கிற பரமபுருஷார்த்தத்துக்கு தடங்கல்கள் இல்லையா என்று கேட்கிறாயோ ? சொல்கிறேன் கேள். பெருங்காற்றில் ஸமுத்ரத்தின் அலைகள் போல் கிளர்ந்துகொண்டு மேல்மேலும் வரிசை வரிசையாக தடுக்கமுடியாதபடி அநாதிகாலமாகப்ரவஹித் துக்கொண்டுவருகிற பகவதநுபவவிரோதியான என்னுடைய மாளாத வல்வினைகளுக்கு ஓர் முடிவில்லை. அது உண்மையே. ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகனையிழந்து ஸ்ரீபரதாழ்வான் அநுபவித்த எல்லையில்லாத துக்கத்துக்கு மூலமான அக்கொடிய பாபங்களும் என்னுடைய பாபங்களுக்கு ஒரு ஏகதேசத்துக்குப் போதாது. ஆனாலும் உன்னையடைந்து ஸ்ரீபரதாழ்வானுடைய அக்கொடிய பாபங்களெல்லாம் எப்படி க்ஷணமாத்திரத்தில் நசித்தனவோ, அப்படியே உன்னையடைந்து உன்னுடைய பரிபூர்ண கடாக்ஷத்

த்தையும் நான் பெற்றபின் அநாதியான என்னுடைய மாளாத வல்வினைகளெல்லாம் அப்போதே நசித்துப்போகவில்லையோ? இனி எனக்கு உன்னுடைய அநுபவத்துக்கு கர்மங்களால் என்ன ப்ரதிபந்தகம் நேரக்கூடும். முக்ததுல்யனாகவன்றோ நான் உன்னை இங்கு அநுபவிப்பது என்கிறார்.

ஸ்ரீஸதாசார்யாளுடைய பரிபூர்ண கடாக்ஷத்தைப்பெற்று இங்கு அவர்களுக்குப் பரிபூர்ணசேஷவ்ருத்தியைப் பண்ணிக்கொண்டு அநுபவிக்கிறவர்களுக்கு ஸமஸ்த கர்மங்களும் நசித்தன. அவர்களுடைய அநுபவம் முக்தாநுபவமே. அவர்கள் இங்கு வைத்தே முக்தர்கள். (5)

அவ— இப்படி இவருடைய ப்ரத்யுத்தரத்தில் திருவுள்ளமுகந்த பாதுகையானது இவர் மூலம் தர்ம ஸூக்ஷ்மத்தை உலகத்துக்கு வெளியிடும்பொருட்டு “இங்கே பரம புருஷார்த்தத்தை அடையக் கூடுமானுல் எல்லோரும் அதை அப்படியே ஸுலபமாகத் தேடிக் கொள்ளலாமே” என்று மேலும் ப்ரச்நம் பண்ண ஸந்தோஷத்துடன் சொல்கிறார்.

(௩௭௫) த்வது³பாஸந ஸம்ப்ரதா³யவித்³பி⁴ஃ
ஸத³யே ஸாத்வத ஸேவிதே நியுக்தாஃ ।
ப⁴ரதவ்ரதிநோ ப⁴வாத்³ருஶாநாம்
க³திமிச்ச² காஞ்சந பாது³கே தாத்³ருஶீம் ‖ (௫)

(பதவுரை) ஹே காஞ்சநபாது³கே - வாராய் தங்கமயமான பாதுகையே! ஸாத்வத - ஸ்ரீபாஞ்சராத்ர சாஸ்திர நிஷ்டர்களாலே, ஸேவிதே - கைக்கொள்ளப்பட்டிருக்கிற, ஸத³யே - ஸித்தாந்தத்திலே, த்வத் - உன்னுடைய, உபாஸந - த்யாநத்தினுடைய (இது பக்தி ப்ரபத்தி இரண்டுக்கும் பொதுவாய் இரண்டையும் காட்டுகிறது), ஸம்ப்ரதா³ய - ஸம்ப்ரதாயத்தை (அதாவது பரம்பராகதமான பெரியோர்களுடைய ஆசாரத்தையும் கொள்கையையும்), வித்³பி⁴ஃ-அறிந்தவர்களாலே, நியுக்தாஃ - ஏவப்பட்டவர்களான (அதாவது அவர்களால் உபதேசிக்கப்பட்டு ஆசாரங்களிலும் சிக்ஷிக்கப்பட்டவர்களான) ப⁴ரதவ்ரதிநஃ - ஸ்ரீபரதாழ்வானுடைய வ்ருதத்தைக் கைக்கொண்டவர்களான (அதாவது பகவத்பாதுகையையே அந

நேத்ராயமாகவும் ஊந்ருத்யமாகவும் அத்யவஸித்தவர்களான), கதிசித் - யாரோ சில பாக்யவான்கள், ஸம்ஸார ஸமுத்ரம்-தாண்டமுடியாத இந்த ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தை, தாரஸி - வெகு ஸுலபமாகத் தாண்டிவிடுகிறார்கள்.

(கருத்து) அத்யுஜ்வலமான காந்தியோடு விளங்குகிறவாராய் தங்க பாதுகையே! அப்படிப்பட்ட பரமபுருஷார்த்தத்தை ஸுலபமாக இங்கே தேடிக்கொள்ளக்கூடுமானால் எல்லோரும் அப்படிச் செய்யலாமே என்று கேட்கிறாயோ? அதின் ஸூக்ஷ்மத்தைச் சொல்லுகிறேன் கேள். ஸம்ஸார நிவர்த்தனத்தின்பொருட்டு பகவானோடு அநங்யையான உன்னைக் குறித்தே பக்திப்ரபத்திகள்பண்ணுவது என்கிற சாஸ்திரார்த்தம் ரொம்ப ஸூக்ஷ்மமானது. அது எல்லோருக்கும் தெரியாது. பரமகாருணிகனாய் எல்லோருக்கும் பரமாசார்யனாய் ஸ்ரீய:பதியுமான பகவான் இதை ஸ்ரீபாஞ்சராத்ர சாஸ்திரத்தில் வெளியிட்டிருக்கிறான். அந்த சாஸ்திரத்திலேயே நிலையுடையவர்களாய் அதின் ஸித்தாந்தத்தில் உன்னுடைய உபாஸந ஸம்ப்ரதாயத்தை உள்ளபடி அறிந்த மஹான்களால் உபதேசிக்கப்பட்டு சிக்ஷிக்கப்பட்டவர்களும் அதனால் ஸ்ரீபரதாழ்வானைப்போல் பகவத் பாதுகோபாஸநத்தையே தங்களுக்கு வ்ரதமாக அவலம்பித்தவர்களுமான யாரோ சில மஹாஸுக்ருதிகளுக்கன்றோ இந்த தர்ம ஸூக்ஷ்மம் வெளியாவது. அவர்களன்றோ இந்த தாண்டமுடியாத ஸம்ஸார ஸமுத்ரத்தை எளிதாகத் தாண்டத் தகுந்தவர்கள். உன் விஷயத்தில் அப்படிப்பட்ட த்ருடவ்ரதமும் பக்தியுமுடையவர்களாய் உன்னை இங்கு பரிபூர்ணமாக அனுபவிப்பவர்கள் இப்போதேமுக்தர்களன்றோ, அவர்களுக்கு கர்மபந்தம் ஏது? "ஸமஹாத்மா ஸுதுர்லப:" என்று ஸர்வஜ்ஞனும் பிரயாஸப்பட்டுத் தேடிக் கண்டு பிடிக்கவேண்டிய அருமைத் தேவர்களன்றோ அவர்கள். அவர்களைப்போல் எல்லோரும் ஆகமுடியுமோ? —என்கிறார்.

ஸதாசார்யர்களை உள்ளபடி அறிந்து அவர்களையே பரமப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் பற்றுமவர்கள் மஹாபாக்யசாலிகள். அவர்கள் உலகத்தில் ரொம்பவும் துர்லபர்கள். அவர்கள் இட்ட வழக்காம் மோக்ஷம். அநாதியான பகவத் சாஸ்திரோக்த

ஸத்ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த ஸதாசார்யர்களுடைய பரிபூர்ண கடாக்ஷம் பெற்றவர்களுக்குத் தான் அப்படிப்பட்ட தத்வஜ்ஞான மும் அனுபவமும் இங்கு ஏற்படும். (6)

அவ— இப்படி ஸ்ரீ ஆசாரியர் தன்னுடைய பரம புருஷார்த்த லாபத்தையும் அதற்குத் தகுந்த அதிகாரிகளையும் கொண்டாடவே ஸ்ரீ பாதுகையானது மிகவும் ப்ரஸந்நமாய் பரமகிருபையுடன் "ஆனால் நீ கோரக்கூடிய புருஷார்த்தம் வேறொன்றுமில்லையோ? இதுவே உனக்குப் போதுமானதோ?" என்று கேட்க பதில் சொல்லுகிறார்.

(௲௭) அச்யுதபாதுகே யதாவத்
ப⁴வதீ யச்ச பத³ம் க்ஷமைகதா⁴ர்யம் |
இதரேதரபூ⁴ஷிதம் ததே³தத்
த்³விதயம் ஸம்வநநாய சேதஸோ ந: || (௭)

(ப-ரை) ஹே அச்யுதபாதுகே - வாராய் ஆச்ரிதர்களை ஒரு நாளும் கைவிடாத ஸ்வபாவமுடையவனான பகவானுடைய பாதுகையே! ப⁴வதீ - நீயும், க்ஷமைகதா⁴ர்யம் - உன்னொருத்தியாலே மட்டும் தரிக்கத்தகுந்ததான, யத் பத³ம் ச - யாதொரு திருவடியொன்றுண்டோ, தத் ஏதத் த்³விதயம் - அப்பேர்ப்பட்ட இந்த இரண்டும், இதரேதரபூ⁴ஷிதம் (ஸத்)-ஒன்றால் ஒன்று அலங்கரிக்கப்பட்டதாய்க்கொண்டு, ந: - எங்களுடைய, சேதஸ: - மனதினுடைய, ஸம்வநநாய - வசீகரணத்தின்பொருட்டு, யதா²வத் - தகுந்தபடி (அதாவது ஸம்பூர்ணமாக), அலம் - போதுமானதாக இருக்கிறது.

(கருத்து) ஆச்ரிதர்களை ஒரு நாளும் கைவிடாத ஸ்வபாவம் உடையவனாய் அதனாலேயே அச்சுதன் என்று திருநாமம் பூண்ட பகவானுக்கு ஸமான சீலையான அவனுடைய பாதுகையே! பகவானோடு அநந்யையான உன்னை அனுபவிப்பதாகிற புருஷார்த்தமே எனக்குப் போதுமா என்று கேட்கிறாயோ? அதுவே எனக்கு பர்யாப்தமானது. ஏனென்றால் பரமதயாளுவாய் ஆச்ரிதவத்ஸலையான நீ என்ன, குணத்தினால் உனக்கும் பரமபோக்யமாய் எல்லையில்லாத ப்ரேமையுடையஉன்னாலே மட்டும் ஸர்வதா

தரிக்கத் தகுந்ததுமான வாக்கு மனஸ்ஸுகளுக்கெட்டாத பெருமையையுடைய அந்த திருவடி மலரென்ன, இப்படி இருவர்களும் அந்யோந்யார்ஹர்களாக இருந்துகொண்டு ஒருவருக்கொருவர் அலங்காரமாக இருக்கும்படியான உங்களுடைய சேர்த்தியின் விலக்ஷணமான ஆனுரூப்யமென்ன இவைகள் ஒவ்வொன்றுமே அநந்ய பக்தியாய் அநந்யப்ரயோஜனனான என்னுடையவும் என்னைப்போலொத்த மனோபாவம் அடைந்த மஹாஸுக்ருதிகளுடையவும் மனதைக் கவர்ந்து ஒழிந்தன. இப்படி உங்கள் விஷயத்தில் ஆழ்ந்துபோன எங்கள் மனதுக்கு இனி வேறொரு போக்யவஸ்துவைத் தான் தேட சக்தியுண்டோ, சக்தியுண்டானாலும் இதற்கு மேலான போக்யவஸ்துதான் ஸம்பாவிதமோ. ஸர்வஜ்ஞர்களான உங்களுக்குத் தெரிந்தால் சொல்லலாமிறே— என்கிறார்.

இத்தால் ஸதாசார்யாள் விஷயத்தில் அநந்யபாவத்தை அடைந்து ஆழ்ந்துபோன மஹான்களுக்குஇதரபுருஷார்த்தத்தை தேட சக்தியுமில்லை, அவர்கள் தேடக்கூடிய புருஷார்த்தமும் வேறொன்றில்லை என்று சொன்னதாகிறது. (7)

அவ— இவருடைய ப்ரேமகர்பமான வார்த்தைகளை மேலும் கேட்க விரும்பி "அப்படி என் விஷயத்தில் நீ ஈடுபடுவதற்கு என்னிடம் என்ன குணம் கண்டாய்" என்று ஸ்ரீபாதுகை ப்ரச்னம் பண்ண, சொல்கிறார்.

(கூ௭அ) அநந்யஸாதாரணதயா முராரே
ரங்கேஷு வாஸேஷு கிரீடமுக்யை: ।
பாதாவநி த்வம் நிஜமேவ பாகம்
ஸமர்த்ஸயாரணதாமவசேஷீ: ॥ (அ)

(பதவுரை) ஹே பாதாவநி - வாராய் ஸ்ரீபகவானுடைய திருவடிகளுக்கு பூஷணமாயும் ரக்ஷகமாகவும் இருக்கிற பாதுகையே! முராரே: - முரன் என்கிற அஸுரனுக்குச் சத்ருவான பெருமாளுடைய, அங்கேஷு - திவ்யாவயவங்களெல்லாம், கிரீடமுக்யை: - கிரீடம் முதலிய திருவாபரணங்களாலே, அநந்யஸாதாரணதயா-அவைகளுக்கு ஏற்பட்ட அவ்வோ அவயவங்களை மற்ற யாருக்கும் பொதுவாக இல்லாமல்

தங்களுக்கே அஸாதாரணமாக, அவாப்தேஷு (ஸத்ஸு), அடையப்பட்டிருக்கும்போது, ஸ்வயமேவ - நீ ஒருத்திதான்- நிஜம் - தன்னுடையதான, பதம் - பங்காகிய திருவடியை, ஸர்வேஷாம்-எல்லா ஜீவராசிகளுக்கும், ஸாதாரணதாம் - பொது வாயிருக்கும் தன்மையை, ஆநைஷீ:-அடைவிப்பித்திருக்காய்.

(கருத்து) ஓ பாதுகையே ! நான் உன் விஷயத்தில் அப்படி ஈடுபடுவதற்குக் காரணம் சாஸ்திரத்துக்குக் கட்டுப்படவேணு மென்றா ? அது இல்லையே, உன்னுடைய குணங்களுக்குத் தோற் றன்றோ உனக்கு நான் அடிமையாக இருப்பது. உலகத்தில் உனக்கு ஸமானமான குணசாலிகள் இல்லையேயாகுலும் ஸூரி களுக்குள்தான் உனக்கு ஸமானமானவர்களுண்டோ ? பார்ப் போம். ஸ்ரீபகவானுடைய திவ்யாவயவங்களோடு ஸர்வதா கலந்துகொண்டிருக்கிற கிரீடம் முதலிய ஆபரணரூபிகளான ஸூரிகள் தம் தாமுக்கு ஏற்பட்ட அவயவங்களைத் தாங்களே அனுபவிக்கிறார்களே ஒழிய மற்றவர்கள் ஒருவருக்கும் கொடுப்ப தில்லையே. நீயோவென்றால் உனக்கே அஸாதாரணமான பகவா னுடையதிருவடிகளை ஸர்வஜீவராசிகளும் யதேச்சமாய் உன்னைப் போலவே ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கும்படிக்கும் அனுபவிக்கும் படிக்கும் பொதுவாக்கிவைத்திருக்கிறாயே. இது என்ன பரம காருண்யம் ? என்ன பரமௌதார்யம் ? என் மனதைத் தோற் பித்து உனக்கே அடிமையாக்குவதற்கு இந்த குணங்கள்தானே போதாதோ ? இப்படி ஒப்பில்லாத குணங்கள் உன்னிடத்தில் அஸங்க்யேயங்களன்றோ ? அப்படிப்பட்ட உன்னை ஆச்ரயித்து நான் இதர பலன்களை அபேக்ஷிக்க ப்ரஸக்தியுமுண்டோ? என் கிறார்.

தயை ஔதார்யம் முதலிய மஹாகுணங்களில் ஸதாசார்யர் களுக்கு ஸமானமானவர்கள் இந்த உலகத்திலும்இல்லை;பரமபதத் திலுமில்லை. ஆத்மாக்களுக்கு ம்ருத்யுவான இந்த ஸம்ஸாரத்தில் பரம துர்லபமான ஸ்ரீ பகவானுடைய திருவடிகளை தாங்கள் எவ் வளவோ பாடுபட்டு சாஸ்திரத்தாலும் ஸத்ஸம்ப்ரதாயத்தாலும் கண்டறிந்து அடைந்தபிறகு தங்களுக்கு ஸஜாதியர்களாய் ஸம்ஸா ரத்தில் அஜ்ஞருமாயும் அவசமாயும் தபிக்கிற ஜீவராசிகள் விஷயத் தில்பரமகருணையால் ஸம்ஸார வ்யாதிக்கு மருந்தாகிய அந்த பகவா னுடைய திருவடிகளை தங்களுக்குப்போல் அவர்களுக்கும் ப்ரா

பிக்காத வரையில் அவர்களுடைய ஔதார்யம் மிகவும் திளவு எடுத்து தவிப்பார்கள். இதர ஜனங்களுடைய ஸம்ருத்தியேதான் அவர்களுக்கு ஸம்ருத்தி. இப்படிப்பட்ட அவர்களுடைய குணங்களில் ஈடுபட்ட பரமரஸிகர்களும் ஆஸ்திகர்களுமான சிஷ்யர்களுக்கு அந்த ஸதாசார்யர்களுடைய கைங்கர்யானுபவங்களைத் தவிர இச்சிக்கக்கூடிய வேறு புருஷார்த்தம் ஐஹிகத்திலுமில்லை ஆமுஷ்மிகத்திலுமில்லை. (8)

அவ— நீ என்னவோ என்னையடைந்தபிறகு ஒருவனுக்கு வேறொரு புருஷார்த்தம் ஐஹிகத்திலாவது ஆமுஷ்மிகத்திலாவது ருசிக்குமோ ? அதற்கு ப்ரஸக்தியுண்டோ என்று கேட்கிறாயே. எவ்வளவோ பேர்கள் என்னை ஆச்ரயித்து ஸ்வர்க்காதி பலன்களையடையவில்லையா என்று புன்னகையுடன் பாதுகை கேட்க, பதில் சொல்லுகிறார்.

(௯௱௯) ஸமாச்ரிதாநாம் மணிபாதரக்ஷே த்வாம்
விபச்சிதாம் விஷ்ணுபதேப்யநாஸ்தா।
கதம் புநஸ்தே க்ருதிநஸ்ஸஜேரந்
வாஸாசாம் வாஸவராஜதாந்யாம்॥ (௯)

(ப-ரை) ஹே மணிபாதரக்ஷே - வாராய் திவ்ய ரத்நங்களால் பூஷிதையாய் ப்ரஸன்னையாய் விளங்காநிற்கிற பாதுகையே! த்வாம் - உன்னை, ஸமாச்ரிதாநாம் - நன்றாக ஆச்ரயித்திருக்கிற(நன்றாக ஆச்ரயித்தவர்களுக்கன்றோ என்று அர்த்தம்), விபச்சிதாம் - வித்வான்களுக்கு (தத்வத்தை உள்ளபடி அறிந்த மஹான்களுக்கன்றோ என்று அர்த்தம்), விஷ்ணுபதேபி - பெருமாளுடைய திருவடிகளில்கூட, பரமபதத்தில் கூட, அநாஸ்தா - ஆசையில்லை, தே-அப்பேர்ப்பட்ட, க்ருதிந: - ஸமர்த்தர்கள், வாஸவராஜதாந்யாம் - இந்திரனுடைய பட்டணமாகிய அமராவதியில், வாஸாசாம் - வஸிப்பதில் ஆசையை, கதம் புந: - எப்படித்தான், ஸஜேரந் - அடைவார்கள் (அப்படிப்பட்டவர்களா ஆசைப்படுவார்கள் ? அதில் ஆசைப்படக்கூடிய அதிகாரிகள் வேறுஅன்றோ? என்று அர்த்தம்).

(கருத்து) என் மனதை வசீகரிக்கும்படி திவ்யாத்மகஸித மான ரூபத்தோடும் ப்ரஸந்நவதநத்தோடும் ப்ரச்நம் பண்ணு கிற்கிற பார்த்தனையே! எந்த அதிகாரியைப்பற்றி நீ பேசுகிறாய்? “ வஹுஶாவா ஹ்யநகூாஸ வுஷியோzவ்யவஸாயிநாம ” (கீதை 2–அ 41–சு) என்கிறபடி பரம புருஷார்த்த ஜ்ஞானமும் அதில் அத்யவஸாய ருசிகளுமில்லாமல் ஸ்வர்க்காதி பசுக்ஷுத்ர பலன்களில் அபேக்ஷையுடைய தத்வஜ்ஞான சூன்யர்களும் தத்வ ஜ்ஞாநத்தில் நிலையில்லாதவர்களுமான அவிவேகிகளன்றோ பற்பல பலாபேக்ஷைகளால் பற்பல கர்மங்களைச் செய்து பற்பல தேவதை களை ஆச்ரயிப்பதுபோல், அவ்வோபலன்களுக்காக உன்னையும் ஆச்ரயித்து ஸ்வர்க்காதி ஐஹிக ஆமுஷ்மிக போகங்களை மட்டும் அடைந்து உன்னை இழந்து போகிறவர்கள். “வ்யவஸாயாத்மிகா வுஷிரெகெஹ கூரநநந” (கீ அ-2, சு.41) என்கிறபடி தத்வவித்துக்களாய் ப்ராப்யப்ராபகங்கள் இரண்டும் நீயே என்று அத்யவஸித்து ஸர்வ ப்ரகாரத்தாலும் உன்னையே ஆச்ரயித்து அதிநிபுணர்களாய் த்வதேகபோகர்களான மஹான்களோ உன் னிடமிருந்து ஸ்வர்க்காத்யைசுவரியங்களை அடைகிறவர்கள்? உன்னையே பரம புருஷார்த்தமாகப் பற்றி “ வெகூணவா வெஸzவிநவெஷிதாஷஃ ” என்கிறபடி பரமபதத்திலும் பெரு மானுடைய திருவடிகளிலும் கூட அநாதரவு பண்ணுகிறவர்க ளாச்சுதே அவர்கள். உன்னை க்ஷுத்ரபலன்களுக்கு உபாயமாக மனதால் எண்ணக்கூடமாட்டார்கள் என்பதற்குக் கேட்கவே ணுமோ? ஆகையால் உன்னுடைய பரம கிருபையால் தத்வ ஹிதபுருஷார்த்தங்களில் தெளிவையடைந்து உன்னையே அநந்ய கதியாகப் பற்றின எனக்கு உன்னைத்தவிர வேறு ப்ராப்யம் எங்குமில்லை என்கிறார்.

ஸதாசார்யர்களை உள்ளபடி அறிந்து அவர்களையே அநந்ய கதிகளாகப்பற்றின மஹான்களுக்கு அவர்களைத் தவிர வேறு ப்ராப்யமில்லை. ஸதாசார்யர்களை ஆச்ரயித்தும் அவர்கள்மூலம் அல்பபலன்களை மட்டும் ஆசைப்படுகிறவர்கள் அதிக்ஷுத்ரர்கள்.

அவ:— நீ என் விஷயத்தில் பக்ஷபாதமுள்ளவனானபடி யால் ஒருவனுக்கு நானே பரம ப்ராப்யமாகக்கூடும் என்கிற விஷயத்தில் உன்னுடைய வார்த்தை மட்டும் ப்ரமாணமாகுமோ?

என்னை அப்படிப்பட்ட உயர்ந்த ப்ராப்யமாக நினைக்கக்கூடிய வேறு வ்யபதேச்யாள் (உலகத்தார் ஒப்புக்கொள்ளக்கூடிய தகுந்த மனுஷ்யாள்) உண்டானால் சொல்லலாமே— எனச் சொல்கிறார்.

(௩௮௦) விம்ருஶ்ய ரங்கேஶ்வர பாதரக்ஷே
வாரக்ரமம் ஸ்வம் நூநமவாரணீயம் |
பத்³மாஸஹவஸி ஸ்ப்ருஶதீ ப்ரதீதா
ஸ்தூலேந ரூபேண வஸுந்தரா த்வாம் ||

(ப-ரை) ஹே ரங்கேஶ்வர பாதரக்ஷே - ஸ்ரீரங்க நாதனுடைய திருவடிகளைக் காப்பாற்றுகிறவளே! வஸுந்தரா - பூதேவியானவள், அவாரணீயம் - தடுக்கமுடியாமலிருக்கிற, அதாவது அதிக்ரமித்து இன்னொருவர் தான் செய்ய முடியாமலிருக்கிற, வாரக்ரமம் - தினமுறையை, அதாவது ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி இவர்களுக்குள் இன்னாள் இன்னாள் இன்ன இன்ன தினம் பாதுகையை ஏளப்பண்ணி பெருமாள் திருவடிகளில் ஸமர்ப்பிப்பது முதலியதைச் செய்ய வேண்டியது என்கிற தினக்ரமத்தின் ஏற்பாட்டை, விம்ருஶ்ய - யோஜித்துப்பார்த்து, பத்³மாஸஹவஸி - பெரிய பிராட்டியார் (ஸ்ரீதேவி) முறையிலும் (அதாவது மற்ற தேவிமார்களுடைய முறையிலும் தனக்கு பாதுகா ஸம்பந்தம் வேணுமென்கிற அபிலாஷையால்), ஸ்தூலேந - பெரியதான, ரூபேண - ரூபத்தைக்கொண்டு (அதாவது கபடமாக மற்ற தேவிமார்களுக்கு ப்ரத்யக்ஷமாகத் தன் ஸ்திரீரூபத்தைக் காட்டாமல் பூமி ரூபமான வடிவுடையவளாய்), த்வாம் - உன்னை, ஸ்ப்ருஶதீ - தொட்டவளாய்க்கொண்டு, ப்ரதீதா - ப்ரஸித்தமாக இருக்கிறாள். நூநம் - நிச்சயம்.

(கருத்து) ஸ்ரீ ரங்கநாதனுடைய பாதுகையே! தத்வவித்துக்களுக்கு நீயே பரம ப்ராப்யமாய் போக்யபூதை யானவள் என்பதற்கு என் வார்த்தை மட்டும் ப்ரமாணமல்லா தொழிந்தால் எல்லோரும் ஒத்துக்கொள்ளக்கூடிய ப்ரமாணமும் ஒன்று இவிடத்திலேயே காட்டுகிறேன். உன்னுடைய போக்ய தாதிசயத்தால் இந்த ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளுக்குள்

அந்யோந்யம் ஸ்பர்த்தை உண்டாகாமைக்காக இன்னாள் இன்னாள் இன்ன இன்ன தினம்தான் உன்னை ஸ்ரீரங்கநாதன் திருவடிகளில் ஸமர்ப்பிப்பது முதலியதைச் செய்யவேண்டியது என்கிற ஒருவரும் அதிக்ரமிக்கமுடியாத தினமுறை ஒன்று ஏற்பட்டிருக்கிறது. அப்படியிருந்தும் உன்னிடத்திலுள்ள ஈடுபாட்டால் பூதேவியானவள் கபடமாகவாவது மற்றவர்கள் முறையிலும் உன்னுடைய ஸம்பந்தம் தனக்கு விட்டுப்போகாமல் இருக்க வேணுமென்று யோஜித்து மற்ற தேவிமார்களுக்கு தன் ஸொந்த ரூபத்தைக் காட்டாமல் பூமி என்கிற பெரிய வடிவை எடுத்துக் கொண்டு ஸ்ரீரங்கநாதன் திருவடியோடு சேர்ந்த உன்னை மற்றவர்கள் முறையிலும் விடாமல் தரிக்கிறாள். இது விஷயம் நிச்சயமன்றோ? ஆகையால் தத்வவித்துக்களுக்கு நீயே பரமப்ராப்யமும் பரமபோக்யமும் என்பதில் ஒரு ஸம்சயமுண்டோ? ஆகையால் உன்னுடைய எல்லையில்லாத கல்யாண குணங்களைப் பற்றி உன்னையே நான் பரமப்ராப்யமாக அடைந்தேன் என்கிறார்.

ஸதாசார்யர்கள் ஸ்ரீபகவானுடைய தேவிமார்கள் முதலானவர்களாலும் கொண்டாடி ஆதரிக்கத்தகுந்தவர்கள். ஏனென்றால் அவர்கள் தேவிமார்களைப்போல் ஜீவராசிகள் விஷயத்தில் மிகுந்த கருணையும் வாத்ஸல்யமுமுடையவர்களாக இருப்பதோடு அவர்களுடைய ஸகாயத்தை முன்னிட்டுத்தான் தேவிமார்கள் ஜீவர்கள் விஷயமாய் பகவானிடத்தில் புருஷகாரம் செய்யவேணும். (10)

அவ:— என்னை ரொம்ப குணசாலியாகச் சொன்னாய். அது இருக்கட்டும். குணசாலியாக மட்டும் இருப்பது போதுமோ, என்றால் மற்றவர்களுக்கு விசேஷ உபகாரம் இருந்தாலன்றோ எல்லாரும் என்னை அப்படிக் கொண்டாடக்கூடும், என் விஷயத்தில் என்ன லோகோபகாரம் கண்டாய் என்று கேட்க, பதில் சொல்லுகிறார்—

(கூஅக) ஸ்ரீரங்கஸ்தல வைபவம் ...

... ॥ (கக

(ப-ரை) ஹே தேவி மணிபாதுகே - வாராய் விளங்கா நிற்கிற கல்லிழைத்த பாதுகையே! த்வம் - நீ, மதுஜித: - மது என்கிற அஸுரனைக்கொன்ற பகவானுடைய, சரணம் - திருவடியாகிற, அநபாயநிதிம் - அழிவில்லாத நிதியை அதாவது எவ்வளவு எடுத்து செலவழித்தாலும் மாளாததும் ஸகல புருஷார்த்தங்களுக்கும் ஸாதனமாக இருப்பதுமான பெரும் புதயலை, அபிரக்ஷஸி - நன்றாகக் காப்பாற்றிக்கொடுக்கிறாய், அதஏவ - அந்தக் காரணத்தினாலேதான், தத் அநந்யதநா: - அந்தத் திருவடியைத்தவிர தங்களுக்கு வேறு ஒரு ஸொத்தை உடையவர்களாக இல்லாமலிருக்கிற, அதாவது அந்தத் திருவடியையேதான் தங்களுக்கு ஸகல பலஸாதனமான ஸர்வஸ்வமாக நம்பியிருக்கிற, க்ருதிந: - ஸமர்த்தர்கள், அதாவது ஜந்மாந்திரஸுக்ருதத்தால் பகவானுடைய திருவடிகளேதான் அழிவில்லாத ஸகல பலஸாதனமென்று சாஸ்திரத்தாலறிந்து அப்படியே அது ஒன்றையே ஸர்வத்துக்கும் நம்பியிருக்கிற கெட்டிக்காரர்கள், பவதீம்-உன்னை, அதாவது அப்படிப்பட்ட மஹாநிதியைக் காப்பாற்றிக்கொடுக்கிற பரமோபகாரியான உன்னை, சிரஸா - தங்கள் தலையினாலே, வஹந்தி - ஸர்வதா தரிக்கிறார்கள்.

(கருத்து) பெரும் செல்வம் படைத்தவனுக்குண்டாகும் ஹர்ஷம்போலொத்த ஹர்ஷமுடையவளாய் அத்யுஜ்வலையாய் விளங்கா நிற்கிற வாராய் கல்லிழைத்த பாதுகையே! உன்னுடைய ஆத்மகுணங்களை மட்டும் பற்றியல்ல உன்னைப் பெரியோர்கள் வணங்கிக்கொண்டாடுவது. உலகத்துக்கெல்லாம் ஸர்வோத்க்ருஷ்டமான ஒரு மஹோபகாரத்தையன்றோ நீ செய்வது. இந்த ஆத்மநாசகரமான ஸம்ஸாரத்தில் அநாதி பாபங்களால் பீடிக்கப்படுகிற சேதநர்களுக்கு ஐஹிகாமுஷ்மிக ஸுகலேசங்களால் ஸ்வல்ப விச்ராந்தியை அடைவதற்கோ, இந்த பாபியான ஸம்ஸாரத்தை அடியோடு தாண்டுவதற்கோ ஒரே உபாயமும் ஸ்வயம் பலமுமான அழிவில்லாத மஹாநிதிபோன்ற ஆச்ரிதவிரோதிநிரஸனசுஸ்வபாவனான பகவானுடைய திருவடிகளுக்கு ஒரு கெடுதலும் வாராதபடி நீயன்றோ பாதுகாத்து வைத்து ஆச்ரிதர்களுக்

கெல்லாம் கொடுக்கிறாய். இந்த எல்லையில்லாத மஹோபகாரத்தைப் பற்றியன்றோ அந்தத் திருவடிகளையே தங்களுக்கு ஸர்வஸ்வமாக நம்பியிருக்கிற பெரியோர்கள் தங்களுடைய க்ருதஜ்ஞதைக்கு ஒரு போக்குவீடாக உன்னை ஸர்வதா சிரஸால் தரித்து வணங்கிக் கொண்டாடுகிறார்கள். இதை அறிந்தன்றோ நானும் உன்னையே பரமப்ராப்யமாகப்பற்றி அநுபவிப்பது என்கிறார்.

ஸதாசார்யர்கள் செய்வதற்கு மேலான லோகோபகாரம் உலகத்தில் இல்லை. ஸகலக்ஷேமங்களுக்கும் காரணம் ஸர்வரக்ஷகனான ஸ்ரீபகவானுடைய திருவடிகளை ஆச்ரயிப்பதுதான். வேதத்தை ஒப்புக்கொள்ளாதவர்களும், வேதத்தை ஒப்புக்கொண்டும் கோணலான யுக்திகளால் வேதார்த்தங்களைக் கெடுக்கிறவர்களுமான குமதிகள் சாஸ்திரத்தையும் சாஸ்திரத்தால் ப்ரதிபாதிக்கப்படுகிற பரதேவதையான பகவானையும், சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட மோக்ஷோபாயங்கள் முதலானதுகளையும் இல்லையென்று உண்மை போல்காட்டி அழித்து ஜனங்களை மீளாத ஸம்ஸாரநரகத்திலேயே அழுந்தி நசிக்கும்படி செய்கிறார்கள். ஸதாசார்யர்கள் அப்படிப்பட்ட குமதிகளை ஸமீசீனயுக்திகளால் ஜயித்து வேதமார்க்கத்தையும் வேதப்ரதிபாத்யனான ஸ்ரிய:பதியையும் ஸ்தாபித்து ஜனங்களுக்குத் தத்துவத்தைக் காட்டிக்கொடுத்து பகவானை ஆச்ரயித்து மோக்ஷபர்யந்தமான ஸகலபுருஷார்த்தங்களையும் அடையும்படி செய்கிறார்கள். இந்த மஹோபகாரத்தை அறிந்த பெரியோர்கள் அவர்களை ஸர்வவிதத்தாலும் கொண்டாடி அவர்களையே இங்கு பரமப்ராப்யமாகப்பற்றி அனுபவித்து க்ஷேமத்தை அடைகிறார்கள். (11)

அவ— இப்படி ஸ்ரீ ஆசார்யருடைய ப்ரேமகர்பமான வார்த்தைகளைக் கேட்டு ஸ்ரீபாதுகை திருவுள்ளம் உகந்தருளியிருக்க, ஆச்ரிதர்களுக்கு ஸ்ரீபாதுகானுபவத்தால் உண்டாகும் ஸந்தோஷத்தை ச்லேஷையுள்ள பதங்களால் ஒரு விநோதமான ப்ரச்னரூபமாக தெரிவிக்கிறார் மேல் ச்லோகத்தில்.

கூ௮உ) வஜயா"ஜவ்வ வாஜ"கெ ஜ"ஙாவெ:
ஸவதி விஹ-ஏதிாகஞுகா சுவெயவ ।
கயஶ்வ ஹுரஜயா௺ ஸாவா"கா௺ா°
சுவஜ௺ா"ஸவாஜ"வஜூாத கஞுகா௺ ॥ (கஉ)

(ப-ரை) ஹே பாதுகே - வாராய் பாதுகையே! த்வயைவ - உன்னாலேயே, முராரே: - முரன் என்கிற அஸுரனுக்குச் சத்ருவான பெருமாளுடைய, விபூதி:-இந்த லீலாவிபூதியானது, பதயோரிவ - அவருடைய இரண்டு திருவடிபோல, * அகண்டகா - கண்டகமில்லாததாக (அதாவது முள்ளில்லாததாக, சத்துருக்களில்லாததாக), பவதி-ஆகிறது (அப்படியிருக்கும்போது), பாவுகாநாம் ஹ்ருதயாநி - த்யாநம் முதலியதால் உன்னை அநுபவிக்கிறவர்களுடைய மனதுகள் மட்டும், த்வதநுபவாத் - அந்த உன் அநுபவத்தாலே, கதம் இவ - எப்படித்தான் உபஜாதகண்டகாநி - கண்டகங்கள் (அதாவது மயிர்க்கூச்சல்கள்) உள்ளதாக ஆகிறதுகள்.

(கருத்து) வாராய் ஸ்ரீ பகவானுடைய பாதுகையே! நீ எப்படி ஸ்ரீபகவான் ஸஞ்சரிக்கும்போது அவருடைய திருவடிக்கு கண்டகம் இல்லாமல் ரக்ஷிக்கிறாயோ அப்படியே அவர் ஆச்ரிதவிரோதிகளை த்வம்ஸம் செய்ய பிரவிருத்திக்கும்போதும் அவருடைய இந்த லீலாவிபூதியிலுள்ள கண்டகங்களையும் உன்னுடைய தேஜஸ்ஸினாலேயே போக்கிவிடுகிறாய். அதனால் கண்டகங்களையழித்து ஸௌக்யத்தைக் கொடுப்பதே உன் ஸ்வபாவம் என்று ஏற்படுகிறது. அப்படியிருக்க உன்னுடைய த்யானாராதனங்களால் உன்னை ஸதா மனதில் எண்ணுகிற பக்தர்களுடைய மனதுகளில் மட்டும் எப்படி உன்னுடைய ஸம்பந்தத்தால் கண்டகங்கள் உண்டாகிறதுகள்? இது என்ன உன்னுடைய பரஸ்பர விரோதஸ்வபாவங்கள். (என்று இப்படி கேவலசப்தத்தை மட்டும் கொண்டு பரஸ்பர விரோதம் தோற்றும்படியான ஒரு விநோதக் கேள்வி.) எப்படி பகவானுக்கும் அவனுடைய விபூதியான இந்த உலகத்துக்கும் கண்டகங்களைப்போக்கி ஸௌக்யத்தை

---

* 'கண்டக' என்கிற சப்தத்துக்கு முள், சத்ரு, ஸந்தோஷத்தால் உண்டாகிற மயிர்க்கூச்சல் என்கிற மூன்று அர்த்தங்கள் உண்டு. அந்த மூன்று அர்த்தங்களும் சுலோகத்தில் (பதவிஷயத்தில் முள் என்றும், விபூதிவிஷயத்தில் சத்ரு என்றும், ஹ்ருதயவிஷயத்தில் மயிர்க்கூச்சல் என்றும்) உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறதுகள்.

உண்டுபண்ணுகிறுயோ, அப்படியே உன்னுடைய பக்தர்களுடைய மனதிலுள்ள பாபரூபமான கண்டகங்களைப்போக்கி அதில் உன் அனுபவத்தால் உண்டாகிற ஹர்ஷரூபமான கண்டகங்களை உண்டு பண்ணுகிறுய். அப்படியே நானும் உன்னையனுபவித்து என்னுடைய கெடுதல்களெல்லாம் நீங்கி உள்ளும் புறமும் புளகாங்கிதமாய் உன்னுடைய குணங்களையும் பரமோபகாரத்தையும் நினைத்து ஆநந்தப்படுகிறேன் என்று சொல்லுகிறுரென்று தாத்பர்யம்.

ஸதாசார்யர்களும் அப்படியே பகவானுக்கும் உலகத்துக்கும் விரோதிகளான துஷ்ப்ரக்ருதிகளை ஜயித்து க்ஷேமத்தை உண்டு பண்ணி தங்களுடைய குணங்களால் ஏற்படுகிற போக்யதாதிசயத்தால் தங்களை மனதில் பாவிக்கிற (எண்ணுகிற) ஸாது ஜனங்களுக்கெல்லாம் உள்ளும் புறமும் புளங்காங்கிதமாம்படியான மிகுந்த ஆநந்தத்தைக் கொடுக்கிறுர்கள். (12)

அவ:— இப்படி பாதுகையின் குணங்களையும் உபகாரத்தையும் சொல்லி, மறுபடியும், நிஷேவிதாஙகஂ என்று சொல்லும்படியான அதின் க்ருபையையும் தன் பாக்யத்தையும் கொண்டாடி விண்ணப்பிக்கிறுர் மேல் சுலோகத்தில்.

(கூஅுக) ஜ்ஞாநக்ரியாஹஜந ஸீஉவிஷ்ரவ்ருத்தே
வெவுரெஷிகஸஂதஷவாஷ்தீக்ருதாஜ்ஞணாநாஂ ।
உஸஹஸ உஉாஸி உஶஸஷநவாஷகெகஸ்வஂ
மஜ்ஜெவஹஜவதீ விபிநெவ வஜ்ஜோ: ।(கங)

(பதை) ஹெ உஶஸஷிநவாஷகெ - வாராய் ஆச்ரிதார்த்தமாக உஶ என்கிற அஸுரனைக்கொன்ற பகவானுடைய பாதுகையே, ஸ்வஂ - நீ, ஜ்ஞாந - ஜ்ஞாநயோகமென்ன, க்ரியா - கர்மயோகமென்ன, ஹஜந - பக்தியோகமென்ன, இவைகளுடைய, ஸீஉ - எல்லைகளுக்கு, விஷ்ரு - வெகு தூரத்திலிருக்கிற, வ்ருத்தே: - நடவடிக்கையை உடையவனுயும், தஸ் - அந்த ஜ்ஞாநயோக கர்மயோக பக்தியோகங்களுடைய, ஸவாஷ்தி - ப்ராப்தியை, க்ருதாஂ - செய்கிறவைகளாயிருக்கிற, ஜ்ஞணாநாஂ - (ஶஉஂ - வெளி இந்திரியங்களை அடக்குவது தஉஂ - மனதை அடக்குவது முதலிய) ஆத்மகுணங்களுக்கும், வெ

தேஶிகஸ்ய - வெகுதூரதேசத்திலிருப்பவனாயுமிருக்கிற(அதாவது ஆத்மகுணங்கள் ஸ்வல்பமும் இல்லாதவனாக இருக்கிற), மம - என்னுடைய, ஶிரஸி - சிரஸ்ஸிலே, ஜடஸ்ய - முடவனுடைய, ஶிரஸி - தலையிலே, கங்கேவ - கங்கைபோல, விதிவஶேநைவ - ஜந்மாந்தரபாக்யவசத்தாலே மட்டும், பதிதாஸி - விழுந்தவளாக ஆகிறாய், அஹோ! - இது என்ன ஆச்சர்யம்!

(கருத்து) ஆச்ரிதர்களுடைய விரோதிகளைப்போக்கி அவர்களுக்கு அனுக்ரஹத்தையே பண்ணும் ஸ்வபாவனாய் மதுஸூதனன் என்று திருநாமம் பூண்ட பகவானுடைய பாதுகையே! நீயும் அப்படிப்பட்ட ஸ்வபாவமுள்ளவளன்றோ. என் விஷயத்தில் உன்னுடைய நிர்ஹேதுகமான க்ருபையை என்னவென்று சொல்வேன். பரம்பரையாகவோ ஸாக்ஷாத்தாகவோ மோக்ஷோபாயங்களான கர்மயோக, ஜ்ஞாநயோக, பக்தியோகங்களை வெகுகாலம் சிரமப்பட்டு பூர்த்திசெய்து அதனால் உன்னை அடையவேணும். என்னுடைய நடவடிக்கைகளைப் பார்த்தாலே நான் அந்த மார்க்கங்களுக்கு வெகு தூரத்திலிருக்கப்பட்டவன் என்று நன்றாய் ஏற்படும். அப்படி அந்த மார்க்கங்களில் இதுவரையில் இழியாவிட்டாலும் இனியாவது அதில் பிரவிருத்திக்கத்தகுந்த சமம் தமம் முதலான ஆத்ம குணங்களாவது என்னிடம் இருக்காவென்று பார்த்தால் அவைகளின் லேசம்கூட என்னிடமில்லை. அப்படி உன்னையடைவதற்கு வேண்டிய உபாயங்களோ அந்த உபாயங்களுக்கு யோக்யதையை உண்டுபண்ணும்படியான ஆத்மகுணங்களோ என்னிடம் ஈஷத்தும் இல்லாமலிருக்கும்போதும் வெகுதூரம் கால்நடை நடந்து அடையவேண்டிய கங்கையானது முடவன் தலையில் இருந்தவிடத்திலேயே நிர்ஹேதுகமாக தானாக வந்துவிழுந்து அவனைப்புனிதமாக்குமாப்போல நீ ஸர்வப்ரகாரத்தாலும் யோக்யதையற்ற என்தலையில் நிர்ஹேதுகமாக தானே வந்துசேர்ந்து என்னையும் ஒரு பொருளாக்கினாயே! எனக்கு பரமபோக்யமானாயே! இது என்ன ஆச்சரியம்! என்ன பாக்கியம்! என்ன நிர்வ்யாஜ க்ருபை! என்று மோஹிக்கிறார்.

அநாதி பாபிகளாய் பரமஅகிஞ்சனர்களாய் பகவத்ப்ராப்திக்கு ஒரு உபாயத்துக்கும் யோக்யதையற்ற சேதனர்கள் விஷயத்தில் பகவான் திடீரென்று இன்னது என்று நிரூபிக்கமுடியாத

ஏதோ ஒரு ஜன்மாந்தர ஸுக்ருதத்தை முன்னிட்டு நிர்வ்யாஜம் என்றே சொல்லும்படி ஒரு ஸதாசார்யஸம்பந்தத்தை ஏற்படுத்தி ஸம்ஸாரத்திலிருந்து ஆச்சர்யமாய் காப்பாற்றிவிடுகிறான். கேவலம் தெய்வவசம், ஏதோ பாக்கியம் என்று சொல்லலாமே ஒழிய மஹாஸுக்ருத பலமான அப்படிப்பட்ட ஆசார்ய ஸம்பந்தத்துக்கு நம்மால் விமர்சித்து ஒரு காரணத்தைக் கண்டுபிடிக்க முடியாது. இதைத்தான் நிர்ஹேதுகம் என்கிறது. (13)

அவ— இப்படி பாதுகையினுடைய நிர்ஹேதுக க்ருபையை புகழ்ந்துகொண்டு தனக்கு பரம பாக்யவசத்தால் ஏற்பட்ட அதின் லாபத்தைக் கொண்டாடவே, அந்த லாபத்தால் உனக்கு வந்தது என்ன என்று கேட்க— பதில் சொல்லுகிறார் மேல் சுலோகத்தால்.

(௬௨௪) ரஜஸ்ஸ்வல்யம் யதிதம் மணிபாதுகே

பாதாரவிந்தயுகளம் பவதீஸமேதம் ।

ஸாதூபவாஸித விலோசந பாரணார்ஹம்

க்ஷீரம் ததேதமிஹ ரங்கபுரே ஸமேதம் ॥ (௧௪)

(பதவுரை) ஹே மணிபாதுகே - வாராய் ரத்நகசிதமாக உஜ்வலையாய் விளங்காநிற்கிற பாதுகையே! ஸாதூநாம் - ஸத்புருஷர்களுடைய, உபவாஸித - பட்டினியாயிருக்கப்பட்ட அதாவது இந்த பூமியில் அநுபவிக்கத்தகுந்த நல்ல விஷயம் அகப்படாத்தாலே கெட்ட விஷயங்களில் செல்லாமல் ஒன்றையுமே அநுபவியாமல் பட்டிணிபோல் இருந்து நல்ல விஷயத்துக்கு ஆவல்பட்டுக்கொண்டிருக்கிற, விலோசந-கண்களுக்கு, பாரணார்ஹம் - பட்டிணிக்குப்பின் புஜிக்கத்தகுந்த நல்ல ஆகாரமாக இருக்கிற அதாவது தன்னுடைய அழகினாலேயே ஸாதுக்களுடையகண்களுக்கு அத்யாகர்ஷகமாகஇருக்கிற, இதம் - இந்த, பவதீஸமேதம் - (அதிரமணீயமான) உன்னோடு சேர்ந்திருக்கிற, யத் - யாதொரு, பாதாரவிந்தயுகளம் - திருவடி மலர்களுடைய இரட்டையோ, தத் - அப்பேர்ப்பட்ட அதாவது ஸ்வயமே அதிஸுந்தரமாக இருப்பதோடு கூட மிகவும் கண்களுக்கு ரமணீயமாய் உன்னோடு சேர்ந்திருக்கிற, ஸுதத்-

இந்த இரண்டு திருவடிமலர்களும், இஹ - இந்த ஸ்ரீரங்கத்தில், ஸகண்டரஸயா ஸமேதம் - சர்க்கரையோடு சேர்ந்த, க்ஷீரம் - பால், அதாவது ஸ்வயம் மதுரமான பாலானது சர்க்கரையோடு சேர்ந்தாப்போல் மிகவும் போக்யதமமாக இருக்கிறது என்று பொருள்.

(கருத்து-) வாராய் திவ்யரத்ன பூஷிதையாய் விளங்கா நிற்கிற பகவத்பாதுகையே! உன்னுடைய பரமலாபத்தால் எனக்கு விளைந்தது என் என்கிறாயோ? ஆத்மாவை நசிப்பிக்கும்படியான துர்விஷயங்களை நிறைந்த இந்த ஸம்ஸாரத்தில் நிவிருத்தி மார்க்கபரர்களான ஸாது ஜனங்கள் தங்களுடைய கண்களுக்கு ஸத்விஷயம் அகப்படுவது பரம துர்லபமாக இருப்பதால் அவைகளை விஷயாந்தரங்களிலும் போகவொட்டாமல் அடியோடு தடுத்துவிடுகிறார்கள். இந்திரியங்களுக்கு விஷயங்களையே க்ரஹிப்பது ஸ்வபாவமானதால் அவைகள் பட்டிணியாகவே கிடந்து பாரணைக்குத் தபிக்கிறதுகள். அப்படி உபவாஸம் இருக்கப்பட்ட கண்களுக்கு உன்னோடு சேர்ந்த பகவானுடைய திவ்ய திருவடி மலர்கள் இந்தபிரகிருதிக்குள்ளேயே ஸ்ரீவைகுண்ட ஸத்ருசமான இந்த ஸ்ரீரங்கத்தில் அகப்பட்டால் ஸர்வச்ரமஹரமாய் தேஜோ விருத்திகரமாய் பரமபோக்யமுமான கல்கண்டு கலந்த பால்போல் அல்லவோ? ஆகையால் நானும் என்னுடைய இந்திரியங்களுடைய விடாயெல்லாம் தீரும்படி பகவானுடைய இரண்டுதிருவடி மலர்களோடு சேர்ந்த உன்னை என் கண்களாரப் புஜித்துக்களிக்கின்றேன். இப்படி இந்த பிரகிருதிக்குள்ளேயே எனக்கு ஸம்ஸார தாபமெல்லாம் தீரும்படியான பரமபோகம் இந்த ஸ்ரீரங்கத்தில் கிடைக்கும்போது பரமபதமும் வேண்டுமோ என்கிறார்.

இந்த ப்ரகிருதியில் இந்திரியங்களை விஷயாந்தரங்களில் போகவொட்டாமல் அடக்கிக்கொண்டிருக்கிற ஸாதுக்களுடைய கண்களுக்கு ஆத்மக்ஷேமகரமான பரமதிருப்தி என்னவென்றால், சுபாச்ரயமான (மனதால் எண்ணத்தகுந்ததும் பாபத்தைப் போக்கத்தகுந்ததுமான)பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தினுடையவும்,பரமபாகவதோத்தமர்களான ஸதாசார்யர்களுடையவும் ஸேவைதான். இரண்டும் தனித்தனியே போக்யமும் பாபஹரமுமானாலும் ஸ்ரீபகவானுடைய ஸேவையில் ஸதாசார்யர்கள் ஈடுபடும்போது அந்த சேர்த்தியில் ஸேவிப்பதும் இருவர்களையும்

சேர்த்து த்யானிப்பதும் போக்யதமமும்ஹிததமமுமாகும். இது அவிச்சின்னமாகக் கிடைத்தால் பரமபதமும் வேண்டுவதில்லை. "ஹமவஅநு நா ஜூாஹ்ம மாரூாவநு நவசுவ-நகஜ" (ஆசார்ய ஸேவையை முன்னிட்டுக்கொண்டு பகவானை ஸேவிப்பது மிகவும் போக்யமானது) என்கிற பிரமாணத்தை இங்கு அநுஸந்திப்பது.

அவ— ஆகையாலன்றோ அப்படிப்பட்ட உங்களுடைய போக்யதாதிசயத்தில் ஈடுபட்டு அந்த பக்தி பரீவாஹமாக ஸாதுக்கள் உங்களை ஸத்கர்மங்களால் ஆராதித்து அனுபவிக்கிறார்கள் என்கிறார் மேல்சுலோகத்தில்.

(கூஅரு) காஉாதிஜொஷாஹிதம் கூவநநூ்காஉாஃ
கஉ-ர் த்ரயொஉஶவிய்ம வரிஶீலயஞஃ ।
வாஉாவநி கூவநாஷஜ விஶெஷஉ்யூஶ்
ஜெகாஞிநஃ வரிவஸஞி வஉம் உாஶாமெஃ ॥

(ப-ரை) ஹெ வாஉாவநி - வாராய் பகவானுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! கூவநநூ்காஉாஃ- உன்னைத்தவிர வேறு ஒரு பலத்தில் அபேக்ஷையில்லாதவர்களான, ஜெகாஞிநஃ - உன்னையே உபாயமாக நம்பியிருக்கிற பரமைகாந்திகள், த்ரயொஉஶவிய்ம - பதிமூன்று ப்ரகாரங்களோடு சேர்ந்ததாகவும், காஉாதி - பலாபேக்ஷை முதலான்வைகளான (அதாவது பலத்தை அபேக்ஷித்துச்செய்வது, கர்மா என்னுடையது, எனக்காகச்செய்கிறேன் என்று எண்ணுவது, கர்மாவை நானே செய்கிறேன் என்று எண்ணுவது), ஜொஷ- குற்றங்களாலே, ரஹிதம் - விடுபட்டதாகவும், கஉ-ர்-நித்யம் நைமித்திகம் காம்யம் என்று மூவகையான ஸத்கர்மங்களை, வரிஶீலயஞஃ - அப்யாஸம் பண்ணுகிறவர்களாய்க்கொண்டு, கூவக- உன்னுடைய, ஊநாஷஜ - ஸம்பந்தத்தினாலே, விஶெஷ- விசேஷமாக அதாவது ஆதராதிசயத்தோடு, உ்யூஶ் - பார்க்கத்தகுந்ததான (நினைக்கத்தகுந்ததுமான என்றும் தாத்பர்யம்) உாஶாமெஃ-(ஆச்ரித வாத்ஸல்யத்தால்) முரன் என்கிற அஸுரனுக்கு சத்ருவான பெருமாளுடைய, வஉம் - திருவடியைக் வரிவஸஞி - ஆராதிக்கிறார்கள்,

குறிப்பு— கர்மங்களில் பதிமூன்று ப்ரகாரங்கள் சேர்ந்திருப்பதாவது:— யதேச்சமாய் தான் நினைத்தபடி செய்து திரியாமல் சாஸ்திரத்திற்கு உட்பட்டுத் தன்னைக்கட்டுப்படுத்திக் கொள்வதற்கு தபஸ் என்றுபெயர். அது மூன்று வகையானது— சரீரத்தால் செய்யும் தபஸ், வாக்கால் செய்யும் தபஸ், மனதால் செய்யும் தபஸ் என்று. அவைகளாவன:— (சாரீரமானவையாவன—) 1. பகவான்,பிராமணர்கள்,ஆசார்யர்கள் மற்ற ஜ்ஞானிகள் இவர்களை பூஜிப்பது; 2. ஸ்நாநம் சௌசம் முதலியவைகளால் சரீரத்தைச் சுத்தமாக வைத்துக்கொள்வது; 3. எண்ணத்துக்கும் வார்த்தைக்கும் ஒத்தபடி வெளிவியாபாரங்களைச் செய்வது; 4. பிறர்களுக்கு ஒரு தொந்தரவும் செய்யாமலிருப்பது; 5. பரஸ்திரீகளை ஆசையோடு பார்ப்பது, அவர்களைத்தொடுவது முதலியது இல்லாமலிருப்பது; (வாசிகமானவையாவன) 6. அயலாருக்கு க்ஷேமத்தைக் கொடுக்கும்படியான வார்த்தைகளையே சொல்வது; 7.அயலாருக்குத் தொந்தரவை விளைவிக்காததான உண்மையைப் பேசுவது; 8. வேதத்தை உருப்போடுவது; (மாநஸமானவையாவன)9. கோபம்அதிருப்தி முதலானது இல்லாமல் எப்போதும் ஸந்துஷ்டமானமனதோடுகூடி இருப்பது; 10. எப்போதும் தெய்வத்தைப்பற்றியும் ஆத்மாவைப்பற்றியும் நினைத்துக்கொண்டிருப்பது; 11. மனதை இதர விஷயங்களில் போகாமல் அடக்கி நினைக்கவேண்டிய ஆத்மாவை எப்போதும் நினைப்பது; 12. ஆத்மாவைத்தவிர மற்ற விஷயங்களை நினையாமை; 13. எல்லாருக்கும் க்ஷேமத்தையே எண்ணுவது. இப்படி 13 விதமான தபஸ்ஸுகளும் ஸாத்விகம் ராஜஸம், தாமஸம் என்று அவரவர்களுடைய ஸ்வபாவகுண பேதத்தால் மூன்றுவகையாகவுமிருக்கும். ச்ரத்தையோடும் சாஸ்திரப்படிக்கு நன்றாகவும் பலாபேக்ஷயில்லாமலும் செய்கிறவர்களுடைய தபஸ்ஸு ஸாத்விகம்என்றுசொல்லப்படுகிறது.அது விசேஷமான தத்வஜ்ஞாநத்தையே ஏற்படுத்தும். அயலாரால் மனதால் பிரியமாக எண்ணப்படுவது, வாக்கால் கொண்டாடப்படுவது, சரீரத்தால் நமஸ்கரிக்கப்படுவது சுச்ரூஷைகள் செய்யப்படுவதுமுதலானவைகளையும் தன் கார்யஸித்தியையும் உத்தேசித்துச் செய்யும் தபஸ் ராஜஸம் எனப்படும். நல்லது பொல்லாததை யோசியாமலும் தன் சக்தியைக் கவனிக்காமலும் பிடிவாதத்தினலும் அயலாருக்குத் தீங்கு விளைவிப்பதற்காகவும் செய்யப்படும் தபஸ் தாமஸம் எனப்படும். இவை

இரண்டும் (ராஜஸம் தாமஸம்) தத்வஜ்ஞாநத்தை உண்டுபண்ணவே பண்ணுது. ஆகையால் ஸாத்விகமான தபஸ்ஸோடு சேர்ந்த ஸத்கர்மங்கள்தான் பகவானுக்குப் பிரீதிகரமாய் ஆத்மக்ஷேமத்துக்குக் காரணமாகும். பரமைகாந்திகளுடைய ஸத்கர்மங்களே அப்படிப்பட்டவைகள்.

(கருத்து-) வாராய் பகவானுடைய திருவடியைக் காப்பாற்றுகிறவளே! அப்படி பரமபோக்யமான பகவானுடைய திருவடி மலர்களோடு சேர்ந்த உன்னை பரிபூர்ணமாக அனுபவித்து அந்த பரமபக்தியின் பரீவாஹமாகவன்றோ உன்னையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும்பற்றின பரம ஸத்வஸ்தர்களான பரமைகாந்திகள் பல, ஸங்க, கர்த்ருத்வத்யாக பூர்வகமாக இருக்கும்படிக்கும் பதி மூன்று விதமான மனோவாக்காய தபஸ்ஸுக்களோடு கூடினதாக இருக்கும்படிக்கும் நித்யம் (வர்ணாச்ரமங்களைப்பற்றி ஆயுஸ்ஸு முழுவதும் நித்யமாகச் செய்யவேண்டியது) நைமித்திகம் (சிராத்தம் முதலியதுபோல் ஒரு காரணத்தைப்பற்றி ஒவ்வொரு காலங்களில் செய்யத்தகுந்தது) காம்யம் (சாஸ்திரவிருத்தமல்லாத ஒவ்வொரு பலன்களுக்காக ஏற்பட்டது) என்று பகவதாராதன ரூபமான மூன்றுவகையான ஸத்கர்மங்களை நித்யமாக அப்யஸித்துக் கொண்டு உன்னுடைய ஸம்பந்தத்தால் விசேஷ ஆதராதிசயத்தோடு பாவிக்கத்தகுந்ததாயிருக்கிற அந்த ஆச்ரிதவத்ஸலனான பகவானுடைய திருவடிகளில் ஸர்வதா கைங்கர்யங்களைப்பண்ணிக் கொண்டு ரமிக்கிறார்கள். அப்படியே நானும் உங்களுடையசேர்த்தியில் ஈடுபட்டு உங்களுக்கு பரிசர்யைகளைப் பண்ணிக்கொண்டு பரிபூர்ணனாகிறேன் — என்கிறார்.

ஸ்ரீபகவானிடத்திலும், ஸதாசார்யர்களிடத்திலும் அநந்யோபாயர்களாகவும், அநந்யப்ரயோஜனர்களாகவும் ஈடுபடுகிறவர்கள் ஸத்வசுத்தியை அடைந்து நிர்தோஷமாகவும் ஸாத்விகதபஸ்ஸோடு கூடினதாகவும் இருக்கும்படி மேல்மேலும் ஸத்கர்மங்களை அப்யஸித்துக்கொண்டு பகவானுக்கு ஸ்ரீஆசார்யாளோடுள்ள ஸம்பந்தத்தால் அவனிடத்தில் விசேஷப்ரீதியையடைந்து அந்த பரமபக்தி பரீவாஹமாக அவர்களுடைய சேர்த்தியில் ஸர்வவித பரிசர்யைகளையும் பண்ணிக்கொண்டு முக்தாநந்தத்தை இவ்விடத்திலேயே அடைகிறார்கள். (15)

அவ — இப்படி இந்த கர்மபூமியில் ஸ்ரீரங்கம் என்கிற திவ்ய தேசத்தில் ஸமஸ்த ஜனங்களுடைய கண்களுக்கும் விஷயமாய் அவர்களுக்கு ஆராத்யமுமாம்படி அர்ச்சாரூபியான பகவானோடு எழுந்தருளியிருக்கிற ஶைலப்யத்தின் பெருமையானது எப்படிப்பட்டது என்பதையும் அது எவ்வளவு கிருபாகார்யம் என்பதையும் ஸ்ரீபாதுகையினிடத்தில் விண்ணப்பம் செய்கிறார் மேல் சுலோகத்தில்.

(கூஅகூ) ஶிரஸி ஸ்திதா ஸவனபாஜாமய வா ஶ்ருதீநாம்
தநுஜாராதிசரணாவநி வைபவம் தே।
ஸுலபாதுரா ஸமிதி யதி ஸ்திதம் ததஸ்மாக
ஶைலஷ்வப்னத் தஷிதம் தவ ஸாவஜுஷாம்॥

(டீகை) ஹே அம்ப – வாராய் என் தாயே! ஜகராஜ சரணாவநி – இந்த லீலாவிபூதிக்கெல்லாம் எஜமானனாய் ஸர்வேச்வரனை ஸ்ரீபகவானுடைய திருவடியைக் காப்பாற்றுகிறவளே! (த்வம் – நீ), ஸவனபாஜாம் – யஜ்ஞங்களை புஜிக்கிறவர்களான தேவர்களுடைய, அதாவது இந்த பூமியிலுள்ளவர்களால் யாகங்கள் முதலிய ஸத்கர்மங்களால் (தத்வஸ்துக்களால் பகவத்சரீரரூபமாகவும், அல்லாதவர்களால் நேராகவும்) ஆராதிக்கப்படுகிற லோகபாலர்களான தேவதைகளுடைய, ஶிரஸி – சிரஸிலே, ஸ்திதா – ஸ்திதியை (இருப்பை) உடையவள், அதாவது அப்படிப்பட்ட தேவதைகளாலறியப்பட்டு தலைகளால் தரித்து வணங்கி ஆராதிக்கத்தகுந்தவள், அதவா – இல்லாமற்போனால் அதாவது அதற்கும் மேலாக, ஶ்ருதீநாம் – வேதங்களுடைய, ஶிரஸி – தலையிலே, அதாவது சில்லரையான பலன்களையும் அவற்றுக்கேற்பட்ட கர்மங்களையும்மட்டும் ப்ரதிபாதிக்கிறதும் கீழ்ச்சொன்ன தேவதைகள் விஷயமானதுமான கர்ம காண்டத்தைப்போலன்றிக்கே வேதங்களின் உத்தமபாகமாய் அதிஸூக்ஷ்மமான தத்வஹிதபுருஷார்த்தங்களையே வெளிப்படுத்துகிறதான உபநிஷத்பாகங்களிலே, ஸ்திதா – ஸ்திதியை உடைத்தானவள், அதாவது ஸர்வஜகத்தினுடையவும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாவாய் மோக்ஷப்ரதனை ஸர்வேசுவர

ளோடு எப்போதும் சேர்ந்தவளாய் உண்மையான வேதாந்த ஜ்ஞானத்தினாலே அறியத்தகுந்தவள், அல்லது (ஊயவா என்று அனுஷங்கித்துக்கொள்கிறது-இல்லாவிடில்), தெ-உன்னுடைய, வெஹவ-உள்ளபடியான பூர்ணப்ரபாவமானது, 1 தஃ-அப்படிப்பட்டது, அதாவது புத்திக்கும் வாக்குக்கும் எட்டாமல் அந்த வேதங்கள்தானே எதை முழுவதும் கண்டுபிடிக்கமுடியாமல் திரும்பிவிட்டதாகச் சொல்கிறதோ அப்படிப்பட்டதாய் நித்யர்களுடையவும் முக்தர்களுடையவும், ஜ்ஞானத்துக்கு மட்டும் முடிவில்லாததாக கோசரமானது, 2 ததஃ - பிறகு, அதாவது இவ்வளவு பெருமையிருந்தும், தஃ - அப்படி அநிர்வசநீயமான, உஷ - இந்த, அதாவது இவ்விடம் காணப்படுகிற, தவ - உன்னுடைய, ஸளஷ்யு - எளிமையானது, அதாவது மிகுந்த உத்கர்ஷம் இருக்கும்போதும் இதரர்களால் ஸுலபமாய் ஆச்ரயித்து அனுபவிக்கும்படியான எளிதாயிருக்கும் தன்மையானது, ஊஸ்மாதூஶாவி யஷி - பரம அகிஞ்சனர்களான எங்கள் விஷயத்திலும் ஏற்பட்டால்தானே, ஸாவஜனஷ-எல்லா ஜீவராசிகளாலும் அறியப்பட்டதாக, ப்ரயிதம்-பிரஸித்தி பெற்றதாக, ஸ்யாஃ - ஆகும்.

(கருத்து-) வாராய் ஸர்வேசுவரனை ஸ்ரீரங்கநாதனுடைய திருவடியைக் காப்பாற்றுகிறவளான என் அம்மா பாதுகையே! நானும் மற்ற ஸகல ஜீவராசிகளும் இங்கு கண்டு அனுபவிக்கிற உன்னுடைய ஸௌலப்யத்தை என்னவென்று சொல்வேன்.

குறிப்பு— 1"தஃ தெ வெஹவ" என்பது குறையான வாக்யம். தேவதைகளுடைய தலையில் இருப்பு, வேதத்தின் தலையில் இருப்பு என்று மேல் மேலான பர்வாவை சொல்லிக்கொண்டுபோய் எல்லாவற்றிலும் உயர்ந்ததான பரம வ்யோமத்தில் இருப்பை வர்ணிக்க மாட்டாமல் எல்லையில்லாததாக மனதால் மட்டும் நினைத்து இப்படிச் சொன்னது.

2 குறிப்பு— இப்படி அதின் பெருமையை மேல்மேலும்நினைத்துப் போய் பரமஉன்னதமான பதவியிலிருந்து அதின் ஸௌலப்யம் முதலிய குணங்கள் லோகவிதிதமான பிரகாரத்தைப் படிப்படியாக நினைத்துக் கொண்டு வந்து கடைசியில் ஸௌலப்யத்தின் பரமகாஷ்டையைச் சொல்லுகிறது,

உனக்கு ஸொந்தமான குணங்களின் உத்கர்ஷத்தோடும் ஸ்ரீபக வானுடைய திருவடியோடு அபின்னையாய்ச் சேர்ந்திருப்பதாகிய ஆச்ரயோத்கர்ஷத்தோடும் மற்றவர்களுக்கு மிகவும் எளிதாக அனுபவிக்கலாம்படியான உன்னுடைய ஸௌலப்ய குணத்தை மற்ற குணங்களோடு எல்லையில்லாததாக பரமபதத்தில் நித்யர் களும் முக்தர்களும் கண்டு அங்கு அனுபவிக்கிறார்கள். அதோடு நின்றால் அது லோகோஜ்ஜீவனத்துக்குக் காரணமாகாதென்று பார்த்து பிறகு வேதாந்தத்துக்கு விஷயமானாய். ஸம்ஸாரிகள் வேதாந்தத்தைக்கொண்டு உன்னை ஸ்வல்பம் அறிந்தார்கள். அதைக்கொண்டுமட்டும் சேதனர்கள் உஜ்ஜீவிக்க முடியவில்லை. பிறகு பகவதவதாரங்களோடு சேர்ந்து பிர்மாதி தேவதைகளுக்கு ப்ரத்யக்ஷமாய் அவர்களால் ஆராதிக்கப்பட்டு அவர்களுக்கு க்ஷேமத் தைக்கொடுத்தாய். அதனால் லாபத்தையடைந்தவர்களும் ரொம்ப ஸ்வல்பர்களே. உலகமெல்லாம் உண்டாலும் அடங்காத பசியை யுடைய உன் தயைக்கு அது போதாமல் அந்த ஆதிமூர்த்தியின் அபரரூபமான இந்த அர்ச்சாவதாரத்தோடு நீயும் கூடவந்து இந்த ஸம்ஸார மண்டலத்தின் நடுமத்தியில் ஸ்ரீரங்கவிமானத் தில் சாசுவதமாகக் குடிகொண்டு முன் கோஸலஜநபதத்தில் த்ரு ணபர்யந்தமான ஜீவராசிகளை உன் கருணைக்கு விஷயமாக்கினைப் போல் பிர்மாதிகளுக்கும் எட்டாத நீ எங்களைப்போலொத்த பரம அகிஞ்சனர்களுக்கெல்லாம் கண்களுக்கும் விஷயமாய் எங் கள் சிரஸ்ஸு³களிலும் எழுந்தருளியிருந்து எங்களைப் பாவன மாக்கி எங்களுடைய அத்யல்பமான ஆராதனங்களையும் திருவுள் ளம் பற்றுகிறாயே. உன்னுடைய ஸௌலப்யம் "எத்திறம்". நீ இப்படிச் செய்து உன்னுடைய கிருபையும் ஸௌலப்யமும் உலகத்தில் பிரஸித்தமாகாவிட்டால் ஜீவராசிகள் கடைத்தேறுவ தற்கு உபாயம் என். இந்த உன்னுடைய ஸௌலப்ய குணத்தில் ஆழ்ந்தேன் அடியேன் என்கிறார் என்று தாத்பர்யம்.

ஸ்ரீஆழ்வார் முதலிய நித்யஸூரிகளுடைய அவதாரமான ஸ்தாசார்யர்கள் தயாப்ரதானர்கள். பரமபதத்தில் அவர்களுடைய தயைக்கு போக்கு வீடில்லாமலிருப்பதைப்பற்றியும், அது லோகோஜ்ஜீவனத்துக்குக் காரணமாகாமலிருப்பதைப்பற்றியும், அவர்கள் பகவானுடைய விபவாவதார காலங்களிலும், அர்ச்சாவ தாரங்களிலும் ஸர்வதா வந்து அவதரித்து த்ரிகரணங்களாலும்

எப்போதும் பகவானோடு சேர்ந்தவர்களாக இருந்துகொண்டு ஸ்ரீரங்காதி திவ்யதேசங்களில் ஸர்வஜனஸுலபர்களாய், ஸர்வபூத ஸுஹ்ருத்துக்களாய் தயாபரதந்த்ரர்களாய் லோகோஜ்ஜீவனத்தின் பொருட்டு * விபவரூபிகளாகவும் அர்ச்சாரூபிகளாகவும் காத்திருக்கிறார்கள். இப்படி பிரஸித்தர்களாக அவர்கள் காத்திருக்காவிடில் லோகோஜ்ஜீவனத்துக்கு வழியே இல்லாமல்போம். இப்படிப்பட்ட அவர்களுடைய தயைக்கும் ஸௌலப்யத்துக்கும் ஓர் எல்லை இல்லை. அவர்களுடைய பெருமையானது தேவதைகளாலும் வேதாந்தத்தினாலும் கொண்டாடப்படுகிறது. (16)

அவ— இவ்வளவு மட்டுமோ உன்னுடைய ஸௌலப்யம். உன்னுடைய ப்ரத்யக்ஷமும் வேணுமோ ? ஸ்வப்நத்தில் உன்னை ஸாக்ஷாத்கரித்தாலே போதாதோ ஒருவன் க்ஷேமத்தையடைவதற்கு என்கிறார் மேல் சுலோகத்தில்.

(கூஅஎ) ஸ்வப்நேऽபி சேத் த்வமஸி மூர்த்நி ஸந்நிவிஷ்டா
நம்ரஸ்ய மே நரகமர்த்தந பாதரக்ஷே ।
ஸ்தானே தபோபிரிஹ தேவி யதீஸ்வராணாம்
ஸம்ஜ்ஞா பவத்யுபநிஷத்ஸு தாத்ருஸாநாம் ॥

(ப-ரை) ஹே தேவி நரகமர்த்தநபாதரக்ஷே - ஆச்ரித ஸம்ரக்ஷணார்த்தமாக நரகாஸுரனைக்கொன்றபகவானுடைய வாராய் ஆச்ரிதவத்ஸலையாய் விளங்காநிற்கிற பாதுகையே! நம்ரஸ்ய - வணங்கியிருக்கிற, அதாவது உன் விஷயத்திலுள்ள அத்யந்த ப்ரேமையாலும் பாரதந்திரியத்தாலும் வணங்கியிருக்கிற, மே - என்னுடைய, மூர்த்நி - தலையிலே, ஸ்வப்நேऽபி- ஸ்வப்நத்திலும், இது ஸ்வப்நம்போலொத்த த்யானத்தில் மானஸ ஸாக்ஷாத்காரத்திற்கும் உபலக்ஷணம், த்வம்-நீ, ஸந்நிவிஷ்டா-நன்றாக ப்ரதிஷ்டிதமாக (அதாவது நம்மை ஆச்ரயித்தவன் இவன் என்று கிருபையினால் அனுக்ரஹார்த்தம் நன்றாய் எழுந்தருளி), அஸி சேத்-இருப்பாயேயானால், (அதாவது நீ என் தலையில் கிருபையுடன் எழுந்தருளியிருப்பதாக நான் ஸ்வப்நம்

* விபவரூபிகள் இப்போதுள்ள நம் ஸாக்ஷாத் ஆசார்யர்கள். கோயில்களில் அர்ச்சாரூபிகளாக இருப்பவர்கள் ஸ்ரீ ஆழ்வார் முதலிய நம் பூர்வாசார்யர்கள்.

கண்டாலும், அல்லது அப்படியே உன்னை ¹த்யானத்திலும் ஸ்வ ப்நதுல்யமான மானஸஸாக்ஷாத்காரத்தில் கண்டாலும்) ததா - அப்பொழுது, அதாவது அந்த ஸ்வப்நத்யாநாவஸ்தைகளில், ஏ தத் - இந்த உன்னுடைய மானஸஸாக்ஷாத்காரமானது, உப - பரமமங்களஸூசகமாய் ஆத்மக்ஷேமகரமானது என்கிற இந்த விஷயத்தில், ஸாதுே - யுக்தம், அதாவது அப்படி பலப்ரதம் என்பதில் ஸந்தேஹமில்லை, யதஃ - யாதொரு காரணத்தாலே அப்படிப்பட்டது என்றால், ஸந்தஃ - பெரியோர்கள், அதாவது மனு பராசராதிகளான சாஸ்திரஜ்ஞர்களும், அப்படியே அனுஷ்டாதாக்களும் ! உலகத்துக்கு சாஸ்திரப்ரவர்த்தகர்களும் ப்ரமாணபூதர்களுமான பெரியோர்கள், தவே - உனக்கு நாதனாய் உன்னை விட்டுப்பிரியாதவனான அந்த பகவானையும், ஸமாயள - பக்தியோகம் என்று மோக்ஷோபாயமாக சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட அந்த த்யானத்திலே, தாத்ருமு - அப்பேர்ப் பட்ட அதாவது ஸ்வப்நதுல்யமான, வை - நினைவினால், மஹ்யம் - அறியத்தகுந்தவனாகத்தானே, விதுஃ - அறிகிறார்கள், அதாவது அப்படி த்யானத்திலும் ஸ்வப்நதுல்யமான மானஸ ஸாக்ஷாத்காரத்தாலேதானே பகவானைக்கண்டு பாபரூபமான எல்லா அசுபங்களையும் கழித்து ஆத்மக்ஷேமத்தை அடைகிறார் கள். பகவான் அப்படி தன்னுடைய மானஸதர்சனத்தாலே பாபங்களைப் போக்கி பரம ச்ரேயஸ்ஸைக் கொடுக்கிறான் என் றால், அவனோடு ஸஹதர்மசாரிணியான நீயும் அப்படிச்செய்யத் தக்கவள்தானே என்று தாத்பர்யம்.

குறிப்பு— (1) மந்த்ரோபாஸநங்கள் பண்ணுகிறவர்களுக்கு மந்த்ரஸித்தியை ஸூசிப்பிக்கக்கூடிய ஸ்வப்நதர்சநங்களைச் சொல்லுகிறவிடத்தில்

தீவம், மவம், தயாயாநம், ஸ்ரீவ்ருக்ஷம் வாதமகாம் தயா ।
சக்ஷோரா தேவஸாமெஜ்ரமஹெஸவெவதிநிதிஷேஸக ।
உஜ்ஸிஷிம் வஷமேஉவீம் ............................ ॥

என்று பாதுகையை சுபஸூசகமும் ஸித்திஸூசகமுமான ஸ்வப்நதர்சனங்களில் ஒன்றாக எடுத்திருக்கிறது.

(2) வேதத்தில் பகவானை உயர்ந்த மாத்துத் தங்கம்போல் நிறமுடையவனென்றும் ஸ்வப்நஸத்ருசமான நினைவுடைய த்யானத்தால்மட்டும் அறியத்தகுந்தவன் என்றும் ஒரு இடத்தில் சொல்லியிருக்கிறது.

(கருத்து-) என் அம்மா! பகவானைப்போல் ஆச்ரிதாள் விஷயத்தில் மிகுந்த வாத்ஸல்யமுடையவளே! அவர்களுக்கு உன்னையடைவதற்குள்ள விரோதிகளையெல்லாம் போக்கி க்ஷேமத்தைக்கொடுக்கிறவளே! அப்படிச்செய்து ஸந்தோஷத்தால் விளங்கா நிற்கிறவளே! நான் உனக்கு அத்யந்த பாதந்த்ரன், உன்னைத் தவிர அநந்யோபாயன், பரம அகிஞ்சனன், உன்னுடைய ப்ராப்தியையே வேண்டினவன் என்கிற அத்யவஸாயத்தோடு நான் உன்னைத் தலைகுனிந்து வணங்கும்போது நீ என் விஷயத்தில் ப்ரஸன்னையாய் நம்முடையவன் என்று அத்யாதரத்தோடும் கிருபையோடும் என்தலையில் நீ வீற்றிருப்பதாக நான் உன்னை ஸ்வப்நத்தில் கண்டாலும், அல்லது அப்படியே நான் உன்னை மனதில் நன்றாக ப்ரத்யக்ஷதர்சன ஸமானாகாரமாக த்யானித்தாலும், அந்த தர்சனமாத்திரத்தாலேயே நீ என்னுடைய எல்லா அசுபங்களையும் போக்கி பரம புருஷார்த்த பர்யந்தமான ஸகல க்ஷேமங்களையும் கொடுக்கமாட்டாயோ? அது யுக்தம் தானே? அதில் என்ன ஸம்சயமிருக்கிறது. ஏனென்றால் மனு பராசர வ்யாஸாதி சாஸ்திர ப்ரவர்த்தகர்களான மஹான்களெல்லாம் அப்படியே தானே சாஸ்திரார்த்தம் என்று அபிப்பிராயப்பட்டு உன்னுடைய நாதனை அந்தபரமபுருஷனை த்யானத்தில் ஸ்வப்ந துல்யமான அறிவினால் ஸாக்ஷாத்கரித்து பரமச்ரேயஸ்ஸைத் தேடுகிறார்கள். இப்படிப்பட்டவர்களுடைய ப்ரமாணம் இருக்கும்போது, இதுவிஷயத்தில் பாமரர்களுடைய சங்கைக்கோ, ஸ்வப்நாதிகள் மித்யை, நிஷ்பலமானவை என்கிற குதிருஷ்டிகளுடைய வாதத்துக்கோ அவகாசமேது? சாஸ்திரம் பகவத்யானமே தான் மோக்ஷகாரணம் என்று அறுதியிடுகிறது. சாஸ்திரத்தில் பகவானைப்பற்றிச் சொன்னதெல்லாம் உன்னைப்பற்றியும் சொன்னதாகவே ஆகாதோ? அவனோடு அநந்யையான ஸஹதர்மசாரிணியன்றோ நீ? ஆகையால் உன்னை ஸ்வப்நத்தில் கண்டாலும் மனதில் நிரந்தரமாக த்யானித்தாலுமேபோதும். அதனாலேயே நீ ஆத்ம க்ஷேமத்தைக்கொடுக்கிறாய். உன்னை ப்ரத்யக்ஷமாக ஸேவிக்கவேணுமென்பதோ

ஆராதிக்கவேணுமென்பதோகூட தேவையில்லை. அப்படிப்பட்ட உன்னுடைய ஸௌலப்யத்துக்குத் தோற்றேன் அடியேன் என்கிறார்.

அப்படியே ஸதாசார்யர்களிடத்தில் பக்தியுள்ளவர்களுக்கு அவர்களை ஸ்வப்நத்தில் ஸேவிப்பதும் மனதால் த்யானிப்பதுமே க்ஷேமகரம். ப்ரத்யக்ஷத்தில் ஸேவிக்கவேண்டியதும் ஆராதிக்க வேண்டியதும்கூட தேவையில்லை. அவர்கள் விஷயத்தில் நமக்கு பூர்ணமான அபிஸந்திமட்டும் இருந்தாலுமே போதும். அப்படிப் பட்ட அனுக்ரஹசீலர்கள் அவர்கள். எப்படி பகவானோ அப்படியே தான் அவர்களும் என்றே பெரியோர்களுடைய மதமும் சாஸ்த்ரமும். (17)

அவ— இப்படி ஸ்ரீபாதுகையானது பகவானோடுகூட ஸர்வ ஸுலபையாய் ஸர்வ பலப்ரதையாய் ஆச்ரிதர்களை எதிர்பார்த்துக் கொண்டு ஸ்ரீரங்கவிமானத்தில் ஜீவராசிகள் விஷயத்தில் பரம தயையோடும்வாத்ஸல்யத்தோடும் எழுந்தருளியிருக்கும்போதும், அநேக பாமரஜனங்கள் இதையறியாமல் க்ஷுத்ரபலாபேக்ஷையால் அதி க்ஷுத்ரஸ்வபாவமுள்ள மனுஷ்யாதிகளைப்போய் ஆச்ரயிப் பதைக்கண்டு நிர்விண்ணராய், தானும் அப்படிப்பட்ட ப்ரக்ருதி ஆகாமல் பெற்ற லாபத்தை நினைத்து அதை விஜ்ஞாபிக்கிறார் மேல் சுலோகத்தில். (இப்படி பாவம் கொள்ளாதவரையில் இச் சுலோகம் 973-வது சுலோகத்தோடு சேர்ந்து புனருக்தியாகும்)

(கூஅஅ) ஸாஞ்ஜலி: பரிப்ருடமியேந ரங்கே
விச்ராணிதாச்யுத நிதிம் மணிபாதுகே த்வாம் ।
ஸம்ப்ராப்ய ஸம்ப்ரதி யதா ந ஸுராஸுராத்யா
ப்ரத்தாநயே ந ஸதாபி ஸுகம் விஹாய ॥

(ப-ரை) ஹே மணிபாதுகே - ஸம்பத் ஸம்ருத்தி தோன்றும்படி திவ்ய ரத்னங்களால் பூஷிதையாயிருக்கிற வாராய் பாதுகையே! (அஹம் - நான்) ஸாஞ்ஜலி: - கைகூப் பினவனாய்க்கொண்டு, விச்ராணித - (பரமௌதார்யத்தால் ஆச்ரிதர்களுக்கெல்லாம் விசேஷமாகக்) கொடுக்கப்பட்டிருக்கிற, அச்யுத - ஆச்ரிதர்களைக் கைவிடாத பெருமாளாகிற, அழி வில்லாத்தாக இருக்கிற, நிதிம் - பெரும் புதயலையுடைத்தா

யிருக்கிற, த்வாம் - உன்னை (அதாவது உனக்கு), ரங்கே - இந்த ஸ்ரீரங்கவிமானத்தில், நியமேந - ஒருபொழுதும் விடாமல், வரிவஸ்யந் - கைங்கர்யங்களைப் பண்ணுகிறவனைக் கொண்டு, கஸ்யாபி - யாரோ ஒரு, அதாவது இன்னானென்று வ்யபதேச்யகுலத்தையிட்டுப் பேர்கூடச் சொல்லுவதற்கில்லாதவனும் (அல்லது சொல்லுவதற்குத் தகாதவனும்), கூணித த்ருசஃ - கோணலாக்கப்பட்ட பார்வையை யுடைத்தானவனுமான, அதாவது தனமதத்தால் உண்டாகிற பிறர்களிடத்தி லுள்ள அவமதிப்பு அலுப்பு கோபம் முதலியதாலும், லோபத்தாலும் (தயை ஆதரம் கௌரவம் முதலியது தோற்றும்படியாக மலர்ந்த முழுக்கண்ணாலும் அர்த்தியாய் வருகிறவர்களை நேரில் குளிர்ந்து பாராமல்) அணுகுகிறவர்களுக்கு அச்சத்தை உண்டுபண்ணும்படியான வக்ரமான கோபப்பார்வையையுடைத்தான, தநிநஃ - (துர்ஜனர்களான) பணக்காரர்களுக்கு, புரஸ்தாத் - எதிரில் போய், விகோசம் - விஸ்தரிக்கப்பட்ட, அதாவது பிரிக்கப்பட்ட, கரம் - கையை, கதாபி - ஒருபொழுதும், நோத்தாநயேய - நீட்டமாட்டேன்.

(கருத்து-) வாராய் திவ்யரத்ந பூஷிதையாய் ஸம்பத்தேவதையாய் விளங்காநிற்கிற பாதுகையே! நீ இப்படி எல்லோருக்கும் ஸொந்தமாய் நிர்பயமாய் ப்ரவேசிக்கத்தக்கதான ஸ்ரீரங்க விமானத்தில் பரமதயாமூர்த்தியாய், பரமஸுலபையாய், பரம ஔதார்யமுள்ளவளாய், எல்லாருக்கும் கொடுக்கத்தக்க பெருமாளாகிற அழிவில்லாத மஹாநிதியையுடையவளாய், ஆச்ரிதர்களுக்கு ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கக் காத்திருக்கும்போதும் மூடர்களும் துர்பாக்யசாலிகளுமான இந்த பாமரஜனங்கள் உன்னை விட்டு இன்னானென்று பேர் கூடச் சொல்லத்தகாதவர்களும், பணக்கொழுப்பினால் உலகத்தையெல்லாம் த்ருணவத்கரித்துக் கொண்டும், அதிலும் ஏழைகளான அர்த்திகள் (யாசகர்கள்) விஷயத்தில் மிகவும் துச்சத்வபுத்தி பண்ணிக்கொண்டும், சற்றேனும் ஆதரவும் அப்யுபகமமும் (எதிர்கொள்ளுதல் அல்லது அங்கீகாரம்) தோற்றுதபடி கிட்டி அணுகுவதற்கு அச்சத்தையே கொடுக்கும்படியாக வருகிறவர்களை வக்ரமாக முறைத்துப் பார்க்கிற பரம்லோபிகளான துராத்மாக்களையும் போயடைந்து ஆச்ர

பித்து உன்னிடத்தில் கூப்பவேண்டியதும் ஏந்தவேண்டியது மான அருமந்த கையை அவர்களெதிரில் நிஷ்பலமாக நீட்டு கிறார்களே, இது என்ன பாபம், இது என்ன ஆச்சரியம், இது என்ன அஜ்ஞானம், என்ன தௌர்பாக்யம். யாரையும் தன் வசப்படுத்தத்தகுந்த இந்த பாபியான ஸம்ஸாரத்தில் க்ஷுத்ரபலாபேக்ஷையால் அவர்களைப்போல் நானும் நீசாச்ரய ணம் பண்ணும்படியான நீசப்ரக்ருதியாக ஆகாமல் பெற்றேனே. உன்னுடைய கடாக்ஷத்தால் இந்த ஸர்வஸுலபமான ஸ்ரீரங்க விமானத்தில் ஸ்ரீரங்கநாதனோடு உன்னை உள்ளபடி கண்டு நிமி ஷம்கூட விடாமல் உனக்கு ஸர்வவிதபரிசர்யைகளையும் பண்ணிக் கொண்டு அவ்வோ பரிசர்யைகளில் மத்யே மத்யே ஸம்பாவித மான அபசாரங்களுக்கு க்ஷாபணார்த்தமாகவும், உன்னுடைய ப்ரஸாதார்த்தமாகவும் எப்போதும் பத்தாஞ்சலிபுடனாய் ப்ரேம பாரவச்யத்தால் உன்னுடைய ப்ரணாமஸ்துதிகீர்த்தனபரிசர்யை களல்லாமல் ஆத்மதாரணக்ஷமனல்லாத ப்ரக்ருதியாகப் பெற் றேனே, இது என்ன என் பாக்யம்— என்கிறார்.

ஸதாசார்யர்கள் தங்களையும் பகவானையுமே ஆச்ரிதர்களுக் குக் கொடுக்கும்படியான பரமௌதார்யத்தோடு ஸர்வஸுலபர் களாய் ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்க ஸந்நிஹிதமாகக் காத் திருக்கும்போது பரம அஜ்ஞர்களும் தௌர்பாக்யசாலிகளுமான ஜனங்கள் அவர்களை விட்டு கேவல க்ஷுத்ரபலாபேக்ஷையால் அல்ப ஸ்வபாவமுள்ள அல்பப் பணக்காரர்களைப்போய் அவர் களை நேரில் தங்களுக்கு பலப்ரதர்களாக நினைத்து அடுத்து தங்கள் மனோரதமும் பூர்த்தியாகாமல் பரிபவப்படுகிறார்கள். ஸாதுக்களோவென்றால் பகவானையும் ஆசார்யானையும் உள்ளபடி உணர்ந்து க்ஷுத்ரபுருஷார்த்தங்களில் அபேக்ஷையில்லாதவர் களாகவும், மனுஷ்யாதிகளைத் தங்களுக்கு பலப்ரதர்களாக எண் ணாதவர்களாகவும், பகவானையும் ஆசார்யானையுமே அடுத்து அவர் களையே பரமபுருஷார்த்தமாகக் கோலி, அவர்களுக்கே ஸர்வகால மும் ஸர்வவித பரிசர்யைகளையும் பண்ணிக்கொண்டு த்ரிகரணங் களாலும் அவர்களையே அனுபவித்துக்கொண்டு, ஒரு குறைவு மில்லாதவர்களாய் இங்கு ஆநந்திக்கிறார்கள். அப்படிப்பட்டவர் களுக்கு அந்யாச்ரயணத்தாலாவது என்? இந்த ஸம்ருத்தியும் அவர்களுக்கு ஸதாசார்ய பரிபூர்ண கடாக்ஷத்தால் விளைந்தது.

அவ— இப்படி தன்னுடைய பரமபாக்யத்தைக்கொண்டாடி ஸாமான்ய ஜனங்களை அங்யாச்ரயணத்தைப்பற்றி நிந்திக்கவே, பாதுகையானது விநோதமாக "இப்படி ஜனங்களை அங்யாச்ரயணத்தைப்பற்றி நிந்திப்பாயேயானால், தேசயாத்திரை தான் எப்படி நடப்பது, ஸாதுக்களுக்குத்தான் தேஹயாத்திரைக்கு அதுவேண்டாமோ" என்று கேட்க பதில் சொல்கிறார் மேல்சுலோகத்தில்.

(கூஅசு) த்வய்யர்ப்பிதேந சரணேந ஸத்பதாஜ:
பாதாவநி ப்ரதிதலோகவிலோகநார்ஹா: ।
ரங்கப்ரவிஷ்டயதே ஸம்ஸ்ரயந்த ரங்கஸ்தாராரு
ரங்கேஷ்வபி நடாச்ச ஸாதவச்ச காஷ்டே ॥

இந்த சுலோகம் ச்லேஷையுள்ள பதங்களால் பாதுகாபக்தர்களான ஸாதுக்கள் விஷயமாகவும் பகவான் விஷயமாகவும் நடர்கள் (கூத்தாடிகள்) விஷயமாகவும் அர்த்தங்கள் கொடுக்கும். அவற்றில் பகவானையும் நடர்களையும் பற்றின விஷயம் பாதுகாபக்தர்களான ஸாதுக்கள் விஷயத்துக்கு உபமானமாகும்.

(ப-ரை) ஹே பாதாவநி - வாராய் பகவானுடைய திருவடியைக் காப்பாற்றுகிற பாதுகையே! பகவத்விபூதிகளுக்குள் இந்த லீலாவிபூதியை ஒரு பாதமாக (அதாவது கால்பங்காக) வேதத்தில் சொல்லுகிறபடியால் பாதாவநி என்கிற பதம் இந்த லீலாவிபூதியையெல்லாம் காப்பாற்றுகிறவள் என்கிற அர்த்தமும் கொடுக்கும். அவ்வர்த்தத்தை நினைத்து இவ்விடம் இப்படி ஸம்போதனம் பண்ணுவதும் ஸங்கதம். த்வயி-உன்னிடத்தில் (ஸாதுக்கள் விஷயத்திலும் பகவான் விஷயத்திலும் இப்படி) நடர்கள் விஷயத்தில் ந்ருத்தஸமயத்தில் (கூத்தாடுகிற இடத்தில்) என்று வைத்துக்கொள்கிறது அர்ப்பிதேந - (ஸா) ஸமர்ப்பிக்கப்பட்டிருக்கிற அதாவது பலாபேக்ஷையில்லாமல் ஸ்வயம்ப்ரயோஜனமான கைங்கர்யமாக எண்ணப்பட்டுள்ள, (ப)வைக்கப்பட்டிருக்கிற, (ந)பற்பலமாதிரியாக நடத்தப்பட்ட, சரணேந - (ஸா) அனுஷ்டானத்தாலே, அதாவது ஸத்கர்மானுஷ்டானப்ரகாரத்தாலே, (ப) திருவடியினாலே, (ந)காலாலே, ஸத்பதாஜ: - (ஸா) ஸத்ஸம்ப்ரதாய மார்க்கத்தை அடைந்தவர்களான, (ப) நல்ல மார்க்கத்தை அடைந்தவனான, அதாவது ஒரு உபத்திரவுமில்லாத வழியையடைந்தவனான, அல்லது

ஸாதுக்களிருக்கப்பட்ட மார்க்கத்தை அடைந்தவனான அதாவது பாதுகையை பகவான் திருவடியில் சாற்றிக்கொண்டதும் அது பகவானை ஸாதுக்கள் இருக்கப்பட்டஇடத்திற்கு அழைத்துக்கொண்டு போகிறது என்கிற தாத்பர்யமும் கொள்ளலாம், (ந) நல்ல நடர்களுடைய வழியை (அதாவது ரீதியை) அடைந்திருக்கிறவர்களான, ப்ரதித - (ஸா) பிரஸித்தமாகத் தெரிகிற (ப) ப்ரஸித்தியை அடைந்தவர்களான, (ந) ப்ரஸித்திப்படுத்துமவைகளான, அதாவது மனோபாவத்தை நன்றாக வெளிக்காட்டுமவைகளான, ஸாத்விக - (ஸா) ஸத்வகுணமயமான, (ப) ஸாத்விகர்களுடைய, (ந) அந்தஃகரண (மனஸ்) ஸம்பந்தியான, பாவ-(ஸா)ஸ்வபாவத்தாலே அதாவது ஸ்வபாவத்தோடு, (ப) மனோபாவத்தாலே, (ந) வ்யாபாரங்களாலே, அதாவது அபிப்ராயத்தைவெளியிடுகிறஅங்கசேஷ்டாரூபமான அபிநயங்களாலே, த்ருஶ்யா: - (ஸா) காணத்தகுந்தவர்களும் (ப) த்ருஶ்ய: - காணத்தகுந்தவனான அதாவது யோகிகளால் த்யானத்தில் ஸாக்ஷாத்கரிக்கத்தகுந்தவனான (ந) காணத்தகுந்தவர்களாலே, அதாவது அப்படிப்பட்ட அபிநயங்களை உள்ளவர்களான, தே - அந்த, பாவுகா: - (ஸா) ரஸிகர்களான ஸாதுக்கள், அதாவது பாதுகானுபவபரர்களான ஸாதுக்கள் (ப) ஸ: பாவுக: - அந்த பாதுகானுபவரஸிகரான பகவான், (ந) பாவம் அறிந்தவர்கள், மஹீயஸி - பெரிதான அதாவது விஸ்தாரத்திலும் வித்வத்கோஷ்டியிலும் உத்தமமான ரங்கே - ஸ்ரீரங்கத்தில், ரங்கஸ்தலத்தில், நடா இவ - சாஸ்திரஜ்ஞர்களும் பாவஜ்ஞர்களுமான உத்தம நடர்கள்போல, ரங்கேஶவத் - (ஸா) ஸ்ரீரங்கநாதனுக்குத் தகுந்தபடி அல்லது ரங்கநாதனைப்போல என்றும் அர்த்தம் கொள்ளலாம், (ப) ஸ்ரீரங்கத்துக்கு ஈசுவரனாக இருப்பதற்குத் தகுந்தபடி, (ந) ரங்கஸ்தலத்துக்கு எஜமானனுக்குத்தக்கபடி அதாவது அவனை ஒத்து அநுஸரித்து, முஹு: - அடிக்கடி, அங்கஹாரான் - அங்கவிக்ஷேபங்களை அதாவது கை கால் முதலிய அவயவங்களை சலிப்பதை, விதயதே - (ஸா) செய்கிறார்கள், (ப) செய்கிறான், (ந) செய்கிறார்கள்.

(கருத்து.) இந்த லீலாவிபூதியையெல்லாம் காப்பாற்றக் கூடிய எஜமானியான ஓ ரங்கனுடைய பாதுகையே! ஒருவன் தேஹ யாத்திரையின்பொருட்டு அந்யர்களையே பலப்ரதர்களாக நம்பி அவர்களையேதான் ஆச்ரயித்தாகவேணுமோ? அந்யாச்ரயண மில்லாமல் உன்னையே நம்பி இருந்தால் ஆத்மயோக க்ஷேமங்கள் போல் சரீரத்தைப்பற்றின யோக க்ஷேமங்களும் உன்னாலேயே ஸங்கல்பிக்கப்பட்டு தானே நடவாதோ? "அநந்யாஶ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே" என்கிறபடி அநந்ய பக்திகளாய் ஸர்வப்ரகாரத்தாலும் உன்னையே ஸர்வதா பஜித்துக் கொண்டிருக்கிற மஹான்கள் இப்படித்தான் சரீரயாத்ரையைப் பற்றி கரைகிறார்களோ? அவர்கள் எப்படி ஒரு கவலையுமில்லா மல் ஆநந்தமாகக் காலத்தைக் கழிக்கிறார்கள் என்பதைப்பார்க்க லாமே. அது எப்படி என்கிறாயோ, சொல்கிறேன். யாதொருபடி பரமயோகித்யேயனும் க்ஷீரநிதிவைகுண்ட்வாஸிகனுமான பக வான் உன்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட திருவடியையுடையவனாய் நிச்சிந்தனாய் ஸஞ்சாரத்தில் கவலையற்று அத்யாநந்தபரிதனாய் பரமரஸிகர்களான பாகவதோத்தமர்கள் நிறைந்த இந்த ஸ்ரீரங்க திவ்யக்ஷேத்திரத்தில் "மஜ ஸிஹமதீவீரள ஶாதுபூஷெவ்ருஷ ஹொவளே" என்கிறபடி ஸேவித்தமாத்திரத்திலேயே "இவன் ஸர்வேச்வரன் காண்" என்று அறியலாம்படியான உல்லாஸமான அங்கசேஷ்டைகளுடன் ஸாதுகோஷ்டியின் மத்தியில் ஸஞ்சரிக் கிறானோ, யாதொருபடி சாஸ்திரஜ்ஞர்களும் பாவஜ்ஞர்களும் அபி நயஜ்ஞர்களுமான உத்தமநடர்கள் விஸ்தாரமானதும் நடநத்துக்கு ரொம்ப அனுரூபமானதும் ரஸிகர்களான ஸதஸ்யர்கள் நிறைந்தது மான உத்தம ரங்கஸ்தலத்தில் பற்பல விதமாகத்தங்கள் அடி வைப்புகளை நிபுணர்களுடைய ரீதியை ஒத்துச் செய்துகொண்டும் அபிநயஸ்வாரஸ்யத்தாலே மனோபாவம் முழுவதும் தெளிவாக வெளியாம்படியான வ்யாபாரங்களோடும் தங்கள்எஜமானன் உகக் கும்படி அங்கவிக்ஷேபங்களைச் செய்துகொண்டு தங்கள்வித்யையில் தீர்ந்தவர்களானபடியாலே கவலையற்று உல்லாஸமாக ஸஞ்சரிப் பார்களோ, அப்படியே ஸகல ஸத்கர்மங்களையும் ஸத்ஸம்ப்ரதாய பத்ததிப்படி ஸாத்விகத்யாகபுரஸ்ஸரமாக பலாபேக்ஷையன்றி யில் கேவலம் உன் ஆராதனரூபமாகவே அனுஷ்டித்து உனக்கு அர்ப்பணம் செய்பவர்களும், பார்த்தமாத்திரத்திலேயே இவர்

கள் ஸத்வோத்தரர்கள் என்று அறியும்படி பரம ஸத்வகுண ஸ்வபாவம் உள்ளவர்களும், அப்படி அளவிடமுடியாத ப்ரபாவமுடையவர்களுமான ஸ்வரூப ஸ்வபாவ வைராக்ய ஸிகர்களான ஸாதுக்கள் பரம பாகவதோத்தமர்கள் நிறைந்த இந்த ஸ்ரீரங்க திவ்ய தேசத்தில் தங்களுடைய சரிதத்தால் 'இவர்களரங்கனடியார்கள்' என்று தோற்றும்படி இருந்துகொண்டு யத்ருச்சாலாபஸந்துஷ்டர்களாக தேஹயாத்ரை முதலியவைகளைப்பற்றி கவைதலற்று ஸ்ரீபகவானுடையவும் உன்னுடையவும் குணவ்யாபாராதிகளையனுபவித்துக்கொண்டு அந்த ஆநந்தானுபவம் உள்ளடங்காமல் தங்கள் அனுபவம் வெளியாம்படியான அங்கசேஷ்டைகளைப் பண்ணிக்கொண்டு ஸாக்ஷாத் ஸ்ரீரங்கநாதனைப்போலவும் உத்தமரங்கஸ்தலத்தில் உத்தமநடர்களைப்போலவும் உல்லாஸமாக ஸஞ்சரிக்கிறார்கள். இப்படி ஸகல ஜநங்களும் இந்த ஸாதுக்கள் மார்க்கத்தில் இழிவார்களேயானால் அவர்களுக்கு அங்யாச்ரயணத்தால் அபேக்ஷை என்? நான் இப்படிப்பட்ட மூடஜநங்களுடைய கூட்டத்தில் சேராமல் ஸாதுகோஷ்டியில் சேர்ந்தவனாய் அவர்களைப்போலொத்த பாவத்தோடும் வ்யாபாரங்களோடும் இங்கு உன்னை அனுபவிக்கத்தக்க பாக்யமுடையவனாக ஆனேனே என்கிறார்.

ஸ்ரீபகவானையும் ஸதாசார்யர்களையும் அநந்யபக்திகளாய் தத்தைகநேஸ்கர்களாகவும் தத்தைக வ்யாபாரர்களாகவும் அனுபவிப்பவர்களுக்கு அங்யாச்ரயணத்தால் அபேக்ஷையில்லை. அவர்கள் யத்ருச்சாலாப ஸந்துஷ்டர்களாய் தேஹயாத்திரையைப் பற்றிக் கவலைப்படார்கள். அவர்களுடைய ஐஹிகாமுஷ்மிக ஸகல யோகக்ஷேமங்களையும் ஸ்ரீபகவானும் ஆசார்யாளுமே நடத்திவிடுவார்கள். அவர்கள் பித்தர்களைப்போல் ஆடியும் பாடியும் தங்களை மறந்தும் திரிவார்கள். ஸங்கிர்தமும் ஸத்கடாக்ஷமுமிருந்தால் யாரும் அப்படியாகலாம். அது இல்லாமல் அஜ்ஞாநத்தால் மூடப்பட்டு தெய்வத்தை மறந்து தேஹத்தையே நினைத்து அல்லாடுகிறோம். (19)

அவ:— ஆனால் இப்படியே அனுபவித்துக்கொண்டிருந்தால் போதுமோ? இந்த அஸ்திரமான தேஹத்தோடு எவ்வளவு காலந்தான் இப்படி அனுபவித்துக்கொண்டே இருக்கக்

கூடும்? ஆகையால் அந்த உத்தமஸ்தானத்தில் (பரமபதத்தில்) பகவானையடைவதைப்பற்றிச் சிந்திக்கவேண்டாமோ? என்ன– சொல்கிறார் மேல் சுலோகத்தில்.

(கூகூ௦) யெநஸ்தா ஶிரஸி ஜெ வியிநாயூநா கூ௦
தெநைவ ஷெவி நியதஃ ஐஐ ஸா௦வராயெ ।
ஶ்ரக்ஷீஃபரிஷ்வஹி பஷாவநி ரஜூநாய௦
ஶ்ரக்ஷீபஜா௦பூஜரஸயாவகபாஂகலக்ஷ்யஃ ॥

(ப–ரை) ஹெ ஷெவி பஷாவநி - வாராய் திருவடியைக காப்பாற்றுகிறவளாய் விளங்காநிற்கிற பாதுகையே! அல்லது பஷ௦ என்பதற்கு ஸ்தாநம் என்று ஒரு அர்த்தம் உண்டாகை யால் தஃவிஷ்ணோஃ பர௦ பஷ௦ என்கிறபடி பரமபதத்தை விவக்ஷித்துக்கொண்டு பரமபதத்தைக் காப்பாற்றுகிறவள் என் றும் அர்த்தம் கொடுக்கும். பரமபதத்தை பாதுகை காப்பாற் றுவதாவது ஆச்ரிதர்கள் அதை இழவாதபடி காற்கிறவள்; அதாவது ஆச்ரிதர்கள் பரமபதத்தை அடையும்படி செய்கிற வள் என்று அர்த்தமாம். கீழ்சுலோகத்தில் பாஷாவநி என் கிற ஸம்போதனம் ஜனங்களை இந்த லீலாவிபூதியில் காப்பாற் றுவதைச் சொல்லிற்று. இது அவர்களை பரமபதத்தை அடை விப்பதைச் சொல்லுகிறது. இவ்வர்த்தம் சுலோகதாத்பர்யத் துக்கு ஸுஸங்கதம். கூ௦ - நீ, அயூநா - இப்பொழுது, யெந - எப்படிப்பட்ட, வியிநா - பாக்யவசத்தாலே, ஜெ - என்னுடைய, ஶிரஸி - தலையிலே, நியதம் ஸ்திதா - நிய மெந இருக்கிறாயோ அதாவது “இனிப்பேரேனல்லேன்” என்று எப்பொழுதும் ஸ்திரமாக இருக்கிறாயோ, தெநைவ - அந்த பாக்யவசத்தினாலேயே, ஶ்ரக்ஷீ - பெரிய பிராட்டியாரு டைய, பஷா௦பூஜ - தாமரைப்பூப்போலொத்த திரு வடிகளுடைய, யாவகபாஂக-செம்பஞ்சுக்குழம்பினாலே, லக்ஷ்ய௦- பார்க்கத்தகுந்ததாக இருக்கிற, அதாவது பார்வைக்கு மனோ ஹரமாக இருக்கிற, அல்லது கண்டுபிடிக்கத்தகுந்தவனாக இருக் கிற, அதாவது த்ரிமூர்த்திகளுக்குள் இன்னான் பரதேவதை என்கிற விஷயத்தில் ஸம்சயமுண்டானால் யாதொருவன் லக்ஷ்மீ

பதியோ, அவளுக்கு நியதமான வாஸஸ்தானமானவனே, அவன் தான் ஸர்வேச்வரன் என்கிற நிஷ்கர்ஷத்தாலே திருமார்பில் லக்ஷ்மியின் பாதநலங்கு படிந்திருக்கிற அடையாளத்தைக் கொண்டு இவன்தான் ஸர்வேச்வரன் என்றுகண்டுபிடிக்கப்படத் தகுந்தவனை,* ரங்கநாதம் - ஸ்ரீரங்கநாதனை, மே - என்னுடைய, ஸம்ஸராயே - அந்திமதசையில், * ப்ரத்யக்ஷமாகக் காட்டிக்கொடுக்கப்போகிறாய்.

(கருத்து) என் அம்மா! ஆச்ரிதர்கள் பரமபதத்தை இழவாதபடி காத்து, அதை அவர்கள் தவராமல் அடைந்து க்ஷேமப்படும்படி செய்கிறவளாய், அந்த ஔதார்யத்தால் ஏற்படுகிற ஹர்ஷத்தால் விளங்காநிற்கிற பாதுகையே! நான் வேறொரு சிந்தையுமில்லாமல் உன்னை இப்படியே பகவானோடு சேர்த்து யாவத் சரீரபாதம் (சரீரம் போகிறவரையில்) அனுபவித்துக் கொண்டிருந்தாலே போதாதோ? இந்தசரீரம் ஜீர்ணமானால் பரமபதப்ராப்தி ஸ்வதஸ்ஸித்தமாக தானாகவே லபியாதோ? அதைப் பற்றி நான் இப்போதே தனியாக ஒருசிந்தைதான் படவேணுமோ? ப்ரயத்னம் தான் செய்யவேணுமோ? அது உன்னுடைய பொறுப்

* ........ என்கிற ஸ்ரீ பாசுரம் இவ்விடம் அனுஸந்தேயம்.

* குறிப்பு— நியதம் என்கிற பதத்தை இவ்விடமே சேர்த்தாலும், அல்லது மேல் பதவுரையில்போல் ஸ்திதா என்பதோடு சேர்த்து இவ்விடமும் அனுஷங்கித்துக்கொண்டாலும் நியதம் ........ - காட்டிக்கொடுக்கவே போகிறாய் என்று அவதாரணார்த்தம் கொள்ளலாம். அப்படிச் செய்யாவிட்டாலும், “ ........ ” என்கிற நியாயப்படி ........ என்று கேவலமாக வைத்துக்கொண்டாலுமே ........ - காட்டிக்கொடுக்கவே கொடுப்பாய் என்கிற அவதாரணம் ஸூ:தஃ அர்த்தாத் ஸித்திக்குமாகையால் நியதம் என்கிற பதத்தை ஸ்திதா என்பதோடு சேர்ப்பதே முக்கிய பக்ஷமும் ஸ்வாரஸ்யமும்.

பேயன்றோ? ஏன் அப்படி என்றால் சொல்கிறேன். யாதொரு மஹாபாக்ய வசத்தாலே நீ யாவர் விலக்கினாலும் விலகவொண்ணாதபடி 'இனிப்பேரேனல்லேன்' என்று த்ருடஸங்கல்பையாய் க்ஷணமாத்ரமும் விட்டுப்பிரியாதபடி என் தலையில் வந்து ஸ்திர ப்ரதிஷ்டிதமாய் குடிகொண்டுவிட்டாயோ அந்த பாக்யவசத்தாலே தானே யாவத் சரீரதாரணம் உன்னுடைய இப்படிப்பட்ட அநுபவத்தாலேயே காலத்தைக் கழிக்கிற எனக்கு அந்திமதசையில் பெரிய பிராட்டியாருடைய திருவடிமலர்களின் நலங்குபடிந்த விசாலவக்ஷஸ்தலத்தையுடையவனாய், அந்த அடையாளத்தாலேயே ஸர்வேச்வரன் என்று நிஷ்கர்ஷிக்கபடுமவனான, இந்த ரங்கநாதனை உன்னோடுகூட எனக்குக் காட்டிக்கொடுக்காதொழிவாயோ அப்படிப்பட்ட அந்திம ஸாக்ஷாத்காரம் நேர்ந்ததும் உத்தரக்ஷணத்தில் பரமதப்ராப்தி ஸித்தமன்றோ? அப்படி ஸ்வத: ப்ராப்தமாக நேருகிற விஷயத்தில் ஸ்ரீரங்கநாதனோடு சேர்ந்த உன்னை நிரந்தரமாக அனுபவிக்கிற எனக்குத் தனியான சிந்தையும் ப்ரயத்தனமும் எதற்கு என்கிறார்.

பரமபக்தியுக்தர்களாய் பகவானோடு அநந்யர்களான ஸதாசார்யர்களையே நிரந்தரம் நினைத்து அனுபவிக்கப்பெற்ற பாக்கியவான்களுக்கு பரமபதப்ராப்தியைப்பற்றி சிந்தையேவேண்டுவதில்லை. ஸதாசார்ய கடாக்ஷத்தாலேயே எப்படி அப்படிப்பட்ட நிரந்தரானுபவம் இங்கு கிடைக்கிறதோ, அப்படியே அந்த கடாக்ஷத்தாலேயே அந்திம பகவத் ஸ்ம்ருதியும் அதற்குத்தரமான பரமபத ப்ராப்தியும் தன்னடையாகவே லபிக்கும்; இந்த சரீரம் முடியவேண்டியதே தாமதம். அப்படிப்பட்ட ஆச்ரிதர்களுக்கு பரமபுருஷார்த்த ப்ராப்தி ஸதாசார்யாளுடைய பொறுப்பேயொழிய இவர்களுக்கு அதில் அன்வயமில்லை. ஏனென்றால் ஸதாசார்யர்கள் அதற்கென்றே ஏற்பட்டவர்கள், அதையே தங்களுக்கு த்ருடவிருதமாகவும் புருஷார்த்தமாகவும் உடையவர்கள். நமக்கு வேண்டுவது அப்படிப்பட்ட ஸதாசார்யர்களையடையும்படியான ஸுக்ருதம் ஒன்றே. (20)

அவ— இப்படி தன்னுடைய அநந்யமான பாதுகானுபவப்ரகாரத்தை பரம காஷ்டாபர்யந்தமாகச் சொல்லிமுடித்து, பரம ஆகிஞ்சன்யமே ஸ்வரூபமான தன் ப்ரக்ருதியாலே ஸ்ரீ ஆசாரியருக்கு பாதுகா விஷயமான தன் உக்திகளும் பாவனைகளும்

உண்மையான பக்தியினால் ஏற்பட்டனவல்ல, உண்மையான பக்தர்களுடைய கேவல அனுகார மாத்ரமே என்று தோன்றி நிர்விண்ணராய், அப்படி தான் நடித்து, தன்னையும் பிறரையும் ஸ்ரீபாதுகையுமே இதுவரையில் வஞ்சித்து வந்ததற்கு ப்ராயச்சித்தமாக தயாமாத்திரத்தாலே தன்னை உள்ளபடியான பாதுகா பக்தர்களுடைய அபிமானத்துக்கு விஷயமாம்படி அனுக்ரஹிக்க வேணுமென்று பிரார்த்திக்கிறார் மேல் சுலோகத்தில்.

(௯௯௧) ஹரிசரணஸரோஜே ஸக்தஹாஜாம் ஜநாநா
மநுகரணவிஶேஷை ராத்மநைவோபஹாஸ்யம் ।
சரணரக்ஷிணி தயாமாத்ராத் பாதுகே தாத்ருஶம் மாம்
பரதபரிஷதந்தர்வர்திபிஸ் ஸம்ரக்ஷணீயம் ॥ (௨௧)

(ப-ரை) ஹே பாதுகே-வாராய் பாதுகையே! ஹரி - பெருமானுடைய, சரணஸரோஜே - தாமரைப்பூப்போலொத்த திருவடியிலே, ஸக்தஹாஜாம் - பக்தியையடைந்திருக்கிற, ஜநாநாம் - ஜனங்களுடைய, அநுகரணவிஶேஷை:- அனுகாரவிசேஷங்களாலே, அதாவது அவர்களைப்போல் நடித்து பல வ்யாபாரங்களைச் செய்கிறது என்கிற வேஷங்களாலே, ஆத்மநைவ - தனக்குத் தானாகவே, உபஹாஸ்யம் - பரிஹாஸம் பண்ணத்தகுந்தவனான, தாத்ருஶம் - அப்பேர்ப்பட்ட, அதாவது அப்பேர்ப்பட்ட பாபியாய் மூடனாய் நிர்லஜ்ஜனாய் வஞ்சனபரனான, மாம் - என்னை, த்வம் - நீ, அதாவது க்ஷமாநிதியாய் அதிவத்ஸலையான நீ, தயாமாத்ராத் - தயையினால் இளகின மனதுடையவளாய்க்கொண்டு, பரதபரிஷத் - பரத கோஷ்டியில், அந்தர்வர்திபி: - உள்ளடங்கினவர்களாலே, அதாவது உண்மையான பாதுகாபக்தர்களாலே, ஸம்ரக்ஷணீயம் - பார்க்கத்தகுந்தவனாக, அதாவது உண்மையான பக்தி இருந்தாலும் இல்லாவிட்டாலும் பாதுகையின் திருநாமத்தைச் சொல்லிக்கொண்டு பாதுகாபக்தர்கள் செய்யும் கார்யங்களையும் செய்கிறவரையில் இவனை நம்முடைய கோஷ்டியில் சேர்க்க வேண்டியதுதான் என்று அபிமானித்து என்னை அவர்கள்

குளிரக் கடாக்ஷிக்கும்படி, வரிணேய - செய்யவேணும் அதாவது அவர்கள் ஸ்வபாவத்தாலேயே தோஷக்ராஹிகளல்லாதவர்களானாலும் என் பாபத்தால் அவர்கள் என் தோஷத்தைக் கண்டு என்னை விலக்காமல்படி செய்யவேணுமாய் பிரார்த்திக்கிறேன்.

(கருத்து.) பரதகோஷ்டிக்கு பரதேவதையான என் அம்மா பாதுகையே! இதுவரையிலுள்ள என் வியாபாரங்களை நீ நன்றாய் கவனித்தாயோ? ஆச்ரிதபாபஹரனான பகவானுடைய திருவடி மலர்களில் உண்மையான பக்தியுள்ள ஸத்புருஷர்களைப்போல் நான் என்னையும் நினைத்து அவர்களுடைய பக்திலேசமும் என்னிடமில்லாமலிருக்கும்போதும் பகவான் விஷயமாகவும் உன் விஷயமாகவும் அவர்கள் பேசுகிற பேச்சையும் செய்கிற செயல்களையும் அனுகரித்துச் செய்துகொண்டு என்னையும் உன்னையும் உலகத்தையும் வஞ்சித்துக்கெட்டேன். என்னுடைய வேஷங்களை நினைத்தால் எனக்கே வெட்கமாக இருக்கிறதே? என்னைப்போலொத்த பாபியும் மூடனும் நிர்லஜ்ஜனும் வஞ்சகனுமுண்டோ? ஸர்வேச்வரனுடைய ஆச்ரிதபாபஹரத்வமும் என் விஷயத்தில் பயன்படவில்லையே? அப்படிப்பட்ட பாபியாய்விட்டேனே? நீ ஆச்ரிதவத்ஸலையாச்சுதே, பரமதயாளுவாச்சுதே, என் பாபத்துக்கு என்ன ப்ராயச்சித்தம் கண்டாய்? உனக்கு ஒன்றும் தோன்றவில்லையோ? எனக்குத் தோன்றுவதொன்றை விஜ்ஞாபிக்கிறேன். தயாபரதந்த்ரையான நீ அதை எனக்குச் செய்யவேணும். அதாவது— பரதகோஷ்டியைச் சேர்ந்த பரமபாகவதோத்தமர்களான உன் பக்தர்கள் "இவனுக்குண்மையான பக்தி இருந்தாலும் இல்லாவிட்டாலும் பாதுகையின் பெயரைச்சொல்லிக்கொண்டு நம்மைப்போலொத்த வ்யாபாரங்களையும் இவன் செய்கிறவரையில் இவனை நம்முடைய கோஷ்டியிலேயே சேர்ப்போம்" என்று எண்ணி என்னை அபிமானித்துக் குளிர்ந்து கடாக்ஷிக்கும்படி செய்யவேணும். அவர்களை அப்படிச்செய்யார்களோவென்றால் அவர்கள் ஸ்வபாவத்தில் தோஷக்ராஹிகள் அல்லாதவர்களானாலும் என் பாபம் அவர்களையும் என் தோஷத்தைக்கண்டு ஸ்வகோஷ்டியிலிருந்து என்னை விலக்கும்படி செய்துவிடும். அகையால் அவர்கள் என்னை அபிமானிக்கும்படி நீயே

தயாமாத்ரத்தால் செய்யவேணும். “த³யைநைவ ஸாத⁴வ:” என்கிறபடி அவர்களுடைய கடாக்ஷம் எனக்கு உண்டானால், “பொய்யே கைமை சொல்லி புறமே புறமே யாடி மெய்யே பெற்றொழிந்தேன்” என்கிறபடி எனக்கு உண்மையான பக்தி உண்டாய் விடும். ஆகையால் அப்படி கிருபைசெய்யவேணும் என்று பிரார்த்திக்கிறார்.

ஸதாசார்யர்கள் விஷயத்தில் பரமபக்தியையடைந்த மஹான்களுக்கு ஆகிஞ்சன்யமே (தங்களை ஸர்வப்ரகாரத்தாலும் மிகவும் இளப்பமாக நினைப்பதே) ஸ்வபாவமாக இருக்கும். பக்தியின் பரிபக்வத்தையடையாதவர்களும் பக்தபாவனைமட்டும் பண்ணுகிறவர்களும் ஆசார்ய நிஷ்டர்களான பாகவதோத்தமர்களுடைய கடாக்ஷம் பெற்று அவர்களுடைய அபிமானத்தில் ஒதுங்கினார்களேயானால் (அவர்களால் நம்மைச் சேர்ந்தவன் என்று அபிமானிக்கப்படும்படி அவர்களை அண்டினார்களேயானால்) நிஜமானதும் பூர்ணமானதுமான பக்தியை அடைந்துவிடுவார்கள். பகவத்கடாக்ஷத்தைக் காட்டிலும் ஸாதுக்களுடைய கடாக்ஷம் விசேஷேண பாபஹரம். (21)

அவ— இப்படி தன் பாபம் நீங்குவதற்கு உபாயத்தைக் காட்டி, அதைப் பூர்த்தி செய்துவைத்து (ப்ராணன் சரீரத்தைவிட்டுப் போகிற வரையில்) தனக்குச் செய்யவேண்டிய உபகாரத்தை பிரார்த்திக்கிறார் மேல் சுலோகத்தில்—

௯௯௨) து³ரிதமவநயந்தீ தூ³ரத: பாது³கே த்வம்
த³நுஜத³மநபதோ³ தே³வதா நந்தயந்தீ ।
அநிதரஶரணாநாம் ஸந்நிதே⁴ஹி ஸ்வயம் நோ
ப⁴வஶரணவ்ருத்தௌ ஸம்ஸ்தி²தேஷு ப்ரியோ: ॥

(ப-ரை) ஹே பாது³கே - பாதாய் ப⁴கவானுடைய திருவடியைக் காப்பாற்றிக்கொண்டு அவனுக்கு க³மந(நடைக்கு) ஸாதனமானவளே ! த்வம் - நீ, து³ரிதம் - பாபத்தை, தூ³ரத: - வெகு தூரத்திலேயே, அவநயந்தீ-போக்கடிக்கிறவளாய்க் கொண்டு, அதாவது கடைசிகாலம் வரையில் பக்திவிரோதியானதும் அனுபவவிரோதியானதுமான பாபங்களை என்னை அணுகவொட்டாமல் தூரத்திலேயே தடுத்து, அதாவது அவை

கள் எனக்கு சேராமலும் சேர்ந்தவைகளும் ஒட்டாமலும் நசிக்கும்படிக்கும் செய்து, அகிஞ்சநஸ்ய - வேறு ஒரு உபாயமுமில்லாதவர்களுக்குள், அதாவது கர்மயோக ஜ்ஞாந யோக பக்தியோகங்களொன்றுக்கும் யோக்யமில்லாமல் உன்னையே உபாயமாக நம்பியிருக்கிறவர்களுக்குள், அக்ர்யஸ்ய - உயர்ந்தவனானவனும், அதாவது அகிஞ்சனஜனஸார்வபௌமனான, பரம அகிஞ்சனனான என்று தாத்பர்யம். அவஶ - ஸ்வாதீநமில்லாமலிருக்கிற, கரணவ்ருத்தே: - இந்திரிய வ்யாபாரங்களையுடையவனுமான, அதாவது இந்திரிய வ்யாபாரங்கள் எல்லாம் அடங்கினதாகிற அந்திமதசையை அடைந்தவனான என்று தாத்பர்யம். அஸ்ய - இந்த, ஜந்தோ: - பிராணியினுடைய, அதாவது பிராணனை மட்டும் உடையவனாய் மற்ற யோக்யதையெல்லாம் அற்றவனாயிருக்கிறவனான என்னுடைய, அக்ரத: - எதிரில், தநுஜ - அஸுரர்களுடைய, த்வம்ஸ - கொல்லுதலாகிற, லீலா - விளையாட்டையுடைத்தாயிருக்கிற, தைவதம் - தேவதையை, அதாவது பரதேவதையான பரம புருஷனை, ஆநயந்தீ - அழைத்துக்கொண்டு வந்தவளாய்க் கொண்டு, ஸந்நிதேயா: - ப்ரத்யக்ஷமாகவேணும்.

(கருத்து) ஸ்ரீபகவானுடைய திருவடியைக் காப்பாற்றுகிறவளாய் அவனுக்கு கமநஸாதனமான பாதுகையே? கர்மயோக ஜ்ஞானயோகபக்தியோகங்கள் ஒன்றுக்கும் அடியோடு யோக்யதை அற்ற பரமஅகிஞ்சனனாய் உன்னையே ஸர்வத்துக்கும் நம்பி இருக்கிற எனக்கு, இப்பால் நீ செய்யவேண்டிய உபகாரத்தை விஜ்ஞாபித்துக்கொள்கிறேன். நான் பிரார்த்தித்தபடி நீ என்னை உன்னுடைய பக்தர்களுடைய கோஷ்டியில் சேர்த்து அவர்களுடைய அபிமானத்துக்கு விஷயமாக்குவதுடன் பக்தி விரோதியும் அநுபவவிரோதியுமான பாபங்கள் எனக்குசேராமல்படிக்கும், சேர்ந்தவைகளும் என்னிடம் ஒட்டாமல் படிக்கும் கடைசிகாலம் வரையில் என்னைப்பாதுகாத்து, கடைசிகாலத்தில் எல்லா இந்திரியங்களும் மனதில் அடங்கி மனதும் ப்ராணன்களில் லயித்து ஜீவன் ப்ராணமாத்ராவசிஷ்டமாகப்போகிற கடைசி க்ஷணத்தில் ஆச்ரித விரோதிகளைத் துலைப்பதையே தனக்கு லீலையாகவுடைய அந்த பரம புருஷனையும் எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்து என்

மனதுக்கு ப்ரத்யக்ஷமாகவேணும். இவ்வளவு வரையில் நீ எனக்கு இவிடம் க்ருபை பண்ணவேணும்— என்று பிரார்த்திக்கிறார்.

ஸதாசார்யர்களையே அநந்யகதியாக நம்பியிருக்கிற அநந்ய பக்தர்களுக்கு ஆப்ரயாணம் பக்தி விரோதிகளும் அனுபவ விரோதிகளுமான பாபங்கள் ஸதாசார்ய கடாக்ஷத்தாலேயே போய்விடும். அந்திமதசையில் பகவத்ஸாக்ஷாத்காரமும் ஏற்படும். இவைகள் இங்கு ஸதாசார்யர்களால் ஏற்படும் உபகாரங்கள். (22)

அவ:— இப்படி தேஹாவஸாநம் வரையிலுள்ள உபகாரத்தைப் பிரார்த்தித்து மரணாநந்தரம் ஏற்படப்போகிற லாபத்தைச் சொல்லிக்கொண்டு மனோரதிக்கிறார் மேல் சுலோகத்தில்.

(௩௩௫) யாவந்நிமேஷமிஹ தே ஸக்ருதஞ்ஜலிம் ஸ தாவத்
நிஜஸத்மஸமீபமேவ ப்ராபயிஷ்யந்நிஹாரம் |
ஜந்தூநிவ ஸவதந்த்ராஸ்ஸ்த்யமாரோபயந்தாம்
ப்ராக்வரணவஸ்ய: பாதுகே ரங்கநாத: ||

இந்த சுலோகத்தில் பகவான் விஷயமாகவும் யாகத்தில் எஜமானன் அல்லது அத்வர்யு விஷயமாகவும் இரண்டுவித அர்த்தங்கள் ஏற்படுகிறதுகள்.

(பதவுரை) ஹே பாதுகே - வாரீர் இரண்டு பாதுகைகளே! * ப்ராக் வரண வஸ்ய: - முதலில் வரிக்கப்பட்டதினாலேயே ஸ்வாதீனனான, அதாவது (பகவான்விஷயத்தில்) ஒரே தடவை அனுஷ்டிக்கவேண்டியதான சரணாகதி என்கிற உபாயத்தினாலேயே சரணாகதனுக்கு மோக்ஷரூப பலப்ரதானத்திற்குக் கட்டுப்பட்டவனான (யாகவிஷயத்தில்) யாகாரம்பத்திலேயே வரிக்கப்பட்டதினாலே யாகத்தில் எஜமானனுடைய காரியங்களைச் செய்வதற்குக் கட்டுப்பட்டவனான அத்வர்யு என்கிற ருத்விக்கு, ரங்கநாத: - ஸ்ரீரங்கநாதன், யாவந் நிமேஷ-

* குறிப்பு:— அல்லது இந்த பதத்தை பகவானுக்கு மட்டும் விசேஷணமாகக்கொண்டு யாகவிஷயத்தில் அந்வயிக்காமல் அது இல்லாமலே ஸாமான்யமாக அர்த்தஸந்தர்ப்பத்தைக்கொண்டு ஆஹிதாக்னியான ஒருவன் என்றும் வைத்துக்கொள்ளலாம். அப்போது இதில் சொல்லப்பட்ட வ்யாபாரம் எஜமானனுடையதாகவேயாகும். அல்லது அத்வர்யுவையே வைத்துக்கொண்டாலும் ஸ்ரீபாஷ்யஸித்த ந்யாயத்தால் அத்வர்யுவின் ஸர்வவ்யாபாரமும் எஜமானனுடையதாகவேயாகும்.

வேதத்தின் கடைசி பாகமான உபநிஷத்தினாலே. 1 தீதே - சொல்லப்பட்டுள்ள, ஸவைதஜுள - யாகரூபமாக வர்ணிக்கப்

---

1 குறிப்பு— யஜுர்வேதத்தில் தைத்திரீய உபநிஷத்தின் கடைசியில் ந்யாஸ (சரணாகதி) உபாஸந (பக்தியோகம்) ங்களில் இழிகிற முமுக்ஷுக்களுடைய ஜீவதசையை ஒரு விலக்ஷணமான யாக ரூபமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதில் உலகத்தில் வழங்கும் யாகத்தின் அங்கங்களுக்கு ஸமமாகப் புதுமாதிரியான (அதாவது நினைவு ரூபமான) யாகஅங்கங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. [ஹவிஸ் ஸமர்ப்பணத்தையும் (அதாவது ஒரு தேவதையின்பொருட்டு அக்னிமூலமாக ஒரு பதார்த்தத்தைக் கொடுப்பதையும்) அந்த ஹவிஸ் ஸமர்ப்பணத்தை ப்ரதானமாக (அங்கியாக) வுடையதும் இதரமான அங்கங்களோடு (அதைச்சேர்ந்த மற்ற ஸங்கதிகளோடு) கூடியதுமான முழு வ்யாபாரத்தையும் யாகம் என்கிற பெயரால் சொல்லுகிறது.] அது சொல்வதாவது— இப்படி அறிந்தவனுடைய யாகத்துக்கு ஆத்மா எஜமானன், சிரத்தை என்று சொல்லப்பட்ட தெய்வபக்தி யஜ்ஞபத்நீ, உடம்புதான் விறகு, மார்பு அக்னிகுண்டம், உடம்பு மயிர்கள் பரிஸ்தரணம், குடுமி தர்ப்பக்கட்டு, ஹ்ருதயமானது யூபஸ்தம்பம், ஆசையானது நெய், கோபம் பசு, ஆலோசிக்கும்படியான அறிவு அக்னி, உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களும் அநுகூலமானவை என்கிற அறிவு தக்ஷிணை, வாக்கு ஹோதா என்று சொல்லப்பட்ட ருத்விக், பிராணன் - உத்காதா என்று சொல்லப்பட்ட ஸாமகானம் பண்ணும் ருத்விக், கண் அத்வர்யு என்கிற ருத்விக், மனது பிர்ம்மா என்கிற ருத்விக், காது அக்னீத்திரன் என்கிற ருத்விக், எவ்வளவு காலம் பிழைத்திருக்கிறானோ அதுவே இதற்கு தீக்ஷாகாலம், புஜிக்கப்படுவதும் குடிக்கப்படுவதும் ஸோமபானம், இவன் விளையாடுவதே உபஸத் என்கிற யாகம், இவன் ஸஞ்சரிப்பது உட்கார்ந்திருப்பது எழுந்திருப்பது இவைகள் ப்ரவர்க்யம் என்கிற யாகம், முகம் ஆஹவநீயம் என்கிற அக்னி, ஹோமம் பண்ணப்படும் திரவியம் அறிவு(அதாவது இந்த ஆத்மா பகவானுடையது, அதை அவனுக்கே கொடுத்துவிட்டேன், என்னுடையதில்லை என்கிற அறிவு) ஸாயங்காலமும் ப்ராத:காலமும் ஸாப்பிடுகிறது என்பது ஸமித்துக்கள், ஸாயங்காலம் ப்ராதஃகாலம் மத்யான்னகாலம் இவைகள் ஸாயம்ஸவநம், ப்ராதஸ்ஸவநம் மாத்யந்தினஸவநம் என்கிற மூன்று ஸவநங்கள், பகல் இரவுகள் தர்சபூர்ணமாஸங்கள் என்கிற இஷ்டிகள், பக்ஷங்களும் மாஸங்களும் சாதுர்மாஸ்யங்கள் என்கிற யாகங்கள், ருதுக்கள் பசுபந்தங்கள் என்கிற யாகங்கள், வருஷங்களும் அவைகளின் உட்பிரிவுகளும் அஹர்கணங்கள் என்கிற யாகங்கள். இப்படிப்பட்ட யாகமானது எல்லா

பட்ட உபாஸகனுடைய 2 ஜீவனமானது (பூமியில் பிழைத்திருப்பதானது) யாகமானது, ஸத்ரே (ஸதி) - அவப்ருத ரூபமாக வர்ணிக்கப்பட்ட மரணத்தினாலே முடிக்கப்பட்டபோது (அதாவது நான் மரணமடைந்தபோது என்று தாத்பர்யம்) அவப்ருதாந்தமாக முடிக்கப்பட்டபோது, நிஜ - தன்னுடையதான, ஸத்ம-ஸ்தானமான பரமபதத்தில், வீட்டில், ஸமீபே - ஸமீபத்தில், அக்னிஹோத்திர கிரஹத்தில், விஹாரம் - ஐச்சிகஸஞ்சாரத்தை, வேதிதேசத்தை, ப்ராபயிஷ்யந் - அடைவிக்கப்போகிறவராய்க்கொண்டு, மாம்-என்னை, ஜ்வலநமிவ - அக்னியைப்போல, பவத்யோ: - உங்களிடத்தில் அதாவது உத்தராரணி அதராரணி என்கிற இரண்டு அரணிக் கட்டைகள் போலொத்த உங்களிடத்தில், ஸம்யக் - நன்றாக அதாவது நிச்சயமாக, சாஸ்திரோக்தமான வேதருக்கைச் சொல்லி ஸரிவர, ஆரோபயிஷ்யதி - அக்னியை ஆரோபணம் (ஏற்றுவது) செய்வதுபோல் ஒப்புவிக்கப்போகிறார்.

(கருத்து) ஓ பாதுகைகளே! இப்படி நீங்கள் ஆச்ரிதனை என்னை யாதொரு தீங்கும் வாராதபடி கடைசிகாலம் வரையில் காப்பாற்றிவிட்டீர்களேயானால் மேல் என்ன நடக்கப்போகிறது தெரியுமோ? அவன் தன்னாலே முதல் முதலிலே வரிக்கப்பட்ட உங்களைப்பற்றியும், நீங்கள் எனக்காக அனுஷ்டித்திருக்கிற சரணாகதியைப்பற்றியும், அவன் தானே ஜனனகாலத்தில் என் விஷயத்தில் செய்தருளிய ஜாயமானகடாக்ஷரூபவரணத்தைப் பற்றியும், உங்களாலே எனக்கு ஏற்படுத்தப்பட்ட அவனுடைய அந்திமஸாக்ஷாத்காரத்தைப் பற்றியும் இப்படி பல ப்ரகாரமான

கைப்பொருளையும் தக்ஷிணையாகக் கொண்டது. மரணமே இந்த யாகத்துக்கு அவப்ருதஸ்நாநம். இது வயது சென்றால் முடிவதான அக்னிஹோத்ரம் (அதாவது ஆயுள் உள்ளவரையிலும் செய்யவேண்டியதான அக்னிஹோத்ரம்).

2 இந்த சப்தத்தால் பக்தன் பிரபன்னன் இரண்டு பேர்களையும் சொல்லலாம். ஒருவனுடைய உபாஸநம் (த்யானம்) யாவதாயுஷமானது, நிரந்தரமுமானது. மற்றொருவனுடைய உபாஸநம் க்ஷணிகமும் ஒரே தடவை செய்யவேண்டியதுமானது. இவ்வளவே இருவர்களுக்குமுள்ள பேதம்.

நிர்ப்பந்தங்களால் அதிநிக்ருஷ்டனுனாலும் ஆச்ரிதனுன என்னை ஒருபடியாலும் கைவிட அசக்தனுய் பரமபலத்தை எனக்குக் கொடுத்தே தீரவேண்டியவனுய்க்கொண்டு வேதாந்தத்தில் ஒரு யாகரூபமாக வர்ணிக்கப்பட்ட என்னுடைய ஜீவதசையானது மரணரூபமான அவப்ருதஸ்நானத்தோடு முடிந்தபோது என்னைத் தன்னுடைய உத்தமஸ்தானத்தில் கொண்டுபோய் ச்ருதியில் சொல்லியபடி யதேச்சமாக ஸர்வலோகங்களிலும் ஸஞ்சரிக்கும்படிக்கும், யதேச்சமான ரூபங்களை எடுத்துக்கொண்டு யதேச்சமாக ஸர்வவிஷயங்களையும் அநுபவிக்கும்படிக்கும், பஞ்சோபநிஷந்மந்த்ராத்மகமான திவ்ய சரீரத்தையும், அபஹதபாப்மத்வாதியான அஷ்டாகுணுவிர்பாவத்தையும், ஜ்ஞாநசக்த்யாதிஷாட்குண்யத்தையும் எனக்குக் கொடுத்து கிங்கரத்வாதிராஜ்யத்தில் முடிசூட்டி எல்லா விபூதிகளோடும் சேர்ந்த தன்னைப் பரிபூர்ணமாக அநுபவிக்கும்படிக்கும் செய்வதின்பொருட்டு ஸ்ரீரங்கநாதன் தன்னுடைய வஸ்துவான என்னை இந்த சரீரத்திலிருந்து வாங்கி எனக்கு பரம புருஷகார பூதைகளும் என்னைப் பரம புருஷார்த்தத்தை அடைவிப்பிப்பதில் பத்தகங்கணர்களுமான உங்களிடத்தில் மறுபடியும் விச்யுதி வாராதபடி ஒப்புவிக்கப் போகிறுன். என்னை இப்படி இந்த சரீரத்திலிருந்து வெளிப்படுத்தி உங்களிடம் ஒப்புவிப்பது எப்படிப்போலிருக்கிறதென்றால், ஆஹிதாக்நியான ஒரு வைதிகன் ஜ்யோதிஷ்டோமாதி யாகங்களைச் செய்துமுடித்து அவப்ருதஸ்நாநமானதும் தன்னுடைய தார்யாக்னியை தன்னுடைய கிருகத்தில் அக்னிஹோத்திர சாலையில் அதற்கேற்பட்ட வேதியில் ஸ்தாபித்துப் பின்னிட்டு யதேச்சமாக அதை நித்ய நைமித்திகாதி கர்மாக்களில் யாவதாயுஷம் விநியோகிக்கும் பொருட்டு அதை வேதோக்த மந்த்ரத்தைக் கொண்டு ஸாவதானமாக யாகசாலையிலுள்ள அக்னிகுண்டத்திலிருந்து க்ரஹித்து, உத்தராரணி அதராரணி என்கிற இரண்டு அரணிக்கட்டைகளில் சாஸ்திரப்படி ஆரோபணம் செய்வது போலிருக்கிறது. இப்படிப்பட்ட பரம புருஷார்த்தம் எனக்கு உங்களாலேயே கிடைக்கப்போகிறது. இந்த பூமியில் இச்சரீரத்தோடு என்னை நீங்களே காப்பாற்றிவருவதுபோல், இந்த தேஹாநந்தரத்திலும் நீங்களேதான் அர்ச்சிராதி புருஷர்கள் ஸஹிதமாய் என்னை நடத்திப்போய் பரமபதத்தையும் அடைவிப்பித்து க்ஷேமப்படுத்தப் போகிறீர்கள்—என்று சொல்லி மனோரதிக்கிறார்.

பாதுகாவிஷயத்தில் சொன்ன ரீதியில் ஸதாசார்யர்கள்தான் ஒரு ஜீவனை இங்கு அநிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களை அநுக்ரஹித்துக்காப்பாற்றுகிறார்கள். அப்படியே மரணாநந்தரமும் ஜீவர்கள் பகவானாலே இந்த சரீரத்திலிருந்து வெளிப்படுத்தப்பட்டதும் அவர்களிடமே ஒப்புவிக்கப்பட்டு அவர்களாலேயே ப்ரதாநமாக அர்ச்சிராதி மார்க்கத்தில் வழி நடத்தப்பட்டுப் பரமதத்தைச் சென்றடைந்து அவர்களுடைய திருவடிவாரத்திலேயே மன்னியிருந்து அவர்களோடு பரிபூர்ணப்ரம்மாநுபவம் பண்ணுகிறார்கள் என்பது இதின் கருத்து. (23)

அவ:— இப்படி மனோரதித்துத் தேஹாநந்தரம் வரப்போகிற பரமபுருஷார்த்தத்தைப்பற்றி ஸம்சயமும் சிந்தையுமற்றவராய் நடுவில் வந்த ஆகிஞ்சந்யாநுஸந்தானத்தால் ஏற்பட்ட அவஸாதத்தையும் மறந்து 989- 990-வது சுலோகங்களில் சொன்ன ரீதியில் இங்குள்ள அநுபவத்திலேயே ஈடுபடுவதைச் சொல்லுகிறார் மேல் மூன்று சுலோகங்களால்—

(கூகூச) வுநரபுநரநிவாஸெ2ஹெ2நம் ஸஹ்யஜிநெஸா:
வுலிநமயி வ வெ ஸ ய ம வு ணநொவ ஹநா
லாசு । வரிணதி ஶரீரெ வாதுகெ யத்ர
வும்ஸா° கூவஸி நிமதிதா ஶாஹ்ுதம் ஜெள
ஹிரஜு ॥

(ப-ரை) ஹெ வாது-கெ - ஸ்ரீராமப் பாதுகையே! வுண்யம் - பாவனமானதும், அதாவது பாபங்களைப் போக்கக் கூடியதும், (அதனாலேயே) வுநஃ - மறுபடியும், (மறுபடியும் மறுபடியும் என்று ஆவர்த்தி இவ்விடம் அபிப்ரேதம்) அதாவது- ஒருஜந்மம் ஸ்ரீரங்கத்தில் வஸித்து மரித்த பிறகு பல தடவைகள் என்று தாத்பர்யம். உதரநிவாஸ - கர்ப்பவாஸத்தை ஹெநம் - வெட்டுகிறதுமான, அதாவது- போக்குகிறதுமான, ஸஹ்யஜிஸெஸா: - காவிரியாற்றினுடைய, வுலிநம்-இந்த மணல்மேட்டில், (இது உபயகாவேரியின் நடுவிலகப்பட்ட மொத்த ஸ்ரீரங்கப்ரதேசத்திற்கும் உபலக்ஷணம்) கூவஹலாஸு - ப்ரம்மப்ராப்தி கிடைக்கிறவரையில், அதா

வது— மறுபடியும் ஜந்மம் எடுக்காமல் ப்ரக்ருதிஸம்பந்தத்தை அறுத்து மோக்ஷத்தை அடைகிறவரையில், ஊயிவஸெயம் - வஸிக்கக் கடவேன், அதாவது— வஸிக்கும்படியாகச் செய்யவே ணுமென்கிற கோரிக்கையைச் சொல்லுகிறது. யத்ர- யாதொரு மணல்குன்றிலே, வஷாஂஸாஂ - மனுஷ்யர்களுக்கு, ஶரீரெ - சரீரமானது, வரிணதிஂ (ஸதி) - பரிணமத்தை (மாறுதலை) அடையும்போது, அதாவது— சரீரமானது பால்யம், கௌமாரம், யௌவநம், வார்த்தகம், மரணம் என்கிற அவஸ்தைகளைக் கிரமேண அடைந்து கொண்டிருக்கும்போது, நிமஂதீதா - வேதங்களால் கொண்டாடப்பட்டவளான, ஐவஂஂதீ, ஶாஶ்வதஂ - அழிவில்லாததான, அதாவது- எப்போதும் உள்ளதான, ஊஷிரஂதஂ— சிரோபூஷணமாக ஊவி - ஆகிறுயோ.

(கருத்து) ஓ பாதுகையே! உனக்கு வாஸஸ்தானமான இந்த உபயகாவேரிபரிஸரித்திலுள்ள திவ்யதேசமானது மிக வும் பாவனமானது. ஸம்ஸாரஹேதுவான ஸகலபாபங்களையும் போக்கத்தக்கது. அதனுலேயே இங்கு வஸிப்பவர்களுக்கு மறு படியும் மறுபடியும் கர்ப்பவாஸம் நேரிடுவதாகிற மஹாதுக்கத்தை அதிசீக்கிரத்தில் போக்கடிக்கத்தக்கது. இவ்வளவோடு மட்டும் இல்லை இந்த திவ்யதேசத்தின் பெருமை. ஜந்மாந்தரஸுக்ரு தத்தால் யாதொரு மனுஷ்யாளுக்கு இந்த ஸ்ரீரங்கவாஸம் நிரந்த ரமாக லபிக்கிறதோ, அவர்களுக்கு இந்த ஸததபரிணமியான (எப்போதும் மாறிக்கொண்டேயிருக்கிற) சரீரமானது சைசவம், பால்யம், கௌமாரம், வார்த்தகம், என்கிற அவஸ்தாவிசேஷங் களை அடைந்துகொண்டிருக்கும்போதும் மறித்த பிறகும், வேதங் களால் கண்டுபிடிக்கத் தகுந்தவளும் கொண்டாடத்தகுந்தவளு மான நீ வாஸாராம்பகாலம் தொடங்கி ஸர்வாவஸ்தைகளிலும் இவ்விடத்திலும், மரணநந்தரம் மோக்ஷத்திலும் இடைவிடாத படி சாசுவதமான சிரோபூஷணமாம்படியான மஹா பாக்யம் கிடைக்கிறது. (அதாவது- அவர்கள் இங்குள்ள காலம் முழுவதும் ஸர்வாவஸ்தைகளிலும் உன்னைச் சென்றடைந்து தலையில் ஸாதித் துக்கொள்ளுகிருர்கள். மரணநந்தரம் பரமபதத்தில் போய் உன்னை எப்போதும் சிரஸால் தரிக்கிருர்கள்). இதைக் காட்டிலும் மேலான புருஷார்த்தம் வேறென்றுண்டோ? இப்படிப்பட்ட

திவ்யதேசவாஸம் ஜந்மாந்தர பாக்ய வசத்தால் கிடைக்காதவர்களுக்கு இந்த பரமபுருஷார்த்தம் பூமியில் கிடைக்குமோ! அவர்கள் ப்ரபந்நர்களானாலும் மரணாநந்தரம் பரமபதத்தை அடைந்த பிறகுதானே லபிக்கும். ஆகையால் ஆச்ரிதனான அடியேனுக்கு இப்போதே துடக்கமாக ஆத்மாந்தமாய் இந்த பரமபுருஷார்த்தம் சாச்வதமாகக் கிடைக்கும்படி இந்த * திவ்யதேசத்திலிருந்து இனி விச்யுதி வாராமல் யாவஜ்ஜீவம் யாவத்ப்ரஹ்மப்ராப்தி, இந்த உபயகாவேரீ ப்ரதேசத்திலேயே வஸித்துக் கொண்டு இனி ஸர்வாவஸ்தைகளிலும் இடைவிடாமல் உன்னைச் சிரஸால் தரித்து அனுபவிக்கும்படி நீ அனுக்ரஹிக்கவேணும். இதுவே யான் இங்கு வேண்டுவது என்று கோருகிறார். (24)

*ஸமீசீன சாஸ்திரஸம்ப்ரதாயப்படி திவ்ய தேசவாஸமும் திவ்ய தேசத்தில் மரணமும் பரம்பரையாக(அதாவது இந்த ஜன்மத்திலேயோ அல்லது சீக்கிரத்தில் சில ஜன்மாந்தரங்களிலேயோ பக்தி ப்ரபத்திகளாகிற மோக்ஷோபாயங்களில்மூட்டியோ அவைகளைப்பூர்த்திசெய்வித்தோ) அவச்யம் மோக்ஷகாரணமாமேயொழிய ஸாக்ஷாத்(உடனே அதனாலேயே) மோக்ஷோபாயமல்லாதபடியாலும், “ வரிணஉதிஶரீரெ ” என்கிற பதஸ்வாரஸ்யம் கடைசி பரிணாமமான மரணத்தை மட்டும் காட்டாமல் துடர்ச்சியான சைசவம் முதல் வார்த்தகம் வரையிலுள்ள அவஸ்தா விசேஷங்களையும் காட்டுகிறபடியாலும், ‘ஞூவ ஹயா ஊாக ஊயிவலெயம’ என்பது வாளாரம்பகாலம் துடங்கி உபாயபூர்த்தியடைந்தவனுக்கு ப்ராக்ருத சரீரவியோகம் வரையிலுள்ள காலத்தையும், உபாயஸித்தியையடையாதவனுக்கு உபாயபூர்த்தி ஏற்படுகிற சரீரத்தின் முடிவுவரையிலுள்ள காலத்தையும் ஸூசிப்பிக்கிறபடியாலும்,“வாஙஃ”என்கிற பதத்துக்குஉபாயபூர்த்தியை அடைகிற வரையில் புனர் ஜன்மம் நீங்காதாகையால் ப்ரமாணத்தையனுஸரித்து “ வாஙஃ வாஙஃ ” என்று வீப்ஸாயஉம் கொள்வதே உசிதமானபடியாலும், க்ருதோபாயனுக்கு (உபாயபூர்த்தியடைந்தவனுக்கு)திவ்யதேசவாஸத்தால் புருஷார்த்தானுபவம் இப்போது துடக்கமாகவே ஏற்படுகிறபடியாலும் இந்த சுலோகத்துக்கு க்ருதோபாயர்கள் அக்ருதோபயர்கள் இருவர்கள் விஷயத்துக்கும் சாஸ்திரத்துக்கும் ஒத்தபடி கீழ்கண்டபடியே பாவம் கொள்வது உசிதம். இவிடம் ஸ்ரீரங்கவாஸத்துக்குச்சொன்னது மற்ற திவ்ய தேசவாஸங்களுக்கும் உபலக்ஷணம். ஆகையால் மற்ற திவ்யதேசங்களும் இந்த சுலோக தாத்பர்யத்துக்கு விலக்கில்லை என்பதும் அறியவும்.

இந்த ச்லோகத்தால் ஸதாசார்யாளுடைய வாஸஸ்தானமே முமுக்ஷுக்களுக்கு உத்தேச்யமான வாஸஸ்தானம் என்பது ஸுஸி தமாகிறது. ஏனென்றால் நமக்கு இங்குமங்கும் (பூமியிலும் பரமபதத்திலும்) ஸதாசார்யர்களுடைய அனுபவகைங்கர்யங்களே பரமபுருஷார்த்தமும் ஆத்மக்ஷேமகரமும். எப்படி பகவத்க்ஷேத்ரம் திவ்யதேசமாகிறதோ, அப்படியே தத்பக்தர்கள் வஸிக்கும் க்ஷேத்ரமும் யாதானாலும் திவ்யதேசமாம் என்கிற விஷயம் * சாண்டிலீவ்ருத்தாந்தத்தால் ப்ரமாணஸித்தம். (௨௪)

அவ:— ஆகையால் அப்படி உன்னால் அனுக்கிரஹிக்கப் பட்டு அநேக வருஷகாலங்கள் இங்கு உன்னைப் புகழ்ந்து, உலகத்துக்குத் தெரிவித்துக்கொண்டு அனுபவிக்கக்கடவேன் என்கிறார் மேல் ச்லோகத்தில்.

(௩௩௫) பஹுவிதபுருஷார்த்தச்ரேணிஸீமாந்தபூதாம்
ஹரிசரணஸரோஜந்யாஸஸந்த்யாஸந்ந்
த்யா: । ஸ்ரிதவத்ஸலயஸீமாம் பாதுகே ஸா
வயம் ஸ்வாம் ப்ரதிதஸர்பாதெனா ப்ராவயேயம்
ஸத்யஜிப ॥ (௨௫)

(ப-ரை) ஹே பாதுகே-ஸ்ரீராமபாதுகையே! பஹு வித - பலவிதமான, புருஷார்த்த - தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற நான்குவித புருஷார்த்தங்களுடையவும் அவைகளுடைய உட்பிரிவுகளுடையவும், ச்ரேணி - கூட்டத்தினுடைய, ஸீமா - எல்லையினுடைய, அந்தபூதாம் - கடைசி முடிவாக இருக்கிறவளும், அதாவது எல்லா புருஷார்த்தங்களுக்குள்ளும் உத்தமபுருஷார்த்தமாக இருக்கிறவளும், ஹரி-

* சாண்டிலீ என்னும் மிகவும் பகவத்பக்தையான ஒரு ஸ்திரீ பகவத்க்ஷேத்ரமல்லாத ஒரு இடத்தில் வஸிக்கக்கண்டு கருடன் இவள் இப்படிப்பட்ட இளப்பமான இடத்தில் வஸிக்கிறாளே என்று மனதால் நினைத்தவுடன் அவருடைய சிறகெல்லாம் அவள் வஸிக்கப்பட்ட இடத்தைக்குறைவாக நினைத்தஅபசாரத்தால் உதிர்ந்துபோய் அவருக்கு ஸஞ்சரிக்கமுடியாமல் போய்விட்டது. பிறகு அப்படி குறைவாக நினைத்ததற்கு அபசாரக்ஷாபணம் பண்ணிக்கொண்டதும் மறுபடியும் முன்போல் சிறகுகள் உண்டாய்விட்டன என்று ப்ரமாணம்.

பெருமாளுடைய, வரணஸரோஜ-தாமரைப்பூப்போலொத்த திருவடியினுடைய (அல்லது திருவடியின்மேல), ந்யாஸ - வைப்பதினாலே(அல்லது ஸமர்ப்பிக்கப்பட்டிருப்பதினால்) யந்யாம்- நல்ல பாக்யம் பெற்றவளும், ஸாரத - ஸ்ரீபரதாழ்வானுடைய, ஸமய - ஸித்தாந்தத்தினாலே, அதாவது ஸ்ரீபாதுகையே பகவானைப்போல் பரதேவதையாக ஆராதிக்கப்படத்தகுந்தது என்று காட்டப்பட்ட கொள்கையினாலே, விஸாம் - உலகத்துக்கு ப்ராப்தமானவளுமான, த்வாம் - உன்னை, ஸாவயநு - தியானித்துக்கொண்டு (அல்லது கொண்டாடிக்கொண்டு), அநந்யஃ - உன்னைத்தவிர வேறு ப்ராப்ய ப்ராபகங்கள் (பலனும் உபாயமும்) ஒன்றும் உடையவனல்லாதவனான நான், இஹ - இந்த ஸ்ரீரங்கதிவ்யதேசத்திலே, தே - உன்னுடைய, ஸம்ருத்திம் - பெருமையை, அதாவது குணவிபூத்யாதிகளுடைய பரிபூர்ணதையை, ஶதம் ஸமாஃ - நூற்றுக்கணக்கான (அதாவது அநேக) வருஷங்கள், ஶ்ராவயேயம் - எல்லாருக்கும் தெரிவித்துக்கொண்டிருக்கக்கடவேனாக.

இச்சுலோகத்திலுள்ள பாதுகாவிசேஷணங்கள் பூமிபரமாயும், ஸ்ரீஆழ்வார் முதலிய ஸதாசார்யாள் பரமாயும் அர்த்தங்கள் கொடுக்கும். பூமிவிஷயமான அர்த்தமானது பாதுகாவிஷயமான அர்த்தத்துக்கு உபமானமாகும். அதாவது இப்படிப்பட்ட ஒரு நல்ல தேசத்தினுடைய ஸம்ருத்திபோலானது பாதுகா ஸம்ருத்தி என்று சொன்னதாகும். ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யாள்பரமான அர்த்தம் சுலோகத்துக்கு உள்கருத்தாகும். அவையாவன— (1) பூமிவிஷயத்தில் பஹுவிய - பலவிதமான, அதாவது, நாநாஜாதிகளான, புருஷ - புருஷர்களென்ன, அதாவது ஜனங்களென்ன, தநம் - தநங்களென்ன, அதாவது ஸம்பத்துக்களென்ன, க்ராம - கிராமங்களென்ன, ஸீமாந்தரவாம் - தேசத்தின் எல்லைகளிலுள்ள காடு முதலானதுகளென்ன இவைகளையுடையதும், ஹரி-பெருமாளுடைய, வரணஸரோஜ - தாமரைப்பூப்போலொத்த திருவடியினுடைய, ந்யாஸ - வைப்பதினாலே, யந்யாம் - பாக்யம் பெற்றதும், அதாவது பகவான் எழுந்தருளியிருக்கும்

படியான பலதிவ்யதேசங்களையுடைத்தாயிருப்பதால் பெருமை பெற்றதும் *, ஹாத - உலகத்தைப் பரிப்பதற்கு (அதாவது ஆளுவதற்கு) ஏற்பட்டவர்களுடைய, ஸஉய - கொள்கையி ஞலே அதாவது நல்லதான ராஜ்யநீதியிஞலே, ஷிஙாஂ - நிரு பத்ரவமாக ஸித்தித்ததுமான ஒரு நல்ல தேசத்தினுடைய ஸம்ருத்திபோலொத்த ஸம்ருத்தியையுடையது பாதுகை என்று உபமானம். (2) ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யாள் பரமான அர்த்தமாவது— “ பைஹாவிய வாஹாஷாஜ ரு ஹ்ராஜவஸீஙாஞரவாநு ” எல்லா நல்ல புருஷார்த்தங்களைக் காட்டிலும் மேலான புருஷார்த்தமாக இருப்பவர்களும், ஹரி வாணஸரொஜந்ராஸயந்ராநு - ஸ்ரீபகவானுடைய திருவடி களில் ஸமர்ப்பிக்கப்பட்ட பரமுடையவர்களாய் கிருதகிருத்யர் களும் கிருதார்த்தர்களுமானவர்களும், ஹாதஸஉயஷிஙாநு— ஹாத - (பாவம் ராகம் தாளம் இவைகளில் ப்ரவீணரான) ஸ்ரீமந் நாதமுனிகளுடைய, ஸஉய - கொள்கையிஞலே (அதா வது ஸ்ரீ ஆழ்வாரே ப்ரபன்னஜனஸந்தானகூடஸ்தரான பரமா சார்யன் என்று கைக்கொண்டு அப்படியே உலகத்துக்குக் காட் டப்பட்டதிஞலே), ஷிஙாநு - உலகத்துக்கு ப்ராப்தமானவர் களுமான ஸதாசார்யர்களுடைய பெருமையைக் கொண்டாடி உலகத்துக்குக் காட்டிக்கொண்டு அந்த பரமபுருஷார்த்த அநு பவத்தோடு ஸ்ரீரங்காதி திவ்யதேசங்களில் ஸாதுக்கள் யாவஜ் ஜீவம் காலயாபனம் பண்ணக்கடவர்கள் என்கிற உள்கருத்து.

(கருத்து-) வாராய் பாதுகையே! உன்னுடைய அநுபவ மானது எப்படிப்பட்டதென்ருல் உலகத்தில் நல்ல புருஷார்த்தங் களென்று சொல்லப்பட்ட பல,ஸங்க,கர்த்ருத்வத்யாக பூர்வகமாய் கேவல பகவதாராதனை வேஷமான நித்திய நைமித்திக காம்யங்க

---

* இந்தப் புதத்தைக்கொண்டு திருவிக்ரமாவதாரத்தில் பகவா னுடைய அடிவைப்பிஞல் தன்யமானது என்று சொல்லக்கூடுமாஞலும் ஸர்வபூமண்டலத்துக்கும் ஸாதாரணமாய் ஏதோ ஒரு ஸமயத்தில் நடந்த விஷயத்தைச் சொல்வதைக் காட்டிலும் அர்ச்சாவதாரத்தில் பகவான் நித்யவாஸம் பண்ணப்பெற்ற திவ்யதேசத்தைச் சொல்வது விசேஷம்.

ளாகிற பற்பல ஸத்கர்மரூப தர்மங்களைக் காட்டிலும் மேலான தாய், அத்தர்மங்களுக்கும் சாஸ்திரீயமான ஐஹிகபோகங்களுக்கும் ஸாதனமான க்ருஹ, க்ஷேத்ர, ஆராம, தனதான்யாதிகளான ஸம்பத்துக்களுக்கும் மேலானதாய், தர்மாவிருத்தங்களாய் ப்ராரப்தஸுக்ருத விசேஷ மூலமாக லீலா சுகத்துக்கு பால்வார்க்குமாப் போலே "க்ஷயாராமே ராஹ்யு ஸேவ்யாம் ஸ்வர்க ஹோமாம் ஸ்வர்வா நாஷம் மிதாநு | ஊயாதி யயாயி நாம் நித்யம் சுவவமநூவ்யுஷோ ஹரி:" என்கிறபடி பகவானாலே ஸ்வாச்ரிதர்களுக்கு ஸுக்ருதபலமாக இடையில்ஸங்கல்பிக்கப்படுகிற(பஞ்சேந்திரிய திருப்திகரங்களான) புத்ரமித்ரகளத்ரக்ருஹக்ஷேத்ரதனதான்யாதிஸம்ருத்திகளால் ஏற்படுகிறஐஹிகபோகங்களைக்காட்டிலும் மேலானதாய், இவைகளெல்லாவற்றைக்காட்டிலும் எல்லையில்லாதபடி உத்க்ருஷ்டமான ப்ரக்ருதி விநிர்முக்தமாய் ஸ்வஸ்வரூபாவிர்பாவத்தோடுகூடிய பகவத்ப்ராப்திக்கும் மேலானதாய், அந்த பரிபூர்ணபகவதனுபவத்தின் பரமகாஷ்டா பூதமாய் இதற்கு மேலானது வேறொன்றில்லாதபடி புருஷார்த்தங்களின் எல்லை நிலத்தில் நிற்கும் பரம புருஷார்த்தமன்றோ அது? ஆச்ரிதர்களுக்கு உன்னுடைய அனுபவம்தான் அப்படிப்பட்டதென்றால் அதைக்கொடுக்கும்படியான நீ எப்படி இருக்காய்? 'ஸர்வகந்த: ஸர்வரஸ:', "ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்றும் சொல்கிறபடி பரமபோக்யமானவனும் ஆச்ரித ஸமஸ்த பாபஹரனும், ஸமஸ்த தாபஹரனும், பரமஸுகிர்த்தாய், ஸர்வேசுவரனுமான பகவானுடைய செந்தாமரைப் பூப்போலொத்த அதிஸுகுமாரமாய், மனோஹரநஹாரியாய், திவ்யகந்த திவ்யரஸோபேதமாய் அத்யந்த ஸுகப்ரதமான திருவடி மலர்களை ஸர்வதா தரிக்கப்பெற்று அதனால் பரமபாக்யவதியாய் பரமாநந்த ஸ்வரூபியாய் விளங்குகிறாய். இப்படி நீயும் உன்னுடைய அனுபவமும் ஒப்பில்லாதபடி பரமப்ராப்யமாக இருக்க "இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவானஹமவ்யயம் | ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப" என்கிறபடி காலக்ரமத்தில் நஷ்டப்ராயமாய் போன கர்மயோக ஸ்வரூபத்தைத்தானே யதுகுலத்தில் வந்தவதரித்து அர்ஜுநமுகத்தாலே மறுபடியும் உலகத்துக்கு வெளியிட்டாப்போலே, உலகத்தில் நஷ்டப்ராயமான தர்மங்களை மறுபடியும் ஸ்தாபிப்பதற்காக பகவான் தன்னை நான்கு

ரூபமாகப் பிரித்துக்கொண்டு தசரத சக்ரவர்த்திக்கு திருக்குமாரர்களாக வந்தவதரித்து ஒரு வ்யாஜத்தை முன்னிட்டு பராதாழ்வான் முகமாக அதிரஹஸ்யமான உன்னைப்பற்றின உத்க்ருஷ்ட தர்மத்தைஉலகத்துக்கு வெளியிட்டதாலல்லவோ நீ உலகத்துக்கு ப்ராப்தமானாய். அப்படி பகவான் தன்னாலேயே பரமக்ருபா கார்யமாக நீ வெளியிடப்பட்டாலும் காலக்ரமத்தினால் உலகங்கள் உன்னை மறந்தப்ராயமாய்விட்டன. நானுன்னைப் பெற்றாப்போல் உலகங்களும் உன்னையறிந்து அடைந்து உஜ்ஜீவிக்கும்பொருட்டும் ஸ்வயம் புருஷார்த்தமாகவும் இப்படியே இந்த ப்ரபந்தம் முதலானதுகளாலே ஸர்வதா உன்னைக்கொண்டாடி உன் பெருமைகளையெல்லாம் ஸ்ரீபரதாழ்வானைப்போல் உலகத்துக்கு வெளியிட்டுக்கொண்டு அநேகவருஷகாலங்கள் இந்த ஸ்ரீரங்கவாஸம் பண்ணக்கடவேன்— என்கிறார். (25)

அவ— இப்படி த்ரிகரணங்களாலும்* ஸ்ரீபாதுகையை பூர்ணமாக அனுபவிக்கும்படி பண்ணிய தன்னுடைய அதிர்ஷ்ட வசத்தைக் கொண்டாடுகிறார் மேல் சுலோகத்தில்—

(௨௬) திலகயஸி ஶிரோ மே ஶௌரிபாதாவநி த்வம்
ஹ்ருதயஸி மநஸி நித்யம் ஸம்ஸ்ம்ருதா பாவநா ஸ்யா: ।
வசஸி ச விஹிதைஸ் ஸ்வைஸ் ஸ்தோத்ரஸூக்திப்ரஸூநை: ப்ரீயாதா
ததிஹ பரிணதம் மே தாத்ருஶம் பாகதேயம் ‖

(ப-ரை) ஹே ஶௌரிபாதாவநி - வாராய் ஆச்ரிதவாத்ஸல்யத்தாலே அவர்களுக்கு ப்ரத்யக்ஷகோசரமாய் அவர்களைக் காப்பாற்றுவதின் பொருட்டு யதுகுலத்தில் வந்தவதரித்த பகவானுடைய பாதுகையே! மே-என்னுடைய, ஶிர:-தலையை, திலகயஸி - திலகமுள்ளதாகச் செய்கிறாய், அதாவது அலங்கரிக்கிறாய், மநஸி - மனதிலே, நித்யம் - எப்பொழுதும் (இந்த பதத்தை திலகயஸி, ப்ரீயாதா என்கிற மற்ற இரண்டு க்ரியாபதங்களோடும் சேர்த்து அந்வயிக்கலாம்), பாவநா ஸ்யாரம் - நினைவு (அதாவது நிரந்தரானுபவத்தால் ஏற்படுகிற

* சிரஸ்ஸால் அநுபவிப்பதை 24-வது சுலோகம் சொல்லிற்று. மனதாலும் வாக்காலும் அனுபவிப்பதை 25-வது சுலோகம் சொல்லிற்று. மூன்றையும் சேர்த்து இந்த சுலோகம் சொல்லுகிறது.

ப்ரத்யக்ஷதர்சனஸமமான நினைவு ரூபமான, ஆக்ருதிம் - மற்றொரு உருவத்தை, ப்ரஜஸி - அடைகிறாய், வசஸி ச - வாக்கிலேயும், ஸ்வை: - தன்னுடையதான, விபவை: - பெருமைகளாலே, இத்தம் - இந்த ப்ரகாரம், அதாவது இந்த ஸஹஸ்ரப்ரபந்தவ்யவஸாயத்தாலே, வ்யக்திம் - ப்ரகாசத்தை, ப்ரயாதா (அஸி) - அடைந்தவளாக இருக்கிறாய், தத் - ஆகையினாலே, இஹ - இந்த உன் விஷயத்திலே, மே - என்னுடைய, தாத்ருசம் - அப்பேர்ப்பட்ட, அதாவது மனோவாக் காயங்கள் மூன்றும் சேர்ந்து பரிபூர்ணமான, ஸாமக்ர்யம் - ப்ரபத்திரூபமான அதிருஷ்டமானது, பரிணதம் - பலித்து விட்டது.

(கருத்து.)இந்த பூமியில் வேண்டின ரூபம் கொண்டு மனுஷ்யர்களுக்கு எளியனாய் வந்தவதரித்து, ஆச்ரிதர்களைத்தேடிக் காப்பாற்றும்படியான வாத்ஸல்ய குணமுள்ள பகவானுடைய ஸஹதர்மசாரிணீயான பாதுகையே! நீயும் அவனைப்போன்ற ஸ்வபாவமுடையவளன்றோ? அந்த உன்னுடைய குணமானது என் விஷயத்தில் ப்ரத்யக்ஷமன்றோ? எப்படி என்கிறாயோ? நீதான் என் சிரஸில் வந்து நித்யமாகக் குடிகொண்டுவிட்டாயே! உன் விஷயத்தில் அத்யந்தம் ஈடுபட்டு ஸர்வதா உன்னை ப்ரீதியோடு த்யானிக்கிற என் மனதிலும் நினைவினால் ஏற்படுகிற ப்ரத்யக்ஷ தர்சன ஸமமான மற்றொரு ரூபத்தோடு ஸ்திரமாக நின்று விட்டாயே! "வாக்கு அவனையல்லது வாழ்த்தாது" என்கிறபடி உன்பெருமையல்லது புலம்பாத என் வாக்கிலும் நின்று இப்படிப் பட்ட ப்ரபந்த முகத்தாலே ப்ரதிபாத்யமானையாய் உலகத்துக் கெல்லாம் சாச்வதமாக விளங்கா நிற்கிறாயே! இப்படிப்பட்ட பாக்யம் பரம அகிஞ்சனனான எனக்கு எப்படி லபித்தது? அன்று என்னைக்கொண்டு நீ செய்வித்துக்கொண்ட த்ரிகரணங்களோடும் சேர்ந்து பூர்ணமானதும், ஸர்வத்தையும் ஸாதிக்கவல்லதுமான மிகுந்த ப்ரபாவமுள்ள ப்ரபத்தி என்கிற உபாய விசேஷத்தால் அல்லவோ எனக்கு இப்படிப்பட்ட ஸம்ருத்திகள் விளைந்தன. த்ரிகரணங்களோடும் சேர்ந்த உபாயமானது, த்ரிகரணங்களுக்கும் பூர்ணமான பலன்களைத் தந்தது, உபாயத்தின் ப்ரபாவத்தைச் சொல்லவோ! எனக்கு விளைந்த ஸம்ருத்திகளைச் சொல்லவோ!

என்று கொண்டாடுகிருர். ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யர்கள் விஷயத்தில் பூர்ணப்ரபத்திபண்ணி அவர்கள் விஷயத்திலேயே அபிஸந்தியுள்ளவர்கள் ஸ்ரீ மதுரகவிகளைப்போல இங்கு முதல் அவர்களை த்ரிகரணங்களாலும் பரிபூர்ணமாக அனுபவிக்கும்படியான பாக்யமுடையவர்கள் ஆவார்கள் என்பது இதின் உட்கருத்து.

அவ— இப்படி ஸ்ரீ பாதுகாநுக்ரஹத்தால் தனக்கேற்பட்ட பாக்யத்தைக் கொண்டாடி, அதற்குமேல், எப்படிப்பட்ட நிலைமையிலிருந்தவனுக்கு இப்படிப்பட்ட பாக்யம் லபித்தது என்று அநாதியான தன்னுடைய அப்ரபுத்த (தத்வஜ்ஞானமில்லாத) தசையைத் திரும்பிக் கடாக்ஷித்து அந்த மிகவும் இளப்பமான நிலையிலிருந்து படிப்படியாக பகவத்கடாக்ஷத்தாலுண்டான தன்னுடைய அபிவிருத்தியை க்ருதஜ்ஞதையுடன் அனுஸந்திக்கிருர் மேல் சுலோகத்தில்:—

(கூகஎ) அஜநிஷி சிரமாதௌ³ ஹந்த தே³ஹேந்த்³ரியாதி³:
ஸ்தத³நு தத³தி⁴கஸ்ஸந் ஸ்வஸ்வரூபோ⁴க்தாஹம் ப⁴வேயம் ।
அத² ஸமவத ஸர்வாஸ்வப⁴வஸ்யாதி³தா³நீம்
தவ பத³நக²ஸாம்யம் பாது³கே யத்ப்ரஜாநா: ॥

(ப-ரை) ஹே பாது³கே - வாராய் பாதுகையே! அஹம் - நான், ஆதௌ³ - முதலிலே, சிரம் - வெகுகாலமாக, (அநாதிகாலமாக என்று தாத்பர்யம்) தே³ஹ - உடம்பென்ன, இந்த்³ரிய - பதினொரு இந்திரியங்களென்ன, ஆதி³: - இவைகள் * முதலானவைகளையே என் ஸ்வரூபமாக எண்ணினவனாக, அதாவது இந்திரிய ப்ராணன்களோடு கூடிய அசேதநமான உடம்பேதான் நான், உடம்பைக்காட்டிலும் வேறானவனில்லை என்கிற எண்ணமுள்ளவனாக, அஜநிஷி - இருந்தேன், ஹந்த - ரொம்ப கஷ்டம், தத³நு - அதற்குப் பிற்பட்ட தசையில் அதாவது வேதங்களை ஸாங்கமாக அத்யயனம் பண்ணி பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தை அதிகரித்து, கர்மகாண்டத்தின் அர்த்தங்களை நிர்ணயம் பண்ணினபிறகு, தத³தி⁴கஸ்ஸந் - அதைக் காட்டிலும் மேலானவனாக உணர்ந்தவனாய்க்கொண்டு, அதாவது கர்மங்களுக்குக் கர்த்தாவும் கர்மபலபோக்தாவுமான நான் அசேதநமான உடம்பைக்காட்டிலும் வேறாய் அந்த உடம்புக்

* முதலான என்பதால் ஐந்து ப்ராணங்கள் விவக்ஷிதம்.

குச்.சேஷியாயிருந்து நடத்தும் ஜ்ஞாநஸ்வரூபியான ஆத்மா என்கிற வஸ்துவென்று அறிந்தவனாய், ஸ்வதந்த்ர: - ஸ்வதந்திரனாக, அதாவது கர்மங்களைச் செய்பவனும் நானே, அந்தக் கர்மங்களால் ஏற்படுகிற அதிருஷ்டத்தால் தானே உண்டாகிற சரீரம் முதலான போக்யவஸ்துக்களை அனுபவிப்பவனும் நானே, அதாவது நானே எனக்கு வேண்டிய அதிருஷ்டங்களைக் கர்மமூலமாக ஏற்படுத்திக்கொண்டு அந்த அதிருஷ்டலப்தமான போகோபகரணங்களையும் போக்யஜாதங்களையும் இன்னொருவருடைய உதவியும் ஸம்பந்தமுமன்னியில் ஸ்வதந்திரனாகவே அநுபவிக்கிறேன், என்னை நடத்துகிற வேறொரு ஈசுவரனில்லை என்கிற எண்ணமுடையவனாக, பபூவ - ஆனேன், அத - பிறகு, அதாவது யாத்ருச்சிகாதி ஸுக்ருத விசேஷங்களை வ்யாஜமாகக்கொண்டு ஜநநகாலத்திலேயே பகவானால் கடாக்ஷிக்கப்பட்டு முமுக்ஷுவாய் அப்படிப்பட்ட கடாக்ஷ விசேஷத்தாலேயே மேலும் ஸதாசார்ய ஸம்பந்தத்தைப் பெற்று அவர்களால் உபதிஷ்டமான வேதாந்தஜ்ஞாநத்தாலே 'தாஸபூதா: ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:' என்கிறபடி பகவத்சேஷதைகரூபமான ஸ்வஸ்வரூபத்தைத் தெளிந்த பிறகு, ஸ்வமேவ - பகவானுடைய வஸ்துவாகவே, அதாவது பகவானுக்குப் பரதந்திரனாக, அபூவம் - ஆனேன், இதாநீம் புந: - இப்பொழுதோவென்றால், அர்த்தஸ்வபாவத்தாலே, அதாவது பரிபூர்ணபகவத்சேஷத்வமானது அதின் எல்லைநிலமான பாகவதசேஷத்வத்தில் முடிகிறது என்கிற வஸ்துஸ்திதியைக் கண்டு, தவ - உன்னுடையவனாக, அதாவது உனக்கே அத்யந்தம் சேஷபூதனாக, அஸ்மி - ஆய்விட்டேன், (ஆகையினாலே) அஹம் - நான், ஸுஜந்மா - நல்ல ஜன்மம் உடையவனாக ஆனேன். அதாவது "ஸித்திர்பவதி வாநேதி ஸம்சயோச்யுதஸேவிநாம் । ந ஸம்சயோஸ்தி தத்பக்தபரிசர்யாரதாத்மநாம்" என்கிறபடி உனக்கே ஆள்பட்ட பிறகு, எனக்கு ஸகலபுருஷார்த்தங்களும் ஸித்தித்துவிட்டது. அநாதிகாலமாக நான் எடுத்துவந்த ஜந்மங்களில் இந்த ஜன்மம்தான் ஸபலமாயிற்று என்கிறார்.

(கருத்து-) ஓ பாதுகையே! உன்னுடைய அனுக்ரஹத்தால் இஸ்ஸம்ருத்திகளெல்லாம் எனக்கு உண்டானாலும் அவை எப்படிப்பட்ட நிலைமையிலிருந்தவனுக்கு உண்டாச்சுது பார். முதலில் அநாதிகாலமாக இந்த உடம்பில் அதைக்காட்டிலும் விலக்ஷணமானதாய் ஜ்ஞாந ஸ்வரூபியான ஆத்மாவென்று ஒன்று இருக்கிறது; அந்த ஆத்மாவுக்குக் கருவியாக மட்டும் ஏற்பட்டது இந்த சரீரம்; ஆகையால் ‘நான்’ என்று சொல்லப்பட்ட வஸ்து அந்த ஆத்மாவின் க்ஷேமத்தைத்தான் தேடவேண்டியது; அதினுடைய க்ஷேமமாவது என்ன; அதை எப்படித் தேடுகிறது, என்பதை ஒன்றுமே அறியாமல் நான் என்று சொல்லப்பட்ட வஸ்து இந்திரிய ப்ராணன்களோடு கூடிய இந்த அசேதநமான உடம்பே தான் என்று ப்ரமித்துக்கொண்டு, மிருகப்ராயமாக சரீரபோஷணாதிகளையே தேடி, பற்பலயோநிகளில் பிறப்பதும் சாவதுமாக சக்ரம்போல் சுற்றிக்கொண்டு சாஸ்திரம் என்பதையறியாமல் நான் கழித்துவந்த காலத்துக்கு ஓர் கணக்கில்லை. அந்தப்பரம துர்தசையை இப்போது நினைத்தாலும் கஷ்டமாக இருக்கிறது. பிறகு ஸுக்ருதலேச மூலமாக பகவத்கடாக்ஷத்தால் ஏற்பட்ட சாஸ்திரவச்யமான ஜன்மங்களிலும் வேதத்தின் கர்ம காண்டத்தையே பரிசயம்பண்ணி, தேஹவிலக்ஷணமான ஆத்மாவென்று ஒன்று இருப்பதாக மட்டுமறிந்து, அந்த ஆத்மாவுக்கு வேதோக்தமான கர்மங்களைக்கொண்டு ஐஹிகாமுஷ்மிக போகங்களைத் தேடுவதேதான் புருஷார்த்தம் என்று எண்ணி, அக்கர்மங்களையும் இவ்வாத்மா தானாகவே செய்து, அதன் மூலமாக அதிர்ஷ்டவசத்தாலேயே ஏற்படுகிற அக்கர்மபலன்களையும் தானாகவே புஜிக்கிறானாகையால் இவன் ஸ்வதந்திரன், அக்கர்மங்களுக்கு ஆராத்யனும் பலப்ரதனும் இவ்வாத்மாவுக்கும் எல்லா உலகத்துக்கும் நியந்தாவுமான ஈசுவரன் ஒருவன் வேண்டுவதில்லை என்கிற ஸ்வதந்திராத்ம ப்ரமத்தோடு ஆரோஹாவரோஹ ணகூபத்தில்(ஏத்தச்சால் ஜலத்தைமொண்டுகொண்டுமேலேறி அதைச்செலவழித்து மறுபடியும்கீழேஇறங்கி ஜலத்தைமொண்டு கொண்டு ஏறுவதுபோல்) ஸுக்ருதங்களைச் செய்து, ஸ்வர்க்காதி லோகங்களையடைந்து ஸுகித்து, அது ஆனதும் மறுபடியும் பூமியில் பிறந்து ஸுக்ருதங்களைச்செய்து ஸ்வர்க்காதி லோகங்களுக்கு ஏறுவதாகிற, ஆத்மாவுக்கு ஸுகலேசத்தோடும் துக்கபஹுளத்

தோடும் கழிந்த காலமும் எத்தனையோ. எவ்வளவோ காலம் அப்படியும் அல்லாடிக் கெட்டேன். “ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி: | ஜீவே து:காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே” என்கிறபடி என்னுடைய இப்படிப்பட்ட அல்லாட்டங்களையும் துக்கங்களையும்கண்டு, பரமகாருணிகனான பகவானாலே யாத்ருச்சிக ப்ராஸங்கிகாதி ஸுக்ருத விசேஷங்களை வ்யாஜமாகக்கொண்டு என்னுடைய ஜாயமான தசையில் கடாக்ஷிக்கப்பெற்று முமுக்ஷுவாய் அந்த பகவத் கடாக்ஷத்தாலேயே ஸதாசார்ய ஸம்பந்தத்தையும் பெற்று அவர்களால் உபதிஷ்டமான வேதாந்த தத்வஜ்ஞானத்தால் தெளிவை அடைந்து பகவானுக்கே சேஷபூதனாய் நிலைபெற்றேன். இதற்கும் மேலாக உன்னையாச்ரயித்து உன்னுடைய பரமானுக்ரஹத்தால் பகவத் சேஷத்வத்தின் பரமகாஷ்டையான பாகவதசேஷத்வத்தையும் தெளிந்து உனக்கேயாட்பட்டொழிந்தேன். என்னுடைய இப்படிப்பட்ட இந்த ஜன்மம்தான் எல்லா ஜன்மங்களிலும் ஸபலமானது. இனி எனக்கோர் குறையுமில்லை—என்கிறார்.

அநாதிகாலமாக தேஹாத்மப்ரமத்தோடும் ஸ்வதந்திராத்மப்ரமத்தோடும் ஸம்ஸார சக்ரத்தில் பரிப்ரமித்துக்கொண்டு துக்கத்தையே அனுபவிக்கிற இந்த ஆத்மாவுக்கு ஸுக்ருதவிசேஷ மூலமாக பகவானுடைய ஜாயமான கடாக்ஷம் லபித்த பிறகுதான் முமுக்ஷுத்வமும் ஆசார்ய ஸம்பந்தமும் ஏற்பட்டு பகவத்சேஷத்வம் நிலைக்கிறது. அந்த பகவத் சேஷத்வத்திலும் பரமகாஷ்டையான பாகவதசேஷத்வத்துக்கும் பரமாவதியான ஸதாசார்யர்களுக்கே ஆள்பட்டிருக்கும் தன்மை ஸித்தித்துவிட்டால் அதற்கு மேலான பதவியொன்றில்லை. அதுவே ஜன்மஸாபல்யம். (27)

(அவ) இப்படி ஸ்ரீபாதுகைக்கே ஆள்பட்டு அனுபவிப்பதாகிய ஸம்ருத்தி எவ்வளவு உயர்ந்தது. அது ஸாமான்யமாக ஒருவருக்கு லபிக்கத்தகுந்ததோ என்கிறார் மேல் சுலோகத்தில்.

(௩௩௮) ஸ்வப்நாயந்தே ஸமஸ்தா: பரிணதய இமா:
ப்ராணிநாம் நாகிநாம்ச ப்ராயஸித்தவிஸீமா
பவது பவதீ தே | தாவதேவாஹம் ஸ்ரவஸி
நிஹிதாத்மா யஸ்யாஸி தேவதாஸ்யாநாம் ஜ
நநி பவதீதாஸதாஸஸ்ய ஸம்ருத்தி: ‖ (௨௮)

(ப-ரை) ஹே ஸமவதி ஜநநி - வாராய் ஜ்ஞாந, பல, ஐஸ்வர்ய, வீர்ய, ஶக்தி, தேஜஸ் என்கிற ஷாட்குண்யபரி பூர்ணையாய் லோகமாதாவான பாதுகையே! ஶிலா - சாபத்தால் கல்லாய் கிடந்த கௌதமபத்நியான அஹல்யைக்கும், ஸஹதேநா: - அச்வத்தாமாவின் அபாண்டவாஸ்திரத்தால் தக்தமாய் கர்ப்பத்தில் கரிக்கட்டையாய் போன பரீக்ஷித் என்கிற சிசுவுக்கும், ப்ராணதாநாத் - உயிர் மூட்டினதினாலே, ஆஸ்த்ரீபாலம்-ஸ்திரீகள் சிசுக்கள் விஷயபர்யந்தமாய், ப்ரதித - ப்ரஸித்தமான, விபவா - ப்ரபாவத்தை உடைத்தாயிருக்கிற, முராரே: - முராஸுரனுக்குச் சத்ருவான பெருமாளுடைய, பாதபத்மா - திருவடித்தாமரைகள், ஸ்வயத்தா - யாதொரு உனக்கு அதீனங்களாக இருக்கிறதுகளோ, ஆதாரம் - ஸர்வலோகத்துக்கும் ஆத்மாவாக இருந்து அவற்றைத் தரிப்பதால் ஸர்வாதாரா என்று திருநாமம் பூண்ட பகவானுக்கும் ஆதாரபூதையாய் தனக்கு வேறொரு தாரகரில்லாமையாலே தன்னைத்தானே தரிப்பவளாக இருப்பவளும், ஆதாராஸ-(ஸம்ஸாரி ஜீவர்களுக்கு) ஸ்வாத்மலாபத்துக்கு அதாவது நிரஸ்த ஸமஸ்த ப்ரதிபந்தகமாக ஸ்வஸ்வரூபாவிர்பாவத்தோடு கூடிய மோக்ஷத்துக்கு, ப்ரஸூதிம் - காரணமானவளுமான, அதாவது உண்டுபண்ணுகிறவளுமான, தாம் ஸவதீ தேவ-அப்படிப்பட்ட ஸர்வலோக பூஜ்யையாய் நிரதிஶயவைஶ்வர்யஶாலியான உன்னையேயன்றோ, அஹம் - நான், தைவாத் - என்னிடத்தில் தகுந்த ஒரு வ்யாஜமில்லாமல் கேவலம் அதிருஷ்டவசத்தாலேயே, ஶிரஸி - என்னுடைய சிரஸில், நிஹிதாம் - ப்ரதிஷ்டிதமானவளாக, அத்ய - இப்பொழுது, பஶ்யாமி - பார்க்கிறேன்.

(கருத்து) வாராய் ஷாட்குண்ய பரிபூர்ணையாய், ஸர்வலோகங்களையும் உத்பத்தி பண்ணுகிறவளாய் விளங்கா நிற்கிற என் அம்மா பாதுகையே! உனக்கே ஆள்பட்டிருக்கும்படி நீ எனக்கு பரமசேஷியாகக் கிடைப்பதும் உன்னை நான் பரிபூர்ணமாக அனுபவிப்பதும் எனக்கு கிடைக்கத்தக்கதோ? அநாதி ஸம்ஸார

தூஷிதனுன என்னுடைய இளப்பமென்ன, அஸ்ப்ருஷ்ட ஸமஸ்த தோஷையாய் அநந்த கல்யாண குணைபேதையாய் அகுண்டித ப்ரபாவசாலியான உன்னுடைய பெருமையென்ன! ஒன்றுக்கொன்று எவ்வளவுதூரம். அப்படி இருந்தும் என்னைப்போன்ற பரம அகிஞ்சனர்களுக்கு நீ எப்படி ப்ராப்தமாகிறாய் என்றால், அதின் ஸூக்ஷ்மம் இதுவே. மாத்ருத்வ ப்ரயுக்தமான உன்னுடைய வாத்ஸல்ய குணம் அப்படிச்செய்விக்கிறது. ஸர்வ ஜகத்துக்கும் அந்தராத்மாவாக இருந்து நியமித்துக்கொண்டு ஸ்வஸங்கல்ப மாத்ரத்தாலேயே அவைகளை தரிப்பவனை ஸர்வாத்மாவுக்கும் ஆதார பூதையாய், (தாங்குகிறவளாய்) தன்னைத்தாங்குவார் ஒருவர் இல்லாததால் தனக்குத்தானே ஆதாரபூதையாய், லோகேச்வரர்களாக விளங்கும் பிரம்மேசாதி உத்க்ருஷ்டதேவதைகளாலும் கொடுக்க சக்தமல்லாத மோக்ஷத்தை தானிட்ட வழக்காம்படி வழங்கத்தக்க சக்தியுள்ள பரமோன்னதமான தெய்வமாக நீ இருந்தும், மாத்ருத்வம் என்கிற விலக்கமுடியாத ஒரு ஸம்பந்தமானது சேதநர்கள் உன்னைக்கோராமலிருக்கும் போதும், அவர்களைத்தேடி நீயே செல்லும்படிக்கும், உனக்கு பரதந்திரரான பகவானையும் உன் வழியில் நடத்தும்படிக்கும் ஏவுவது பண்டை நாள் முதற்கொண்டே பிரஸித்தமன்றோ. கௌதம சாபத்தால் கல்லாய்க்கிடந்த அஹல்யை என்கிற ஒருபாபஸ்திரீ தன்னை வந்து காப்பாற்றவேணுமென்று உன்னைப் பிரார்த்தித்தாளோ? உத்தரையின் கர்ப்பத்திலேயே அச்வத்தாமாவின் அபாண்ட வாஸ்திரத்தால் பீடிக்கப்பட்ட பரீக்ஷித் என்கிற ஒரு சிசு அப்போது உன்னை அழைத்ததோ? விசுவாமித்திர யாகஸம்ரக்ஷணம் மிதிலா புரதர்சனம் என்று வெளிக்கு ஒரு வ்யாஜத்தைக்காட்டி கல்லாய்க்கிடந்த அஹல்யையின் அருகே ஆச்ரிதவிரோதி நிரஸனைகஸ்வபாவனை ஸ்ரீராமனைத்தானே நடத்திப்போய் உன்னுடைய ஸம்பந்தத்தாலே அவளுடைய கல்மஷங்களையெல்லாம் போக்கி மறுபடியும் பதிவ்ரதாபரிக்ரஹணார்ஹமாக அவளைப்பண்ணினுயல்லையோ? உத்தரையின் கர்ப்பத்திலும் நீயாகவே ஸ்ரீகண்ணபிரானை அழைத்துப்போய் அந்த சிசுவை நாலாபுரமும் சூழ்ந்து அஸ்திரவேகத்தைத் தடுத்து “ஜாதோவ காஷ்டீக்ருத ஸூதக:” என்கிறபடி பகவானுடன் அந்த சிசு அடியோடு நசியாமல்படி ரக்ஷித்தும் கர்ப்பத்திலிருந்து வெளிப்பட்டதும் உன்னுடைய

ஸ்பர்சத்தால் அது நன்றாய் ஜீவிக்கும்படி செய்தும் காரணமில்லை யோ? அப்படியேதான் என் விஷயத்திலும் நீ நிர்வ்யாஜமாக ஜாயமான கடாக்ஷம் முதலான அனுக்ரஹபரம்பரைகளைச்செய்த ரு ளினாய். ஆனால் உன்னிடத்தில் மாத்ருத்வ ப்ரயுக்த வாத்ஸல்ய மும் சேதனர்களிடத்தில் அநாதியாய் அநந்தமான பாபங்களும் அதனாலுண்டான பராமுகத்தன்யமும் இருக்கும்போது இப்படிப் பட்ட அனுக்ரஹம் ஸர்வத்ர நிர்வ்யாஜமாக பரிணமிக்கவேண்டா மோவென்றால், அதுதானில்லை. ஜனங்களால் நிரூபிக்கமுடியாத ஏதோ ஒரு அதிர்ஷ்டவசத்தால் உயர்ந்த வஸ்து இளப்பமான வஸ்து என்கிறவிபாகம் காரணமாகாமலும், ப்ரயத்ந ப்ரயத்னங் கள் காரணமாகாமலும் யாரோ சில பாக்யசாலிகளுக்குத்தான் இப்படிப்பட்ட உன்னுடைய அனுக்ரஹபரம்பரைகள் ஏற்பட்டு பரமச்ரேயஸ் உண்டாகிறது. அப்படிப்பட்ட பாக்யம் எனக்கு ஸ்வப்ரயத்தனமில்லாமலும் அதற்கு அர்ஹதையில்லாமலும் சேர்ந்து நீயாகவே என்னை வந்து அடையும்படி பெற்றேன். இனி எனக்கு என்ன குறை என்கிறார்.

யாரோ சில பாக்யசாலிகளுக்குத்தான் ஸர்வபூத ஸாக்ஷித் துக்களும் வச்யேச்வரர் (ஈசுவரனை வச்யனாக உடையவர்)களுமான ஸதாசார்யர்களுடைய ஸம்பந்தமும் அனுக்ரஹமும் இன்னதென்று நிரூபிக்கமுடியாத ஒரு ஜன்மாந்தரஸாக்ருதரூப அதிர்ஷ்டவசத் தாலே கிடைத்து ஆத்மமோக்ஷம் ஏற்படுகிறது என்பது இதின் உட்கருத்து. (23)

அவ:— இப்படிப்பட்ட பாதுகாலாபத்தால் வரும் பயன் என்னவென்பதைச் சொல்கிறார் மேல் சுலோகத்தில்—

(௲௨௪) கயம்காரம் முகுந்தகரகமலயோஃ ஸம் நிஜபதம்
நிதாய ப்ராப்ய ஸூமாஃ கலிமுககிநோக்ஷ நிநரமிநஃ ।
ததேதம் ஸத்யம் விசதி ஹயா தேவி பவதீ
நிஜாக்ராந்திக்ஷோணா ஸரஸரஸிவாகம்டகதி: ॥

(பதவுரை) ஹே தேவி - வாராய் விளங்காநிற்கிற பாது கையே, பவதீ - நீயானவள், நிஜ - உன்னுடையதான, ஆக்ராந்தி - ஆக்ரமணத்தினாலே, அதாவது நீ எப்பொழுதும் அதில் ஸஞ்சரிப்பதினாலே, க்ஷோணா - பொடிப்பொடியாகப்

பண்ணப்பட்ட, ஸ்மர - மன்மதனுடைய, ஶர - பாணங்களு டைய, ஶிகா - கூறுகளாகிற, கண்டக - முள்ளுகளினுடைய, ததிஃ - வரிசைகளை உடைத்தானவளாய்கொண்டு, அதாவது இருந்தவிடம் தெரியாமல் நசிப்பிக்கப்பட்ட என் மனதிலுள்ள அதிதீவ்ரமான பற்பல விஷயசபலங்களையுடையவளாய்க் கொண்டு, தயயா - கேவலம் தயையினாலேயே, ஏவம்-இந்த ப்ரகாரம், மேஸ் - என்னுடைய மனதுக்கும் பகவானுக்கும் நடுவில், ந விஶதி யதி - ப்ரவேசிக்காமல் போவாயானால், நஃ-எங்களுடைய, அதாவது என்னுடைய, * குலிஶகடிநே-வஜ்ராயுதம்போல் கெட்டியானதான, (அதாவது அநாதியான பழக்கத்தினாலே கெட்டிப்பட்டு தீவ்ரமான விஷயசபலங்களா கிற கூர்மையுள்ளதும் கெட்டியானதுமான முள்ளுகள் நெருக்க மாக அடர்ந்து துஷ்ப்ரவேசமானதால் மனதை வஜ்ராயுதம் போல கெட்டியானதாகச் சொன்னது), அஸ்மிந்-இந்த, அதா வது இப்படி பரமஹேயமான, மநஸி - மனதில், ரங்கேஶஃ - ஸ்ரீரங்கநாதனானவர், ஶ்ரீ - ஸ்ரீமஹாலக்ஷ்மியினுடைய, கர கமல - செந்தாமரைப்பூப்போல் அழகியதும் அதிஸுகுமார மானதுமான திருக்கைகளுக்கு, யோக்யம் - தகுந்ததான, அதாவது அப்படிப்பட்ட திருக்கைகளால் மட்டும் தொட்டு உபசரிக்கப்படும்படி அதிரமணீயமாய் ஸுகுமாரமான, நிஜ - தன்னுடைய, பதம் - திருவடியை, கதம்காரம் - எப்படித் தான், நிதத்யாத் - வைப்பார்.

(கருத்து) இந்திரியங்களுக்கே பரவசமாய் ஒரு தடையு மில்லாதபடி விஷயங்களிலேயே ஸஞ்சரித்துக்கொண்டு பரமதுர் ஜயமாயிருந்த என் மனதையும் ஜயித்து உனக்கு ஸ்வாதீனப் படுத்தி அதில் வீற்றிருந்து ஜய ஸ்ரீயோடு விளங்கா நிற்கிற பாதுகையே! என் மனதிலுள்ள அநாதி திருடஸம்ஸ்காரத் தாலே அதிதீவ்ரமாய் ருடமூலமாய் (வேரூன்றினதாய்) அபரி ஹார்யமான அநேக விஷய சபலங்களாகிற கெட்டியாய் தீக்ஷ்ண

* இவ்வளவு இளப்பமான ஸ்திதியிலிருக்கும்போதும் தன்னைத் தானே வ்யாபகமாக எண்ணுகிற தன்னைப் பரிஹஸித்துக்கொண்டு இந்த பூஜ்யவாசகமான பஹுவசநத்தால் சொன்னது.

க்ரங்களான விஷமுள்ளுகளையெல்லாம் பரமபாவனமாய் அப்ரதிஹதமான உன்னுடைய நிரந்தர ஸஞ்சாரத்தாலே பொடிப்பொடியாக அடித்து அதை ஸஞ்சார யோக்யமாம்படி பரிசுத்தமாய் ம்ருதுவான ஸமதளமாகப்பண்ணி, அதன் மேலும் அந்த மனதுக்கும், பகவானுடைய திருவடிக்கும் நடுவில் நீ புகுந்து நிற்காவிட்டால், தாமரைப்பூப்போல் அதிஸுகுமாரமான ஸ்ரீபெரிய பிராட்டியாருடைய திருக்கைகள் பட்டாலும்வாடுமோவென்னும்படி அதிஸுகுமாரமான தன் திருவடி மலர்களை ஸ்ரீரங்கநாதன் என்னுடைய அந்த கடினமாய் துஷ்ப்ரவேசமான மனதில் எப்படி வைக்கமுடியும்? அவர் ஏன் அங்கே எழுந்தருளப்போகிறார்? ஒருக்காலுமில்லை. நீ இப்படிப்பட்ட உபகாரத்தைச் செய்ததாலன்றோ அவரும் உன்னோடுகூட இப்போது அதில் நிரந்தரவாஸம் பண்ணும்படியானதும் உன்னைப்போல் அவனையும் நான் அனுபவிக்கப்பெறும்படியானதுமான பாக்யம் எனக்கு நேர்ந்தது என்கிறார். அதாவது ஸ்ரீபாதுகையினுடைய பரமபாவனமான நிரந்தர த்யானத்தால் மனதிலுள்ள பாபங்கள் கழிந்து விஷய சபலங்களெல்லாம் நீங்கவே அதில் ஸ்ரீ பாதுகையோடுகூடின பகவானுடைய த்யானம் நிரந்தரமாக ஸித்தித்தது என்று தாத்பர்யம். அப்படிக்கில்லாவிட்டால் விஷயாக்ராந்தமான மனதில் பகவத்யானம் ஸித்திக்காது.* பரமபாவனுளான ஸதாசார்யாளைப்பற்றி நிரந்தரமாக மனதில் த்யானித்தால் மனதிலுள்ள கல்மஷங்களெல்லாம் நீங்கி பகவத்யானம் கைகூடும் என்பது இதின் உட்கருத்து. ஸதாசார்யாளோடு நிரந்தர பரிசயம் பண்ணினுல் அவர்கள் தங்களுடைய உபதேசானுக்ரஹங்களால் விஷயஸங்கத்தைப்போக்கி விவேகத்தை உண்டுபண்ணி மனதை சுத்திசெய்து பகவத்தியானத்தையும் பகவதனுபவத்தையும் ஏற்படுத்துவார்கள். அவர்களுடைய ப்ரயாஸம் இல்லாமல்போனுல் இவைகள் ஸித்திக்காது என்றும் கொள்ளலாம். (29)

அவ— இப்படி பாதுகாப்ராப்தியினுல் பகவத் ப்ராப்தியும் ஸித்திக்கவே, பரிபூர்ண பாதுகானுபவத்தோடு பகவதனுபவ

---

* காமாதிதூஷிதே சித்தே நாஸௌ யோகஸமாதிந: (காமக்ரோதாதிகள் நிறைந்து கெட்டுப்போன மனதிற்கு பகவான் அகப்படமாட்டான்) என்கிற ப்ரமாணம் இங்கு அனுஸந்தேயம்.

விஷயத்திலும் பாதுகையோடுள்ள பரமஸாம்யத்தை "எம்மா வீட்டுத்திறமும் செப்பம், நின் செம்மா பாதபற்புத்தலை சேர்த் தொல்லை......... அம்மாவடியேன் வேண்டுவதீதே" என்று ஸ்ரீ ஆழ்வார் அநுஸந்தித்த க்ரமத்தில் தனக்குப் பரமோத்தேச்ய மான புருஷார்த்தமாகக் கோரி ஸஹஸ்ரரூபமான இந்த ப்ரபந் தத்தைத் தலைக்கட்டுகிறார் மேல் சுலோகத்தால்—

(௧000) க்ரீடாஸௌக்யம் க்வசிதபி ஸமயே பாதுகே ஸஞ்ஜ-
யந்தீ நிர்வேஶம் ஸ்வம் திஶஸி ஸ்வவதீநாயயோ:
ஶ்ரீதரண்யோ:। மாமப்யேவம் ஜநய மதுஜித்பாத-
யோரந்தரங்கம் ரங்கம் யாஸஸா ஜநயஸி ஸர்வணோ:
ஸாரத்க்ருத்தாங்கம் ॥ (௯0)

(பதவுரை) ஹே பாதுகே-வாராய் பாதுகையே! ஸமயே-சில காலங்களில், க்வசித் - அநிர்வசநீயமான, அதாவது அதி விசித்ரமாய் ரமணீயமாய் தனக்கும் பிறர்க்கும் ஆஹ்லாதகர மான, க்ரீடாஸௌக்யம் - விளையாட்டினால் ஏற்படுகிற சாஞ்சல் யத்தை, அதாவது லீலார்த்தமான ஸஞ்சாரத்தை, ஸஞ்ஜயந்தீ (ஸதீ) - நிறுத்திக்கொண்டவளாய்க்கொண்டு, ஸ்வவதீ நாயயோ: - உன்னையே நாதமாக எண்ணியிருக்கிற, அதாவது உன்னையே எஜமானியாக பாவித்து தங்களுடைய புருஷார்த் தங்கள் உன்னதீனமானதென்றிருக்கிற, ஶ்ரீதரண்யோ: - ஸ்ரீதேவி பூதேவிகளுக்கு, ஸ்வம் - உன்னுடையதான, நிர்வே ஶம் - ஸௌக்யத்தை, அதாவது உன்னால் அநுபவிக்கப்படுகிற பகவத்பதபரிசரணரூபமான ஸுகத்தை, திஶஸி - கொடுக் கிறாய், ஏவம் - அதேமாதிரியாக, மாமபி - என்னையும், மதுஜித: - மது என்கிற அஸுரனை ஜயித்தவரான பெருமா ளுடைய, பாதயோ: - திருவடிகளுக்கு, அந்தரங்கம் - அந்தரங் கனாக, அதாவது ஏகாந்தமான சுச்ரூஷைகளுக்கு யோக்யமான வனாக, ஜநய - ஆக்கவேண்டும், யாஸஸா - யாதொருஇப்படிப் பட்ட நீயானவள், அதாவது *ஸர்வஸ்வதானம் பண்ணும்படி

* பகவானுடைய திருவடியே ஸ்ரீபாதுகைக்கு ஸர்வஸ்வமாகை யால் அந்தத் திருவடியை அயலாருக்கு அநுபவிக்கும்படி கொடுப்பதே ஸர்வஸ்வதானம் பண்ணுவது.

யான மஹோதார குணமுள்ள யாதொரு நீ, ரங்கம் - இந்த ஸ்ரீரங்கதிவ்ய தேசத்தை (அல்லது பகவானுக்கு ரங்கஸ்தலமாகிய இந்த லீலாவிபூதியை) ஹ்ருணை: - உன்னுடைய ஔதார்யம் முதலிய அநந்தமான கல்யாண குணங்களாலே, ஸாரதீ - ஸரஸ்வதீ தேவியினுடைய, ந்ருத்த - நர்த்தனத்துக்கு, ரங்கம் - ரங்கஸ்தலமாக (கூத்தாடுகிற இடமாக) ஜநயஸி - ஆக்குகிறாயோ, அதாவது இந்த திவ்யதேசத்தை (பூமண்டலத்தை) உன்னுடையகுணங்களை ஸ்துதிக்கிற கவிகளால் நிரம்பினதாகச் செய்கிறாயோ, அப்படிப்பட்ட நீ என்று கீழ்பாதங்களோடு அந்வயம்.

(கருத்து) ஓ பாதுகையே! இப்படி நீ என்னை பாவனமாக்கி உன்னையும் உன்னோடு கூடிய பகவானையும் த்ரிகரணங்களாலும் பூர்ணமாக அனுபவிக்கும்படி பரிசர்யாயோக்யமாம்படி செய்தபின், இனி எனக்கு வேண்டுவதென்? ஆனாலும் ஒன்றுண்டு; அதையும் நீ எனக்கு அனுக்ரஹித்துவிட்டால் நான் பூர்ணனாவேன். அது என்னென்னில்— நீ உன்னுடைய ஔதார்யாதிகுணங்களால் பகவானுக்கு மிகவும் அந்தரங்கையாய் ப்ரீதிபாத்ரமானவள். உன்னையனுபவிப்பதே அவருக்கு பரமபோகம். அந்தத் திருவடிமலர்களை அனுபவிப்பதே உனக்கு பரமபோகம். உனக்கு அவரைத்தவிர வேறொன்று வேண்டுவதில்லை. அவருக்கு உன்னைத்தவிர வேறொன்று வேண்டுவதில்லை. இப்படிப்பட்ட உன்னுடைய ஆச்ரயோத்கர்ஷத்தையும் குணோத்கர்ஷத்தையும் ஸௌபாக்யத்தையும் கண்டு உன்னிடத்தில் ஈடுபாட்டுடன் அநஸூயுக்களாய் ஸ்ரீ பூமி முதலிய பகவானுடைய தேவிமார்கள் உன்னையே தங்களுக்கு நாதையாக பாவித்து உனக்கு பரிசர்யைகளும் பண்ணிக்கொண்டு தங்களுக்கு பகவதனுபவரூபபுருஷார்த்தமும் உன்னதீனம் என்று விசுவஸித்திருக்கிறார்கள். ஸ்ரீபகவானுடைய ஒப்பில்லாத திருவடிமலர்களை வஹித்துக்கொண்டு லீலையாக நிரந்தரம் வெளியில் ஸஞ்சரிப்பதே உனக்கு பரமபுருஷார்த்தமானாலும், அந்த அநிர்வசநீயமாய் ரமணீயமாய் ஸகல மங்களகரமாய் ஆஹ்லாதகரமான திவ்ய ஸஞ்சாரஸுகத்தையும் அடிக்கடி நிறுத்திக்கொண்டு பரமௌதார்யத்தால் உன்னை விச்வஸித்திருக்கிற தேவிமார்களுக்கு உன்னுடைய பகவத்பாதாரவிந்தபோகத்தைக் கொடுக்கிறாய்.

உன்னுடைய ஆநந்தத்தையே கருதி நீ பகவானுடன் வெளி ஸஞ்சாரத்திலேயே நின்றுவிட்டாயேயானால் அவர்களுக்கு பகவானுடைய திருவடிபரிசர்யையும் போகமும் எப்படிக் கிடைக்கும்? உனக்கு அப்படிப்பட்ட ஸ்வார்த்தபரதையே கிடையாது. ஆகையால் உன்னையே ஸர்வத்துக்கும் நம்பி உனக்குப் பரம சேஷபூதனான அடியேனுக்கும் நீ அநுபவிப்பதுபோலொத்த பகவத்பாதாரவிந்தபோகத்தை நீ தேவிமார்களுக்குத் தந்தருளு மாப்போலே தந்தருளவேணும். "அப்படிப்பட்ட பெரிய ஸங்கதியை உனக்கு எப்படிக் கொடுப்பது? அப்படிப்பட்ட ஔதார்யாதி குணங்கள்தான் என்னிடம் இருப்பதை நீ எப்படிக் கண்டாய்" என்கிறாயோ? இதுவும் ஒரு பரமரஹஸ்யமோ? இந்த ஸ்ரீரங்கம் (புவனமண்டலம்) முழுவதிலும் உன்னுடைய அப்படிப்பட்ட ஔதார்யாதிகுணங்களுடைய ஸ்துதியாகிற கவிகள் (ப்ரபந்தங்கள்) ரூபமாக ஸ்ரீஸரஸ்வதீ தேவியானவள் நர்த்தனம் பண்ணவில்லையோ? ஆகையால் இதுவிஷயம் ஸர்வலோக விதிதமன்றோ? இதை ஒரு ரஹஸ்ய காலக்ஷேபத்தாலேயே அறியவேணுமோ? ஆகையால் உன்னை அநுஸரித்தவர்களுக்கு உன்னுடைய பரமஸாம்யத்தைக் கொடுக்கும் சக்தியும் அதற்கு வேண்டிய ஔதார்யாதிகுணங்களும் உன்னிடமிருப்பது மறைக்க வொண்ணாதபடி ஸர்வலோகவிதிதமானதால் உனக்கேயாட்பட்ட அடியேனுக்கு உன்னுடைய பரமஸாம்யத்தைத் தந்தருளியே யாகவேணும். இதுவே எனக்கு முக்ததசையில் வருவதாகச் சொல்லுகிற பகவத்ஸாம்யத்திலும் மேலானது என்று புருஷார்த்தகாஷ்டையாகிற பாதுகாநுபவத்தின் பரமாவதிரூபமான பாதுகையோடுள்ள பரம ஸாம்யத்தைப் பிரார்த்தித்து பாதுகாஸ்தோத்ரரூபமான இந்த ஸங்கல்பிதஸஹஸ்ரத்தைத் தலைக்கட்டுகிறார்.

இந்த சுலோகத்தால் ஸதாசார்யர்கள் பகவானுக்கு தேவிமார்களைக் காட்டிலும் ப்ரியர்கள் என்பதும், அவர்கள் தேவிமார்களாலும் கொண்டாடத்தகுந்தவர்கள் என்பதும் தங்களுக்குப் போலொத்த பகவதநுபவத்தை அதாவது தங்களுடைய ஸாயுஜ்யத்தையே ஆச்ரிதர்களுக்குக் கொடுக்கத்தக்கவர்கள் என்பதும், ஆசார்ய ஸாயுஜ்யமே பகவத்ஸாயுஜ்யத்திலும் மேலானது என்பதும், அவர்களுடைய புகழினால் உலகம் நிறைந்திருக்கிறது என்பதும் ஸூசிதம். (1000)

அவ:— இதற்கு மேலுள்ள எட்டு சுலோகங்களும் ப்ரபந்தாரம்பத்தில் ஸ்தோத்ராரம்பத்துக்கு முன்புள்ள அவதாரிகை கிரமத்தில் கரிஷ்யமாண (செய்யப்போகிற) ப்ரபந்தத்தைப்பற்றிச் சொல்லிய இருபது சுலோகம்போல் நிகமனக்ரமத்தில் க்ருதமான (செய்யப்பட்ட) ப்ரபந்தத்தைப்பற்றிச் சொல்லுகிறது. அதில் இந்த முதல் சுலோகம் இப்படி நிர்விக்னமாக ஸங்கல்பித்தபடி ஸஹஸ்ரரூபமான பாதுகாஸ்தோத்ரம் முடிவு பெற்று அப்படி ஸ்துதிக்கும்படியான பாக்யம் நேர்ந்ததால் ஸ்ரீ ஆசார்யருடைய ஜந்மம் ஸபலமாய்விட்டதைச் சொல்லுகிறது.

(௲க) இதி ரங்கதுரீணபாதுகே த்வம்
ஸ்துதிமிஷேண ஸஹஸ்ரஶோ விம்ருஷ்டா ।
ஸபலம் மம ஜந்ம தாவதேதத்
யதிஹாஶாஸ்யமத꞉பரம் கிமேதத் ॥ (ருக)

(ப-ரை) ஹே ரங்கதுரீணபாதுகே - வாராய் இந்த ஸ்ரீரங்கத்தை (லீலாவிபூதியை) நிர்வஹிக்கும்படியான பகவானுடைய பாதுகையே! த்வம் - நீ, இதி - இந்த ப்ரகாரம், ஸ்துதிமிஷேண - ஸ்தோத்ரம் பண்ணுகிறது என்கிற வ்யாஜத்தினாலே, ஸஹஸ்ரஶ꞉ - ஆயிரம் தடவைகள் அல்லது ஆயிரம் ப்ரகாரங்களாக, விம்ருஷ்டா - கீர்த்தனம் பண்ணப்பட்டாய், அல்லது பராமர்சிக்கப்பட்டாய், (அத꞉-ஆகையினாலே) மம - என்னுடைய, ஏதத் - இந்த, அதாவது இதுவரையிலான அநேக ஜந்மங்களுக்குள் ஜாயமான கடாக்ஷம் பெற்ற இந்த, ஜந்ம - பிறப்பானது, ஸபலம் தாவத் - ப்ரயோஜனம் பெற்றதாகவே ஆய்விட்டது (என்று எண்ணுகிறேன்), யத் - யாதொரு, ஏதத் - உன்னை ஸ்தோத்ரம் பண்ணும்படியான இந்த பாக்யமே, இஹ - இந்த ஜந்மத்திலே, ஆஶாஸ்யம் - (அப்படியே சாஸ்திரப்படிக்கும்) ப்ரார்த்திக்கத்தகுந்ததானால், அத꞉ பரம் - அதற்கு மேலானது, அதாவது அப்படிப்பட்ட பாக்யம் ஏற்கனவே லபித்துவிட்டபடியால் அதற்குமேல் எனக்கு ப்ரார்த்தனீயமானது, கிம் - என்ன இருக்கிறது?

அதாவது இதற்குமேல் நான் இந்த ஜந்மத்தில் புதிதாக ப்ரார்த்திக்கவேண்டியதும் அடையவேண்டியதும் வேறொன்றில்லை என்பது தாத்பர்யம்.

(கருத்து) இந்த உலகங்களையெல்லாம் ஸ்வஸங்கல்பமாத்திரத்தாலே நிர்வஹிக்கும்படியான ப்ரபாவமுள்ள பகவானுடைய பாதுகையே! நானும் உன்னுடைய அனுக்ரஹத்தாலே உன் விஷயமாக ஸங்கல்பிக்கப்பட்ட இந்த ஸஹஸ்ரரூபமான ப்ரபந்தத்தை இந்த ப்ரகாரம் முடித்தேன். முடித்தது மாத்ரமோ? பாதுகே, பாதாவநி, பதாவநி, பதத்ராணே, பதரக்ஷே, பாதரக்ஷே, சரணத்ராயிணி ஹரிபாதுகே, சௌரிபாதுகே, ராகவபாதுகே, ரகுபதிபாதுகே, மணிபாதுகே, காஞ்சநபாதுகே, ரங்கபாதுகே என்று இப்படிப்பலவாறாக உன்னுடைய திருநாமங்களைத் தனியாகவும் பகவானோடு சேர்த்தும் ஆயிரம் தடவைகள் என் வாயார ஸங்கீர்த்தனம் பண்ணப் பெற்றேன். அது மாத்ரமோ, உன்னை ஸ்தோத்திரம்பண்ணுவதின் பொருட்டு உன்னுடைய ஸ்வரூப ரூப குணவிபூத்யாதிகளுடைய பெருமைகளை ஆராய்ந்து ஆராய்ந்துபார்த்து ஆயிரம் ப்ரகாரங்களாகச் சொல்லி உன்னை வாயார வாழ்த்தவும் வாழ்த்தினேன். உன்னுடைய பரமானுக்ரஹத்தால் இப்படிப்பட்ட மஹாபாக்கியத்தை நான் பெற்றபின் என்னுடைய இந்த ஜன்மமானது முன் புற்ற நிஷ்பலமான அநந்தமான பிறவிகளைப்போலன்றிக்கே மறுபடியும் ஜன்மத்துக்கு ஒரு காரணமில்லாதபடி முற்றிலும் ஸபலமாய்விட்டதென்றே எண்ணுகிறேன். சாஸ்திரத்தைப் பார்த்தாலும் இப்படி உனக்கேயாட்பட்டு த்ரிகரணங்களாலும் உன்னைக்கொண்டாடவேண்டியதேதான் ஜன்மமெடுப்பதின் பரமப்ரயோஜனம் என்று தெரிகிறது. ஆகையால் இந்தஜன்மத்தில் இனி நான் கோரக்கூடியது வேறு என்ன இருக்கிறது. ஒன்றுமில்லை—என்கிறார்.

ஸதாசார்யர்களை அநந்யபாவத்தோடு அடைந்து த்ரிகரணங்களாலும் அவர்களைப்பரிபூர்ணமாக அனுபவித்து அவர்களுடைய திருநாமஸங்கீர்த்தனம் குணகதநம் முதலியவைகளால் அவர்களை ஸர்வதா கொண்டாடப்பெற்றபின், இந்த ஜன்மத்தில் மேல் ப்ரார்த்தனீயமான புருஷார்த்தம் வேறொன்றுமில்லை. இதுவே சாஸ்திரார்த்தம். (31)

அவ:— இப்படி ஒரு ஆதராதிசயத்தால் ஸஹஸ்ரரூபமான ஒரு ப்ரபந்தமுகத்தாலே ஸ்ரீபாதுகையை ஸ்துதித்து அப்படி தான் ஸ்துதித்ததையும் அதனால் ஏற்பட்ட தன்னுடைய தன்யதையையும் அதனிடத்தில் விண்ணப்பம் செய்து, பின்னிட்டு அப்படிப்பட்ட காரியத்துக்குத் தனக்கு யோக்யதை உண்டாவென்று யோஜித்துப் பார்த்தவளவில் பீதராய் தன்னுடைய ஸாஹஸகார்யத்தைப் பொறுக்கவேணுமென்று ப்ரார்த்திக்கிறார் மேல் ச்லோகத்தில்:—

(௧௦௦௨) ஊாதஃ ஸ்வரூபவிவ ரஜுவதெ நிருவிஷ்டம்
வாவாஉவீஉநி வஷாவநி வெவஹவம் தெ ।
ஜொஹாஉவிஷ்டுதவதொ ஊஊ ஊநுவஸெ
வூாஹவஷ் ஸாஹஸவிடம் உயயா ஸஹெயாஃ ॥

(ப-ரை) ஹெ ஊாதஃ வஷாவநி - என் அம்மா பாதுகையே! ரஜுவதெஃ - ஸ்ரீரங்கநாதனுடைய, ஸ்வரூபவிவ - ஸ்வரூபம் போலே (இது குணவிபூத்யாதிகளுக்கும் உபலக்ஷணம்), வாவாம் - வாக்குகளுக்கு, அவீஉநி - எட்டாத எல்லையில், நிவிஷ்டம் - இருக்கிற, அதாவது வாக்கால் இவ்வளவு என்று அளவிட்டுச்சொல்லமுடியாமல் எவ்வளவு சொன்னாலும் மேலும் அநந்தமாயிருக்கிற, தெ - உன்னுடைய, வெவஹவம் - ஸ்வரூப ரூப குண விபூத்யாதிகளுடைய பெருமைகளை, ஜொஹாஜ - அறிவில்லாமையினாலே, அதாவது ஒரு அபிநிவேசத்தினால் நம்மால இந்தக்காரியத்தைச் செய்துமுடிக்கமுடியுமா என்கிற பகுத்தறிவை இழந்திருப்பதினாலே, அவிஷ்டுதவதஃ - ஒரு ஸஹஸ்ரத்தால் சொல்லிவிடுகிறேன் என்று அளவிட்டுச் சொல்லுகிறவனையும், ஊநுவஸெஃ - அல்பபுத்தியுள்ளவனையும், வாலஸ்ய - குழந்தையைப்போல் யோஜியாமல் ஒரு காரியத்தில் இறங்கும்படியான அபக்வபுத்தியுள்ளவனையுமிருக்கிற, ஊஊ - என்னுடைய, ஊடம் - இந்த, ஸாஹஸம் - சக்தியைக் கவனியாமல் செய்த கிருத்யத்தை, அதாவது இந்த ஸ்தவத்தை, உயயா - கேவலம் உன்னுடைய தயையினாலேயே, (க்ஷம் - ஸீ), ஸஹெயாஃ - பொறுக்கக்கடவாய்.

(கருத்து) என் அம்மா பாதுகையே ! உன்னுடைய ஸ்வ ரூப ரூப குண விபூதி முதலானவைகளுடைய பெருமையானது ஸ்ரீபகவானுடைய ஸ்வரூபாதிகளுடைய பெருமையைப்போல் வாக்கு மனஸ்ஸுக்களுக்கு எட்டாததே. அப்படியிருந்தும் உன்னை ஸ்தோத்திரம் பண்ணவேணுமென்கிற ஒரு பேராசையினால் அறிவிழந்து அல்பபுத்தியுள்ள நான் குழந்தைகள் தங்கள் சக்தியைக் கவனிக்கமுடியாமல் ஸாஹஸமான கார்யங்களில் இறங்குவதுபோல் அளவிட்டு ஒரு ஆயிரம் சுலோகங்களால் உன் பெருமைகளைச் சொல்லி ஸ்தோத்திரம் பண்ணிவிடுவதாக ஸங்கல்பித்துக்கொண்டு இந்த ப்ரபந்தமாகிற ஸாஹஸகாரியத்தைச் செய்துவிட்டேன். ஒருவராலும் எவ்வளவு ஸஹஸ்ரக்ரந்தங்களாலும் சொல்லிமுடிக்கமுடியாத உன் பெருமைகளை இப்படி ஒரு ப்ரபந்தத்தின் அளவுள்ளதாகச் சொன்னது உன் பெருமைக்குக் குறைவுதான். இப்படி உன்னைக் குறைவுபடுத்தின மஹாபசாரத்தை நீ உன்னுடைய ஸ்வாபாவிகதயையினாலும் மாத்ருத்வ, ப்ரயுக்தவாத்ஸல்யத்தாலும் ஏதோ நம்முடைய அறியாக்குழந்தை நம்மிடத்திலுள்ள ப்ரேமையினால் இந்த ஸாஹஸகாரியத்தைச் செய்துவிட்டது என்று எண்ணி குற்றத்தையும் குணமாக்கிப் பொறுத்து வாத்ஸல்யத்தையே பாராட்டி என் விஷயத்தில் திருவுள்ளம் உகக்கவேணும்.

ஸதாசார்யர்களுடைய பெருமை ஸ்ரீபகவானுடைய பெருமையைப்போல் அளவில்லாததாகையால் ப்ரேமபரவசமாய் நாம் அவர்களை ஸ்துதிக்கும்போதும் தத்வஸ்திதியை (அதாவது அது அளவில்லாதது என்பதை) யோஜித்து அதற்கு அவர்களிடம் இப்படி க்ஷமைகொள்ளவேணும். (32)

அவ— இப்படி ப்ரார்த்திக்க ஸ்ரீபாதுகை "இந்தக் குற்றத்தை நான் வாத்ஸல்யாதிசயத்தால் பொறுத்து குணமாகவே கொண்டு உகந்தாலும் மற்ற ஸாதுக்கள் அப்படிப் பொறுப்பார்களோ வென்பதற்குப் பதில் சொல்கிறார் மேல் சுலோகத்தில்:—

க௦௩) யேநாஜ ஸக்திநியதாः கவயோ ஜநேந்த்ர
ஜாதः ஸ்தவஞ்சி ஜயஸ்வ ஜநபாஜகே கபாடு!
ஶ்ருத்வா ஶ்ரவணாம்ஶவிநிவேஶிதஜாநஸாநாம்
தோஷாஜஹம் ஸஹஸாஜாநவிரோசிதாநி ॥

(பதவுரை) ஹே மாத: மதுஸூதநபாதுகே - வாராய் என் தாயே மதுஸூதனனுடைய பாதுகையே! மத்த: - என்னைக்காட்டிலும் வேறான, யே அந்யே கவய: - யாதொரு கவிகள், ஸக்தி நியதா:-உன்னிடத்தில் பக்திபரவசர்களாய்க்கொண்டு, த்வாம் -உன்னை, ஸ்துவந்தி-ஸ்துதிக்கிறார்களோ, குணாம்ஶே-குண பாகத்தில், நிவிஷ்ட - அபிநிவேசமுள்ள, மநஸாம் - மனதையுடையவர்களான அதாவது குணபக்ஷபாதிகளான, தேஷாம் - அவர்களுடைய, ஸபஹுமாந - பஹுமானத்தோடு கூடியதான, அதாவது அவர்கள் என்னை அங்கீகரிப்பதையும் கௌரவிப்பதையும் காட்டும்படியான, விஶ்ராணிதாக்ஷி- கடாக்ஷங்களை, அஹம் - நான், அபேக்ஷ்யே-அடையப்போகிறேன்.

(கருத்து) என்னம்மா மதுஸூதனபாதுகையே! நீ உன்னுடைய வாத்ஸல்யத்தால் என் குற்றங்களைப் பொறுப்பாயாஜூலும் உலகத்தில் ஸாதுக்கள் அப்படிப்பொறுத்து என்னை ஆதரிப்பார்களோவென்றால்— சொல்லுகிறேன். என்னைக்காட்டிலும் உத்க்ருஷ்டர்களான உலகத்திலுள்ள மற்ற கவிகளும் ஆச்ரிதவத்ஸலனான மதுஸூதனனுக்கேற்றவளான உன்னுடைய வாத்ஸல்யாதி குணங்களிலும் மற்றப்பெருமைகளிலும் ஆழ்ந்தவர்களாய் பக்தி பாரவச்யத்தினாலேதானே உன்னை ஸ்துதிக்கிறார்கள். அவர்கள்தான் உன்பெருமையை அளவிட்டுவிட்டார்களா? ஆகையால் உன்னை ஸ்துதிக்கிற விஷயத்தில் சக்தி அசக்திகாரணமில்லை. ப்ரேமையேதான் ஏவுகிறது. ஆகையால் அப்பெரியோர்களும் உன்னை ஸ்துதிக்க நான் சக்தனா அல்லனாவென்று கவனிக்கமாட்டார்கள். இவன் ப்ரேமையினால் சொல்கிறானா இல்லையா என்றுதான் பார்ப்பார்கள். ப்ரேமகர்பமான வார்த்தைகள் நன்றாய்த் தெரியுமானதால் என்னுடைய ப்ரேம கர்பமான உன் ஸ்துதியைக்கண்டு மற்ற தோஷாம்சம் உண்டானாலும் அதைக் கவனியாமல் குணபக்ஷபாதித்வமாகிற தங்கள் ஸ்வபாவத்தாலே குணத்தையே தேடி என்விஷயத்திலும் உன்னைப்பற்றின இந்த ப்ரபந்த விஷயத்திலும் தங்களுடைய அங்கீகாரமும் ஆதரமும் கௌரவமும் தோற்றும்படி என்னைக் குளிரக் கடாக்ஷிக்கப்போகிறார்கள். அந்த கடாக்ஷத்தை நான் பெறப்போகிறேன். நிச்சயம்— என்கிறார்.

ஒருவன் பக்தி பாரவச்யத்தாலே ஸதாசார்யர்களை ஸ்துதிப்பானேயானால் ஸாதுக்கள் அதைக்கண்டு ஸந்தோஷித்து கௌரவிப்பார்களேதவிர, அந்த ஸ்துதியில் என்ன தோஷமிருக்கிறது என்று தேடமாட்டார்கள். குணபக்ஷபாதிகளான அவர்களுக்கு தோஷமும் தென்படாது. அதோடு ஸத்விஷயத்தில் ப்ரேம பாரவச்யத்தால் உண்டாகும் வாக்கு தெய்வப்ரேரிதமாய் ரஸமுள்ளதாயும் குணமுள்ளதாயுமிருக்குமே தவிர தள்ளத்தகுந்ததாக இராது. சில்லரையான பாஷாஸ்கலிதங்களுண்டானாலும் அவை ஸாரஸ்யத்தால் மறையும். (33)

அவ— "ஆனால் ஸாதுக்கள் உன்னுடைய ப்ரபந்தத்தில் குறைகுணங்களைச்சொல்லார்களேயானால்அவற்றை நிர்த்தாரணம் செய்வது யார்" என்பதற்குப் பதில் சொல்லுகிறார்.

(௯௦௪) ஸந்தூஷயந்தி ஹ்ருதயாந்யஸதாம் குணாம்ஸே
ஸந்தஸ்து ஸந்த்யபி ந தர்ஸயந்தி தோஷம் ।
தத்ரங்கராஜசரணாவநி தே ஸ்துதீநாம்
ஏகா ஸ்வயம் ஸதஸதோரிஹ ஸாக்ஷிணீ ஸ்யா: ॥

(ப-ரை) ஹே ரங்கராஜசரணாவநி - வாராய் ஸ்ரீரங்கராஜாவின் திருவடிகளைக் காப்பாற்றுகிறவளே! அஸதாம் - அஸத்துக்களுடைய, அதாவது ஆஸுரப்ரக்ருதிகளுடைய, ஹ்ருதயாநி - மனஸ்ஸுக்கள், குணாம்ஸே - குணபாகத்திலேயும், ஸந்தூஷயந்தி-பொறாமைப்பட்டு தோஷாரோபணம் பண்ணுகின்றன, ஸந்தஸ்து - தெய்வப்ரக்ருதிகளான மஹான்களோவென்றால், ஸந்த்யபி-இருந்தாலும், தோஷம்-தோஷத்தை, ந தர்ஸயந்தி - ப்ரகாசப்படுத்துகிறார்களில்லை, அதாவது அவர்கள் பிறர்களிடத்தில் குற்றம் கண்டுபிடிக்கிற ஸ்வபாவமுள்ளவர்களல்லாததால் தோஷத்துக்கும் ஸமாதானம்சொல்லி குணம்போல் காட்டிவிடுகிறார்கள், தத் - ஆகையினாலே, தே- உன்னுடைய, ஸ்துதீநாம் - ஸ்தோத்திரங்களுடைய, இஹ ஸதஸதோ: - இந்த குணதோஷநிர்த்தாரணவிஷயத்திலே, ஏகா - ஒருத்தியான, ஸ்வயம் - நீயேதான், ஸாக்ஷிணீ

நேரில் பார்த்தவளாய் உண்மையைத் தெரிவிக்கும்படியான ஸாக்ஷியானவள், அதாவது இதிலுள்ள குணதோஷங்களை நீயே தான் மத்யஸ்தையாய் சொல்லவேணுமென்பது தாத்பர்யம்.

(கருத்து.) இந்த ஸ்ரீரங்கத்துக்கு (லீலாவிபூதிக்கு) மஹாராஜாவான பகவானுக்கு அநுரூபஸஹசரியான பாதுகையே! நீயும் அவனைப்போல் உலகத்தில் நல்லது கெட்டதுகளைத் தீர்மானித்து பலப்ரதானம் பண்ணத்தக்க மஹாராஜ்ஞியன்றோ? என்னுடைய இந்த க்ரந்தத்தின் குணதோஷங்களை எங்கே போய் தீர்மானிப்பது. ஸாதுக்களிடத்தில் போனால் அவர்கள் ஸ்வபாவத்தில் குணபக்ஷபாதிகளானபடியாலும் உன் விஷயமான்று எதானாலும் அதில் ப்ரீதியே பாராட்டுகிறவர்களானதாலும் இதில் ஒரு தோஷமும் அவர்கள் சொல்லுகிறதில்லை. என்னப்பன் பகவான் விஷயம், என் அம்மா பாதுகையின் விஷயம், ஸ்ரீ ஆசார்யாள் விஷயம் எவ்வளவு ரஸமாக இருக்கிறது என்று ஒரேபடியாகக் கொண்டாடுகிறார்கள். அஸாதுக்களிடத்தில் போனால் அவர்களுக்கு பிறர்களிடத்தில் குற்றமே பார்ப்பது ஸ்வபாவமானதாலும், உன் விஷயம் ஒன்றும் அவர்களுக்கு ருசிக்காததோடு அதில் ப்ரத்வேஷமும் உண்டாகிறபடியாலும், இதில் அவர்களுக்கு குணபாகமே தோன்றுகிறதில்லை. என்னமோ காலில் போட்டுக்கொள்கிற அசேதநமான ஒரு கட்டையைப்பற்றி பிரமாதமாக வர்ணிக்கிறார். அதற்கு அறிவுண்டா சக்தியுண்டா அது ஒரு தெய்வமாம்; எல்லாம் வீண்கதை; பொழுதுபோக்கற்ற வேலை. இதில் ப்ரயோகிக்கிற சப்தார்த்த ஸ்வாரஸ்யங்களும், கவிதா ஸாமார்த்தியமும் விருதா ப்ரயோகம் தவிர வேறென்ன? இதில் நல்லது கெட்டது என்ன இருக்கிறது என்று ஒரேபடியாய் தூஷித்துவிடுகிறார்கள். உதாஸீனர்களைக் கேட்போமென்றால் அவர்கள் ஓடுகிற இந்த ஸம்ஸார ஓட்டத்தில் இந்த விஷயத்தைக்கவனிக்க அவர்களுக்கு பொழுதுமில்லை; இது அவர்கள் செவியில் படுகிறதுமில்லை. அநுகூலரென்றும் ப்ரதிகூலரென்றும் அநுபயரென்றும் இந்த மூன்று வகையைச்சேராதார் உலகத்தில் யார் இருக்கிறார். யாரைப்போய் கேட்பது. ஆகையால் உன் ஸ்தானத்தைப்பற்றி நல்லது கெட்டதுகளைத்தீர்மானித்துப் பலப்ரதானம் பண்ணுவதற்கு பாத்யப்பட்டவளும் ஸர்வஜ்ஞையானதால் ஸர்வத்தையும் உள்ளபடி பார்க்கிறவளு

மான நீ ஒரு ஸாக்ஷிதானே இதற்கு இருக்கிறாய். ஆகையால் நீயேதான் இதைத் தீர்மானிக்கவேணும்—என்று விண்ணப்பம் செய்கிறார்.

லௌகிகமோ வைதிகமோ ஒரு ஸத்விஷயத்தில் குணதோஷங்களைத் தீர்மானிக்கவேணுமானால் அதை ஸ்ரீபகவான் ஸதாசார்யாள் இவர்களுடைய திருவுள்ளத்தால்தான் அறியவேணும். (34)

அவ:— இப்படி விண்ணப்பம் செய்ய ஸ்ரீபாதுகை ஒரு உத்தரமும் அருளிச்செய்யாதிருந்தவாறே இந்த ஸ்துதியாகிற சொல்மாலையை ஸ்ரீபாதுகை முழுவதும் அங்கீகரித்து திருவுள்ளமுகந்திருப்பதாகத் தீர்மானித்தும், இது நம்முடைய செயலோ ஸ்ரீபாதுகையினுடைய ஸொந்த காரியமேயல்லவோ என்று நிதானித்தும் “ இதை உள்ளபடி செய்வித்தது யார்? இதில் வக்த்ரு வைலக்ஷண்யத்தையும் விஷயவைலக்ஷண்யத்தையும் யோஜித்தால் தோஷத்துக்கு ப்ரஸக்தி என் ” என்கிற அபிப்ராயத்தை உள்ளடக்கி விஜ்ஞாபிக்கிறார் மேல் சுலோகத்தில்.

(கூ00ரு) இத்தம் த்வமேவ நிஜகேலிவஶாதுபாத்தா
இக்ஷ்வாகுநாத பதபங்கஜயோரநந்யா ।
ஸ்வீயம் ப்ரஸாதவதி மயா ஸமுத்திதீர்ஷும்
ஸீதேவ தேவி ஸஹஜேந கவீஶ்வரேண ॥

(பதவுரை) ஹே தேவி ப்ரஸாதவதி - தாராய் ப்ரஸன்னையாய் விளங்காநிற்கிற பாதுகையே! இக்ஷ்வாகுநாத - இக்ஷ்வாகு குலத்துக்கு நாதனான ஸ்ரீராமனுடைய, பதபங்கஜயோ: திருவடிமலர்களுக்கு, அநந்யா - அநந்யையான, அதாவது அந்தத் திருவடிகளைத் தவிர வேறு ஆச்ரயமில்லாதவளும் அந்தத் திருவடிகளை விட்டுப் பிரியாதவளுமான, ஸீதா-ஸீதா தேவியானவள், ஸஹஜேந - தன் உடன்பிறந்தவனான, கவீஶ்வரேண-கவிச்ரேஷ்டரான வால்மீகிமஹர்ஷியினால்போல, இக்ஷ்வாகுநாத பதபங்கஜயோரநந்யா த்வமேவ - இக்ஷ்வாகு நாதனுடைய திருவடிகளை விட்டுப் பிரியாதவளும் அந்த திருவடிகளைத்தவிர வேறொரு ஆச்ரயமில்லாதவளுமான நீயே, மயா - தாஸபூதனான என்னைக்கொண்டு, ஸ்வீயம் - தன்னுடைய

தான (தனக்கு ஹிதமான), ஸுமஹத் - மிகவும் பெரிதான அதாவது விஸ்தாரத்தால் பெரியதும், மாஹாத்ம்யங்களையெல் லாம் ப்ரதிபாதிப்பதால் உத்க்ருஷ்டமுமான, சரித்ரத்தை, நிஜகேளிவசாத் - தன்னுடைய விளையாட்டினாலே அதாவது தனக்கு விளையாட்டாகப் பொழுதுபோக்குவதின் பொருட்டு, அல்லது தனக்கு யாதொரு பிரயாஸையுமன்றியில் விளையாடுகிறாப்போலே, அகாரயத்: - தானே செய்வித்துக் கொண்டாய்.

(கருத்து) என் ஸ்துதியை அங்கீகரித்துத் திருவுள்ளமுகந்து ப்ரஸன்னையாய் விளங்காநிற்கிற பாதுகையே! இந்த ஸ்தோத்தி ரத்தில் தோஷத்துக்கு பிரஸக்தி எங்கே? ஏதோ நான் செய்தது போல் நினைத்துச் சொன்னேன். இது என்ன ப்ரமம்? இந்த ஸ்தோத்திரத்திற்கு விஷயம் யார்? இதைச் செய்ததுதான் யார்? "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" என் கிறபடி ஸ்ரீராமனைத்தவிர வேறு ஆச்ரயமில்லாதவளும், ஸூர் யனைவிட்டு அவன் காந்தி பிரியாததுபோல் ஸ்ரீராமனைவிட்டுப் பிரியாதவளும், ஸ்ரீராமனைப்போன்ற ப்ரபாவமுள்ளவளுமான ஸீதாதேவியானவள் "காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயா: சரிதம் மஹத்" என்கிறபடி தன்னுடைய மாஹாத்ம்யங்களை எல்லாம் விளக்கும்படியான ஸ்ரீமத்ராமாயணமாகிற தன்னு டைய விஸ்தார சரித்ரத்தை தன் உடன்பிறந்தவனாய் கவிச்ரேஷ் டனை வால்மீகி பகவானைக்கொண்டு செய்வித்தாப்போலே எல்லா விஷயத்திலும் அந்த ஸீதாதேவியை ஒத்தவளாய் அவளு டைய ரூபாந்திரம் போன்றவளுமான நீ விஷயப்ரதிபாதனத்தி லும் மாஹாத்ம்யத்திலும் அந்த ஸ்ரீமத்ராமாயணம் போன்ற உன்னுடைய திவ்ய சரித்ரத்தை உனக்கு பரமதாஸபூதனாய் உன்னால் அனுக்ரஹிக்கப்பட்ட வாக்கையும் புத்தியையும் உடைய வனுமான என்னை வ்யாஜமாகக்கொண்டு இந்த ப்ரகாரம் ஆயிரம் சுலோகங்களுள்ள ஒரு திவ்ய ப்ரபந்தமாக தானே செய்வித்துக் கொண்டதல்லவோ இது. இதைச் செய்வித்ததுதான் எதற்கு? ஸம்ஸாரத்தில் அகப்பட்டு வருந்துகிற உன்னுடைய ப்ரஜை களாகிற ஜீவராசிகளைக் காப்பாற்றுகிற வ்யாபாரத்தையே உனக்கு பரமஹிதமாகவும் பொழுதுபோக்கான விளையாட்டாக

வும் உடைய நீ அந்த அபிமதத்துக்கும் விளையாட்டுக்கும் ஸாதன மாகவன்றோ இதை அநாயாஸமாகச் செய்தருளினாய். இப்படி என்னை ஒரு வ்யாஜமாகமட்டும் கொண்டு உலகங்கள் உன்னை அறிந்து ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கும்படி உலகத்தின் க்ஷேமத்தையே கருதி [illegible] லீலையாக செய்தருளிய உன் ஸ்தோத்ரரூபமான இந்த திவ்ய சரித்ரத்தில் தோஷத்துக்கு ஸம்பாவனையுமுண்டோ? இது ஒரு ப்ராக்ருதமனுஷ்ய க்ருத்யமல்லவே. ஆகையால் இது முழுவதும் லோகோஜ்ஜீவனகரமான அம்ருத ப்ரவாஹமே என்று தானே கொண்டாடுகிறார்.

[illegible]சார்யர்களுடைய ஸ்தோத்திரமும் சரித்ரமும் பகவத் ஸ்தோத்ரசரித்ரங்கள்போல் ப்ரபாவமுள்ளன. அவைகளும் ஸத் சிஷ்யர்கள் மூலமாக அவர்களுடைய அநுக்ரஹத்தாலேயே ஏற் படுகிறபடியால் அவைகள் குற்றமற்றவைகளாகவே இருக்கும்; உலகத்தின் க்ஷேமத்தின் பொருட்டேயாகும். (35)

அவ— இப்படி இந்த ஸ்தோத்திரமானது கேவலம் தன்னு டைய கவிதாஸாமர்த்தியத்தினால் ஏற்பட்டதல்லவென்றும், அது ஸ்ரீபாதுகாநுக்ரஹத்தாலேயே தன்னுடைய புத்தி சக்திகளை நிரபேக்ஷமாகக்கொண்டு அவசமாக ப்ரவர்த்தித்ததென்றும் ஸ்ரீ ஆசார்யர் சொல்லி அது குற்றமற்றதென்று தானே கொண் டாடவே, அது எப்படி என்று கேட்க, உலகங்கள் விச்வஸிக்கும் படி அதற்கு ஒரு உபமானம் சொல்லி உபபாதிக்கிறார் மேல் ச்லோகத்தால்.

(௯0௫) வ்யாமோஹவத்ஸ்வபி ஹ்ருதந்த்ர(ந்த்ர) ஸூத்ர
விசேஷ விதிஷு நிதாய: ஸ்வநஹ்ருத
தமேவ ஸ்ருஷ்டிரியமேவஜாதா உபூர்வமேவ
த்வதீய: பரிசரணபராஸ்தே பாதுகே
அபாஸ்ததோஷா: ॥ (௩௬)

(ப-ரை) ஹே பாதுகே [illegible] வாராய் பாதுகையே! அபாஸ்ததோஷா: - ராகத்வேஷங்களற்றவர்களான, தே - உன் னுடைய, பரிசரணபரா: - தாஸ்யத்தில் ரஸமுள்ளவர் களான பெரியோர்கள், அதாவது உன்னுடைய கைங்கர்யானு பவங்களிலேயே ஈடுபட்டபடியான பெரியோர்கள், வ்யாமோஹ

பாலனுடைய, அதாவது த்ருவன் என்கிற குழந்தையினுடைய
வத³ந - முகத்திலே, ஶங்க²ஸ்ய - ஸ்ரீபகவானுடைய பாஞ்ச
ஜன்யம் என்கிற சங்கத்தின் ஸ்பர்சத்தினுடைய, ரீத்யா
க்ரமத்தினாலே அதாவது அந்தமாதிரியாக, அல்லது நீத்யா
நியாயத்தினாலே அதாவது ப்ரமாணத்தைக்கொண்டு பாஞ்ச
ஜன்யஸ்பர்சம் எப்படி ஜ்ஞாநப்ரதானம் பண்ணக்கூடிய ப்ர
பாவமுள்ளதாக அறிகிறோமோ அதே ந்யாயமாக பாதுகா
ஸ்பர்சமும் ஜ்ஞாநப்ரதானம் பண்ணக்கூடிய ப்ரபாவமுள்ளது
என்பது, க்ஷணாவிஹ - ஒரு ஸமயத்திலே, அதாவது ஸ்ரீரங்க
நாதன் இந்த ப்ரபந்தத்தைப் பண்ணும்படி அனுமதி கொடுக்
கும் ஸமயத்திலே, ஶிரஸி - என் சிரஸிலே, விநிஹிதாயா:
நன்றாக வைக்கப்பட்டவளான, அதாவது அர்ச்சகர்களாலே நன்
றாய் வைக்கப்பட்ட, தவ - உன்னுடைய, ஸ்வைர - ஸ்வாபா
விகமான, ஸஹஜேந வைவ - மஹிமையினாலேயே, உந்மேந-
என் முகமாக, அதாவது என்னை ஒரு கருவியாகமட்டும்
கொண்டு, அயம் ஸ்துதி: - இப்படி உயர்ந்ததான ஸ்தோத்திர
மானது, உபஜாதா - உண்டாச்சுது, அதாவது தானாகவே
ஆவிர்பவித்தது, இதி - என்று, கவய: - எண்ணக்கடவர்
கள், அதாவது அப்படி மனதால் ஆதரித்து வேதத்தை அத்ய
யனம் பண்ணுவதுபோல் சிரத்தாபக்திகளுடன் இதை நித்ய
மாகப் பாராயணம் செய்யக்கடவர்கள்.

(கருத்து) ஓ பாதுகையே! இந்த ஸ்தோத்திரமானது
உன்னாலேயே செய்யப்பட்டதென்றால் நான் எப்படி சொல்லுவது
என்றும் அப்படியானாலும் ஜனங்கள் எப்படி அந்த வார்த்தையை
நம்பி இதை ஆதரிப்பார்கள் என்றும் கேட்கிறாயோ? உலகங்கள்
அறியும்படிக்கும் நம்பும்படிக்கும் அதை ஒரு ஸந்தர்ப்பத்தைக்
கொண்டும் பிரமாணத்தைக்கொண்டும் விவரிக்கிறேன். *இந்த
ஸஹஸ்ரத்தை நான் பண்ணுவதற்கு ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதியில்

* இப்படியே அர்ச்சகமுகமாக ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீ ஆசார்யருக்கு
மிகவும் ஆதரவுடன் இந்த க்ரந்தத்தைப் பண்ணும்படி நியமனம் ஸாதிக்க
தாக ஸம்ப்ரதாயம்.

நியமனம் கேட்கும் ஸமயத்தில் அர்ச்சகாள் உன்னை என் தலையில் ரொம்ப நாழிகை நன்றாக எளப்பண்ணி வைத்திருந்து நியமனம் ஸாதிக்கவில்லையோ? அது அங்கு அப்போதுள்ள பெரியோர்களுக் கெல்லாம் நன்றாய் தெரிந்த விஷயம் தானே; அதுவும் தவிர அர்ச்சாவதாரத்தில் பகவான் அர்ச்சகாள் முகமாக தன் நிய மனங்களை வெளியிடுகிறான் என்பதும் பெரியோர்கள் அறிந்தது தானே. ஸ்ரீரங்கநாதன் எதற்காக அந்த ஸமயத்தில் அர்ச்ச காளைக்கொண்டு உன்னை என் தலையில எழுந்தருளியிருக்கும்படி செய்தார். உன் மூலமாக எனக்கு உன்னை ஸ்தோத்திரம்பண் ணும்படியான திவ்ய ஜ்ஞாநத்தையும் வாக்கையும் கொடுப்பதற் காகத்தானே. அது எப்படி என்றால்:— முன்னொரு காலத்தில் த்ருவன் என்கிற பாலன் பகவானைக் குறித்து தபஸ்பண்ண, அந்தக்குழந்தையின் பக்திக்கு உகந்து பகவான் ப்ரத்யக்ஷமான தும் அந்தக்குழந்தை பகவானைக்கண்டு ஆநந்தபாவசமாகி அந்த ஆநந்தத்துக்குப் போக்குவீடாக வாயார ஸ்தோத்திரம்பண்ணத் தெரியாத்தால் பதரி "ஸோதாதும்காமஹமிவாமி தத்வஜ்ஞாம் வ்யவஹெ" (உன்னை ஸ்தோத்ரம் பண்ணவேணுமென்று ரொம்ப ஆவலாக இருக்கிறது; சொல்லத் தெரியவில்லையே; அதற்குவேண்டிய ஜ்ஞாநத்தை எனக்குக் கொடும் என்று பிரார்த் திக்க "ஶம்வஜ்ஞொநநொவிஷ ஸம்வஸஶ கநூதாணுவிடு" என்கிறபடி பகவான் அந்தக்குழந்தையின் முகத்தை தன்னு டைய ஸ்ரீபாஞ்சஜன்யத்தால் தடவிக்கொடுக்க திவ்ய ஜ்ஞாநமும் வாக்கும் உண்டாய்விடவில்லையோ? சங்கத்தால் முகத்தைத் தொட்டமாத்திரத்தில் உண்டான ஜ்ஞாநம் உன்னை தலையில் ஸாதித்து அனுக்ரஹித்தால் உண்டாகாதோ? அப்படியே நீ என் தலையில் அந்த ஸமயத்தில் எழுந்தருளி இருந்து அனுக்ர ஹித்ததினால் உன் ப்ரபாவத்தாலேயே எனக்கு உன்னை ஸ்தோத் திரம் பண்ணும்படியான திவ்ய ஜ்ஞானமும் வாக்கும் ஏற்பட்டு இந்த ப்ரபந்தம் உன்னுடைய அனுக்ரகரூபமாக் தானாகவே வெளிப்பட்டது. அஸூயைக்குக் காரணமான காமக்ரோதங்க ளற்ற மனதுடையவர்களும் உன்னுடைய பரிசர்யையில் ஈடு பட்டவர்களுமான பெரியோர்கள் இந்த உண்மையை உள்ளபடி அறிந்து அப்படியே இந்த ப்ரபந்தத்தை மனதால் கௌரவித்து,

ஆதரிப்பதுமன்னியில் வேதத்துக்கு ஸமமாக பாவித்து சிரத்தா பக்திகளுடன் நித்ய பாராயணத்துக்கும் வைத்துக்கொண்டுவிடுவார்கள். இப்பெரியார்களுடைய அனுஷ்டானத்துக்குப் பிறகும் இந்த ப்ரபந்தம் உன்னுலேயே ஏற்பட்டது. அப்படியே கொண்டாடத்தக்கது என்கிற விஷயத்தில் அஸூயையில்லாதவர்களும் ஆஸ்திக்யமுடையவர்களுமான ஜனங்கள் ஸம்சயிக்கமுடியுமோ? ஆஸுரப்ரக்ருதிகள் தவிர மற்ற எல்லாரும் இதைக்கொண்டாடவே கொண்டாடுவார்கள்.

ஸ்ரீபகவான் விஷயமாகவும் ஸதாசார்யர்கள் விஷயமாகவும் ப்ரேமபாரவச்யத்தால் ஏற்படுகிற ப்ரபந்தங்கள் ஒரு அனுக்ரஹ விசேஷத்தை பூர்வபாவியாக உடைத்தாயிருக்கும். (36)

அவ— இப்படி இப்ப்ரபந்தத்தைப்பற்றி ஸ்ரீபாதுகையினிடத்தில் விஜ்ஞாபித்து முடித்து, தன்னுடைய ஸர்வபூத ஸௌஹார்த்தத்தால் இத்தால் ஜனங்கள் க்ஷேமத்தையடையவேணும் என்று கருதி அவர்களைக் குறித்து அருளிச்செய்கிறுர் மேல் சுலோகத்தில்.

(௲௭) யதி ஸ்ரீதா பக்தி: ப்ரத்யயமுகவாணீபரிபணம்
ப்ரபந்தாணாமேஷாம் ஸ்துதி விஷய ஸம்பக்ஷி
திஷ்யக: | நிராதங்கோ யத்வா நிரவதி வாசாவ்யா
நிஷ்பந்நமுகவோ பவேத ஸம்ஸீதந்தா: ந கமல
நாதஸ்ய ஸஸத்ருஷ்யம் || (௩௭)

(ப-ரை) (ஹே ஜநா: - ஓ ஜனங்களே !) ஸ்ரீதா-பூர்ணமான, பக்தி: - பாதுகையினிடத்தில் பக்தியானது, யதி-உங்களுக்கு இருக்குமேயானல், ப்ரத்யயமுகவ-(ப்ரத்யய)நம்பிக்கையை (முகவ) முகத்தில் உடைத்தாயிருக்கிற, அதாவது நம்பிக்கையைக் கொடுக்கிறதாக இருக்கிற, வாணீ - வேதவாக்யத்துக்கு அதாவது வேதத்துக்கு, அல்லது வேதவாக்யத்தை அதாவது வேதத்தை, பரிபணம் - மூலதனமாக இருக்கிற, அதாவது ஸர்வவேதங்களாலும் அறியத்தக்கதான பாதுகையை ப்ரதிபாதிக்கிறதாக இருக்கிற, அல்லது மூலதனமாக உடைத்தாயிருக்கிற, அதாவதுவேதார்த்தங்களையே ப்ரதிபாதிக்கிற, ப்ரபந்தாண

ஸாதரம் இந்த பாதுகாஸ்தோத்திரத்தை, ஹ்ருதி - ஹ்ருதயத்திலே, விந்யஸ்ய தரியுங்கோள், அதாவது நன்றாக ஊன்றப்போட்டு மனதில் எப்போதும் தோன்றும்படி நிறுத்திக்கொள்ளுங்கள், யதா - இல்லாவிட்டால், அதாவது அப்படிப்பட்ட பக்தி இல்லாவிட்டாலும், நிரங்குசः - புத்திப்ரஸரம் சத்தையடையாத ஒருவனும், அதாவது உலகஸங்கதிகளை அறியக்கூடியதும் கவனிக்கக்கூடியதுமான ஸாமான்யபுத்தியுடைய ஒருவனும், ஸஹ்ருதயः - நல்ல மனதோடு கூடியவனும், அதாவது ஒரு விஷயத்தின் ரஸத்தை விவேகித்து அறியக்கூடிய புத்திவிசேஷமுள்ள ஒருவனும், நிரவதி-முடிவில்லாததான, ஸுதா - அம்ருதத்தின், நிஷ்யந்த - வெள்ளத்தை, உத்வஹः-கொட்டுகிறதான, ஏதாம்-இந்த, அதாவது இப்படிப்பட்ட, வசோபங்கீः - வார்த்தைகளுடைய ரீதிகளை அதாவது இன்பமான சப்தரசனத்தை (பதங்களின் சேர்க்கையை) கதம் - எப்படி, நாத்ரியேத - அனுபவிக்காமலிருப்பன்?

(கருத்து) ஓ ஜனங்களே! உங்களுக்கு ஒரு ரஹஸ்யத்தைச் சொல்லுகிறேன் செவிகொடுத்துக் கேளுங்கள். இந்த பாதுகாஸ்தோத்திரம் எப்படிப்பட்டது என்பது உங்களுக்குத் தெரியுமா? நமக்கு ஐஹிகாமுஷ்மிக ஸகல க்ஷேமங்களுக்கும் மூலமானது வேதம். நீங்கள் நாஸ்திகர்களாக இல்லாத பக்ஷத்தில் அந்த வேதத்தை முழுவதும் நம்பவேணும். அந்த வேதமானது நமக்கு பரமப்ராப்யமும் பரமப்ராபகமும் ஸ்ரீபாதுகையே என்று ஸூக்ஷ்மமாய் அறுதியிடுகிறது. ஆகையால் அந்த வேதத்துக்கு ப்ரதிபாத்யமான வஸ்துவாய் அதற்கு மூலதனம்போலிருக்கிற ஸ்ரீபாதுகையை ப்ரதிபாதிக்கிறது இந்த ஸ்தோத்திரம். (அல்லது, அந்த வேதத்தையே மூலதனமாகக்கொண்டு அந்த வேதார்த்தத்தையே உபப்ருஹ்மணம் பண்ணுகிறது இந்த ஸ்தோத்திரம். அதாவது, வேதத்தில் ஸூக்ஷ்மமாகக் காட்டப்பட்ட "ஸ்ரீபாதுகையே நமக்கு பரமப்ராப்ய ப்ராபகங்கள் அதையே நாம் அநந்யபரமாகப் பற்றவேண்டியது" என்கிற அர்த்தத்தை நன்றாக விஸ்தரித்துக் காட்டுகிறது இந்த ஸ்தோத்திரம். ஆகையால் உங்களுக்கு ஸ்ரீபாதுகையினிடத்தில் பக்தி

விசேஷமாக இருந்து அதையே நீங்கள் அநந்யகதிகளாக ஆச்ரயித்து இருக்கும் பக்ஷத்தில் உங்களுக்கு இஷ்டமான ஸ்ரீ பாதுகையை நன்றாக அனுபவிப்பதற்கு ஸாதனமாகவும், உங்களுக்கு ஸ்ரீபாதுகா விஷயத்திலுள்ள பக்தி மேலும் விசேஷமாக விருத்தியடைவதற்காகவும் இந்த உத்தமமான ஸ்ரீரங்கநாத பாதுகா ஸ்தோத்திரத்தை நன்றாக உருப்போட்டு மறவாமல்படி எப்போதும் மனதில் தரியுங்கோள். இதுவே உங்களுக்கு பரம ஹிதம்; பரமபலம்; பரமக்ஷேமம். அப்படிப்பட்ட பக்தி பாதுகா விஷயத்தில் உங்களில் சிலருக்கு இல்லையே என்று சொல்வீர்களேயானாலும், அந்தப் பக்ஷத்திலும் நீங்கள் இந்த ஸ்தோத்திரத்தை ஆசையோடு உருப்போட்டு மனதில் தரித்தேயாகவேணும்; அப்படிச் செய்யாமல் இருக்க உங்களால் முடியாது. எப்படி என்றால், நீங்கள் அடியோடு உலக ஸங்கதியை ஒன்றும் அறியமுடியாமல் புத்தியை இழந்த உன்மத்தர்களாக இல்லாமல் இருப்பீர்களேயானால், உங்களில் சிலருக்கு வெளி விஷயங்களை அறியும்படியான ஸாமான்ய அறிவாவது இருக்கும்; சிலருக்கு விஷயத்தின் ரஸத்தை (ஸ்வாரஸ்யத்தை) அறியும்படியான விசேஷ அறிவும் இருக்கும். அப்படிப்பட்ட நீங்கள் இந்த ஸ்தோத்திரத்தை காதால் ஒருதடவை வாங்குவீர்களேயானால், ஸாமான்ய அறிவுடையவர்கள் இதின் அர்த்த ரஸத்தையறியமுடியாவிட்டாலும், இதில் காதுக்கும் வாக்குக்கும் இனிமையான சப்தரசனத்தின் அழகைக் கண்டு, அதற்காகவாவது இந்த ஸ்தோத்திரத்தை உருப்போடாமலிருக்கமுடியாது. உங்களில் ரஸஜ்ஞாநமுடையவர்கள் பாதுகா பக்தியில்லாவிட்டாலும் அளவில்லாத அமிர்தவெள்ளம் ப்ரவஹிக்கிறதுபோலிருக்கிற அழகான சப்தரசனத்தைக் காட்டிலும் மேலான அர்த்த ஸ்வாரஸ்யங்களைக்கண்டு இதை விடமுடியாது. அப்படி காதுக்கு இனிமையான சப்தரசனத்தைக்கண்டு வேடிக்கையான பொழுது போக்குக்காக இதை அப்யஸிக்கிறவர்களும் ரஸஜ்ஞாநத்தால் இன்பமாகப் பொழுது போக்கவேணுமென்று அப்யஸிக்கிறவர்களுமான நீங்களும், “அநிச்சயாபி ஸம்ஸ்ப்ருஷ்டோ தஹத்யேவ ஹி பாவக:” (அறியாமலோ இச்சையில்லாமலோ தொடப்பட்டாலும் நெருப்பானது தன் ஸ்வபாவப்படி கொளுத்தவே கொளுத்தும்) என்கிற ந்யாயமாக ஸ்ரீபாதுகையினுடைய ஸ்வா

பாவிகமஹிமையினாலே ஸ்ரீபாதுகானுஸந்தானத்தால் பாதுகாபக்தியை அடைந்து உங்களுக்கு அபிலஷிதங்களான ஐஹிகாமுஷ்மிக ஸகலக்ஷேமங்களையும் பெற்று க்ரமேண பரமச்ரேயஸ்ஸையும்(மோக்ஷத்தையும்) அடைந்துவிடுவீர்கள். ஆகையால் இது ஸர்வோப ஜீவ்யமான அமிர்தம். இப்படி அறிந்து இதை எந்த ப்ரகாரமாகவாவது அனுஸந்தித்து இந்த அக்கபயமான ஸம்ஸாரத்தை அடைந்த நீங்கள் எல்லாரும் என்னைப்போல் பரமக்ஷேமத்தை அடையக்கடவீர்கள்— என்று பரமதயையினாலும் பரமௌதார்யத்தாலும் பரமோபதேசத்தை ஸர்வ ஜனங்களையும் குறித்து நம் பரமாசார்யர் பண்ணுகிறார். ஜந்மாந்தரஸுக்ருதவசத்தால் இதை அறிந்து இந்த பரமோபதேசத்தை வீணாக்காமல் கைக்கொண்டு இந்த பாதுகாஸஹஸ்ரத்தை ஸத்குருவின் உபதேசபூர்வகமாகப்பெற்று உலகமெல்லாம் க்ஷேமத்தையடையவேணும்.

ஸ்ரீ ஆழ்வார் முதலான உத்தமாசார்யர்களுடையவும் அவர்களுடைய திவ்ய சரித்ரத்தினுடையவும் ப்ரபாவம் இப்படிப் பட்டது; அதாவது அவர்களுடையவும் அவர்களுடைய சரித்ரத்தினுடையவும் அனுஸந்தானமும் ஆச்ரயணமும் ஸகலபலஸாதனங்களாய் பரம மங்களகரமானவை என்பது ஸ்ரீபாதுகாமுகத்தால் இதில் ஸ்ரீ ஆசார்யரால் நன்றாக இதம்பரமாகக் காட்டப்படுகிறது. அஸூயை அவிச்வாஸங்களாகிற பழுது இல்லாத மனதால் இந்த விஷயத்தை அப்படியே யதாவத்தாக ஸ்ரீ ஆசார்யகிருபையால் அறிந்து உலகங்கள் க்ஷேமத்தை அடையவேணும். (37)

அவ:— இப்படி ஸஹஸ்ரபத்யங்களாலே பக்திபரவசமாக ஸ்ரீபாதுகைகளை முக்யமாக ஸ்துதித்து, இந்த ஸ்தவத்தில் தனக்குண்டான அர்வயம் ஒரு வ்யாஜ பாத்ரமேயாய், ஸ்ரீபகவந்நியமனத்தாலும் ஸ்ரீபாதுகாநுக்ரஹத்தாலுமே இது ப்ரவர்த்தித்ததானபடியால், இது நிர்தோஷமும் ஸர்வகுணோபேதமும் ஸர்வ சாஸ்திரார்த்தங்களையும் உட்கொண்டதும் ஸர்வ ச்ரேயஸ்கரமும் ஸர்வலோகபரிக்ராஹ்யமுமானபடியையும் சொல்லி, பரம தயையினாலும் பரம ஔதார்யத்தாலும் ஸம்ஸாரத்தில் மக்னர்களாய் தீனர்களான ஜனங்களைக் குறித்து இதைக்கொண்டு நீங்கள் உஜ்ஜீவியுங்கள் என்று உபதேசித்து முடித்து, ஸ்ரீபகவந்நியமனத்தாலும் ஸ்ரீபாதுகாநியமனத்தாலும் ஸ்ரீபாகவதநியமனத்தாலும்

தனக்கு விஹிதமாய் மிதமதிகளுக்கு துர்ஜ்ஞேயமாய் துஷ்கர மான ஸ்ரீபாதுகாப்ரபாவப்ரகாசகமான இந்த மஹத்க்ரந்தமானது அநந்தபாரமான கடலைக் கைபிடித்துக் காட்டுமாப்போலும், அநந்த மான வேதங்களாலும் இன்னும் முற்றிலும் அறியப்படாததான ஸ்ரீபாதுகையின் அநந்தப்ரபாவங்களை உலகங்கள் யதாசக்தி விமர்சித்து அறிந்தனுபவிப்பதற்கு ஸஹஸ்ரங்களான மார்க்கங் களைக் காட்டிக்கொடுக்குமாப்போலே ஸஹஸ்ரச்லோகங்களாலே அதின் ப்ரபாவங்களை ஸூசிப்பித்துக்கொண்டும், அப்படியே ஸ்ரீபாதுகாமுகத்தாலே ஸ்ரீபாதுகையின் அபரரூபமானவரும் ஸ்ரீபாதுகையின் திருநாமம் பூண்டவரும் ஆசார்யஸ்ருஷ்டிக்கே ஒரு மாத்ருகை போன்றவரும், ப்ரபன்னஜனஸந்தான கூடஸ்த ருமான ஸ்ரீநம்மாழ்வாருடையவும் அவரை உபலக்ஷணமாகக் கொண்டு அவருடைய திருவடிஸம்பந்திகளான மற்ற ஸதாசார் யர்களுடையவும் பெருமைமுதலானவைகளை ஸூசிப்பித்துக் கொண்டும், ஸ்ரீபாதுகையோடு விட்டுப்பிரியாதபடி சேர்ந்தவ ராய் அதின் பெருமைகளுக்கெல்லாம் காரணபூதரான ஸ்ரீபகவா னுடைய பெருமைகளையும் அப்படியே ப்ரகாசப்படுத்திக்கொண் டும், மிகவும் ஸூக்ஷ்மமான வேதாந்ததத்வார்த்தங்களை ஸ்ரீபூர் வாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளால் யதாவத்தாக உபப்ரும் ஹணம் செய்யப்பட்டபடி ப்ரகாசிப்பித்துக்கொண்டும், இப்படி பகவத்ஸ்துதி, பாதுகாஸ்துதி, ஆசார்யஸ்துதி, வேதாந்ததத் வார்த்தவிவரணஸஹஸ்ரங்கள் என்று ஓராயிரம் பலவாயிரங்களாக விஸ்த்ருதமாய் ஸ்ரீபகவத்பாதுகாநுக்ரஹங்களாலேயே நிர்விக்ன மாய் ஓரிரவில் ஓர் யாமத்தில் அமாநுஷக்ருத்யமாய் அத்யாச்ச ரியமாய் ஸம்பூர்ணமானதைப்பற்றி ஸந்துஷ்டமனஸ்கராய், க்ரு தஜ்ஞதையினால் ப்ரேரிதராய் "ராஜந் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ரு த்ய ......................... ஹ்ருஷ்யாமி ச முஹு: முஹு:"* என்கிற மாதிரியாக இதை ஆச்சர்யத்துடன் நினைத்து நினைத்து அத்யாநந்தபரிதராய் இதில் ப்ரதிபாத்யமான ஸ்ரீபகவானும்

---

* இது யோகதிருஷ்டியினாலே ஸ்ரீக்ருஷ்ணனுடைய விச்வரூப தர்சனத்தையும் ஸ்ரீகீதோபதேசத்தையும் வெகுதூரத்திலிருந்து அறிந்து த்ருதராஷ்ட்ர மஹாராஜனுக்குச் சொல்லிவந்த ஸஞ்ஜயமஹர்ஷியின் வார்த்தை.

ஸ்ரீபாதுகைகளும் ஸ்ரீஆழ்வாருள்ளிட்ட ஸதாசார்யபரம்பரையும் இதற்கு மூலமாய் வேத வேதாந்த உபப்ரும்ஹணங்களாய் லோகோஜ்ஜீவனஹேதுக்களான ஸ்ரீஸதாசார்யஸ்ரீஸூக்திகளும் இந்த க்ரந்தமும் இக்கலியில் குமதிகளால் யாதொரு அவத்யங்களையுமடையாமல் உலகத்தால் உள்ளபடியறிந்து எங்கும் கொண்டாடப்பட்டு லோகக்ஷேமத்தின்பொருட்டு மேல்மேலும் ஜயஸ்ரீயோடு விளங்கவேணுமென்று பல்லாண்டு பாடி, இந்த திவ்ய க்ரந்தத்தின் ஸர்வார்த்தஸங்கிரஹமான மேல் கடைசி சுலோகத்தால் இது அவிச்சின்னமாக புந: புந: ஆவர்த்தியோடு ஆத்மக்ஷேமத்திற்காக * அநுஸந்தேயமென்பதை "ஸந்த: — ஜயந்தி (முதல் சுலோகம்) ஜயந்தி—ஸந்த:(கடைசி சுலோகம்)" என்கிற அந்தாதி பதங்களால் ஸூசிப்பித்துக்கொண்டு இந்த மஹாக்ரந்தத்தை மங்களமாகப் பூர்த்தி செய்கிறார்—

(௧௦௦௮) ஜயதி யதிராஜஸூக்தி: ஜயதி முகுந்தஸ்ய
பாதுகாயுகளீ । ததுபயதநாஸ்த்ரிவேதீமவ
ந்த்யயந்தோ ஜயந்தி புவி ஸந்த: ॥ (௩௮)

இதி கவிதார்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய ஸ்ரீமத்வேங்
கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரே ஃபலபத்ததிர்த்வாத்ரிம்ஶீ ॥

ஸ்ரீரங்கநாதபாதுகாஸஹஸ்ரம் ஸம்பூர்ணம் ।
ஸ்ரீரங்கநாததிவ்யமணிபாதுகாப்யாம் நம: ॥
கவிதார்கிகஸிம்ஹாய கல்யாணகுணஶாலிநே ।
ஸ்ரீமதே வேங்கடேஶாய வேதாந்தகுரவே நம: ॥
ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம: ॥

---

* இந்த க்ரந்தபாராயணம் பூர்த்தியாம்போது கடைசி சுலோகத்தோடு முடிக்காமல் அதின் கடைசி பதமான ஸந்த: என்பதைப் பிடித்துக்கொண்டு அந்த பதத்தோடு ஆரம்பிக்கும் முதல் சுலோகத்தை மறுபடியும் தொடர்ந்து ஸேவிப்பது ஸத்ஸம்ப்ரதாயத்திலுள்ள வழக்கம். அப்படியே அந்தாதி பதங்களுள்ள மற்ற ஸம்ப்ரதாயக்ரந்தங்களிலும்.

(ப-ரை) * யதிராஜ - யதிச்ரேஷ்டரான ஸ்ரீபாஷ்ய காரருடைய, அல்லது யதி - யத்னவான்களுக்குள் அதாவது மோக்ஷத்துக்காக ப்ரயத்தனம் செய்யும் முமுக்ஷுக்களுக்குள், ராஜ - ராஜாவான அதாவது ப்ரதானநாயகர்களான, ஸ்ரீ ஆழ்வார் முதலான ஸதாசார்யர்களுடைய, * ஸூக்தி: - க்ரந்தம் அல்லது க்ரந்தங்கள் அதாவது வேதாந்தார்த்தப்ரகாசகங்களான திருவாய்மொழி, ஸித்தித்ரயம், கீதார்த்தஸங்கிரஹம், ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம், கத்யத்ரயம் முதலான பல க்ரந்தங்களும், ஜயதி - ஜயிக்கிறது (அல்லது ஜயிக்கவேணும் என்கிற கோரிக்கை) அதாவது வேதவிருத்தங்களான குமதிகளுடையவும் வேதபாஹ்யர்களுடையவும் க்ரந்தங்களை அவைகள் அப்ரமாணங்கள் என்று காட்டித்தலையெடுக்கவொட்டாமல் அடித்து, இவைகளை ஸத்ப்ரமாணங்களாகவும் ஸர்வ பரிக்ராஹ்யங்களாகவும் எக்காலமும் மேன்மை பெற்று விளங்கத்தக்கன, அல்லது விளங்கவேணும் என்பது, உபயஸித்தி - மோக்ஷ பலனையும் ஸாம்ஸாரிகபலன்களையும் கொடுப்பவராயிருக்கிற ஸ்ரீயப்பதியான பகவானுடைய, பாதுகா - ஸ்ரீபாதுகைகளினுடைய, யுகலம் - இரண்டானது, ஜயதி - ஜயிக்கிறது அல்லது ஜயிக்கவேணும், அதாவது போகமோக்ஷங்கள் இரண்டுக்கும் நேரில் ஸ்வதந்திரனாய் பலப்ரதாதா ஸ்ரீமந்நாராயணனே என்பதையும், ஆகையால் அவனே ஸர்வகர்மஸமாராத்யன் ஸர்வஸமாச்ரயணீயன் அவன் திருவடிகளையடைவதே பரமபுருஷார்த்தம் என்பதையும் ஸதாசார்யஸத்சிஷ்யர்களின் ரூபம் போலொத்ததும் அவனை வசப்படுத்துவதும் அவன் விஷயத்

---

* இந்த க்ரந்தத்தின் உபக்ரமப்படிக்கும், முழுக்ரந்தத்தின் ரீதியிலும் க்ரந்தத்தின் உபஸம்ஹாரமான (முடிவான) இந்த கடைசி சுலோகத்திலும் இந்தப் பதத்தைக்கொண்டு ஸ்ரீஆழ்வாரைச் சொல்லுவது மிகவும் உசிதம். இதனால் மற்ற ஸதாசார்யர்களும் உபலக்ஷிதர்கள்.

* ஸூக்தி: என்பது ஜாத்யேகவசனமாய் வேதாந்தார்த்த ப்ரகாசகங்களான எல்லா கிரந்தங்களையும் காட்டும். ஸூக்திகளுக்கு ஜயம் சொன்னதில் ஸூக்திகர்த்தாக்களான ஆசார்யர்களுக்கு ஜயமும் உள்ளடங்கினது.

தில் நமக்கு புருஷகாரபூதமானதுமான அவனுடைய இரண்டு பாதுகைகள் தன்னுடைய அனுஷ்டானமுகத்தாலே நமக்குக் காட்டிக்கொடுக்கின்றன என்பதை இதனால் அறிந்து உலக மெல்லாம் இதர தெய்வங்களை விட்டு அந்த பகவானையும் அவனைப்போன்ற ப்ரபாவமுள்ள அந்தப் பாதுகைகளையுமே இனிக் கொண்டாடி ஸதாசார்யஸத்சிஷ்யக்ரமத்துடன் ஆச்ர யித்து மேன்மைபெற்று வாழக்கடவது என்பது, தத்³வயம் - அந்த இரண்டையுமே அதாவது ஸ்ரீஆழ்வார் ஸ்ரீபாஷ்யகாரர் முதலான ஸதாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளையும் ஸ்ரீபகவா னோடு சேர்ந்த இரண்டு பாதுகைகளையுமே (சாஸ்திரத்தையும் பகவானையும் பகவானோடு சேர்ந்த பாதுகாரூபியான ஸதாசார் யானையும் என்று பலிதார்த்தம்), யே-தங்களுக்கு பரம தந மாகஉடையவர்களும், அதாவது ஈமே-ஹி வஸிஷ்டா: ஶ்ராணா: என்கிறபடி லௌகிகர்களுக்குதநத்தைப்போல் அபிமானவிஷய மான புருஷார்த்தமாகவும் புருஷார்த்தஸாதநமாகவும் எண்ணி இருக்கிறவர்களும், த்ரிவேதீம்-ருக், யஜுஸ், ஸாமம் என்றுமூன்று பிரிவுடைய வேதத்தை, ஸவ்யாக்²யந்தி - வியாக்கியானமிருக்கிற வர்களுமான அதாவது ஸ்ரீபூர்வாசார்யஸூக்திகளைக்கொண்டு ஸ்ரீபகவானாலே ஸ்ருஷ்டிகாலத்தில் உலகத்துக்கு ஸகல புரு ஷார்த்தஸாதனமாகக் கொடுக்கப்பட்ட வேதத்தின் உண்மை யான கருத்தைக் கண்டுபிடித்து உலகத்துக்குக் காட்டி குமதி களினுடைய துர்மதங்களிலகப்படாமல் தத்வஹிதபுருஷார்த் தங்களைத் தெறிந்து பிரவர்த்தித்து உலகம் நன்மையையடை யும்படி செய்து வேதத்தை ஸபலமாக்குகிறவர்களுமான, ஸந்த:-நம் ஆசார்யர்களும் அவர்களுடைய மதத்தையநுஸரித் தவர்களுமான ஸாதுக்கள், ஹ்ஹ - இந்த உலகத்தில், ஜயந்தி- ஜயசீலர்களாக விளங்குகிறார்கள், அதாவது சாஸ்திரத்தையும் தெய்வத்தையும் உள்ளபடி அறிந்து அப்படி அறியாதவர்கள் ஐஹிகாமுஷ்மிகங்களில் துக்கத்தையநுபவித்துக்கொண்டு கர்ம பத்தர்களாகவே ஸம்ஸாரத்தில் மக்னர்களாவதுபோலல்லாமல் ஸமர்த்தமானதொரு உபாயத்தால் இங்கிருந்துவைத்தே ஸம்

ஸாரத்தை ஜபித்தவர்களாயும் தேஹாவஸாநத்தில் பகவானை யடைந்து ஸ்வஸ்வரூபம்பெற்று அகர்மவச்யர்களாக பரிபூர்ண ப்ரம்மானுபவத்தையடையப்போகிறவர்களாகவும் இந்த பூமியிலேயே ஜயசீலர்களாகவிளங்குகிறார்கள் என்பது. ஜயதி என்கிற பதத்தை இப்படி ஒவ்வொரு விஷயத்திலும் ஆதரம் தோற்றும்படிக்கும் ஆநந்தம்உள்ளடங்காமலும் ஆவ்ருத்திசெய்கிறார்.

(கருத்து) இப்படி ஸ்ரீபகவத்பாகவத, பாதுகா நியமனங்களால் எனக்கு விஹிதமான இந்த திவ்ய க்ரந்தமானது ஸ்ரீ பகவானுடையவும் ஸ்ரீபாதுகைகளுடையவும் ஸ்ரீ ஆழ்வார் முதலிய ஸதாசார்யர்களுடையவும் வேதோபப்ருஹ்ஹணங்களான ஸ்ரீமதாசார்ய ஸ்ரீஸூக்திகளுடையவும் பெருமைகளையும், ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்கள் தத்வஹித புருஷார்த்தங்கள் இவைகளுடைய உண்மைகளையும் துரவகாஹமான (ஸரியானபடி முழுவதையும் தெரிந்துகொள்ள முடியாததான) சாஸ்திர பரிச்ரமமன்னியில் அநாயாஸமாக உலகத்துக்குப்ரகாசப்படுத்திக்கொண்டு அத்யாச்சரியமாய் அமானுஷ கிருத்யமாய் என்னையொரு வ்யாஜமாக மட்டும் கொண்டு ஸ்ரீபகவத் பாதுகானுக்ரஹத்தாலேயே லோகக்ஷேமத்தின்பொருட்டு பூர்த்தியடைந்தது. இத்தால் நானும் தன்யனானேன்; உலகங்களும் மிகவும் வரப்ரஸாதியும் தத்வபோதகமுமான இந்தக் கிரந்தத்தால் மஹத்ஸ்ரேயஸ்ஸைப் பெறலாயின; ஸ்ரீபகவானும் ஸ்ரீபாதுகைகளும் பெரியோர்களும் திருவுள்ளம் உகக்கலாயினர். "பிப்யத்யல்பச்ருதாத்வேத: மாமயம் ப்ரதரிஷ்யதி" என்கிறபடி அல்பப்படிப்பும் அல்ப அறிவுமுள்ள மந்த புத்திகளிடத்தில்நின்றும் தீக்ஷ்ண புத்திகளான குமதிகளிடத்தில் நின்றும் நடுங்கும் வேதசாஸ்திரமும் இனி நாம் நிலைத்தோமென்று ஸந்தோஷிக்கும்படியாயிற்று. இனி உலகுக்கோர் குறையுமில்லை என்று இப்படி கிரந்தாந்தத்தில் மனதில் பர்யாலோசனை செய்து, அதனால் வந்தஹர்ஷம் உள்ளடங்காமல், ஸ்ரீசிறுத்திருவடியானவர் (ஹனுமார்) லங்கையில் துஷ்டபாபராக்ஷஸகணங்கள் மத்தியில் நின்று ஸபரிவாரனான ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகனுடைய வீர்யதைர்யசௌர்யபலபராக்ரமங்களை நினைத்து இதுவரையில் துர்ஜயர்களாய் லோககண்டகர்களான இவ்விராக்ஷஸர்கள் ஸ்ரீபெருமாளுடையவும் இளையபெருமாளுடையவும்

ஸஸைனிகனான ஸுக்ரீவ மஹாராஜனுடையவும் பல பராக்ரமங்களுக்கு நல்ல இரையாயினர், ஸாபராதர்களான இவர்கள் இனித் தப்பப்போகிறதில்லை, உலகத்துக்கும் தேவதைகளுக்கும் க்ஷேமம் பிறந்தது என்று தீர்மானித்து அதனால் வந்த ஹர்ஷமும் உத்ஸாஹமு முள்ளடங்காமல் "ஜயத்யதிபலோராம:" என்று உத்கோஷித்தாப்போல், வேதசாஸ்திரங்களைக்கெடுத்து உலகத்தை மோஹிப்பிக்கும் குமதிகள் மத்தியில் நின்று சாஸ்திரத்தினுடையவும் ஸ்ரீய:பதியான பகவானுடையவும் பெரியோர்களுடையவும் ஜயத்தை உத்கோஷம் செய்கிறார். அதாவது:— ப்ரத்யக்ஷம் அனுமானம் சப்தம் என்கிற லோகவேத ஸத்ப்ரமாணங்களுக்கு விரோதமாய் பிதற்றுகிற பற்பலவைகளாய் தாமஸபுத்தி வைபரீத்ய பரிகல்பிதங்களாய், நல்லபயிருக்குக் களைபோல் விவிதங்களாய், ஸ்வத: உத்பன்னங்களாய், ஆஸுரப்ரகிருதி மோஹனகரங்களாய், லோக துஷ்கர்ம மூலங்களாய், பகவந் நிக்ரஹ ரூபங்களாய், ஆத்மநாசகரங்களான துர்மதங்களில் [ப்ருதிவீ முதலான நான்கு பூதங்களின் ஸ்வாபாவிக விகாரங்களாய் ப்ரத்யக்ஷத்தால் அறியப்படுகிறஉடம்புமுதலானவஸ்துக்கள் தவிர அதீந்திரியமான (கண் முதலிய இந்திரியங்களாலறியப்படாத) வை ஒன்றுமில்லை; ஆகையால்உடம்பின் போஷணமும் ஸுகங்களும்தவிர மற்ற புருஷார்த்தமும் அதற்கல்லாத கர்தவ்யமுமில்லை என்கிற சார்வாகனுடையநாஸ்திகமதமும்; அந்த ப்ரதயக்ஷமும்ப்ரமாணமன்று உலகமும் வஸ்துக்களும் ஒன்றுமே இல்லை, ஒன்றுமில்லையென்பதே உண்மை, மற்றதெல்லாம் ப்ரம்மம் என்கிற பௌத்தர்களில் ஸர்வசூன்யவாதியானமாத்யமிகனுடைய மதமும்; நிராச்ரயமாய்(தனக்கொரு தங்குமிடம் இல்லாததாய்) நிர்விஷயமாய் (தன்னால் காட்டக்கூடிய ஒரு ஸங்கதியைஉடைத்தானதல்லாததாய்)க்ஷணிகமான (ஒரு க்ஷணகாலம் மட்டும் இருப்பை உடையதான) ஜ்ஞானம் (அறிவு) என்கிற ஒரே வஸ்துவை மட்டும் ஒப்புக்கொண்டு உலகமாகத் தென்படுமதெல்லாம் ப்ரமத்திலே தோன்றுகிறது, உண்மையில் அந்த ஒரே வஸ்துதான் உளது மற்றது இல்லை என்கிற பௌத்தர்களில் யோகாசாரனுடைய மதமும்;நிராச்ரயமாய் க்ஷணிகமான ஜ்ஞானஸந்தானத்தை (ஒன்றின்பின் ஒன்றான ஜ்ஞானங்களின் வரிசையை) யும் அதற்கு விஷயமாய் ப்ரத்யக்ஷத்தாலோ அனுமானத்தாலோஅறியப்படுகிற க்ஷணிகமானவஸ்துஸந்தானங்

களால் (ஒன்றின்பின் ஒன்றான வஸ்துக்களின் வரிசைகளால்) உண்டாகிற ஜகத்தையும் மட்டும் ஒப்புக்கொள்கிற பௌத்தர்களில் வைபாஷிக ஸௌத்ராந்திகர்களுடைய மதமும்; ஈசுவரனை ஒப்புக்கொள்ளாமல் ப்ரகிருதி, ஜீவன்கள், கர்மம் இவைகளை மட்டும் ஒப்புக்கொண்டு ஜீவன்கள் ப்ரகிருதியைப்போல் ஸ்வரூப வேறுபாடுகள் உள்ளனவாகவும் ஒரேவஸ்துவில் விருத்ததர்மங்கள் இருப்பதாகவும் சொல்லுகிற ஜைன மதமும்; ப்ரகிருதி ஜீவன்கள் ஈசுவரன் என்கிற மூன்று தத்வங்களை ஒப்புக்கொண்டும் தத்வஹித புருஷார்த்தங்களை வேதவைதிக விருத்தமாகச் சொல்லுகிற பாசுபத மதமும்; ப்ரகிருதி ஜீவன்கள் என்கிற இரண்டு தத்வங்களை மட்டும் ஒப்புக்கொண்டு ஜீவனுக்கு ஜ்ஞாத்ருத்வ (அறியும் சக்தி) கர்த்ருத்வ (வேலைசெய்யும் சக்தி) ங்களில்லாமல் புண்ணி ஜடமான (அறிவில்லாத) ப்ரகிருதியையே கர்த்தாவாக்கி அதையே ஜகத்காரணமாகச் சொல்லுகிற ஸாங்க்ய மதமும்; ஸாங்க்ய மதத்தின் கொள்கையே கொண்டு மூன்றாவது தத்வமாய் ஜகத்துக்கு நிமித்த காரணமாத்ரமாக (உண்டாகும்படி ஏவுகிறவனாக மட்டும்) ஈசுவரனைபுங்கூட ஒப்புக்கொள்கிற யோக மதமும்; அப்படியே மூன்று தத்வங்களை ஒப்புக்கொண்டு ஈசுவரனை கேவல அநுமான ஸித்தனாகவும் (யுக்தியைக்கொண்டு இருப்பதாகக் கண்டுபிடிக்கத்தக்கவனாக) நிமித்தகாரணமாத்ரமாகவும் சொல்லி ஜீவஸ்வரூபத்தை ஸ்வபாவத்தில் ஜடமாக்கி அப்படியே மோக்ஷ தசையிலும் பாஷாணகல்பமாக (கல்லுக்கு ஸமமாக) ச்சொல்லுகிற வைசேஷிக மதமும் ஆகிய] வேதபாஹ்ய (வேதத்தை ஒப்புக்கொள்ளாத) மதங்களும் [வேதத்தை ஒப்புக்கொண்டும், ஆமூலாக்ரம் ஒத்து முழுவதும் ப்ரமாணமான வேதத்தில் ப்ரம்மஸ்வரூபம், ஜீவஸ்வரூபம் முதலானதைத் தெரிவிக்கிற ப்ரம்மகாண்டம் என்று சொல்லப்பட்ட பின்பாகத்தை அப்ரதானமாகத்தள்ளி ஐஹிகாமுஷ்மிக பலஸாதனங்களான கர்மாக்களைச் சொல்லுகிற பூர்வ பாகமான கர்மகாண்டத்தை மட்டும் முழுப்ரமாணமாக்கி அதைக்கொண்டு ஈச்வரன் இல்லையென்றும், ஜீவஸ்வரூபம் விபுவென்றும், அசேதனமான 1 கர்மாபூர்வமே ஸம்ஸாரமோக்ஷங்களுக்குக்

---

1 கர்மா பூர்வம் என்பது ஒரு வேலையைச் செய்துமுடித்ததும் அதனால் ஏற்படுகிறதும் பின்னிட்ட காலத்தில் அந்த வேலைக்குத் தகுந்த பலனைக் கொடுக்கிறதுமான ஒரு சக்தியென்று யுக்தியினால் சொல்லுகிறார்கள்.

காரணமென்றும், ஆத்மப்ராப்தியே மோக்ஷமென்றும், ஸ்வர்க்கமே அபேக்ஷணீயமான புருஷார்த்தம் என்றும் சொல்லி, தத்வஹித புருஷார்த்தங்களை வேதவிருத்தமாக ஸாதிக்கப் பார்க்கிற மீமாம்ஸகமதமும், வேதத்தின் பூர்வபாகத்தை அப்ரமாணமாக்கி, வேதாந்தங்களிலும், ப்ரம்மத்துக்கு குணம் முதலானவைகளைச் சொல்லுகிற வாக்யங்களையும், சேதன அசேதனஈச்வரபேதத்தையும், ஜீவபஹுத்வத்தையும் காட்டுகிற ச்ருதிகளையும் தள்ளி 1நிர்குணவாக்யங்களையும் 2 அபேதச்ருதிகளையும் மட்டும் தனியாக ஸ்வதந்த்ரப்ரமாணமாக்கி ஜீவன்கள் இல்லை என்றும், ஜகத் மித்யையென்றும், ப்ரம்மம் ஒரே வஸ்துதான் ஸத்யம் என்றும் சொல்லும் மாயாவாதிகளில்—ஒரு ஸங்கதியுமில்லாததும் அதனால் ஒருபடியாயும் அறியமுடியாததும் நிராச்ரயமும் நிர்விஷயமுமான கேவல அறிவுருபமான ப்ரம்மம் ஒரே வஸ்து தான் உள்ளது மற்ற வஸ்து இல்லை; அந்த ப்ரம்மம் பொய்யான அவித்யை அல்லது அஜ்ஞானத்தால் ப்ரமித்துப் பொய்யான உலகமாகத் தோன்றுகிறது; இதுவிஷயத்தைத் தெரிவிக்கிற ஒரு உபநிஷத் வாக்யத்தின் அர்த்தத்தைக் கேட்டதும் அதற்கு ப்ரமம் நீங்கி பொய்யான உலகமெல்லாம் நசித்து ஸத்யமான ப்ரம்மம் ஒன்றே யாய் நிற்கிறது—என்கிற சங்கரமதமும், சங்கரமதப்படி ஒரே வஸ்துவைக்கொண்டு ஜகத்தை நிரூபிக்க ஸாத்யமாகாதென்று பார்த்து அந்த ஒரு ஸங்கதியுமில்லாத கேவல அறிவுருபமான ப்ரம்மத்தோடுகூட 3உபாதிஎன்று ஒருவஸ்துவையும் ஸத்யமாக ஒப்புக்கொண்டு அந்த உபாதிஸம்பந்தத்தால் ப்ரமம்ஜகத்தாக ப்ரமிக்கிறது, அது விட்டால் ப்ரம்மத்துக்கு ப்ரமம்போய் ஜகத்தில்லாமல் ப்ரம்மமேஆய்விடுகிறது என்றுசொல்கிறபாஸ்கரனுடைய மதமும், இன்னும் விரோதமன்னியில் ஜகத்தை நிரூபிக்கவேண்டி அதே நிர்விசேஷசின்மாத்ரமான ப்ரம்மமானது தன்னுடைய ஸொந்தசக்தியினாலேயே ப்ரமித்து அதனிடத்திலிருந்து சித், அசித், ஈசுவரன் என்கிற மூன்று தத்வங்கள் உண்டாய் உலகம் ஏற்படுகிறது; அபேதஜ்ஞாநத்தாலும் (ஒரே வஸ்துதான் உளது

1 ப்ரம்மத்துக்கு ஒரு குணமுமில்லை என்கிற வாக்யங்கள். 2 ப்ரம்மம் ஒரே வஸ்துதான் உளது, மற்றதில்லை என்கிற வாக்யங்கள். 3 உபாதி என்பதை ப்ரக்ருதியின் மாறுதலாய் அணுக்களான அந்த:கரணங்கள் (மனஸ்ஸுக்கள்) என்று சொல்லுகிறார்கள்.

என்கிற அறிவு) ஸத்கர்மங்களாலும் பேதஜ்ஞாநம் (பல வஸ்துக்கள் உண்டு என்கிற அறிவு) போய் உலகம் நசித்து ப்ரம்மம் ஒன்றேயாய்விடுகிறது என்கிற யாதவப்ரகாசனுடைய மதமும் ஆகிய] வேதவிருத்தமதங்களும் “ த்வம் ஹி ருத்³ர மஹாபா³ஹோ மோஹஶாஸ்த்ராணி காரய ” என்கிற கட்டளையின் கணக்கில் பகவான் தன்னாலேயே ஆஸுரப்ரகிருதிகளை மோஹிப்பித்து நித்ய ஸம்ஸாரநரகத்தில் தள்ளுவதற்காக ரஜஸ்தம:ப்ரசுரதசையிலுள்ள * பிரம்மருத்ராதிகளான ஆதிகாரிகபுருஷர்களைக்கொண்டும் மற்றுமுள்ள அப்ரபுத்த (தத்வத்தை உள்ளபடியறியாத) ஜீவர்களைக்கொண்டும் பௌத்தாதிரூபேண தானுமாய் பிரவர்த்திப்பிக்கப்பட்டவைகளாகையாலே, அவைகள் ஸத்வோத்தரர்களாய் தத்வதர்சிகளானமுமுக்ஷுக்களுக்கும் பரதேவதாபாரமார்த்யம்(ஸ்ரீமந்நாராயணனே உயர்ந்த தெய்வம், மற்ற சேதநாசேதநங்களெல்லாம் அவனுக்குட்பட்டவைகள் என்கிற உண்மை) பராவரதத்வசரீராத்மபாவஸம்பந்தம் (உயர்ந்த தத்வமான ஈச்வரனுக்குக் கீழ்ப்பட்ட தத்வங்களான ஜீவர்களும் ப்ரகிருதியும் சரீரமாக ஆகிறதுகள். அவன் அவைகளுக்கு ஆத்மாவாக இருந்து அவைகளை இஷ்டப்படி நடத்தி உபயோகிக்கிறான் என்பது) முதலான வேத தத்வார்த்தங்களை சாஸ்திரத்தாலறிந்தும் ப்ராசீனவிஷயவாஸனாபலத்தாலே மோக்ஷேச்சைபிறவாமல் ஐஹிகாமுஷ்மிகஸாம்ஸாரிக பலன்களில் ஸக்தர்களான ரஜஸ்தம:ப்ரசுரர்களுக்கும் உபாதேயங்களல்ல என்றும்;

ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ப்ரளயங்கள் சேதன அசேதன ஈசுவரஸ்வரூபஸ்வபாவாதிகள், உலகவைசித்ரிய வைஷம்யங்கள், தேஹாந்தரகதாகதிகள், ஐஹிகாமுஷ்மிக புருஷார்த்தங்கள் அவைகளுக்கு உபாயங்கள், மோக்ஷஸ்வரூப மோக்ஷோபாயங்கள் முதலிய அதீந்திரியவிஷயங்கள், கேவலப்ரத்யக்ஷாநுமானங்களுக்கும் ப்ராகிருத தாமஸபுத்திகளால் ஏற்படுத்தினவைகளும் தவறுதல்கள் உள்ளவைகளுமான சாஸ்திரங்களுக்கும் எட்டாவாகையால், அவைகள் அநாதியாய் ஒருவராலும் செய்யப்படாததாய்

---

* பிருஹஸ்பதி நாஸ்திகமதத்தை ஏற்படுத்தினார், ப்ரம்மா யோகமதத்தை ஏற்படுத்தினார். பகவதவதாரமான கபிலருஷி ஸாங்க்யமத ப்ரவர்த்தகர். பகவதவதாரமான புத்தர் பௌத்தமதத்தை உண்டுபண்ணினார். சிவன் பாசுபதமதத்தை உத்பத்தி செய்தார்.

ஸம்சயப்படமுடியாததாய் தடுக்கமுடியாத ப்ரமாணமான வேத ரூப சப்தப்ரமாணத்தாலேயே அறியப்படவேணும்; அப்பிரமாணம் தன்னிலும் அறிவதற்குக் கஷ்டமான விஷயங்களில் வேதோபப்ரும்ஹணங்களான ஸாத்விகபுராணாதிகளைக்கொண்டும் ப்ரமாணங்களுக்கு ஒத்ததான நல்ல யுக்திகளைக்கொண்டும் தத்வார்த்தத்தைத் தீர்மானித்து அறியவேணும்; அப்படிப்பட்ட வேத வேதோபப்ரும்ஹணங்கள் முற்றிலும் விரோதமில்லாதபடி ஒரே சாஸ்திரமாய் ஆதியோடு அந்தமாக முழுவதும் ப்ரமாணங்களாகையால் அவைகளுக்கு முன்பின் விரோதமன்னியிலும் முழுஸந்தர்ப்பானுகுணமாகவும், ஒரு பாகத்தைத் தள்ளி மற்றொரு பாகத்தை மட்டும் ப்ரமாணமாகக் கொள்ளாமலும் முழுவதற்கும் ஒத்தபடி அர்த்தம் கொள்ளவேணும்— என்றும்;

அப்படிப்பட்ட ஸத்ப்ரமாணங்களால் ஏற்படுகிற நிர்தோஷமாய் லோகஹிதகரமான உண்மையான வேதாந்தமதமாவது— சித், அசித், ஈசுவரன் என்று தத்வங்கள் மூன்று. அவற்றில் சித் என்று சொல்லப்பட்ட ஜீவதத்வம் அணுவாய் ஜ்ஞானஸ்வரூபமாய, ஜ்ஞானமுள்ளதாய், ஈசுவரனுக்குச் சேஷமாய், கர்த்தாவும் (வேலையைச்செய்வதும்) போக்தாவு(பலனையநுபவிப்பது)மானது. அவைகள் அனந்தனங்களாய் நித்ய முக்த பத்த விபாகத்தாலே மூன்று பிரிவுடையவைகள். அவைகளில் நித்யர்களும் முக்தர்களும் எப்போதும் ஈசுவரனுக்கு ப்ரியர்களாய் ஸ்வஸ்வரூபயோக்யதை குன்றாமல் பரமபதத்தில் பரிபூர்ணப்ரஹ்மாநுபவம் பண்ணுமவர்கள். பத்தர்கள் அநாதியான ஆஜ்ஞாதிலங்கனத்தாலே பிறந்த பகவந்நிக்ரஹரூப கர்மவசத்தாலே ப்ராக்ருதசரீரத்தில் கட்டுப்பட்டு ஸ்வஸ்வரூபயோக்யதையையும் பகவதநுபவத்தையுமிழந்து விஷயங்களைப் புஜித்துக்கொண்டு ஸம்ஸாரத்தில் சுழல்கிறவர்கள். அசேதநதத்வம்— ப்ரக்ருதி, சுத்தஸத்வம், காலம், தர்மபூதஜ்ஞானம் என்று நான்கு பிரிவுடையது. அவற்றில் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்று மூன்று குணங்களுள்ள ப்ரக்ருதியானது குணங்கள் ஸமமாகஇருக்கும்போது மூலப்ரக்ருதி அவ்யக்தம் தமஸ் என்று சொல்லப்பட்ட ஸூக்ஷ்மாவஸ்தையோடிருந்து பகவத்ஸங்கல்பத்தால் குணவைஷம்யம் ஏற்படும்போது, ப்ரக்ருதி, மஹத், அஹங்காரம், மனஸ், ஐந்து ஜ்ஞாநேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து பூதங்கள், ஐந்து தன்மாத்ரைகள் ஆகிய 24 வித

மாறுதல்களையடைந்து ப்ராக்ருத உலகமாகி பத்தசேதநர்களுக்கு உடம்பு முதலான போகோபகாரணங்களாக (ஸுகதுக்கங்களை அனுபவிக்க ஸாதனங்களாக) வும் போகஸ்தானங்களாக (அனுபவிக்கத்தக்க இடங்களாக) வும், போக்யவஸ்துக்களாக (அனுபவிக்கும் வஸ்துக்களாக) வும் ஆகிறது. அப்படியே சுத்தஸத்வமும் நித்யமுக்தர்களுக்கும் ஈசுவரனுக்கும் அவர்கள் ஸங்கல்பப்படி அப்ராக்ருத லோகத்தில் நித்யங்களும் அநித்யங்களுமான போக்யபோகோபகரணபோகஸ்தானங்களாகப் பரிணமிக்கிறது. காலம் என்பது ப்ரக்ருதிமண்டலத்தில் ஸ்வாபாவிகமாக வஸ்துக்களின் ஸ்திதி கணனைக்கும் (இருப்பை கணக்குப் பண்ணுவதற்கும்) பரிணாமங்களுக்கும் (மாறுதல்களுக்கும்) ஹேதுவாய் அப்ராக்ருதலோகத்தில் நித்யமுக்தர்களுடையவும் ஈச்வரனுடையவும் ஸங்கல்பப்படி அப்படி ஹேதுவாகிறது. தர்மபூதஜ்ஞானம் ஜீவேச்வரர்களுடன் விட்டுப்பிரியாத தர்மமாகக் கலந்திருந்து ஸம்ஸாரிகள் விஷயத்தில் ஸாமான்யமாக மிகவும் சுருங்கினதாய் அதற்குள் அவரவர்கள் கர்மானுகுணமான ஏற்றச்சுருக்கங்களுடன் விஷயங்களைக்காட்டிக்கொடுக்கும் ஸமயத்தில்மட்டும் தான் தோன்றிக்கொண்டும் நித்யமுக்த ஈச்வரர்கள் விஷயத்தில் பரிபூர்ணவிகாஸத்துடன் ஸர்வதா ஸர்வத்தையும் காட்டிக்கொண்டு தானும் எப்போதும் தோன்றிக்கொண்டும் இருக்கும். ஈசுவரதத்வம் விபுவாய் ஜ்ஞானஸ்வரூபமாய் எல்லையில்லாத முழு ஜ்ஞானானந்தஸ்வபாவமாய், ஸ்வரூபஸ்வபாவவிகாரங்களில்லாததாய், ஒரு தோஷமுமில்லாததாய், ஸமஸ்த கெடுதல்களுக்கும் விரோதியாய், ஸமஸ்த கல்யாணகுணங்களுக்கும் ஒரே இருப்பிடமாய், அவாப்த ஸமஸ்தகாமமாய், ஸத்யஸங்கல்பமாய், ஜகதுத்பத்தி ஸ்திதி லயங்களைத் தனக்கு விளையாட்டாக உடைத்தானதாய், ஸர்வசரண்யமாய், தன்னைத்தவிர மற்ற ஸமஸ்த வஸ்துக்களைக்காட்டிலும் விலக்ஷணமாய், பரமபதத்தைத் தனக்கு முக்ய ஸ்தானமாக உடைத்தானதாய், ஸ்வசரீரபூதசேதநாசேதந ஸமஸ்த வஸ்துக்களுடையவும் ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திகளை தனக்கு அதீனமாக உடைத்தானதாய், அவ்யக்தமான திவ்யாத்மஸ்வரூபத்தோடு பர வ்யூஹ விபவ ஹார்த்த அர்ச்சை என்கிற ஐந்துவிதமான திவ்யமங்களவிக்ரஹங்களை உடைத்தானதாய், ஸ்வரூப ரூப குண விபவ ஐசுவரியாதி ஸமஸ்தவிஷயங்களி

லும் தனக்கு ஸமானையாய் ஈசுவரியாய் ஸூரியனும் அவனுடைய ப்ரபையும்போல் தன்னுடன் ஸர்வவிஷயங்களிலும் ஸர்வாவஸ்தைகளிலும் விட்டுப்பிரியாதபடி கலந்தவளுமான ஸ்ரீதேவிக்குப் பதியாய், உபயவிபூதிக்கும் ஸ்வாமியாய், தேவீ பூஷணாயுத பரிஜநபரிச்சத த்வாரபால பார்ஷதாதிகளான நித்ய முக்தர்களால் ஸேவிக்கப்படுமதாய், ஸர்வலோகஸேவ்யமாய், ஸர்வ கர்மஸமாராத்யமாய், ஸகல பலப்ரதமாய், ஸர்வசப்தவாச்யமாய் ஜீவர்களுக்கு முக்ய ப்ராபகமும் ப்ராப்யமுமாயிருக்கும். இப்படிப்பட்ட ஈசுவரன் நித்யவிபூதியில் நித்யர்களும் முக்தர்களும் தானுமாக எல்லையில்லாத ஜ்ஞாநாநந்தங்களையனுபவிப்பது போதாமல் பரமகருணையால் அநாதிகர்மவசத்தாலே ப்ரக்ருதியில் மக்னர்களான ஜீவராசிகள் தன்னையறிந்து ஆச்ரயித்து கர்மபந்தத்தைச் சேதித்து தன்னையடைந்து நித்யமுக்தர்களைப்போல் தங்களுக்கு தாயதநம்போலொத்த ஸ்வஸ்வரூபயோக்யதைகளையும் பரிபூர்ண ப்ரம்மானுபவத்தையுமடைய முயலும்படி அவைகளுக்குச் சரீரம் முதலானதைக் கொடுத்து அதனால் அவைகளடையும் க்ஷேமத்தைக்கண்டு தான் ஸந்தோஷிப்பதின்பொருட்டு விளையாட்டாகத் தன் ஸங்கல்பத்தாலேயே ப்ரக்ருதிஜீவர்களடங்கிய தன் உடம்பைப் பெருக்கடித்துக்கொண்டும் சுருக்கிக்கொண்டும் ஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரரூப வியாபாரங்களை மறுபடியும் மறுபடியும் ஓயாமல் பண்ணிக்கொண்டு ஜகத்துக்கு நிமித்தமும் *உபாதானமுமான ஒரே காரணமாகிறான். இப்படி வெவ்வேறு ஸ்வரூபஸ்வபாவங்களுள்ளவைகளாய் சரீராத்மபாவ ஸம்பந்தத்தால் ஒன்றாய் கலந்து நிற்கிற தத்வங்கள் மூன்று.

இம்மூன்று தத்வங்களில் அசேதநப்ரக்ருதியானது ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போகத்ருத்வங்களையுடையதல்லாமல் கேவல பரப்ரயோஜனைகஸ்வரூபமாய் சேதநதத்வங்களின் ஸங்கல்பப்படி எப்போதும் மாறுதல்களையடைந்துகொண்டு அவர்களுக்கு போக்ய போகோபகரண போகஸ்தானங்களாக மட்டும் உபயோ

---

* உபாதானமாவது— புதிதாக உண்டாகும் ஒரு வஸ்துவுக்கு முன் அவஸ்தையிலுள்ள திரவியம்— பானை உண்டாவதற்கு மண் போல. ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்தூல ஜகத்ரூபமான சேதநாசேதனங்களோடு கூடிய ப்ரம்மத்திற்கு ப்ரளயத்தில் ஸூக்ஷ்மாவஸ்தையிலிருக்கப்பட்ட சேதநாசேதனங்களோடு கூடிய ப்ரம்மம் உபாதான காரணம்.

கப்பட்டுக்கொண்டு தனக்கு ஸ்வார்த்தமான ஒன்றையுடைய தல்லாதபடியால் அவற்றுக்கு அடையவேண்டியதொரு ப்ரயோஜனமும் அதற்காகச் செய்யவேண்டியதொரு வேலையும் கிடையாது. ஈசுவரதத்வமும் ஸத்யஸங்கல்பமாய் அவாப்த ஸமஸ்த காமமாய் பரிபூர்ண வஸ்துவானதாலும், அதற்கு மேலானதொரு நியந்தா (ஏவுகிற எஜமானன்) இல்லாத்தாலும் அதற்கு மற்றொன்றை அர்த்தித்து (அபேக்ஷித்து) அதனிடத்திலிருந்து அடைய வேண்டியதொரு ப்ரயோஜனமும் அதற்காக நிர்ப்பந்தமாகச் செய்யவேண்டியதொரு வேலையும் கிடையாது. இது ஸ்வதந்த்ரமாய் ஸ்வேச்சானுகுணமாகவும், யாதொருநிர்ப்பந்தமுமன்றியில் ஸ்வாநந்தபரீவாஹமாகவும் தன்னையும் தன்னைச் சேர்ந்த வஸ்துக்களையும் ஏவிக்கொண்டு போகவிபூதியில் போகங்களையும் லீலா விபூதியில் விளையாட்டுகளையும் அநுபவிக்கிறது. ஆனாலும், இதினுடைய ஸ்வார்த்த போகங்களும் ப்ரவ்ருத்திகளும் பரப்ரயோஜனமாகவும் ஆகிறது. (அதாவது, ஜீவர்களுக்குப் புருஷார்த்தமாகவும், புருஷார்த்தஸாதனமாகவும் ஆகிறது.) ஜீவதத்துவமானது ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வங்களுடையதானதாலும் எல்லாவிதத்திலும் ஈச்வரனுக்குப் பரதந்த்ரமான வஸ்துவானதாலும், ஈச்வரனுக்கே சேஷபூதமான வஸ்துவானதாலும், ஸ்வத: பரிபூர்ணவஸ்துவல்லாததாலும், இதற்கு மற்றொன்றை அர்த்தித்து அடையவேண்டிய ப்ரயோஜனமும், (அதாவது புருஷார்த்தமும்) அதற்காக நிர்ப்பந்தமாகச் செய்யவேண்டிய வேலையும் (அதாவது உபாயமும்) உண்டு.

இஜ்ஜீவர்களில் நித்யர்களும், முக்தர்களும் தங்கள் ஸ்வரூபயோக்யதை குன்றாதவர்களாய் பகவானுக்குத் தாங்கள் சேஷமானவர்கள் என்பதைத் தெரிந்து அவனுடைய அபிப்ராயங்களை நேரில் அறிந்து அவனுடைய பரிபூர்ணமுகோல்லாஸத்தையும் எப்போதும் அடைந்து அவன் தன்னால் தானாகவே ஸர்வாபீஷ்டங்களையும், நினைத்தமாத்திரத்தில் அளிக்கப்பட்டு அவனால் தன்னோடொக்க ஸமானபோகர்களாகவும் எப்போதும் வைக்கப்பட்டவர்களானதால் அவர்களுக்கு ஈச்வரனுடைய உபயோகத்துக்கே ஏற்பட்டதான தங்கள் ஸ்வரூபானுபவத்தோடு கூடிய ஸர்வப்ரகாரவிசிஷ்டனான பகவானுடைய பரிபூர்ணானுபவமும், (அதாவது— இரண்டு விபூதிகளிலுமுள்ள எல்லா வொத்

துக்களோடும் ரூபம் குணம் முதலிய அவனுடைய மற்ற எல்லா ஸங்கதிகளோடும் கூடிய ஈச்வரனுடைய பெருமைகளைப் பூர்ணமாகக் கண்டு அநுபவிப்பது, இது குணாநுபவம்.) அவ்வனுபவபரீவாஹமான அவன் கைங்கர்யங்களுமே புருஷார்த்தம். இந்தப் பரமபுருஷார்த்தம் அவர்களுக்கு ஏற்கனவே ஸித்தமான படியால், அவர்களுக்கு அதற்காகப் புதிதாகச் செய்யவேண்டிய தொரு உபாயம் கிடையாது. பத்தஜீவர்களுக்கு இவ்விரண்டும் உண்டு. இவர்களில் கர்மவசத்தால் ஸ்வஸ்வரூபஜ்ஞானத்தில் பூர்ணமான தெளிவும், அதனால் முமுக்ஷுத்வமும் அடையாத ஸம்ஸாரிகளுக்கு அவரவர்களுடைய ஜ்ஞானவிகாஸத்திற்கும் விவேகத்திற்கும் தக்கபடி விஷயபோகங்களை புருஷார்த்தங்களாய், அவைகள் கணக்கில்லாததாக விருக்கும். அவைகளுக்காக அவர்கள் பரப்ரஸாதனமாக (அதாவது— இதரர்களான தேவமனுஷ்யர்களுடையவும் ஈச்வரனுடையவும் ஸந்தோஷார்த்தமாக)ச் செய்யும் லௌகிகவேலைகளும் வேதத்தில் சொல்லிய தேவதாராதனரூபமான கர்மாக்களுமான உபாயங்களும் கணக்கில்லாதவைகளாயிருக்கும். பூர்ணமான ஆத்மாநாத்மவிவேகத்தை யடைந்தும், (அதாவது, ஆத்மாவினுடையவும், அதைத்தவிர வேறானவைகளுடையவும் ஸ்வரூப ஸ்வாபாவிகங்களை அறிந்தும்) ஜீவனுடைய ஈச்வரசேஷதைகஸ்வரூபத்தை அறியாமல், அதினுடைய ப்ரக்ருதிவைலக்ஷண்யத்தையும், ஜ்ஞானகுணகஸ்வரூபத்தையுமட்டும் நினைத்து ஸர்வகர்மவிநிர்முக்திபூர்வக பகவத்ப்ராப்தியாகிய மோக்ஷத்தை அறிந்து அபேக்ஷியாமல், கேவல ஜீவஸ்வரூபத்தின் பெருமையில் மோஹிப்பவர்களுக்கு ப்ரக்ருதிவிநிர்முக்த ஸ்வஸ்வரூபாநுபவப்ராப்தியே புருஷார்த்தமாகும். அவர்களுக்கு விஷயங்கள் அடியோடு ருசிக்காது. அதற்காக அவர்கள் செய்ய வேண்டிய உபாயமும் துஸ்ஸாத்யமான இந்த்ரியஜயபூர்வகமாக உள்ள வேதத்தில் காட்டிய ஜீவஸ்வரூபத்யானம். ஸாத்ருகவிசேஷமூலபகவத் கடாக்ஷத்தால் சாஸ்த்ரத்தைக்கொண்டு, பூர்ணமான தத்வத்ரயவிவேகத்தைக் யடைந்து, ஸம்ஸாரதோஷங்களைக்கண்டு ஒழிவடைந்து, மோக்ஷேச்சை பிறந்தவர்களுக்கு ஸர்வகர்மவிநிர்முக்திபூர்வகமாக ஸ்வஸ்வரூபாவிர்பாவத்தோடு கூடிய புநராவர்த்தியில்லாத அந்திமசரீரத்தின் முடிவில் அர்ச்சிராதிகதியாய் பரமபதத்தைச்சென்று சாச்வதமாக அடையவேண்டிய பரிபூர்ணப்ரம்மா

னுபவமே பரம புருஷார்த்தமாகும்; இதரமான சேதநுசேதன போகங்களில் அவர்களுக்குக்கண்ணோட்டமுண்டாகாது. இதற்காக அவர்கள் செய்யவேண்டிய உபாயமாவது பகவதாஜ்ஞாநுஜ்ஞாபரிபாலனரூபங்களாய், நித்திய நைமித்திக காம்யங்களென்கிற விபாகங்களுள்ளதாய், பலாபேக்ஷைசேராததாய், கேவலபகவதாராதநைக வேஷங்களாய், ஸ்வயம் ப்ரயோஜனகைங்கர்யங்களாய், ஸாத்விக த்யாகபுரஸ்ஸரங்களான கர்மாநுஷ்டானங்களாலே ஏற்படுகிற ஜ்ஞாநயோகம் என்கிற ஆத்மஸாக்ஷாத்காரத்தோடு கூடின வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட உபாஸனம், அல்லது வித்யை, அல்லது பக்தியோகம் என்று சொல்லப்பட்ட 32-விதமான தைலதாராவதவிச்சின்ன ஸ்ம்ருதிஸந்தானரூப ப்ரத்யக்ஷதர்சனஸமாநுகார அத்யர்த்தப்ரிய அவிரத விசததம ஆப்ரயாணுப்யஸ்தங்களான பகவத்த்யானங்கள். அதாவது, நடுவில் நடுவில்விட்டுப்போகாமல் ஒரே கம்பியாய் விழுகிற தைலதாரைபோலுள்ள நினைவின் வரிசையுள்ளதும், நேரில் கண்ணால் பார்ப்பதுபோலுள்ளதும், மிகவும் ப்ரியமானதும், ஓயாததும், மிகவும் தெளிவானதும், மரணம் வரையில் அப்யாஸம் செய்யபட்டதுமான பகவானுடைய ரூபத்தின் த்யானங்கள். சாஸ்த்ரத்தாலோ மோக்ஷத்வரையாலோ இதில் அதிகாரமில்லாத அகிஞ்சனர்களுக்கு ஸர்வாதிகாரமாய், ஸர்வதர்மநிரபேக்ஷமாய் ஸக்ருத் கர்த்தவ்யமாய் க்ஷணகாலஸாத்யமாய், சாஸ்த்ரஜந்யஜீவேச்வர ஸம்பந்தாதிதத்வ ஜ்ஞாநபுரஸ்ஸரமாய், ஆநுகூல்யஸங்கலபாதி ஷடங்கஸஹித மாய், [illegible] [illegible] [illegible] [illegible] வெதனுய் பரமசேஷியாய் [illegible] காருணிகனன ஸ்ரீயஃ பதியின் திருவடிகளில் ஸ்வரூபபலஸமர்ப்பண ஸஹிதமான ஸக்ருத் ஆத்மரக்ஷா பரஸமர்ப்பணம் என்கிற ச்ருதி சோதிதமான ந்யாஸவித்யை உபாயமாகும். அதாவது ஜீவனுக்கும் ஈச்வரனுக்குமுள்ள ஸம்பந்தவிசேஷத்தை நினைத்துக்கொண்டும் ஆநுகூல்யஸங்கல்பம் முதலான அங்கங்களாகிற ஆறுநினைவுகளுடனும் ஆசார்யபரம்பரையைமுன்னிட்டுக்கொண்டும் த்வயமந்திரத்தை உச்சரித்துக்கொண்டும் வணங்கி ஸ்ரீய:பதியாய் பரமகாருணிகனன பகவானுடைய திவ்யமங்கள

விக்ரஹத்தைத் தெளிவாக நினைத்து அவன் திருவடிகளில் ஸ்வரூபஸமர்ப்பணத்தோடும் ரக்ஷாபலஸமர்ப்பணத்தோடும் ஆத்மரக்ஷாபரத்தை ஸமர்ப்பிப்பது. இது ஒரு நினைவுரூபமானது. இது ஒரே தடவை க்ஷணகாலத்தில் மோக்ஷத்வரையுள்ள ஸர்வமுமுக்ஷுக்களாலும் அனுஷ்டிக்கத்தக்கது. இதற்கு மற்ற ஒரு தர்மங்களும் அங்கமல்ல— என்பது. இப்படி லோகவேதஸத்ப்ரமாணங்களுக்கும் ததனுஸாரியான ஸமீசீனயுக்திகளுக்கும் ஒத்தபடி தத்வஹித புருஷார்த்தங்களை உள்ளபடியே உலகமெல்லாம் செழித்தோங்கி ஐஹிகாமுஷ்மிக ஸகல நன்மைகளையும் அடையும்படி ப்ரதிபாதியாநிற்கிற யதிராஜரான (அல்லது யத்னவான்களுக்குள் ச்ரேஷ்டர்களான) ஸ்ரீபாஷ்யகாரருடைய (அல்லது ஸ்ரீஆழ்வார் ப்ரபிருதிகளான ஸதாசார்யர்களுடைய) திவ்யப்ரபந்த ஸித்தித்ரய, ப்ரம்மஸூத்ரபாஷ்ய, கீதாபாஷ்ய, கத்யத்ரயாதிகளான திவ்யஸூக்திகளுக்கு அநந்தகாலமும் ஜயம் உண்டாகக்கடவது. அதாவது அப்படி ஸச்சாஸ்திரோபப்ரும்மணங்களான ஸதாசார்யர்களுடைய திவ்யஸூக்திகளை உலகமெல்லாம் அறிந்து கொண்டாடி, பரதேவதையான பரமபுருஷனையே ஆச்ரயித்து, ஸம்ஸாரரூபசத்ருவை ஜயித்து, இஹபரங்களிரண்டிலும் பரப்ரம்மாநுபவத்தையும் கிங்கரத்வா திராஜ்யத்தையும் (அதாவது பகவத்கைங்கர்யமாகிற மஹாஸம்பத்தை)ப் பெற்று "பொலிக பொலிக" என்கிறபடி பகவத்பரர்களாக விளங்கி நிரங்குசமாக வாழக்கடவது. அப்படியே ஆத்மஹிதகரமான ஆராத்யஸ்வரூபம் இன்னதென்றும் ததாராதநம் இன்னதென்றும் அதின் பரமபலம் இன்னதென்றும் உள்ளபடியறியாத உலகங்களுக்குப் பரம பந்துவாய் பரம காருணிகனாய் பரமோதாரனாய் போகமோக்ஷ ஸகல பலப்ரதனாய் ஸர்வசரீரியாய் ஸர்வகர்மஸமாராத்யனாய் ஸர்வசேஷியாய் ஸர்வலோகேச்வரனாய் சுபாச்ரய திவ்யமங்களவிக்ரஹோபேதனாய் ஸமஸ்த கல்யாணகுணபரிபூர்ணனாய் நிகிலதோஷரஹிதனாய் பரதத்வமான இந்த ஸ்ரீமந் நாராயணனே ஸர்வலோக ஸமாச்ரயணீயனென்று அவனை ஆச்ரயித்துக் காட்டியும் "ஸநந்தி³மம்வை நீயம் ஹி வாரணம் ஹரணம்" என்கிறபடி ஸாபராதங்களான உலகங்களுக்கு (குற்றவாளிகளான ஜீவர்களுக்கு) அவனுடைய இந்தத்திருவடிகளை சரணம் என்று அவைகளையே ஸர்வதா அவலம்பித்துக்காட்டியும், "நின்செம்மாபாதபற்

புத்தலைசேர்த்தொல்லை அம்மா வடியேன்வேண்டுவதீதே" என்றும் "க்ஷாமஹே நஃ" என்றும் ஸ்ரீ ஆழ்வார் ஆளவந்தார்முதலானவர்கள் ஆவல்படும்படியான பரமபுருஷார்த்தம் இன்னதென்று உலகங்களறியும்படி ஸர்வதா அதின்கீழே புகுந்து நின்றும் தன் அநுஷ்டானத்தாலே ஸதாசார்யஸத்சிஷ்யரூபம்போல் இரண்டுஉருவாய் நின்று பரதத்வத்தையும் பரமோபாயத்தையும் பரமபுருஷார்த்தத்தையும் உலகத்துக்கெல்லாம் ப்ரகாசப்படுத்திக்கொண்டுவிளங்காநிற்கிற திவ்ய பாதுகைகளுடைய ப்ரபாவங்களும் இந்த மஹத்க்ரந்தத்தினுல் ப்ரகாசப்படுத்தப்பட்டு அவைகளும் உலகில் நிரங்குசமாக வாழக்கடவன. அதாவது அவைகளின் ப்ரபாவங்களை உலகங்கள் அறிந்து, இதர தெய்வங்களை விட்டு, அவைகளையே பரமோபாயமாக ஆச்ரயித்துக்கொண்டாடி, போக மோக்ஷ புருஷார்த்தங்களைப்பெற்று வாழக்கடவன. அப்படியே ஸ்ரீபாதுகாமுகத்தாலே உபலக்ஷிதர்களாய், பகவத்பரர்களாய், பகவதேகோபாயர்களாய்,பகவதேகபோகர்களாய்,ஸர்வபூதஸுஹ்ருத்துக்களுமான ஸ்ரீ ஆழ்வார்முதலானஸதாசார்யர்களுடையப்ரபாவங்களும் இதனுல்ஸர்வோத்கதமாக ப்ரகாசப்படுத்தப்பட்டு உலகமெல்லாம் குமதிகளை விட்டு, அவர்களையே பரமாசார்யர்களாகவும் பரதேவதையாகவும்கொண்டாடி ஆச்ரயித்து,ஸகல புருஷார்த்தங்களையும் பெறும்படிஅவர்களும் உலகில் நிரங்குசமாக விளங்கக்கடவர்கள். இப்படிவேதங்களுக்கு ஸதுபப்ரும்மணங்களான ஸ்ரீ ஆழ்வார்முதலியஸதாசார்யர்களுடையதிவ்யஸூக்திகளையும் அந்த திவ்யஸூக்திகளால் ஸம்சயமற பரமப்ராப்ய ப்ராபகங்களாக ப்ரகாசப்படுத்தப்படுகிற முகுந்தனை ஸ்ரீமந் நாராயணனையும் அவனுடைய ஸம்பந்தத்தை நமக்கு உண்டுபண்ணிக்கொண்டு ஜீவனின் நிலைமைக்கு ப்ரகாசகமாக நிற்கிற அவனுடைய திவ்ய பாதுகைகளையும் அந்தப் பாதுகைகளைப்போன்ற ஸதாசார்யர்களையுமே தங்களுக்குப் பரம தனமாகக்கொண்ட ஸாத்விகோத்தமர்கள் அந்த ஆச்ரயபலத்தாலேயே உலகத்துக்கு ஸர்வக்ஷேமங்களுக்கும் மூலமான வேதசாஸ்திரத்துக்கு குமதிகளாலும் வேதபாஹ்யர்களாலும் உண்டுபண்ணப்படுகிற ஸர்வ கஷ்டங்களையும் போக்கி, அவைகளை உள்ளபடியே ஸ்தாபித்து, ஸம்ஸாரரூபசத்ருவைத்தாங்களும் ஜயித்து, ஸாத்விக உலகங்களையும் ஜயிக்கும்படி செய்துகொண்டு எக்காலமும் மேன்மைபெற்று வாழக்கடவர்கள்—

என்று இப்படி ஸ்வஹர்ஷபரீவாஹமாக நல்ல ப்ரமாணமான (அறிவதற்கு ஸாதனமான) ஸ்ரீ ஆசார்யதிவ்யஸூக்தியினால் உபப்ரும்ஹிதமான வேதசாஸ்திரத்துக்கும் அந்தசாஸ்திரத்தால் ப்ரமேயமான (அறியப்படுவதான) ஸ்ரீவிசிஷ்டனும் பாதுகா (ஆசார்ய) விசிஷ்டனுமிருக்கப்பட்ட முகுந்தனுக்கும் அந்த ப்ரமாணப்ரமேயங்களுக்கு ப்ரமாதாக்களாய் (அறிகிறவர்களாய் அறிவிக்கிறவர்களாய்) அவைகளால் க்ஷேமத்தையடைகிறவர்களும் க்ஷேமத்தை உண்டுபண்ணுகிறவர்களுமான ஸாத்விக உலகங்களுக்கும் (பெரியோர்களுக்கும்) பல்லாண்டு பாடிக்கொண்டு க்ரந்தோபக்ரமத்தில்போல் க்ரந்தாந்தத்திலும் மங்களாசாஸநம் செய்தருளி ஸகல பல ஸாதனமான இந்த திவ்ய க்ரந்தத்தைப் பூர்த்தி செய்கிறார்.

இப்படி ஸ்ரீபகவத்பாதுகாப்ரபாவ ப்ரகாசகமான இந்த மஹாக்ரந்தத்தின் உத்தரவ்யாக்யானம் ஸ்ரீபரதாழ்வானையும் ஸ்ரீதேசிகனையும்போல் ஸ்ரீபாதுகையின் ப்ரபாவத்துக்கு த்ரஷ்டாவாய் அவற்றையே தனக்குப் பரதேவதையாகக் கருதி, ஸர்வகாலமும் தஞாரோஹணத்தைப் பண்ணிக்கொண்டு, ஸர்வத்துக்கும் அதையே பரமோபாயமாகப்பற்றி, பகவத்பாதுகை ததபக்தபாதுகை, ததபக்தபாதுகையென்று ஸ்வாசார்யபாதுகாபர்யந்தமாக ஸ்ரீபாதுகாராதனத்தையே தனக்கு முக்ய கர்மாவாகக் கொண்டு ஸ்ரீபகவானுடைய திருவடிகளிலும் ஸதாசார்யர்கள் திருவடிகளிலும் அத்யந்தம் ப்ரவணர்களாய் முக்யர்களானவர்களை அவரவர்களுடைய பாதுகையாகச்சொல்லுகிற ஸத்ஸம்ப்ரதாயப்படி பகவத்பாதுகையானது ஸதாசார்யஸ்வரூபமேயென்றும், அதனால் இந்த க்ரந்தம் ஸ்ரீபாதுகையை உபலக்ஷணமாகக்கொண்டு ஸ்ரீ ஆசார்யப்ரபாவப்ரதர்சகஸஹஸ்ரம் என்றும், "சீரொன்று தூப்பில்" என்கிற தனியன்படி இந்த க்ரந்தமே ஸர்வசாஸ்திர ஸாரதமார்த்தகர்ப்பிதம் என்றும், உலகக்ஷேமத்தின்பொருட்டு பகவத்ஸங்கல்பத்தாலேயேஅவதரித்த இந்த மஹாக்கிரந்தமானது ஸ்ரீமத் ராமாயணத்தைப்போல் சரணாகதிசாஸ்திரமாய் மிகவும்

வரப்ரஸாதியுமானபடியால், ஸர்வாபீஷ்டங்களின் பொருட்டும் இந்த முழுக்ரந்தமும் அதில் ஓரோர் சுலோகங்களும் பாராயணா ஹமும் ஜபார்ஹமுமானதென்றும் உலகத்துக்கு ப்ரகாசப்படுத்திக் கொண்டு உபதேசித்து விசேஷமாகப் பரவச்செய்துவந்த ஸதாசார்யகுணபரிபூர்ணரான ஸ்ரீ[illegible] கனுடைய உபதேசானுஷ்டானுனுக்ரஹங்களாலே ப்ரகாசிதங்களான தத்வார்த்தங்களுள்ளனவாய் அந்த மஹானுடைய ஸங்கல்பானுக்ரஹங்களாலேயே இந்த மிதமதியை ஒரு வ்யாஜமாகக் கொண்டு பூர்த்தியடைந்தது. ஆகையால் பரமாஸ்திகர்களும் ஸ்ரீபகவானிடத்திலும் ஸ்ரீபாதுகைகளினிடத்திலும் ஸதாசார்யர்களிடத்திலும் ஸத்ஸம்ப்ரதாயத்திலும் ப்ரீதியுள்ளவர்களாய் தத்குணபக்ஷபாதிகளும் அஸூயுக்களும் தயாளுக்களும் ஸாராஸாரவிவேககுசலர்களுமான மஹான்கள் மிதமதிஸம்பந்தத்தால் இதில் கலந்துள்ள தோஷங்களை அநாதரித்து இது பகவத்விஷயம் பாதுகாவிஷயம் ஸதாசார்யவிஷயம் என்று அபிமானித்து குணாம்சத்தைமட்டும் க்ரஹித்து இதை அங்கீகரித்துத் திருவுள்ளம் உகக்கவேணும்.

---

[illegible] ॥ க ॥

[illegible] ॥ உ ॥

வேதாந்தராமாநுஜ ஸம்யமீந்த்ரே
வ்யாக்யாம் வ்யாதந்வதாப்யுத்தர விஹிதவதி ।
தத்பாதேஸ தேஸிகேந்த்ரோத்ததிபதிரஹாத்
வ்யாவப்ராயத் ஸ்ரீநிதிர் நாமதோ யத் ॥ ॥

ஸச்ச்ரீநிகமாந்தாய ஸம்ஹாரவித ஸர்வர்த்துப: ।
ஸஹஸ்ரம் ஸாஹஸம் தீவ்ரம் ஸம்ஹ்ருஷ்டாம்ஸந ஜாநகோ ।

ஸ்ரீபாதுகாஸஹஸ்ர உத்தரவ்யாக்யானம் முற்றிற்று

---

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ॥
ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ॥
ஸ்ரீரங்கநாயகீதிவ்யமணிபாதுகாப்யாம் நம: ॥

---

